மலிவுப் பதிப்பு வரிசை 1



இரு பெரும் நூல்கள்



# திருவிளையாடற் புராணம்

# தசாவதாரம்

இறைவனின் 64 திருவிளை
யாடல்களும் 10 அவதார
ங்களும் வசன நடையில்
தெளிவாக உள்ள ஒரே நூல்





ரூ. 1-50



அருணை பதிப்பகம்

# திருவிளையாடற் புராணம்

&

# தசாவதாரம்

புலவர் மணி

A. ஸ்ரீநிவாசன்
27. 7. 65
(காஞ்சிபுரம்)

அருணா பதிப்பகம்,
127, தெற்காவணிமூல வீதி,
மதுரை.

முதற்பதிப்பின்

## பதிப்புரை

திருவிளையாடல்கள் அறுபத்து நான்கும் மாமதுரைச் சொக்கநாதன் அருளால் நிகழ்ந்தவை. மதுரை மாநகருக்கே உரியவை. சிவபரமானவை.

திரு அவதாரங்கள் பத்தும் திருமாலின் திவ்யத் தோற்றங்களைத் தெரிவிப்பவை. தசாவதாரங்கள் எல்லாம் விஷ்ணு பரமானவை.

சைவ வைஷ்ணவ புராணங்களை ஆராய்ந்து வசன நடையில் எழுதப் பெற்றவையே இந்த நூல். எங்கள் கன்னி முயற்சியான இதனைத் தமிழகத்திற்குத் தருவதிலே பெருமை கொள்கிறோம்.

அன்பர்கள் அவ்வப்போது திருத்தம் சொன்னால் நலமாக இருக்கும்: நன்றி உடையவர்களாவோம்.

மதுரை
1—8—1958

பதிப்பகத்தார்

# திருவிளையாடல்கள்

1 இந்திரன் பழி தீர்த்தது
2 வெள்ளையானை சாபம் தீர்த்தது
3 திருநகரம் கண்டது
4 தடாதகைப் பிராட்டியார் அவதாரம்
5 தடாதகை திருமணம்
6 வெள்ளியம்பலத் திருக்கூத்து ஆடியது
7 குண்டோதரனுக்கு அன்னம் இட்டது
8 அன்னக்குழியும் வையையும் அழைத்தது
9 எழுகடல் அழைத்தது
10 மலயத்துவசனை அழைத்தது
11 உக்கிரபாண்டியன் அவதாரம்
12 உக்கிரபாண்டியனுக்கு வேல் வளை செண்டு கொடுத்தது
13 கடல் சுவற வேல் விட்டது
14 இந்திரன் முடிமேல் வளை எறிந்தது
15 மேருவைச் செண்டால் அடித்தது
16 வேதத்துக்குப் பொருள் அருளியது
17 மாணிக்கம் விற்றது
18 வருணன் விட்ட கடலை வற்றச் செய்தது
19 நான் மாடக் கூடல் ஆனது
20 எல்லாம் வல்ல சித்தர் ஆனது
21 கல்லானைக்கு கரும்பு அருத்தியது
22 யானை எய்தது
23 விருத்த குமார பாலர் ஆனது
24 கால் மாறி ஆடியது
25 பழி அஞ்சியது
26 மா பாதகம் தீர்த்தது
27 அங்கம் வெட்டியது
28 நாகம் எய்தது
29 மாயப் பசுவை வதைத்தது
30 மெய் காட்டியது
31 உலவாக் கிழி அருளியது
32 வளையல் விற்றது
33 அட்டமாசித்தி உபதேசித்தது
34 விடை இலச்சினை இட்டது
35 தண்ணீர்ப் பந்தல் வைத்தது
36 இரசவாதம் செய்தது
37 சோழனை மடுவில் வீழ்த்தியது
38 உலவாக் கோட்டை அருளியது
39 மாமனாக வந்து வழக்குரைத்தது
40 வரகுணனுக்கு சிவலோகம் காட்டியது
41 விறகு விற்றது
42 திருமுகம் கொடுத்தது
43 பலகை இட்டது
44 இசை வாது வென்றது
45 பன்றிக்குட்டிக்குப் பால் கொடுத்தது
46 பன்றிக்குட்டிகளை மந்திரிகள் ஆக்கியது
47 கரிக்குருவிக்கு உபதேசம் செய்தது
48 நாரைக்கு முக்தி கொடுத்தது
49 திரு ஆலவாய் ஆனது
50 சுந்தரப் பேரம்பு எய்தது
51 சங்கப் பலகை தந்தது
52 தருமிக்குப் பொற்கிழி அருளியது
53 கீரனைக் கரை ஏற்றியது
54 கீரனுக்கு இலக்கணம் உபதேசித்தது
55 சங்கத்தார் கலகம் தீர்த்தது
56 இடைக் காடன் பிணக்குத் தீர்த்தது
57 வலை வீசினது
58 வாதவூர் அடிகளுக்கு உபதேசித்தது
59 நரியைப் பரி ஆக்கியது
60 பரியை நரி ஆக்கியது
61 மண் சுமந்தது
62 பாண்டியன் சுரம் தீர்த்தது
63 சமணரைக் கழு ஏற்றியது
64 வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்தது

# திருவிளையாடற் புராணம்

## 1. இந்திரன் பழி தீர்த்தது.

அன்றொருநாள் திரேதா யுகத்திலே தேவர்கோனாகிய இந்திரன் சுவர்க்க லோகத்திலே மந்தார நிழலின் கீழ் வீற்றிருந்தான். அது சமயம் அவன் முன்பு மயிலைப் போன்ற சாயலையுடைய, அன்னம் போன்ற நடையுடைய தேவமாதர் நாட்டியம் ஆடிக்கொண்டிருந்தனர். இன்பமயமான கீதங்களைப் பாடிக்கொண்டிருந்தனர். நாட்டியக் காட்சியும் இசையின்பமும் தேவேந்திரனைப் பெரிதும் கவர்ந்துவிட்டன. சந்தோஷம் என்னும் பெருங்கடலுள் மூழ்கிவிட்டான்; தன்னையே மறந்துவிட்டான். அந்தச் சமயம் பார்த்து தேவகுருவாகிய வியாழ பகவான் அங்கு வந்து சேர்ந்தார். அவர் சிவபெருமானுக்குச் சமமான பெருமை உடையவர். அவர் வருவதைக்கண்ட இந்திரன் பெண் மயக்கத்தினாலே மதிமயங்கித் தனது சிங்காதனத்தை விட்டு எழுந்து வரவேற்று உபசாரம் செய்யாது இருந்துவிட்டான்.

தேவேந்திரனது அலட்சியப் போக்கைக்கண்ட வியாழ பகவானும் அங்கிருந்து விரைவாகச் சென்று விட்டார். அப்பொழுதிருந்து தேவேந்திரனுடைய ஐசுவரியம் மங்கிக் குறையத் தொடங்கியது. அப்பொழுது இந்திரன் தனது பெருங் குற்றத்தை உணர்ந்துகொண்டான். தனது குருவைத் தேடிச் சென்றான். எல்லா உலகங்களிலும் சென்று தேடினான். கடைசியாக நான்முகனாகிய பிரம்மா வாழ்கின்ற சத்தியலோகம் சென்றான். அங்கும் வியாழ குருவைக் காண முடியவில்லை. ஒன்றும் தோன்றாதவனாகி மிகுந்த மனக் கலக்கத்துடன் பிரம்மாவின் முன்னால் விழுந்து வணங்கினான். பிறகு நடந்தவற்றை எல்லாம் சொன்னான். அதைக்கேட்ட பிரம்மா குருவை அவமதித்த பாவம் கொழுந்துவிட்டு உயர்ந்து தேவேந்திரனை விழுங்க வரும் காலம் நெருங்கி விட்டதை உணர்ந்தார். ஆதலால், இந்திரனைப் பார்த்து, "வியாழனைப் பார்க்கும் வரையிலும் துவஷ்டாவின் குமாரனும், மூன்று தலைகள் கொண்டவனும், அசுரனாகப் பிறந்தாலும் அறிவிலும் ஒழுக்கத்திலும் சிறந்தவனாகிய விசுவரூபன் என்பவனை உனது குருவாக ஏற்பாயாக" என்று சொன்னார். பிரம்மாவின் சூழ்ச்சியைத் தெரிந்துகொள்ள மாட்டாத இந்திரன் வணங்கி விடைபெற்றுச் சென்றான்.

தன்னிடம் வந்த தேவேந்திரனைத் தனது சிஷ்யனாக ஏற்றுக் கொண்டுவிட்டது போலவே நடக்கத் தொடங்கினான் விசுவரூபன். விசுவரூபன் தனது மனத்திலே வஞ்சகம் உடையவனாகவே இருந்தான். என்ன இருந்தாலும் அசுரனல்லவா? பின்பு ஒருநாள் தேவேந்திரன் விசுவரூபனிடம் யாகம் ஒன்று செய்துதருமாறு வேண்டினான். யாகம் செய்துகொண்டிருக்கும்போது அந்த அசுர

னும் உள்ளொன்று வைத்துப் புறமொன்று செய்தான். "அசுரர்
கள் அனைவரும் உய்யவேண்டும்" என்று தன் மனத்திலே நினைத்து
"தேவர்கள் வாழ்வதாக" என்று வெளியே சொல்லி யாகம் செய்
தான்! இந்த வஞ்சகச் செய்கையை தேவேந்திரன் தனது ஞான
திருஷ்டியால் அறிந்துகொண்டான். உடனே தனது வச்சிரா
யுதத்தை வீசி விசுவரூபனது மூன்று தலைகளையும் வெட்டி வீழ்த்தி
னான். அசுரனாயிருந்தாலும் பிரம்ம குலம் அல்லவா? பிரம்மஹத்
திப் பாவம் விரைவாக வந்து இந்திரனைப் பிடித்துக்கொண்டுவிட்
டது. மிகப் பெரிய கஷ்டங்களுக்கு ஆளாயினான் இந்திரன். தேவர்
கள் எல்லாரும் சேர்த்து தங்கள் தலைவனது பிரம்மஹத்தி
தோஷத்தை மரங்கள், மண், பெண்கள், நீர் ஆகிய நான்கிற்கும்
பங்கிட்டுக் கொடுத்துவிட்டனர். தோஷம் நீங்கிய தேவர்கோன்
தனக்கு ஏற்ற பொலிவைப் பெற்றான்.

தனது குமாரன் விசுவரூபன் தேவேந்திரனால் கொல்லப்பட்ட
செய்தியைக் கேட்ட துவஷ்டா மிகுந்த கோபம் கொண்டார். பழி
வாங்கும் எண்ணத்தோடு கொடிய யாகம் ஒன்றைச் செய்தார்.
அந்த யாகத் தீக்குழியிலிருந்து விருத்திராசுரன் என்பவன் தோன்
றினான். கோர உருவத்தோடும், கையிலே கொடிய வாளோடும்,
கோபக்கனல் பறக்க, திசைகள் அதிரச் சிரித்துக்கொண்டு நின்றான்.
நாள்தோறும் அவன் பெருகி வளர்ந்துகொண்டே வந்தான். ஒரு
நாள் துவஷ்டா விருத்திராசுரனைப் பார்த்து 'தேவேந்திரனோடு
போர் செய்து அவன் உயிரைப் போக்கிவா' என்று ஏவி விட்டார்.

வடவைப் பெருங்கனலைப் போன்ற சினம் கொண்டெழுந்த
விருத்திராசுரன் தேவேந்திரன் முன்னால் போய் நின்றான். தேவேந்
திரனும் தனது வெள்ளையானையாகிய ஐராவதத்தின் மேலேறிச்
சண்டைக்கு வந்தான். இருவரும் உக்கிரமாகப் போர் செய்தனர்.
இந்திரன் தனது வச்சிராயுதத்தை விருத்திரன்மேல் வீசினான்.
அதனால் கோபம் கொண்ட அசுரன் தன் கையில் இருந்த இரும்பு
உலக்கையால் இந்திரனின் தோளிலே அடித்தான். இந்திரனுக்கு
நினைவு தவறி விட்டது. சிறிது நேரத்திலேயே நினைவு தெளிந்து
விட்டது. விருத்திராசுரனுடன் இனிப் போர் செய்ய முடியாது
என்பதை நன்றாக உணர்ந்துகொண்ட இந்திரன் சத்தியலோகம்
சென்றான். பிரம்மதேவனைக் கண்டு வணங்கித் தனக்கு விருத்திர
னால் ஏற்பட்ட கஷ்டங்களை எடுத்துக் கூறினான்.

பிரம்மா இந்திரனை உடன் அழைத்துக்கொண்டு வைகுண்ட
லோகத்திற்குச் சென்றார். இருவரும் மஹா விஷ்ணுவைத் தொழு
தனர். பிரம்மா நடந்தவற்றைச் சொன்னார். எல்லாவற்றையும்
உணர்ந்த விஷ்ணு மொழிந்தார்: "இந்திரனே! உனது வச்சிரா
யுதம் மிகவும் பழையதாகிவிட்டது. எதிரியின் உயிரை வாங்கும்
பலம் அதற்கு இல்லை. இப்போது உனக்குப் புதிய வச்சிராயுதம்
வேண்டும். வழி சொல்லுகிறேன் கேள். அமிர்தம் பெறுவதற்
காகப் பாற்கடலைக் கடைந்தபொழுது தேவர்களும் அசுரர்களும்
ஆயுதங்களோடு வரக்கூடாது என்று கருதி எல்லாருடைய ஆயுதங்

களையும் சேகரித்து ததிசி என்ற மகரிஷியிடம் ஒப்படைத்தோம். பல ஆண்டுகள் கழிந்து விட்டன. யாரும் தன்னிடம் வந்து ஆயுதங்களைக் கேட்காததால் ததிசி ரிஷி அவைகளை விழுங்கிவிட்டார்! அவர் விழுங்கிய ஆயுதங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து அவரது முதுகந் தண்டோடு பொருந்திவிட்டன. ததிசி முனிவரின் முதுகெலும்பு தான் உனக்கு வேண்டிய புதிய வச்சிராயுதம். இந்திரா! நீ சென்று கேட்பதற்குமுன்பாகவே கருணைநிதியான அம்முனிவர் தந்துவிடுவார், செல்க."

விஷ்ணுவையும் பிரம்மாவையும் வணங்கி விடைபெற்றான் தேவேந்திரன். தன்னுடன் தேவர்களையும் அழைத்துக்கொண்டு ததிசி மாமுனிவர் இருப்பிடம் சென்றான். அவரைப் போற்றி வணங்கினான். முனிவரும் முகமலர்ச்சியுடன் வரவேற்று விவரம் கேட்டார். "கொடிய அசுரர்களைக் கொன்று தேவர்களைப் பிழைக்கச்செய்ய முடியும் அரிய பொருள் தங்களிடம் உள்ளது. அதனைத் தந்தருளவேண்டும்"; என வேண்டினான் இந்திரன். வேண்டிய அளவிலே எக்காலமும் தெரியவல்ல ததிசி முனிவர் இந்திரன் கோரியதைப் புரிந்துகொண்டார். "உங்களுடைய பெருந்துன்பத்தைப் போக்குவதற்காக என் உயிரையும் விடுவேன்; உடலைக்கொடுப்பேன். நெஞ்சிலே இரக்கமில்லா அரக்கர் ஒழியவேண்டும். நானும் இதனால் அறமும் புகழும் ஒருங்கே பெறுவேன்" என்று கூறிவிட்டு சிவயோக சமாதியில் அமர்ந்தார். உடனே ஒளியுருவம் பெற்றுப் புஷ்பகவிமானமேறி சிவலோகம் சென்றார்.

ததிசி முனிவரது முதுகந்தண்டைக் கொண்டு தேவதச்சனாகிய விசுவகர்மா புதியதொரு வச்சிராயுதமாகச் செய்து தேவேந்திரனிடம் கொடுத்தான். புது பலம் பெற்ற இந்திரன் நால்வகைச் சேனையுடன் விருத்திராசுரனை எதிர்க்கக் கிளம்பினான். விருத்திரனும் தனது அசுரப்படையுடன் எதிர்த்து வந்தான். தேவாசுர யுத்தம் மிகவும் மும்முரமாகவும் கடுமையாகவும் நடந்தது. இந்திரன் விடுத்த தேவாஸ்திரங்களுக்கெல்லாம் மாற்றாக அஸ்திரங்களை ஏவிக்கொண்டிருந்தான். விருத்திரன், எதிர்ப்புக்கு மாற்று, மாற்றுக்கு எதிர்ப்பு என்று போர் சென்றுகொண்டிருந்தது. முடிவாக இந்திரன் தன் கையிலிருந்த புதிய வச்சிராயுதத்தை வேகமாக ஆட்டிக் காட்டினான். விருத்திராசுரன் அதனைக் கண்டு மிரம்பப் பயந்து விட்டான். ஓடோடிச்சென்று சமுத்திரத்திற்குள் விழுந்து முழுகி, மறைந்துவிட்டான். இந்திரனும் அவனைத் தொடர்ந்து சென்று கடலுக்குள் மூழ்கினான், எங்கெல்லாமோ தேடினான், அசுரனைக் காணவில்லை. மனம் சோர்ந்த இந்திரன் பிரம்மாவிடம் சென்று முறையிட்டான். சிந்தனை செய்துபார்த்த பிரம்மா, "அகஸ்திய மகரிஷியிடம் சென்று இந்தச் செய்தியைச் சொல்வாயாக" என்று சொல்லி விட்டார்.

பிரம்மாவின் ஆணைபெற்ற இந்திரன் விரைவாகப் பொதிகை மலை சேர்ந்தான். அங்கே அகஸ்திய முனிவரைக் கண்டு பணிந்தான்.

பின்னர் தனக்கு நேர்ந்ததை யெல்லாம் சொன்னான். கடலுள் ஒளிந்திருக்கும் விருத்திரனைத் தன்னால் கண்டுபிடிக்க முடியாததையும் கூறி வழி கேட்டான். தேவர்தம் துயரைப் போக்கி அவரைக் காக்கும் எண்ணம் கொண்ட மகாவிஷ்ணுவைப் போன்ற அகஸ்திய மகரிஷி கடல் நீரை எல்லாம் தன் உள்ளங்கையில் ஏந்திக் குடித்து விட்டார். நீர் வற்றிப் போனதும் கடலுக்குள் இருந்த எல்லாப் பொருள்களும் தெளிவாகத் தெரிந்தன. மலை உச்சி ஒன்றின் மேல் விருத்திராசுரன் தவம் செய்துகொண்டு அமர்ந்திருந்தான். உடனே தேவேந்திரன் தனது புதிய வச்சிராயுதத்தால் அசுரனது தலையை அறுத்துத் தள்ளினான். பிரம்மஹத்தி தோஷம் இம்முறையும் தேவர்கோனைப் பற்றிக்கொண்டது.

விருத்திராசுரப் பிரம்மஹத்தியானது இந்திரனைப் படுத்தி வைத்தபாடு கொஞ்ச நஞ்சமல்ல. இந்திரன் என்ன செய்வான் பாவம்! பயமடைந்த இந்திரன் வேகமாக ஓடிச் சென்றான். வடகிழக்குத் திக்கிலிருந்த தாமரைக்குளத்திற்குள் மூழ்கினான். தாமரைத் தண்டு ஒன்றின் நூலுக்குள்ளே தன்னை ஒளித்துக்கொண்டான். தேவேந்திரன் இல்லாத தேவலோகம் ஒளியும் அழகும் குறைந்து விட்டது.

இதற்கிடையிலே நகுஷன் என்பான் அசுவமேத யாகங்கள் செய்து இந்திர பதவி பெற்றான். அவன் கர்வம் பிடித்தவனாகவும் அகம் பாவம் கொண்டவனாகவும் அலட்சியம் நிறைந்தவனாகவும் இருந்தான். தவிர இந்திராணியையும், சப்த ரிஷிகளையும் மிகவும் அவமதித்ததால் சாபம் பெற்று பாம்பாகி மண்ணில் விழுந்தான். தலைவனை இழந்த தேவர்கள் செய்வது இன்னது என்று தெரியாது தங்கள் பெருமதிப்பிற்குரிய குருவாகிய வியாழ பகவானிடம் சென்று தங்கள் வருத்தத்தைத் தெரிவித்து விண்ணப்பித்துக் கொண்டனர். வியாழ பகவான் வடகிழக்குத் திக்கிலிருந்த தடாகத்திற்குச் சென்று ஒளிந்துகொண்டிருந்த இந்திரனைக் கூவி அழைத்தார். இந்திரன் வெளிப்பட்டு வந்தான். வியாழ பகவான் இந்திரனை தன்னுடன் அழைத்துக்கொண்டு கிளம்பினார். இந்திரன் தனது குருவை மிகுந்த பணிவோடு வணங்கி, "எளியேனை வாட்டுகின்ற இந்த தோஷம் நீங்கும் வகை எது? அருளவேண்டும்" எனப் பணிவோடு வேண்டினான்.

வியாழ பகவானும், "இந்திரா! உன்னைப் பிடித்துள்ள இந்த பிரம்மஹத்தி தோஷம் நீங்கவேண்டிய இடம் பூலோகம்தான். வேட்டையாடுதலைக் காரணமாகக்கொண்டு, இந்த தோஷத்தைப் போக்கிக்கொள்ளும் பொருட்டு பூலோகத்திற்குச் செல்வாயாக" என்றார். இந்திரன் தனது வெண்குதிரை மேல் ஏறிக்கொண்டான். அவனைச் சுற்றிக் குருவும், தேவர்களும் அன்புடன் சூழ்ந்து வந்தனர். பூமியிலே வந்து இறங்கினான். சிவபெருமான் வாழும் திருக்கைலாச மலையை அடைந்து வழிபட்டான். பின்னர் தெற்குத் திசை நோக்கிப் புறப்பட்டான். கங்கை முதலான பல புண்ணிய நதிகளில்

நீராடி திருக்கேரதம், காசி, காஞ்சிபுரம் என்னும் பல சிவக்ஷேத்திரங்களைக் கண்டு வணங்கினான். இன்னமும் அவனைப் பிடித்த பிரம்மஹத்தி தோஷம் நீங்கினபாடில்லை. பொலிவு குறைந்து கொண்டே வந்தது. இறுதியாகக் கடம்பவனத்து எல்லையின் பக்கமாக வந்தவுடன் பிரம்மஹத்தி தோஷம் இந்திரனை விட்டுப் பிரிந்து சென்று ஓடிவிட்டது. பெரும் பாரம் இறங்கியவனைப் போல இந்திரன் மிகுந்த சந்தோஷம் அடைந்தான். குருவினிடம் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண்டான். உடனே வியாழ பகவானும், "இவ்விடத்தில்தான் உலகில் சிறந்த புண்ணிய ஸ்தலமும், புனித தீர்த்தமும் இருக்கின்றன. நாம் அவற்றைக் கண்டுகொள்ள வேண்டும். சென்று தெரிந்து வா" என்று ஆணையிட்டார். தேட்டம் கொண்டு நாட்டமுற்ற தேவேந்திரன் கடம்பவனத்துக்குள் புகுந்தான். அந்த வனம் முழுவதுமே தெய்வ மணம் கமழ்வதாக இருந்தது. குயில் பறவைகள் 'ஓம், ஓம்' என்று கூவின. கிளிகளும் 'நமச்சிவாய' சொல்லின. இந்திரன் உள்ளத்திலே பேருவகையும் பேரமைதியும் குடிகொண்டன. புளகாங்கிதம் அடைந்தான். இதற்கிடையே இந்திரனது தூதுவர்கள் வந்து சேர்ந்தனர். அவர்கள் வணங்கி மகிழ்ந்து வியந்து சொன்னார்கள்: "மன்னவரே! நாங்கள் காணக்கிடைக்காத காட்சியைக் கண்டோம். அளவுக்கு கட்டுப்படாத தெய்வத் தன்மையையும் இந்தக் கடம்பவனத்திலே கண்டுவந்தோம். புனிதமும் தூய்மையும் கொண்ட தீர்த்தக் கரையிலே, கடம்பமரத்தின் நிழலிலே சிவலிங்கம் ஒன்றுள்ளது. அது ஒப்பற்றது. தானே முளைத்தெழுந்து, ஒளிமயமாக இருக்கிறது" என்று.

ஒற்றர்களின் மூலமாகவந்த அமுதினும் இனியவாக்கைக்கேட்ட இந்திரன் மகிழ்ச்சிக் கடலில் திளைத்தான். பக்தி மேலிட்டவனாய்த் தனது சிரமேல் கைகுவித்து, எல்லாம் ஒடுங்கியவனாகித் தனது தோஷம் விலகக் காரணமாக இருந்த சிவலிங்கத்தைக் கண்டு களிக்க விரைந்து சென்றான். மூலகாரணமாகி முளைத்தெழுந்த சிவக்கொழுந்தைத் தன் ஆயிரங்கண்களாரக் கண்டான் இந்திரன், ஆடினான், பாடினான், ஆனந்தக் கூத்தாடினான் தேவேந்திரன். ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். நா தழுதழுத்தது. உடல் நடுங்கியது. பக்தி பரவசம் மேலிடப் பல துதிகள் இயம்பினான்.

பின்னர் சச்சிதானந்த சொருபமாக விளங்கும் அன்புருவான சோமசுந்தரக் கடவுளுக்கு அருச்சனை செய்யும் பொருட்டு, சுவர்க்க லோக மலர்கள் கொண்டுவரச் சொல்லி சில தேவர்களை அனுப்பினான். அடுத்து இந்திரன் விசுவகர்மாவை அழைத்து விமானம் ஒன்று அமைக்குமாறு கட்டளையிட்டான். அருகில் இருந்த தாமரைக் குளத்திலே மலர்கள் பறிக்கச் சென்றான். விரைவிலே அருச்சனை செய்யும் எண்ணத்தோடு, ஆனால் நல்ல நறுமலர்கள் கிடைக்கவில்லை. இந்திரன் ஏக்கம் கொண்டான். தேவர் கோனின் மனச் சோர்வை உணர்ந்த சோமசுந்தரக் கடவுள் உடனே அருள் புரிந்தார். அந்தத் தடாகத்திலே பொன் தாமரை மலர்கள் பூத்துவிட்டன. இந்த அதிசயத்தைக் கண்ட இந்திரன் பக்தி

மேலிடக்கூத்தாடினான். அந்தத் தீர்த்தத்திற்கு பொற்றாமரைக்குளம் என்று திருப்பெயர் இட்டான். பொற்றாமரைத் தடாகத்தில் குளித்தெழுந்தான். பொற்றாமரை மலர்களைப் பறித்துக்கொண்டு சிவ சன்னிதானத்தை அடைந்தான்.

அச்சமயம் ஆகாயத்திலிருந்து ஒளிமயமான மாணிக்க விமானம் ஒன்று இறங்கிவந்தது. எட்டு யானைகள், முப்பத்திரண்டு சிங்கங்கள், அறுபத்து நான்கு சிவகணங்கள் தாங்குமாறு தேவதச்சனால் படைக்கப்பட்ட விமானம்தான், அது. அந்த விமானத்தைச் சாத்தியபின்பு தேவேந்திரன் சோமசுந்தரக் கடவுளுக்குப் பூசை செய்ய முற்பட்டான். அதே சமயத்தில் தேவலோகத்திலிருந்து பூசைக்கு வேண்டிய பொருள்களும் சோடாசோபசாரப் பொருள்களும் வந்து சேர்ந்தன. மறுபடியும் இந்திரன் பொற்றாமரைத் தடாகத்தில் நீராடி, வெண்ணீறு தரித்து உருத்திராட்சமாலை அணிந்து சிவாகமப்படிப் பெரும் பூசை செய்யலானான். பக்தி வெள்ளம் பெருகிப் பாயப் பரவசனான தேவேந்திரன் பல முறைகள் வணங்கி வணங்கிப் போற்றினான்.

இந்திரது பூசனையை ஏற்று மகிழ்ந்த சோமசுந்தரக் கடவுளும் திருவருள்கொண்டு வெளிப்பட்டார். "உனக்கு வேண்டுவது என்ன? சொல்" என்று திருவாய் மலர்ந்தருளினார். சிரசின்மேல் கைகூப்பியவனான இந்திரன் "தேவரீரைப் பூசைசெய்யும் பாக்கியத்தைக்காட்டிலும், பெரும் பேறு வேறு உண்டா? எப்போதும் பூசை செய்து கொண்டேயிருக்கும் தேவரீரது தொண்டனாக இருக்கவே விரும்புகிறேன்" என்றான். இது கேட்ட சோமசுந்தரப் பெருமானும் கருணையுடன், "அன்ப! நீ ஒவ்வொரு சித்ரா பௌர்ணமியன்றும் வந்து பூசை செய்வாயாக. ஆண்டு முழுவதும் செய்கின்ற பூசையின் பயனை அந்த நாளிலேயே பெறுவாய். நீ தேவலோகம் சென்று பல இன்பங்களை அனுபவித்து வாழ்வாயாக. யாம் உனக்கு மோட்சம் கிடைக்குமாறு உனக்குப் பக்குவம் வந்ததும் அருள்வோம்" என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார். பின்னர் தேவர்கோன் சிவபக்திச் செல்வனான தன்மையோடு பொன்னுலகம் சேர்ந்தான். ★

## 2. வெள்ளை யானை சாபம் தீர்த்தது.

புனிதமான கங்கை யாற்றங்கரையிலே புண்ணியமான காசி என்ற க்ஷேத்திரத்திலே முன்பொருக்கால் துருவாச மகரிஷி சிவாகம முறைப்படி சிவலிங்கம் ஒன்றைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டார். சிவபெருமான் முனிவரின் பூசையில் மகிழ்ந்தவராகித் தனது திருமுடியிலிருந்து மணம் மிகுந்த பொன்தாமரை மலர் ஒன்றை விழுமாறு அருளினார். அம் மலரைத் துருவாச முனிவர் மிகுந்த பயபக்தியுடன் தமது இரு கரங்களாலும் ஏந்திக் கண்களில் ஒற்றிக்

கொண்டார். பெரும் மகிழ்ச்சியோடு பொற்பூவுடன் தேவலோகம் சென்றார்.

துருவாசர் சுவர்க்கலோகம் சேர்ந்தபோது தேவேந்திரன் அசுரர்களைத் தொலைத்து வெற்றிச் சின்னங்களோடு திரும்பிக் கொண்டிருந்தான். நிரம்பக் கோலாகலத்துடனும் குதூகலத்துடனும் வந்துகொண்டிருந்தான். தேவர்கள் பலர் இந்திரன் அருகிலே வந்து காணிக்கைகள் பல கொடுத்தனர். இந்தக் காட்சியைக் கண்ட துருவாச முனிவரும் தன் கையிலிருந்த சிவ நிர்மால்யமான பொற்றாமரை மலரை ஆசிப் பொருளாகத் தந்தார். ஐசுவரிய கர்வம் பிடித்ததாலே மதிமயங்கிய தேவேந்திரன் யானை மீது இருந்தபடியே அருமை தெரியாது ஒரு கையை நீட்டி அதை வாங்கினான். வாங்கிய மலரின் புனிதத் தன்மையை அறியாதவன் தனது வெள்ளை யானையின் மத்தகத்தின் மேல் வைத்தான். ஆனால் அந்த ஐராவதம் தலையிலிருந்த அச்சிவ மலரைத் தனது துதிக்கையால் கீழே தள்ளித் தன் காலினால் மிதித்துச் சின்னா பின்னப் படுத்தியது.

சிவநிர்மால்யம் அவமதிக்கப்பட்டதைக் கண்ட துருவாச மகரிஷிக்கு தாங்க முடியாத கோபங் கண்டது உருத்திரக் கடவுளைப் போல நின்று ஆரவாரித்தார். ''அழியும் செல்வத்தால் கர்வம் பிடித்துத் திரியும் இந்திரா! என்ன காரியம் செய்தாய், நீ? சிவபெருமான் திருமுடிமேல் இலங்கிய பூவைப் போற்றாது ஒரு கையால் வாங்கி அவமரியாதை செய்ததல்லாமல் யானையையும் கொண்டு சிதைக்க விட்டுவிட்டாயே! நீ அனுபவிக்கும் செல்வமும் சிறப்பும் சிவபெருமான் அருளியவை என்பதை உணரவில்லையா? இந்திரனே! உனது முடியானது பாண்டிய வீரன் ஒருவனது திகிரியால் சிதறக் கடவது; உனது பட்டத்து வெள்ளை யானையும் காட்டானையாகக் கடவது'', என்று சாபம் தந்துவிட்டார்.

தங்கள் தலைவன் அடைந்த சாபத்தைக் கேட்ட தேவர்கள் அஞ்சி நடுநடுங்கினார்கள். எல்லாரும் துருவாசரின் காலடியில் விழுந்து வணங்கி சாபத்தை நீக்கியருளுமாறு வேண்டினர். கோபம் தணியப்பெற்ற துருவாசரும் மனம் இரங்கினார். ''சிவா அபசாரம் பரிகாரத்தால் போகாது. ஆகையால், இந்திரனது தலைக்கு வரும் ஆபத்து முடியளவோடு சென்றுவிடக் கடவது. வெள்ளை யானை காட்டானையாகி நூறு ஆண்டுகள் திரிந்துகொண்டிருந்து பின்னர் தனது பழைய நிலையை அடையக்கடவது'' என்று தனது சாபத்தை மாற்றியருளினார் துருவாசர். சாபம் பெற்ற வெண்ணிற யானை வானுலகை விட்டு இழிந்தது. அதனுடைய அறிவு நீங்கியது பூவுலகிற்கு வந்து இறங்கியது. கருநிறங் கொண்டு காட்டானைகளோடு தானும் ஒரு எளிய யானையாகிவிட்டது.

யானைக் கூட்டத்தோடு சேர்ந்து தானும் பலப்பல இடங்களில் திரியலாயிற்று. இப்படியாக அது ஒருவாறாக நூறாண்டுகளையும்

கழித்துவிட்டது. பின்னர் ஒரு தினம் அந்த யானை தெய்வத்தன்மை நிரம்பிய கடம்பவனத்துக்குள் எதேச்சையாக நுழைந்து விட்டது. சிவபெருமானின் திருவருள் பெறுகின்ற காலம் வந்துவிட்டதல்லவா? அங்கு சுற்றித்திரிந்த யானை பொற்றாமரைப் பொய்கையையும் கண்டது. அதனைக் கண்ட மாத்திரத்தில் முன்னைய அறிவு தோன்றியது. பொற்றாமரைக் குளத்தில் நீராடியது அதன் பயனாக காட்டானை வடிவு நீங்கக் கருநிறமும் ஒழிந்தது. வெண்ணிறமுற்ற தெய்வ யானையாகிப் பழைய பொலிவுடன் துலங்கியது. அப்போது அதன் முன் சொக்கலிங்கப் பெருமான் தோன்றினார். யானை அவரைக் கண்டு வணங்கி வழிபட்டது. அப்பெருமானுக்குப் பூசை செய்யும் ஆவல் மிகுந்தது. தனது துதிக்கையிலே பொற்றாமரைத் திருக்குள நன்னீரை முகந்து கொணர்ந்து சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்தது. மலர் ஆட்டிப் பூசை செய்தது.

ஐராவதத்தின் பக்தி விசேஷத்தை உணர்ந்த பரமன், ''நீ வேண்டும் வரம் எது?'' என்றார். நல்லுணர்வு பெற்ற தேவயானை வணங்கித் தனக்கு முன்பு நிகழ்ந்தது அனைத்தையும் கூறிவிட்டு, ''தேவரீரது திரு விமானத்தைத் தாங்கும் எட்டு யானைகளோடு என்னையும் சேர்த்துக் கூட்டவேண்டும். எம்பெருமானைச் சுமக்கும் பேரருள் எளியேனுக்கும் கிட்டவேண்டும். அருள் புரியவேண்டும்.'' என்று இறைஞ்சியது. அருளுருவமான சோமசுந்தரப் பெருமான் கடைக்கணித்தார். ''தேவேந்திரன் எமது பக்தன். ஆதலால், அவனை நீ சுமந்திருப்பதே எமக்குப் பேருவகை தரும் செயலாகும்'' என்று இயம்பிப் பல வரங்கள் ஈந்து மறைந்தருளினார்.

பின்னர் வெள்ளை யானையும் திருவருள் திறத்தை எண்ணி வியந்தவாறு சென்று, சொக்கலிங்கமூர்த்தியின் மேற்குத் திக்கையடைந்தது. அங்கே ஐராவத தீர்த்தம் உண்டாக்கி அதன் கரையிலே ஐராவதேசுவரர் என்னும் சிவலிங்கத்தையும், ஐராவதகணேசர் என்ற விநாயகமூர்த்தியையும் பிரதிஷ்டை செய்து பக்தியோடு பூசை புரிந்து வந்தது. தனது யானையின் நிலைமையைக் கேள்விப்பட்ட தேவேந்திரன் தனது பணியாளரைக் கூப்பிட்டு அதனை அழைத்துவரச்செய்தான். பணியாளரைக் கண்ட ஐராவதமும் தான் பின்னே வருவதாகச் சொல்லி அவர்களை முன்னே போகச்சொல்லியது. அவர்கள் சென்றதும் சொக்கலிங்க மூர்த்திக்குக் கிழக்குத் திக்கிலே தலைவனது பெயரால் இந்திரேசுவரர் என்ற சிவலிங்கத்தையும் பிரதிஷ்டை செய்து பூசை செய்து வந்தது. இன்னமும் தனது யானை வராதது கண்ட இந்திரன் தனது ஏவலாளர்களை விரைவுடன் அனுப்பி வைத்தான். பின்னர் காலம் வந்ததை உணர்ந்து, அந்த தேவப் பணியாளர்களோடு வெள்ளை யானையும் தேவலோகம் சென்றது.

சுவர்க்க லோகத்திலே தனது தலைவனைக் கண்டு மகிழ்ந்து வணங்கி தான் பன்னெடுங்காலம் பட்ட இன்னல்களையும், சோம

சுந்தரப் பெருமானைத் தரிசனம் செய்து தனது கடுஞ்சாபத்தைப் போக்கிக் கொண்டதையும் சொல்லி இனிதே அமைந்திருந்தது. ★

## 3. திருநகரம் கண்டது.

தெய்வத்தன்மை பொருந்திய கடம்பவனத்தின் கிழக்குப் பகுதியிலே மணவூரில் பாண்டியர் குல திலகமான, மன்னர் மன்னன் குலசேகரன் செங்கோல் வழுவாது ஆண்டு வந்தான். அக் காலத்தில் அவ்வூரிலே தனஞ்சயன் என்ற வணிகன் வாழ்ந்து வந்தான். அவன் பொருட் செல்வத்தைப் பெருக்குவதைப்போலவே அருட் செல்வத்தையும் தேடிப் பெருக்குவதில் அக்கறை கொண்டவன். சிவ புண்ணியச் செயல்களைப் புரிந்து வந்தவன். சிவபக்திச் செல்வன்.

மேற்குப் பக்கத்திலிருந்த பல ஊர்களில் வியாபாரம் செய்து முடித்துக்கொண்டு ஒருசமயம் தனஞ்சயன் திரும்பிவந்து கொண்டிருந்தான். வரும் வழியிலே கடம்ப வனத்துள் புகுந்து விட்டான். அப்போது அந்தி மயங்கிய நேரம். இருள் பரவிச் சூழத் தொடங்கியது. இருளிலே தனியனான தனஞ்சயன் வருந்தி மனஞ் சோர்ந்தான். ஆனால் அவ்விடத்திலே ஒளி பொருந்திய விமானம் இருப்பதையும் அதனை எட்டு யானைகள் தாங்கி நிற்பதையும் நேரிலே கண்டு பெரு வியப்புக்கொண்டான். அருகே சென்று கண்டபோது சொக்கலிங்கமூர்த்தி எழுந்தருளியிருப்பது தெரிந்தது. அந்த திவ்ய மூர்த்தியைத் தரிசித்து வணங்கி வழிபட்டு அவ்விரவை அங்கேயே கழிக்க நினைத்திருந்தான்.

அன்றிரவு நன்றிரவான சோமவார இரவாகும். ஆனபடியால், தேவர்கள் வந்திருந்து சொக்கலிங்கப் பெருமானை வணங்கி. சிவராத்திரியை நிகர்த்து, நான்கு ஜாமங்களிலும் விசேஷ பூஜை செய்தனர். சோமசுந்தரப் பெருமானின் திருவருள் கூட்டியதால் தனஞ்சய வணிகனுக்கும் கிடைப்பதற்கரிய தேவகாட்சி கிட்டியது. தவிர தனது கையினாலேயே சிவபூஜைக்குரிய கஸ்தூரி, பன்னீர் ஆகிய வாசனைப் பொருள்களைத் தேவர்களிடம் கொடுக்கும் பேறும் பெற்றான். பொழுது விடிந்ததும் தேவர் கூழாம் மறைந்தது. தனித்து எழுந்தருளியிருக்கும் சொக்கலிங்கப் பெருமானைக் கண்ட தனஞ்சயன் பேரதிசயம் அடைந்தான். பெருமானின் திருவடிகளில் விழுந்து வணங்கி வலம் வந்தான். பின்னர்த் தன் மணவூர் வந்து சேர்ந்தான்.

வியப்பாலும் உவகையாலும் உந்தப்பட்ட வணிகன் தனஞ்சயன் அரசன் குலசேகர பாண்டியன் முன்னிலை அடைந்தான். "மன்னர் மன்னவா! கடம்ப வனத்திலே நேற்றிரவு பேரதிசயம் கண்டேன். வனத்துள் பேரொளி தெறிக்கும் திவ்ய விமானமும். அதனுள் சிவலிங்கம் எழுந்தருளியிருப்பதையும் கண்ணாரக் கண்டேன். தேவர்கள் யாவரும் வந்திருந்து நான்கு ஜாமங்களிலும் நியம நிஷ்டைகளோடு

பூசை இயற்றிச் சென்றனர். விடிந்தவுடன் நானும் வந்துவிட்டேன்'' என்று பகன்றான். தனஞ்சயன் வாயிலாகப் புதுமைச் செய்தியைக் கேட்ட குலசேகரன் சிவபெருமானின் சேவடிகளைச் சிந்தித்துக் கைகளைச் சிரமேற் கூப்பிக்கொண்டான். பக்தியும்விசித்திரமும் நிரம்பிய உள்ளத்தோடு பொழுது போக்கினான். அன்றிரவு சிவபெருமான் குலசேகர பாண்டியனின் கனவிலே சித்தரைப் போன்று தோன்றி, ''வேற்பாண்டியா! கடம்பவனக் காட்டினைத் திருத்தித் திருநகரம் ஒன்று காண்பாயாக!'' என்று ஆணைச் சொல்லருளி மறைந்தார். குலசேகர மன்னனுக்கு இரவு முழுவதும் படுக்கை கொள்ளவில்லை.

சூரியோதயம் ஆயிற்று. கனவின் பசுமை உள்ளத்திலே இலங்க நித்தியகருமங்களை முடித்துக்கொண்டான். மந்திரிமார்களையும், தவசிருஷ்டிகளையும், அழைத்தான். பகலில் வணிகனிடம் கேட்டதையும் இரவில் கனவிலே கண்டதையும் தெளியச் சொன்னான். பிற நன்னிமித்தம் சேர்ந்து மேற்கு திசையை நோக்கிப் புறப்பட்டான். உரிய நேரத்திலே தனது பரிவாரங்களோடு கடம்ப வனத்தை அடைந்தான் குலசேகரன். பொற்றாமரைத் தடாகத்திலே நீராடி எழுந்தான். விமானத்தின் அகத்தே கோயில் கொண்டு எழுந்தருளும் சோமசுந்தரப் பெருமானைக் கண்ணாரக் கண்டான். தரிசனம் செய்து கரங்களைச் சிரமேற் கூப்பி வணங்கினான். அன்புப் பெருக்கால் நெக்குருக இறைவன் திருவடிகளில்விழுந்து பணிந்தான். சிவபெருமானை நோக்கி, ''எந்தையே! விண்ணுக்கொரு மருந்தும், வேதவிழுப் பொருளுமான நீ எங்கள்பால் அன்பு பூண்டு இக்கானகத்தே எழுந்தருளினாயோ?'' எனப் பலவாறு போற்றி செய்து ஆனந்த பாஷ்பம் பெருக வலம் வந்தான். பின்னர் அமைச்சர்களோடு ஓரிடத்திலே புறம்பாக இருந்தான்.

பாண்டியப் பேரரசனது ஆணையால் மந்திரிமார்கள் பல ஏவலாட்களைப் பல இடங்களுக்கு அனுப்பிப் பலவகைத் தொழிலாளர்களை அழைத்து வருமாறு பணித்தனர். நெடுங் காட்டைத் திருத்தி அழகிய நகரம் ஆக்கும் திருப்பணியில் ஈடுபடும் பொருட்டுப் பல்லாயிரக்கணக்காகத் தொழிலாளர் வந்து மண்டினர். காடு விரைவில் அழிக்கப்பட்டது. நகரம் காண்பதற்கான பெரிய இடம் சமநிலமாக அமைந்து விட்டது. இடம் கண்ட பாண்டியன் ''நகரம் அமைப்பது எப்படி'' என்ற பிரச்னையிலே ஈடுபட்டு மந்திரியர்களைக் கலந்து ஆலோசித்துக் கொண்டிருந்தான். அந்த நேரத்திலே சிவபெருமான், முன்பு பாண்டியனது கனவில் எழுந்தருளியபடிக்கே, சித்தராக நேரிலே எழுந்தருளினார். சித்தர் பெருமானைக் கண்ட பாண்டியன் குலசேகரன் எழுந்து வணங்கி வரவேற்றான். சிவாகமத்தின் வழியே தோன்றிய சிற்ப சாஸ்திர முறைப்படி ஆலயம், மண்டபம், கோபுரம், நகரம் எந்த முறையில் அமைதல் வேண்டும் என இயம்பியபின் மறைந்தருளினார் சித்தர். பாண்டியன் பல சிற்ப நூல் வல்ல ஸ்தபதிகளைத் தருவித்தான். சிவபரஞ் சுடராகிய சித்தமூர்த்திகள் அருளிய வண்ணமே திருக்கோயிலும் நகரமும்

காண்பதில் ஈடுபட்டான். வேத பத்ம மண்டபம், அர்த்த மண்டபம், மகாமண்டபம், உத்சவ மண்டபம், யாகசாலை, பரிவார தேவர்களின் கோயில்கள், பிரகாரங்கள், கோபுரங்கள், மதில்கள் எல்லாவற்றையும் சாஸ்திர விதிப்படி தேர்ந்து திருக்கோயில் எடுப்பித்தான்.

சோமசுந்தரப் பெருமானின் திருப்பெருங் கோயிலை நடு நாயகமாக வைத்துக்கொண்டு பல திருவீதிகளை அமைத்தனன் பாண்டியன். அம்பலங்கள், நாடக சாலைகள், சைவமுனிவர் தங்குமிடங்கள் கல்விச்சாலைகள், தருமசாலைகள், மூலானவற்றை சிறப்பாக அமைப்பித்தான். நகருக்கு அழகுதரும் பலவகைச் செயல்களைச் செய்வித்தான். அத் திருப்பெருநகரின் வடகிழக்கிலே தனக்கென ஓர் அரண்மனையையும் கட்டிக்கொண்டான் குலசேகரன்.

நன்னகரை எடுப்பித்த பின்னர் பாண்டியன் சாந்தி செய்யக் கருதினான். அஃதுணர்ந்த சோமசேகரப்பெருமான் தனது சடாமுடியில் உள்ள சந்திர கலையின் புத்தமுதத்தைச் சிறிதே சிந்தியருளினார். அவ்வமுதத்துளி நகர் முழுதும் அமுதமயமாக்கித் தூய்மை செய்து விட்டது. சிவனருளிய மதுரமான அமுதத்தால் சாந்தியுள்ள அத்திருநகர் மதுராபுரி என்று வழங்குவதாயிற்று, பின்னர் ஊருக்குப் பெருங் காவலாக இருக்குமாறு கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்னும் நான்கு திசைகளிலும் முறையே ஐயனார், சப்த மாதர்கள், மகாவிஷ்ணு, பத்திரகாளி ஆன தெய்வங்களைப் பிரதிஷ்டை செய்தான், குலசேகரப் பாண்டியன்.

சிவாகம விதிப்படி சிவபூஜையானது ஆறு காலங்களிலும் வழுவாது நடைபெறும் பொருட்டு வேதாமங்களில் சிறந்த முனிவர்களையும், சிவப் பிராமணர்களையும் காசி க்ஷேத்திரத்திலிருந்து அழைத்து வந்து மதுரையம்பதியில் நிலைபெறச் செய்தான் பாண்டியன். வேதநெறியும், சிவநெறியும், தர்மநெறியும் மதுரை மாநகரத்திலே செழித்தோங்கின. பாண்டியப்பெருநாட்டின் திலகம் எனத் துலங்கிடும் வண்ணம் மதுரைப் பதியைச் சிறப்புறச் செய்தான் குலசேகர பாண்டியன். சிவநேசச் செல்வனான குலசேகர பாண்டியன் பன்னெடுநாள் இனிதே வாழ்ந்திருந்து, நீதி வழுவா நெறி நின்று, பட்டாங்கில் உள்ளபடி செங்கோல் ஓச்சினான். உரிய வயதடைந்த தன்மகன் மலயத்துவன் வசம் தனது அரசியலை ஒப்படைத்து விட்டுச் சிவபதவியடைந்தான் குலசேகர வேந்தன். ★

## 4. தடாதகைப் பிராட்டியார் அவதாரம்

மனுதர்ம சாஸ்திரத்தில் விதித்துள்ளபடி அறநெறி தவறாமல் செங்கோல் செலுத்தி வந்தான் மலயத்துவச பாண்டியன். உயிரிலும் பெரிதாகப் போற்றப்படும் ஒழுக்கத்திலே சிறந்தவன். வெற்றியை ஆபரணமாகப் பூண்டவன். கருணைக் கடல் எனத் திகழ்ந்தவன். இனிய சுபாவம் உடையவன், கட்டழகு மிகுந்தவன். வடமொழிக்

கலைகளிலும் மிகுந்த தேர்ச்சியும் புலமையும் பெற்றவன். சூரிய குலத் தவனாகிய சூரசேன சோழனது மகள் காஞ்சனமாலையை மணம் செய்து கொண்டவன். சோமசுந்தரப் பெருமானை முக்காலும் நியமத் தோடு வழிபாடு செய்பவன். பல சிறப்புக்களைப் பெற்றிருந்தும், மலை யத்துவசனுக்கு ஒரே ஒரு பெருங்குறையிருந்தது. மகன் இல்லாக் குறைதான் அது. மகப்பேறு இல்லாமல் வருந்திய மன்னன் அசுவ மேத யாகம் செய்ய ஆரம்பித்தான். வேத விதிப்படி தொண்ணூற்று ஒன்பது யாகங்களைச் செய்து முடித்துவிட்டான். நூறும் செய்து முடிப்பானாயின் தேவேந்திரப் பதவி அவனுக்குக் கிட்டிவிடும் என் பதை உணர்ந்துகொண்ட தேவேந்திரன் மலயத்துவசன் முன்பு தோன்றி. "நீ வேண்டுவது மகனைப் பெறுவதுதானே யாகையால் புத்திரகாமேஷ்டியாகம் செய்வாயாக" என்று கூறிவிட்டுத் தன் பொன்னுலகம் சென்றான். பின்பு மலையத்துவசன் தன் மனைவி காஞ் சனமாலையுடன் சேர்ந்து நியம நிஷ்டை தவறாது புத்திரகாமேஷ்டி யாகம் செய்ய வாரம்பித்தான். வேத நீதிப்படி மதுரைத் திருக் கோவிலுக்குக் கிழக்கே சிறந்த வேள்விச்சாலை அமைத்து யாகம் செய்யலானான். யாகம் மிகவும் சிரத்தையுடனும் பக்தியுடனும் நடந்து வந்தது.

யாகத்தின் இறுதி நாளான மங்கள தினத்திலே பாண்டியன் வலத்தோள் துடிக்க, ஏழுலகங்களும் மகிழ்ச்சி எய்த, சைவம், பாசு பதம், மாவிரதம், காளாமுகம், பைரவம், வாமம் என்னும் அகச்சம யங்கள் ஆறும் தழைத்தோங்க, வேதங்களும் தேவதுந்திபிகளும் கோஷம் செய்ய, தருமம் மகிழ, பதினெட்டு மொழிகளுள்ள பூமியிலே தமிழ்மொழி பயில்கின்ற நாடு சிறப்புற, மூவேந்தருள் பாண்டியரே பெரும் சிறப்பு எய்த. அக்னி தேவனே தான் செய்த தவம் பயன் பெற, யாக குண்டத்திலிருந்து உயிர்கள் அனைத்தையும் உலகங்கள் யாவையும் பெற்றவளாகிய உமாதேவியார் மூன்று தனங்களுடைய ஒரு பெண் குழந்தையாக மூன்று வயதுடன் எழுந்து வந்து நின்றாள்; பெண்குழந்தையின் கொண்டையினின் றுமுத்துமாலைசுற்றப்பட்டுத் தொங்க விளங்கியது. பவளமாலை ஒளி வீசியது. இடையினைச் சுற்றி யிருந்த மெல்லிய ஆடையின் மேல் மணிமேகலை ஒளிக்க, காதுகளி லிருந்து தொங்கும் மாணிக்கக் காதணிகள் துலங்க விளங்கினாள் திருக் குழந்தை. தளிர்த்திருவடிகளில் விளங்கிய சிலம்பும் சதங்கை யும் கலந்து ஒலி செய்தன. மழலைச் சொற்களும் புன்னகையும் தோன்றும் திருவாயுடன் தளிர் நடையுடன் பூங்கொடி போன்று அசைந்து வந்து காஞ்சனமாலாதேவியுடன் மடியிலே, அற நெறி நின்றோர்க்கு இம்மை மறுமை இன்பங்களையும் வீடுபேற்றினை யும் அருளும் உமையம்மை அமர்ந்திருந்தாள். காஞ்சனமாலை தான் அடைந்த பெண் குழந்தையை வாரியெடுத்து மார்போடு சேர்த்து உச்சிமோந்து முத்தமிட்டு இன்பக் கடலாடினாள். ஐந்தொழில்கள் புரிவதற்கும் அதிதேவதையான பராசக்தி, வாக்குமனம் வேதங்கள் கடந்து நின்ற உமாதேவியாரே தனது திருமகளாக வந்து தோன்று வதற்கு மலத்துவச பாண்டியன் செய்த பெருந்தவம்தான் என்ன?

அன்பு மிகுதியால் உமாதேவியார் தனது குழந்தையாக வந்து அவதரித்த தன்மையையும், தன் மனைவி காஞ்சனமாலையின் தவப் பயனையும் முறையாகத் தெரிந்து கொள்ளாத மலையத்துவசன் உள்ளத்தே துன்பம் கொண்டான். "நான் ஒரு மகனை வேண்டினேன், அரும் தவம் புரிந்தேன்; புத்திரகாமேஷ்டி யாகம் செய்தேன். ஆனால் நான் அடைந்தது பெண் குழந்தையையே! என்செய்வேன்; இந்தப் பெண் குழந்தையும் மூன்று தனங்களுடன் பிறந்துள்ளதே; எனது பகைவர் எள்ளி நகையாடுவார்களே, அந்தோ!" என வருந்திக் கொண்டிருந்தான்.

அது சமயம் சிவபெருமானின் அருளால் ஆகாச வாணியானது "வேந்தே! கலங்காதே. மகனுக்குச் செய்வது போல எல்லாவகையான விசேஷங்களையும் உன் திருமகளுக்குச் செய்வாயாக. வேத நெறி வழுவாமல் எல்லாம் செய்து தடாதகை என்று நாமம் சூட்டிப் பின்னர் மகுடம் புனைவிப்பாயாக. ஏற்ற கணவன் வரும் காலத்தில் மூன்றாவதொரு தனம் தானே மறைந்துவிடும்" என்று எழுந்தது. இன்பமான விண்ணொலி கேட்ட மலயத்துவசன் அமைதியும் அன்பும் உவகையும் மிகக் கொண்டான். ஆனந்தக்கண்ணீர் பெருகி ஓடச் சோமசுந்தரப் பெருமானை வாழ்த்தித் துதித்தான். மங்கல வாத்தியங்கள் பல கோஷிக்க யாகசாலையிலிருந்து கிளம்பி அரண்மனையை அடைந்தான், மறையவருக்கும் பிறருக்கும் ஏராளமான பொன்னை வாரி வழங்கினான். சோமசுந்தரப் பெருமானின் ஆலயத்திலே விசேஷ பூசைகளும் திருவிழாக்களும் செய்வித்தான்.

சிறையிலிருந்தோர் விடுதலைபெற்றனர். பகையரசர் தமதுபழைய கௌரவம் திரும்பப் பெற்று தத்தம் நாடு திரும்பினர். புலவர்கள் பொன்னும், மணியும் புத்தாடைகளும் இன்னும் பல சிறப்பும் பொருள்களும் பரிசாகப் பெற்றனர். மதுரை மாநகரும் பாண்டிப் பெருநாடும் பெருமகிழ்ச்சி கொண்டாடின.

மலயத்துவசன் மகிழ்பூத்து விண்ணொளி அருளிய வண்ணமே தன்மகளுக்கு வேத விதிப்படி சாதகன்மம் முதலியவற்றைச்செய்து, தடாதகை என்று பெயர் சூட்டி உவந்தான். காஞ்சனையும் மலையனும் திருக்குழந்தையை மிகவும் செல்லமாக வளர்த்தனர். பிராயத்துக்குத் தகுந்த ஆட்டங்கள் காட்டி தாய்க்கும் தந்தைக்கும் தோழியருக்கும் எல்லையற்ற மகிழ்வைத் தந்து நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தோங்கி வந்தாள் தடாதகைப் பிராட்டியார். நான்கு வேதங்கள், ஆறு சாஸ்திரங்கள், பதினெண்புராணங்கள், அறுபத்து நான்கு கலைகள் எல்லாவற்றையும் முற்றவும் குற்றமின்றிக் கற்றுணர்ந்தார். யானை, குதிரை, தேர் முதலியவற்றைச் செலுத்தும் திறமையும் நன்கு பெற்றார். வில், வாள், வேல் ஆகிய அஸ்திர சாஸ்திரப் பிரயோகங்களிலும் மிகுந்த வல்லமை பெற்றார்.

எல்லாக் கலைகளிலும் நன்கு தேர்ச்சி பெற்றுப் பெருந் தகுதியோடு விளங்கிடும் தன் திருக்குமாரியைக் கண்டு உளம் பூரித்தான்

பாண்டியன். தடாதகைப் பிராட்டியாருக்குத் திருமுடி சூட்ட வேண்டும் என்று கருதினன். சுமதி என்னும் மந்திரி பட்டாபிஷேக நன்னாளைத் தேர்ந்தான். பல நாடுகளுக்கும் ஓலை போக்கி முடிமன்னர்களை வரச்செய்தான். மதுரை மாநகரம் திருநகரமாகக் காட்சியளித்தது. கங்கை முதலான ஒன்பது புனித ஆறுகளின் நீர் தங்கிய பொற்குடங்களையும், சிங்காதனத்தையும் வேதியர் பூசித்து வழிபாடு செய்தனர். தேவர்களை மகிழ்விக்க யாகங்கள் பல செய்யப் பட்டன. பின்னர் பாண்டியப் பரம்பரைக்கு நெடுங்காலமாக உரிய தான மணித்திருமகுடத்தை யானையின் மேல் வைத்து ஊர்வலம் செய்வித்துப் பூசித்தனர். அதற்குப் பின்பு மாணிக்கக் கடிகையுடைய, பொன்னாலமைந்த ஐந்து தலை நாகப்படத்தை மேலே கவித்த, சிங்காதனத்தின்மீது தடாதகைப் பிராட்டியாரை எழுந்தருளச் செய்தனர். வேதநாதம் முழங்க, மங்கல வாத்தியங்கள் இயம்ப புண்ணிய திர்த்தங்களினால் அறவேள் அபிஷேகம் செய்வித்தனர். தனது திருக்குமாரிக்குப் பாண்டியன் மணிமுடி சூட்டித் தன் தலைமையை அளித்தான். பின்னர் வெள்ளை யானை மேலே ஆரோகணித்து தடாதகைப் பிராட்டியாரை நகர்வலம் செய்வித்தான். நகர்வலக் காட்சியைக் கண்ட பாண்டியன் ஆகாசவாணி கேட்டபோது கொண்ட உவகையிலும் பன்மடங்கு பேருவகை கொண்டான்.

சில நாட்கள் கழிந்தபின் மலயத்துவசன் விண்ணுலகம் சேர்ந்தான். அதன் பின்னர் உலகெலாம் ஒரே குடைக்கீழ் மனுநீதி தவறாது சிறப்புடன் அரசுபுரியலானார் தடாதகை அரசியார். பெண்ணரசி தடாதகைப் பிராட்டியார் திருவாட்சியிலே தருமம், நியாயம், நீதி, புண்ணியம் எல்லாம் தழைத்தோங்கின. பிராட்டியாரது கொலுமண்டபம் திருமகள்விலாசமாகவும் ஒருங்கே திகழ்ந்தது. செந்தமிழ்ப் புலவர், வடமொழி வாணர், வேதியர், கலைஞர், சமயப்பெரியோர், மெஞ்ஞானிகள், நல்லமைச்சர் எல்லாரும் சபையின்கண் விளங்கிச் சிறந்தனர். தேவாலயங்களும் அறச்சாலைகளும் பல்கிப் பெருகின. சிறந்து ஓங்கின. அறங்களையும் வேள்விகளையும் விருத்தி செய்யுமாறு திரவியங்கள் ஈந்தார் பிராட்டியார். கல்வியையும் செல்வத்தையும் இரு கண்களென மதித்து அவற்றைத் தழைக்கும்படி அருளினார். சிவசக்தியே மலயத்துவசன் மகளாகி இப்புவியை மனுநீதி தவறாது ஆண்டார் எனில் அதனை எடுத்துக் கூற வல்லவர் யார்?

கன்னிப்பிராயத்திலே முடி புனைந்து தடாதகைப் பிராட்டியார் தனது அரசியல் நடத்தியதால் பாண்டிநாடு கன்னிநாடு என்ற பெயர் பெற்றதாயிற்று.

★

## 5. தடாதகை திருமணம்

திகிரிக் கதிரவன் துன்ப இருளைப் போக்கியது. வெண்குடைத் திங்கள் தண்ணிழல் தந்தது. உலகீன்ற அன்னை உமாதேவியார்

கன்னிப் பெண்ணாக இருந்து மனுதர்மசாஸ்திர வழி தவறாது தனி அரசாட்சி செய்து வந்த காலத்திலே மணப்பருவம் வந்து கூடியது. மணம்பெற வேண்டிய வயது வந்து முதிர்ந்து நிற்பதைக் கண்ட தாய் காஞ்சனமாலை பிராட்டியாரை நோக்கி, "உனக்கு இன்னும் திருமணம் ஆகவில்லையே?" என்று சொல்லி வருந்தினாள். அது கேட்ட தடாதகைப் பிராட்டியார், "அன்னையே, கவலை வேண்டாம். உரிய காலம் வந்ததும் மணம் பெறுவேன். பலபடியாக எண்ணி வருந்தவேண்டாம். அஷ்ட திக்குகளிலும், இந்த பூலோகம் முழுவதும் சென்று நான் வெற்றிக்கொடி நாட்டி வருவேன்," என்று மறுமொழி இயம்பி விரைந்து புறப்பட்டார்.

தடாதகைப் பிராட்டியாரின் கருத்தை அறிந்த அரசர்களும் மந்திரிகளும் ஏனையோர்களும் வந்து சேர்ந்தனர். சங்குகள் முழங்கத் தேரின் மீது ஆரோகணித்தார் பிராட்டியார். பலவகை வாத்தியங்கள் கோஷம் செய்தன. இடதுசாரி வலதுசாரியாகச் சுழலவல்ல பெரிய வலிய போர்ப்படைகள் அதிர்ந்து சென்றன. சிறு மலைக் கூட்டம் போல யானைப் படைகள் சென்றன. கடல் அலைகளை நிகர்த்து வரிசை வரிசையாகக் குதிரைப் படைகள் சென்றன. கூற்றுவனையும் எதிர்த்து வெல்லும் காலாட் படைகள் பல்வேறு ஆயுதங்கள் தாங்கிச் சென்றனர். இவ்வாறாக சதுரங்க சைனியமானது பெரு முழக்கத்தோடு மதுரைமா நகரிலிருந்து கிளம்பிச் சென்றது பெரியதொரு சேனா சமுத்திரமே தரைமீது நடந்தது போலிருந்தது.

மங்கலகோஷம் முழங்கிக் கொண்டே இருக்கத் தேவியாரின் மணித்தேர் விரைந்து சென்று கொண்டிருந்தது. மீனக்கொடி, புலிக்கொடி, விற்கொடி, மயிற்பீலிக்குடைகள் எல்லாம் பிராட்டியார் தேரின் அருகில் சென்றன. முதலமைச்சன் சுமதி தேவியாரின் திருவுள்ளக் குறிப்பை உணர்ந்து நால்வகைப் படைகளையும் சேவகம் செய்து சென்றான். அளவில் அடங்காத சதுரங்க சேனைகளுடன் பூவுலமட்டுமின்றித் தேவலோகம் முதலிய உலகங்களிலும் செல்லுமாறு பணித்து. தடாதகை தேவியார் மன்னர்கள் ஐசுவரியங்கள் அனைத்தையும் கொள்ளை கொளச் செல்வார் ஆயினர்.

வடபுலத்து மன்னர்களான கஜபதி, துரகபதி, நரபதி என்ற மூவேந்தரையும் வென்று அவர்களது யானைகளையும், குதிரைகளையும், காலாட் படையினரையும் திறையாகப் பெற்றார் பிராட்டியார். பின்னர் தேவலோகம் சென்று இந்திரன் படையை எதிர்த்துப் போர் தொடங்கும் முன்னரே இந்திரன் ஆற்றல் அறிவு பெற அமர்க்களத்திலிருந்து ஓட்டம் பிடித்தான். பிராட்டியார் தேவமாதர்களையும், ஐராவதம் என்ற வெள்ளை யானையையும், உச்சைச்சிரவஸ் என்ற வெண்குதிரையையும் காமதேனுவையும், சிந்தாமணியையும், கற்பகம் முதலிய தேவதருக்களையும் கவர்ந்து கொண்டு திரும்பினார். இப்படியாகவே ஏனைய திக்பாலர்களோடு எதிர்த்துப் போரிட்டு வென்று அவர்கள்

பணிந்து கொடுத்த திறைப் பொருள்களை ஏற்றுக் கொண்டார். பின்னர் வெற்றி முழக்கத்தோடு கைலாச மலையை அடைந்தார்.

தடாதகைப் பிராட்டியாரின் படைவீரர்கள் ஆரவாரம் செய்து கொண்டே முன்னேறித் திருக்கயிலாய மலையினைச் சூழ்ந்துகொண்டனர். அதனைப் பார்த்த கயிலைமலைக் காவலர்கள் ஓடோடியும் சென்று நந்திகேசுவரரிடம் வணங்கி விண்ணப்பித்தனர். சிவபெருமானது திருவுள்ளக்குறிப்பினை உணர்ந்த நந்தீசர் பூதகணங்களை ஏவினர். பூதகணங்களுக்கும் பிராட்டியார்பெருஞ்சேனைக்குமிடையே கடும்போர் நிகழ்ந்தது. கடலோடு கடல் எதிர்த்ததுபோலவும் மலையோடு மலை மோதியதுபோலவும் கோரமான பெருஞ் சமர் விளைந்தது. தேவர்களும் வித்யாதரர்களும் அஞ்சி ஓடினர். நந்திதேவரின் படைவீரர் எறிந்த ஆயுதங்களை யெல்லாம் தடாதகை தேவியார் தனது வச்சிராயுதத்தால் தகர்த்தெறிந்தார். சிவகணங்கள் வலிமை இழந்தவர்களாகிப் புறமுதுகு காட்டி ஓடினர். பராசக்தியினது ஆற்றல்தான் என்னே! யாரே எடுத்துரைக்க வல்லார்?

ஆயுதங்களும் வாகனங்களும் அழிந்து ஆற்றல் அழிந்து ஓய்ந்து சோர்ந்து வருகின்ற தனது இனத்தவரின் நிலையைக் கண்ட நந்திகேசுவரர் இரக்கமும் வருத்தமும் கவலையும் கொண்டார். தம் தலைவரும் கைலாசபதியுமான சிவபெருமானை அண்டி அவரது திருவடிகளை வணங்கி நேர்ந்த அனைத்தையும் விண்ணப்பித்துக்கொண்டார். சிவபெருமான் புன்னகை செய்தருளினர். பின்னர் ஆயுதங்கள் ஏற்று ரிஷப வாகனத்தேறிச் செருக்களம் சென்றார். அங்கு சென்று சிவகணங்களை அஞ்சியோடச் செய்து 'எவர் எதிர்த்தாலும் வெல்வேன்' என்று முழக்கும் வீரசௌந்தரியப் பெண் சிங்கமாம் தடாதகை தேவியைக் கண்டார். அம்மையார் திருஉருவத்தையும் வீரச் செயல்களையும் நேரிலே கண்டு மகிழ்ந்தருளினர். தடாதகைப் பிராட்டியாரும் பல்வகைக் கோலங்காட்டி நின்ற பாம்பலங்காரப் பெருமானை, பெருங்கருணைத் தடங்கலான சிவபெருமானை நேருக்குநேர் கண்டார். இசைந்த ஏறும், கலியுரிப் போர்வையும், எழில் நீறும், இலங்குநூலும், புலிபதள் ஆடையும் பொருந்திய பொன்னார் மேனியன் அருள் கனிந்தான். அருள்நோக்கு பாய்ந்த அளவிலே அம்மையாரின் மூன்றாவதான நடுத்தனம் மறைந்து விட்டது. பிராட்டியாரின் உள்ளத்திலே அச்சம், நாணம், மடம் முதலிய பெண்மைக் குணங்கள் மேலோங்கி நின்றன. தாழ்ந்த பூங்கொடியைப் போல தலையைக் குனிந்துகொண்டு தரைபார்த்து நின்றார் தேவியார். வரும்பொருள் உணரவல்ல முதன்மந்திரி சுமதி அசரீரி அன்று இயம்பிய மணிவாசகங்களை உள்ளத்தே கொண்டான். அம்மையாரை வணங்கி "பேராசிரியரே! கொன்றை மாலை அணிந்த, அதிசுந்தரரான இச்சிவபெருமானே தங்கள் மணவாளன்" என்று கூறினன். தடாதகைப் பிராட்டியார் பேரன்பு பெருக அமைதியோடு நின்றார்.

இதைக் கண்டு உவகையுற்ற தேவ தேவனை சிவபெருமான் கருணை ததும்ப, "திக்கு விஜயத்தின் பொருட்டு எப்பொழுது நீ புறப்

பட்டாயோ, அப்போதிருந்து யாமும் உன்னைப் பிரியாது தொடர்ந்தே வந்தோம். வேதங்கள் இயம்பியபடிக்கு அடுத்து வருகின்ற சோம வாரத்திலே, சுப்முகூர்த்தத்திலே, உன்னைத் திருமணம் புரிந்து கொள்ள வருவோம். நீ மதுரை செல்வாயாக" என்று திருவாய் மலர்ந் தருளினார்.

திங்கட்குல விளக்கனைய தடாதகைப் பிராட்டியார் தலைவரி டத்தே தன் பக்தியையும் ஆவியையும் ஒருங்கு வைத்து தனது மதுரையம்பதியை வந்தடைந்தார். அஷ்டகங்கலம் தாங்கிய குல மாதர் எதிர்கொண்டழைக்கத் தமது செல்வத் திருமாளிகைக்கு எழுந்தருளினார்.

அமைச்சர்கள் திருமண ஓலை எழுதி எல்லா நாடுகளுக்கும் அனுப்பிவைத்தனர். மதுரை மாநகரம் எங்கும் மணமுரசு முழங் கியது. இயற்கை அழகும் வலிமையும் கொண்ட மதுரைப் பெருவூர் மிகுந்த எழிலுடன் தோன்றி பல்வகைக் கோலங் காட்டிப் பொலிந் தது. பட்டாபிஷேக விழாவன்று திகழ்ந்த பாங்கில் பன்மடங்கு திகழ்ந்து நின்றது, மதுரை மூதூர், தெருக்களிலே மலர்களோடு குளிர்ந்த பன்னீரைக் கலந்து தெளித்தனர் நகர மாந்தர். வாசனைப் பொடிகளை வாரி இறைத்தனர். பாவை விளக்குகளை நிற்க வைத் தனர். பசிய மலர்கள் பந்தல்களினின்று தொங்கின. மாணிக்க மரகத மாலைகள் நிறைபடத் தொங்கி ஒளி கூட்டின. மங்கல தீபங் கள் வீடுகளெங்கும் சுடர் விட்டன. கங்கை, காவிரி, யமுனை, சரசுவதி ஆகிய புண்ணியப் பேராறுகளின் புனித நீர் கொணரப் பெற்றன. திருமண ஊராம் மதுரை திருமங்கள ஊராகத் திகழ்ந்தது.

திருமண மண்டபம் திவ்யமாக அமைக்கப்பட்டது. பளிங்கி னால் செய்த யானைகள் மண்டபத்து முன் வாசலில் இருபாலும் நின்றன. படிகள் பொன்னால் அமைந்தன. நீலமணியாளிகள் பத்தி கட்டி நின்றன. திண்ணைகளில் மணிகள் பதிக்கப்பெற்றிருந்தன. பளிங்குக் கற்களாலாகிய சுவர்களுக்கிடையே மரகதத்தாலாகிய சாள ரங்கள் விளங்கின. பவளத் தூண்கள் ஆயிரம் நின்றன. மேலே இந்திர நீலமணிகளால் செய்த போதிகைகள் இருந்தன. பொன்னால் செய்த உத்திரங்கள், செம்மணி விட்டங்கள் துலங்கின. மேனிலை சந்திரகாந்தக் கல்லால் செய்யப்பட்டிருந்தது. எங்கும் இன்பத் திருமணம் எழுந்து வீசியது.

திருமண மண்டபத்தின் நடுவிலே கற்பகத்தரு கொடுத்த வயிரச் சிங்காதனத்தின் மேல் பொற்பலகை அமைத்தனர். அதற்குமேலே பவளக் குடத்தோடு சதுரமாக அமைத்த கழுத்துக்கொண்ட தூண் கள் நாட்டி, பளிங்கு உத்தரங்களையும் பவளக் கொடுங்கைகளையும் பரப்பி மூன்று அடுக்குகளை அமைத்து சிற்ப சாஸ்திர விதிப்படி பல வகை மணிகளால் விமானத்தை எழில்மிக விளங்க வைத்தனர். சோமசுந்தரக்கடவுள் தடாதகைப் பிராட்டியாரோடு வீற்றிருப்ப

தற்கு நவமணிகள் இழைத்த பொன்னிருக்கை ஒன்றும் அமைத்தனர்.

கற்பகத் தரு ஆடை அணிகலன்களைக் கொடுத்தது. காமதேனு அறுசுவை நல்கும் ஐவகை உணவுகளைக் கொடுத்தது. சிந்தாமணி கருதிக்கேட்ட பொருள்களையெல்லாம் கொடுத்தது. மதுரை திருநகரச் சிறப்பிலே தேவர் தலைநகரே நாணம் உற்றது.

மலயத்துவச பாண்டியன் திருமகளாகிய தடாதகை தேவியாரின் திருமண விழாவினைக் கண்டு களிக்க உலகின் பல்வேறு பகுதிகளில் இருந்த அரசர் அனைவரும் திறை பொருள்களோடு வந்தனர். திருமால், பிரம்மா, இந்திரன், உருத்திரர்கள், அஷ்டபைரவர், அஷ்டதிக்கு பாலகர்கள், அஷ்ட வசுக்கள், சூரியர், சந்திரர் முதலிய தேவர்கள், நாரதர், வியாசர் ஆகிய மகரிஷிகள் எல்லாரும் வந்து நிரம்பினர். பெருநிதிக் கிழவனான குபேரனே சிவபெருமானுக்குத் திருமணக்கோலம் புனைவித்து மகிழ்ந்தான். திருமண மங்கலக் கோலம் கொண்ட சிவபெருமான் ரிஷப வாகனத்தின்மீது எழுந்தருளினார். மதுரைப் பெரும்பதியை நோக்கி அனைவரும் ஒரு முகமாகக் கிளம்பினர். மதுரையம்பதி மணவாள சுந்தரரைப் பொற்சின்னங்கள் ஆர்த்து வரவேற்றது. சுமதி முதலியவர்கள் எதிர் வந்து தரிசித்து வணங்கினர். பல தேசத்துப் பெண்டிர் எதிர்கொண்டு வந்து தரிசித்தனர். அனைவரும் மணமகனையும் மணமகளையும் வியந்து போற்றினர். மங்கல மங்கையர் அஷ்ட மங்கலப் பொருள்களை ஏந்திவர, தேவமாதர் கர்ப்பூரம் காட்ட, இன்னிசைக் கருவிகள் இயம்ப சிவபெருமான் அரச மாளிகைக்கு எழுந்தருளினார்.

பின்னர் காஞ்சனமாலையார் சிவபெருமானை அண்டி வணங்கி, "தேவரீர் தடாதகையைத் திருமணம் செய்து கொண்டு இந்த நகரத்தின் செல்வத்தையும் கன்னிப் பாண்டி நாட்டையும் கைக்கொண்டு அரசு செய்து அருள்வீராக" என்று விண்ணப்பித்துக் கொண்டார். சிவபிரான் திருவுள்ளம் இசைந்து இசைக்கருவிகள் இன்னொலி முழங்கத் திருக்கல்யாண மண்டபத்தை அடைந்தருளினார். ஆங்குச் சென்று சதுர் வேதங்கள் முழங்கச் சிங்காதனத்தில் வீற்றிருந்தருளினார். திருக்கல்யாண மண்டபத்திலே இரு மூர்த்திகளும் தேவர்களும் மண்ணுலகத்தவரும் நெருங்கி அமர்ந்திருந்தனர். திருமண முகூர்த்தம் வருகின்றவரையும் தேவமாதர் புரியும் ஆடலைக் கண்டு அருள்வாராயினர்.

தடாதகைப் பிராட்டியாரும் திருமஞ்சனம் ஆடி தானதருமங்கள் பல செய்து திருமணக்கோலம் புனையத் தொடங்கினார். லக்ஷ்மியும், சரஸ்வதியும் போட்டி போட்டுக்கொண்டு பிராட்டியாருக்கு அலங்காரம் செய்வித்தனர். பிராட்டியார் அணிந்த ஆடை வகைகளையும் அணிமணிகளையும் உத்தமக் கவிஞர்களாலும் வருணித்தல் இயலாது. சிவபெருமான் அளவற்ற ஆனந்தமும் ஆச்சரியமும் கொள்ளுமாறு அமைந்திருந்தது திவ்யாலங்காரம்.

திருமணத்திற்குரிய நன்னிமித்தம் வர கலைமகளும் திருமகளும் கைலாகு கொடுக்க, வேதங்கள் கோஷிக்க எழுந்தருளினார், சுந்தர வல்லி தடாதகைதேவி. திருமண முரசங்கள் ஒலித்தன. சங்குகள் முழங்கின. விண்ணவர் மலர் பொழிந்தனர். மணமகள் அசைந்து மெல்ல நடந்து வந்து ஒதுங்கி தம்பால் கருணை நிரம்பிய சிவபெருமான் அருகில் அமர்ந்தருளினார். செம்பொன் மணித்தவிசின் மேல் சிவபெருமானுடன் தடாதகைப் பிராட்டியார் நெருங்கி இசைந்து அமர்ந்திருந்த திருக்கோலம் பண்ணும்பாடலும், நீரும் தண்மையும், பாலும் சுவையும், மலரும் மணமும், மணியும் ஒலியும் போலத் திகழ்ந்தது.

திருமண வைபவம் தொடங்கியது. மகாவிஷ்ணு பொற்கலசத்தி லுள்ள நன்னீரால் மணமகன் சிவனாரின் திருவடிகளைக் கழுவினார். மணம் கமழும் சந்தனம் இட்டு மலர் தூவினார். திருவடி கழுவிய நன் னீரை அனைவரும் சிரமேற் தெளித்துக்கொண்டனர். பின்னர் ஆங்கி ருந்த மகாவிஷ்ணு காந்தள் மலரைப் போல் சிவந்த சிவபெருமா னது வலத் திருக்கரத்திலே தடாதகைப் பிராட்டியாரின் வலத் திருக் கரத்தை வைத்து வேதமந்திரம் சொல்லித் தாரை வார்த்துக் கொடுத்துக் கன்யாதானம் செய்தார். தேவர்கள் பூ மழை கொண்டு சொரிந்தனர். சித்த வித்தியாதரர் கண்டு மகிழ்ந்தனர். பாவலர் நாவலர் பாடி மகிழ்ந்தனர். அரம்பையர் ஆடினர். விஞ்சையர் அமுத கீதம் பாடினர். முனிவர்கள் 'ஹர ஹர' என்று தோத்திரம் செப் பினர். யாவரும் தேவத் திருமண இன்பத்திலே உளமாரத் திளைத் தனர்.

பிரம்மதேவன் தனது நான்கு புத்திரர்களுடன், நாற்புறங்களி லும் நான்கு மறைகளின் மங்கல மொழி ஒலிக்க திருமணச் சடங்கு களை வேதாகம சிவாகம முறைப்படி நிறைவாகச் செய்து முடித்தார். மகாயோகியான சிவபெருமான் தடாதகைப் பிராட்டியாருக்கு திரு மாங்கலியம் பூட்டிப் பாணிக்கிரஹணம் செய்துகொண்டார். உலகங் களெல்லாம் உயிர்களெல்லாம் பேரின்பம் அடைந்தன.

பின்னர் திருமாலுக்கும் நான்முகனுக்கும் தேவர்கட்கும் தன் சிவ கணங்களுக்கும் நீங்காத அருட்பிரசாதத்தை வழங்கி அருளினார் சோமசுந்தரப் பாண்டியக் கடவுள். வந்திருந்த ஏனையோருக்கும் வரிசை முறைப்படி வழங்கி அருளி அருள்விடை கொடுத்தனுப் பினார்.

அதன் பின்பு சிவபெருமான் நல்லரசாட்சி நடத்திக் காட்டி யருளினார். வெள்ளிப் பொறுப்பை விட்டு நீங்கிய சிவபெருமான் பாண்டியநாட்டு ஆட்சிப் பொறுப்பை ஏற்று சோமசுந்தரப் பாண்டி யனாக விளங்கியருளினார். ☆

## 6. வெள்ளியம்பலத் திருக்கூத்து ஆடியது.

பரஞ்சுடராகிய சிவபெருமான் உலகினை நடாத்துவதற்கான அறம், பொருள், இன்பமானவற்றை நிலைநாட்டும் பொருட்டே

சுந்தர பாண்டியனாக வந்தருளித் திங்கட் குலமணியான தடாதகைப் பிராட்டியாரைத் திருமணம் செய்துகொண்டார். பின்பு திருமணத்திற்கு வந்திருந்த தேவர்களையும், மகரிஷிகளையும், மன்னர்களையும் ஏனையோர்களையும் நோக்கி, "அமுது செய்ய வருக" என்று திருவாய் மலர்ந்தருளினார். அவர்கள் அனைவரும் விரைந்து பொற்றாமரைத் திருக்குளத்திலே நீராடிவிட்டுத் தங்கள் நியமங்களை முடித்துத் திரும்பினர்.

அது சமயம் பதஞ்சலி மகரிஷியும் வியாக்கிரபாத மகரிஷியும் சுந்தரப் பெருமானை அடிபணிந்து வணங்கி, "கருணாமூர்த்தியே! பொன்னம்பலத்திலே தேவரீர் ஆடியருளும் திரு நடனத்தைத் தரிசனம் செய்த பின்பே உணவு கொள்வது அடியவர்களான எங்கள் நியமம்" என்று விண்ணப்பித்துக் கொண்டனர். அடியார்களின் எண்ணத்தை அப்படியே நிறைவேற்றி வைக்கும் அண்ணல் சிவபெருமான், "அதே நடனத்தை யாம் இம் மதுரையம்பதியிலே நடித்துக் காட்டுவோம். உலகவடிவாகிய விராட் புருஷனுக்கு தில்லையம்பதி இருதயம்; மதுரையம்பதி துவாதசாந்த ஸ்தானம் ஆகும்." என அருளினார். "தெய்வப் பேரரசே! ஏனைய அங்கங்கள் எவை?" என்று இரண்டு ரிஷிகளும் வினவினர். சுந்தர பாண்டியர் மிகுந்த பணிவுடன், "திருவாரூர் மூலாதாரம்; திருவானைக்கா சுவாதிஷ்டானம்; திருவண்ணாமலை மணிபூரகம்; தில்லை அநாகதம்; திருக்காளத்தி விசுத்தி: காசி ஆஞ்ஞை; திருக்கயிலாயம் பிரம்மாந்திரம் ஆகும். மதுரையம்பதி துவாத சாந்தஸ்தலம். இத் திருப்பதி எவ்வகையில் மேலாகியது எனில் எல்லாவற்றுக்கும் முன்னால் தோன்றிய முறையாலே" என்று திருவாய் மலர்ந்தருளி இருபெரு முனிவர்களுடன் திருக்கோயிலுள் புகுந்தருளினார்.

சுந்தரப் பெருமானின் இச்சா சக்தியாலே இந்திர விமானத்தின் கீழ்ப்பகுதியில் வெள்ளியம்பலம் ஒன்று தோன்றியது. அவ்வம்பலத்தினிடையே மாணிக்கப் பீடம் ஒன்றும் தோன்றியது. அம் மணிப்பீடத்தின் மேலேறி நின்ற சுந்தரப் பெருமான் மெஞ்ஞானப் பேரொளி வடிவாக நின்றார். சிவகணங்கள் மொந்தை தண்ணுமைகளை முழக்கினர். நந்திகேசுவரர் மத்தளம் கொட்டினார். திருமால் இடக்கை முழக்கினார். தும்புருநாதர் இருவரும் இசை பாடினர். சரஸ்வதிதேவி சுருதி கூட்டினார். தூக்கிய இடது திருவடி குவிந்த செந்தாமரை மலரை நிகர்த்திருந்தது. வலக்கரங்கள் ஐந்திலும் அபய ஹஸ்தத்திலே திரிசூலமும் ஏனைய நான்கு திருக்கரங்களிலே உடுக்கை, அம்பு, வாள், மழு முதலியன இலங்கின. இடக்கரங்கள் ஐந்திலே வரதஹஸ்தத்திலே நாகமும் ஏனைய நான்கு கரங்களிலே அக்கினி, வில், கேடயம். கதை முதலியனவும் இலங்கின. திருநீலகண்டமும், சங்ககுண்டலம் பூண்ட திருச் செவியும், விரித்த செஞ்சடையும், வெண்ணீறு துலங்கும் திருமேனியும்; விரிகமல நயனங்கள் மூன்றும், பாம்புக் கச்சையும், நீலமேனி வாலிழை பாகமும், உமையம்மையார் மேல் வைத்த திருப்பார்வையும் திரு

நகையும் தோன்றத் திருநடனம் செய்தருளினார் சுந்தரப் பெருமான். அதுபோழ்து கங்கையாறு பாயும் ஒலியும், மங்கல டமருகத்தின் ஒலியும், மந்திர ஒலியும், வேதத்தொலியும், அங்கைத்தீயின் ஒலியும். திருவடிச் சிலம்பின் ஒலியும் ஆகிய அனைத்தும் ஒன்று கலந்து எங்கும் பரவியது. அடியவர்களின் இரு செவிகளும் ஒலியின்ன முதைப் பருகின.

இவ்விதமாகச் சிவபெருமான் வெள்ளியம்பலத் திருநடனம் ஆடியருளியதை பதஞ்சலி வியாக்ரபாதர் இருவரும் கரங்களைத் தலைமேல் கூப்பித் தரிசித்துத் திருவடியில் வீழ்ந்து வணங்கினார்கள். வேத கீதங்களால் மனமார நாவாரப் போற்றிச்செய்து பேரின்பக் கடலுள் மூழ்கி அன்பு மயமானார்கள். மகரிஷிகளின் பொருட்டு ஆடிய திருநடனத்தை தேவர்கள், முனிவர்கள், யோகியர், கந்தருவர் கிம்புருஷர், அவுணர்கள் எல்லோரும் தரிசித்து வணங்கினர். பதஞ்சலி மாமுனிவர் சிவானந்தத்திலே மூழ்கிவிட்டார். ஆனந்தக் கண்ணீர் அருவி சோர இறைவனைப் பலபடியாகத் தோத்திரம் செய்தார்.

வெள்ளியம்பலக் கூத்தாடும் சுந்தரேசர் இரு மாமுனிவரையும் நோக்கி, ''நல்லது, நீங்கள் இருவரும் விரும்பியது யாது?'' என்று வினவியருளினார். ''எந்தையீர்! இத் தெய்வத் திருநடனம் எப் போதும் இவ் வெள்ளியம்பலத்துள்ளே நிலைத்து நிற்கவேண்டும். இத்திருகாட்சி கண்டவர் பாசபந்தங்கள் விலகட்டும். அருள் புரிந்திடுக'' என்று வேண்டினர் இருவரும். நடராசப் பெருமானும், ''செந்தமிழுக்கு இருப்பிடமான இப் பாண்டிக் கன்னிநாடு செய்த தவம் காரணமாக நீங்கள் கோரிய வரத்தை அளித்தோம்'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

சிவகணத்தார் கைகோத்துக் கூத்தாடினர். தேவர்கள் பூமழை பொழிந்தனர். முனிவர்கள் ஆனந்தக் கண்ணீர் உகுத்தனர். அன்புருவாகத் திகழ்ந்த பதஞ்சலி, வியாக்கிரபாதர் இருவரையும் துதிசெய்து உவகையுடன் தழுவிக்கொண்டனர். ★

## 7. குண்டோதரனுக்கு அன்னம் இட்டது.

தடாதகைப் பிராட்டியார் தமது திருமணத்திற்கு வந்திருந்த மாதவர்களும், மறையவர்கள், பல நாட்டு அரசர்கள் எல்லார்க்கும் முறையே பொற்பாத்திரங்களிலே அறுசுவை உண்டியை உண்பித்து, சந்தனம், பட்டாடை, ஆபரணம், தாம்பூலம் மற்றும் ஏனைய பொருள்களும் முறையாக அளித்து உபசாரம் செய்து ஐம்பத்தாறு நாட்டு வேந்தர்கட்கும் மற்றவருக்கும் விடைகொடுத்து அனுப்பினார். அதுசமயம் சமையல் தொழில் செய்வோர் வந்து தேவியின் திருவடி வணங்கி, ''தாயே! அடியவர்கள் சமைத்த அன்னத்திலே ஆயிரத்தில் ஒரு பங்கு கூடச் செலவாகவில்லை. நாங்கள் என்ன செய்யவேண்டும்?'' என வினவினர், பிராட்டியார் எழுந்து

பெருமான் முன்வந்து வணங்கி ஒரு பக்கத்தில் நின்று, "தேவரீர்! தங்களுடன் முப்பதுமுக்கோடி தேவர்களும் வருவர் என்று எண்ணி சுவையுணவு அளவற்றதாக ஆக்கச் செய்தோம். எஞ்சியுள்ள அன்னமோ இமயமலையளவு குவிந்துள்ளது. அன்னத்துக்கேற்ப சமைத்த காய்கறிகளும் சுற்ற சூழ விருக்கும் சிறுமலைகளைப் போலக் குவிந்து கிடக்கின்றன" என்று கூறினார்.

சுந்தரபாண்டியப் பெருமான் அதனைக் கேட்டு, தேவியாரிடத்துத் தான் கொண்ட அன்பின் விளைவாக ஒரு திருவிளையாடல் புரியத் திருவுளம் கொண்டார். தனக்குத் திருக்குடை ஏந்தும் பூதகணத் தலைவன் குண்டோதரனது பேராற்றலையும் உலகறியச் செய்ய விரும்பினார் போலும். தேவியை நோக்கிக் குறுநகை செய்து, "வேந்தரில் சிறந்த பாண்டிய குமாரியே! உனக்குப் பணிபுரிய தேவலோகத்துப் பஞ்சதருக்களும் உன்னகத்தே உள்ளன. அளவற்றதான உனது செல்வப் பெருக்கின் பெருமையை நாம் அறியுமாறு செய்தாய் போலும். உனது பெரு விருந்தினை உண்ண நம் கணத்துள்ளே பசியால் வருந்துபவர் யாரையும் காணோம்" என்று சொல்லிவிட்டு அருகிலே நின்றிருந்த குண்டோதரனது வயிற்றிலே வடவாக்கினி புகுமாறு திருவுளங் கொண்டார். வடவைத்தீ வயிற்றினுள் புகுந்து வருத்தியதால் குண்டோதரன் தளர்ந்து உயிரொடுங்கிச் சிவபெருமானை நோக்கி, "பெருமானே! பெரும் பசி என்னை வருத்துகின்றது" என்று இரங்கினான். சிவபெருமான் தமது பிராட்டியாரை நோக்கி, "எமக்குக் குடைபிடிக்கும் குட்டைக்கால பூதத்திற்குப் பிடி சோறு கொடுப்பாயாக; அப்புறம் கூறுகின்றேன்" என்று கூறியருளினார். பிராட்டியார் பெருமானை வணங்கி விடைபெற்றார். பசித் தீயினால் வருந்திய குண்டோதரனும் உடன் சென்றான்.

அரசியாரின் ஏவலுக்கிணங்க சேவகர் பெரும்பசிக்குண்டோதரனை இட்டுச் சென்று சோற்று மலையின் முன்பு கொண்டுவிட்டனர். குண்டோதரன் சோற்றை எடுத்ததையோ உண்டதையோ யாவரும் காணவில்லை. அன்ன மலை மறைந்து விட்டது. ஏவற்பெண்டிர் கை நெரித்து வியப்புக் காட்டினர். சிலர் பயந்தனர். சிலர் ஓடினர். சிலர் கண்களைப் பொத்திக் கொண்டனர். பின்னர் அப்பூத குண்டோதரன், காய்கறிவகைகள், நெய், பால், தயிர், தேன் எல்லாவற்றையும் உண்டு தீர்த்தான். மேற்கொண்டு பலவகைப் பழங்கள்,பணியாரங்கள், கரும்புகள், தேங்காய், வேகாத கறிகாய்கள், அரிசி,நவதானியங்கள் அனைத்தையும் தனது கையால் வாரி வாரி எடுத்துத் தனது பெருவயிற்றினுள் அடைத்துக் கொண்டான். இதையெல்லாம் கேட்டும் கண்டும் தெரிந்த தடாதகை தேவியார் அதிசயம் அடைந்தார்.

தனது இன்ப் அன்பு நாயகனிடம் சென்று நாணத்துடன் தலை கவிழ்ந்து நின்றார் தேவியார். அவளது நிலைதெரிந்த சோமசுந்தரக் கடவுள் தேவியைப் பார்த்து விளையாட்டாக, "நான் அனுப்பிய பூதம் உண்டு மீதம் இருக்குமானால் மேற்கொண்டு சில பூதங்களை

அனுப்புவேன்'' என்றார். பிராட்டியார், ''ஐயனே! தேவரீர் அனுப்பி வைத்த பூதம் வெந்தது வேகாதது அனைத்தையும் உண்டுவிட்டது. மேற்கொண்டு பூதங்கள் அனுப்பினால் உலகத்தையே விழுங்கிவிடு வார்கள். பிறகு தங்களது யுகாந்தகால ருத்திரர் என்ற பெயர் உறுதி யாகி விடும்'' என்று பணிவுடன் கூறினார்.

அதுசமயம் பெரும்பசித்தீ வருத்தக் குண்டோதரன் வந்து, ''வெள்ளியம்பலத்திலே திருநடனம் செய்த சுந்தரக்கடவுளே! மலை யெனக் குவிந்திருந்த அன்னம் உண்டும் என் பசி தீரவில்லை. எனக்கு ஒன்றும் தெரியவில்லையே; என்ன செய்யட்டும்?'' என்று கதறினான்; புலம்பினான்; பெருமூச்சு விட்டான்; ஆவி சோர்ந்து அயர்ந்தான். ★

## 8. அன்னக்குழியும் வையையும் அழைத்தது.

வேதநாயகனான சோமசுந்தரப் பெருமான் பின்னர் தடாதகைப் பிராட்டியாரை நோக்கி உள்ளே நகைத்துக்கொண்டே பசிப்பிணி யால் அல்லல்படுகின்ற குண்டோதரனுக்காக தனது சக்தியாகிய அன்னபூரணியை நினைந்தருளினார். உடனே நான்கு திசைகளிலும் இருந்த தயிர்க்கடலானது நிலத்தின் இடையே கிழித்துக்கொண்டு ஊற்றெடுத்துப் பொங்கி எழுந்ததுபோல நான்கு பெருங்குழிகள் தம்மிலிருந்து சுவை மிகுந்த தயிர் கலந்த அன்னம் பொங்கி எழுந் தது. அப்போது சுந்தர பாண்டியர் தமது குடையாள் குண்டோ தரனைப் பார்த்து, ''உனது பெரும்பசி நீங்கும் வண்ணம் உண்பாய்'' என்று கட்டளையிட்டருளினார். நான்கு சோற்றுக் குழிகளிலிருந்தும் தயிர்ச் சோற்றை வாரி வாரி உண்டான். இறைவன் திருவருளால் குண்டோதரன் தன் பெரும்பசி தீர்ந்தான். உடல் எல்லாம் வயிரு கப் பருத்த குண்டன் தரையிலே விழுந்து மூச்சுவிட முடியாமல் புரண்டான். அடுத்து குண்டோதரனுக்கு தாகம் மேலிட்டது. நீர் நிலைகளைத் தேடிச்சென்றான். கிணறு, ஓடைகள், குளங்களிலே வாய்வைத்து உறிஞ்சிக் குடித்தான், அவைவறண்டு போகுமாறு. அப்போதும் அவனது பெருந்தாகம் தணியவில்லை. சுந்தரப் பெரு மானின் திருவடிகளில் விழுந்து முறைசெய்தான். உடனே சிவ பெருமான் தனது திருமுடியில் துலங்கிய கங்காதேவியை நோக்கி, ''மாதே! மதுரையம்பதியின் புறத்தே ஒரு நதியாக விரைவில் வரு வாயாக'' என்று ஆணையிட்டார்.

சிவபெருமானது திருச்சடையை விட்டு நீங்கிக் கொண்டிருந்த கங்காதேவியானவள், ''முன்பு ஒருக்கால் பகீரதனுக்காக என்னைத் தீர்த்தமாகத் தேவரீர் விடுவித்த போது என்னில் மூழ்குகின்றவர் களின் பாவத்தையும் குற்றங்களையும் களைந்து செல்லுமாறு பணித் தீர்கள். இன்னும் நான் ஒரு ஆறாகிப் பாய்ந்தால் என்னைக் கண் டவரோ, தொட்டவர்களோ, என்னில் மூழ்கியவர்களோ, தேவரீரிடம் பக்தியும், கல்வியும், ஞானமும், வீடும் பெறும்படி அருளவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டு விடைபெற்றாள். பின்பு மிகுந்த வேகத்

தோடு எழுந்து நல்லாறாக வானத்திலிருந்து இறங்குவதற்குச் சென்றாள்.

நதி உருவங்கொண்ட கங்கைக்கு அலைகள் கைவளையல்களாக அமைந்தன; முத்துக்கள் பற்களாக விளங்கின; நுரையே ஆடையாகியது; பூங்கொடிகளே இடை; கருமணல் மணங்கமழ் கூந்தல்; இவ்வாறாகத்தானே பல வகைப் பாங்கு காட்டி பேரிரைச்சல் செய்து வருகின்ற ஆறு கதியிலே யானைபோலக் கம்பீரமாகவும், வளைந்து நெளிந்து வருவதிலே பாம்பினைப் போன்றும், நிலத்தைத் தோண்டி வருவதிலே வராக மூர்த்தியைப் போலவும், வாமனனைப் போலவும் கண்ணனைப் போலவும் வந்துகொண்டிருந்தது.

ஓடிவந்த பெருவெள்ளத்தைக் கண்ட சிவபெருமான் தாகத்தால் துடித்துக் கொண்டிருந்த குண்டோதரனைக் கண்டார். "அந்தோ, எனது நீர் வேட்கை தணியவில்லையே" என்று வெதும்பிய குண்டோதரனை அந்த ஆற்றின் அருகே விடுத்தார். குண்டோதரன் பொங்கிப் பெருகி வரும் அந்த நதியின் நடுவே சென்றான். தனது இரண்டு கைகளையும் கரைகளோடு சேர்த்து நீட்டிக் கொண்டான். தடைபெற்ற ஆற்று நீர் பெரிய மடுவைப்போல் தேங்கியது. தங்கிய தண்ணீரைத் தன் பெருவாய் திறந்து பருகினான் குண்டோதரன். தணியாத தாகம் ஒருவாறாகத் தணிந்தது. பின்னர் அவன் களிகொண்டு சிவபெருமான் சன்னதி சேர்ந்து திருவடிகளில் விழுந்து வணங்கினான். அன்பு ததும்பும் நற்கீதம் படித்தான். சொல்லுக்குப் பொருளாக விளங்கும் சுந்தரேசர் தனது குடைபிடிக்கணம் பாடும் பாட்டினைத் திருச்செவி மடுத்து மகிழ்ந்தார். பூதகணங்களுக்குத் தலைமை வகிக்கும் பதவியையும் குண்டோதரனுக்கு அருளினார். பின்னர் தடாதகை தேவியாரோடு செங்கோல் செலுத்தி அருளினார்.

குண்டோதரனின் தாகம் தீர்க்க வந்த புனித ஆறு வையை என வழங்கப்படுவதாயிற்று. சிவபெருமானது செஞ்சடையில் இருந்து வந்ததால் சிவகங்கை எனப்பட்டது. சிவஞான தீர்த்தம் எனவும் போற்றப்பெறும், மிகவும் வேகமாக வந்ததால் வையையாறு வேகவதி எனவும், மதுரைப்பதியை மாலைபோலச் சூழ்ந்து வந்ததால் கிருதமாலை எனவும் திருப்பெயர் பெற்றது. ★

## 9. எழுகடல் அழைத்தது.

சோமசுந்தரப் பெருமான் பாண்டியத் திருக்கோலம் பூண்டு அனைத்துலகினையும் குளிர்வெண்குடையால் நிழல் தந்து அறவழி பிறழாது ஆண்டு வந்தார். அந்த நாட்களில் ஞானசாஸ்திரத்தின் அரும்பொருளை உணர்ந்த ரிஷிகளும், தூயமுனிவராகிய தவப் பெரியார்களும் முறைப்படி பெருமானைக் கண்டு வருவார்கள். அவ்வாறே வேதமுணர்ந்த கௌதமமுனிவர் சுந்தரப் பெருமானைச் சந்தித்துத் திரும்புங்கால் காஞ்சனமாலையின் திருமனையை அடைந்

தார். காஞ்சனமாலை அவரை எதிர்கொண்டழைத்து பொன்னிருக் கையிலே அமர்த்தி வணங்கி, "பரமசிவத்தின் அடியவரே! பிறப்புத் தொடர்பு ஒழிக்கவல்ல தவத்தினைக் கூறி அருளவேண்டும்" என விண்ணப்பித்தார். கருணை முனிவர் திருமுக மலர்ந்து, "அருஞ் சிறப்பினையுடைய காஞ்சனமாலையே! தடாதகைப் பிராட்டியின் தாய் நீ; சிவபெருமானே நினது மருமகன். உனக்குத் தெரியாத தவமா வேறு ஒருவர் அறிவார்? இருந்தாலும் சொல்கிறேன்:

"மானசம், வாசிகம், காயிகம் எனத் தவம் மூன்று வகைப்படும். தான தருமத்திலே எண்ணம, நாட்டல், உயிர்களிடத்து அன்பு கொள்ளல், பிறர் செய்த தீமை பொறுத்தல், உண்மை உரைத்தல், மோனத்தமர்ந்து சிவத்தைச் சிந்தித்தல், புலன்களை அடக்குதல் முதலியனவே மனத்தால் செய்யப்படும் மானசம் ஆகும். பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபம் செய்தல், உருத்திர மந்திரங்களை ஓதுதல், தோத்திரப் பாடல்களைப் பாடுதல், தருமங்களை எடுத்துரைத்தல், வாக்கால் செய்யப்படு வாசிகம் ஆகும். சிவபெருமானைப் பூசித்தல், திருக்கோவிலை வலம் வருதல், இறைவன் சன்னதி சென்று வணங் குதல், பல திவ்ய க்ஷேத்திரங்களுக்கும் சென்று வருதல், கங்கை முதலிய தொலைவிலுள்ள புண்ணிய நதிகளுக்குச் சென்று ஸ்நானம் செய்தல் முதலியன உடம்பால் செய்யப்படும் காயிகம் ஆகும். இந்த முத்தவங்களுள்ளும் காயிகம் சிறந்தது. அதனுள் கங்கை முதலான நதிகளுக்குத் தனித்தனியே சென்று நீராடுதல் சிறப்புடையது. அப்புனிதநதிகள் எல்லாம் வந்து சங்கமமாகும் கடலில் நீராடுதல் எல்லாவற்றிலும் மிகவும் சிறந்தது" என்று மொழிந்தார்.

கௌதம முனிவர் மொழியைக் கேட்ட காஞ்சனமாலை கடல் நீராடப் பெருவிருப்பம் கொண்டாள். தன் செல்வப் புதல்வி தடா தகைதேவியிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்தாள். உடனே பிராட்டியார் தமது தலைவர் பால் சென்று, "குண்டோதரனுக்காக அன்றொரு நாள் அன்னக்குளமும் வையை நதியும் அழைத்துத் தந்தருளிய கருணையங் கடலே! எனது அன்னை கடல் சென்று நீராட விரும்புகின்றார்," என்று விண்ணப்பித்துக்கொண்டார்.

தடாதகைப் பிராட்டியாரின் திருமொழிகளைச் செவி மடுத்த சுந்தரப்பெருமான், "ஒரு கடல் என்ன, ஏழு கடல்களையும் வர வழைத்து விடுவோம்" என்று கூறி அவை வரும்படிக்குத் திருவுளங் கொண்டருளினார். எம்பெருமான் எண்ணிய மாத்திரத்திலே ஏழு கடல்களும் மதுரையம்பதியின் கிழக்குத் திக்கிலுள்ள ஒரு வாவி யிலே ஏழு வகையான வண்ணங்களோடு வந்து பொங்கி நின்றன. பொங்கி எழுந்த ஏழு பெருங்கடல்களும் சிவபெருமான் திருவாணைப் படி வாவியில் சென்று அடங்கின. தனக்கே உரிய வெள்ளை வண் ணத்தோடு ஏழு கடல்களின் நிறங்களும் சேர அஷ்டமூர்த்தியாகிய சிவபெருமானை நிகர்த்து எண்வகை வண்ணங்களோடு விளங்கியது. ★

## 10. மலையத்துவசனை அழைத்தது.

சுந்தரபாண்டியப் பெருமான் தேவியாரோடு வந்து ஏழு கடலும் நிறைந்த திருக்குளத்தின் அருகே நந்தவனத்திலே சிங்காதனத்திலே எழுந்தருளினார். பின்னர் தமது தேவியாரை நோக்கி, "யாம் உனக்காகவே ஏழு கடல்களையும் இந்த நகரத்திலே வருமாறு அழைத்தோம். இதிலே வந்து கடலாட உன் அன்னையை அழைப்பாயாக!" என்று திருவாய் மலர்ந்தருளினார். அதன்படிக்கே தடாதகைப்பிராட்டியாரும் தன் தாயாம் காஞ்சனமாலையை அழைத்துக்கொண்டு எழு கடல் திருக்குளக்கரைக்கு வந்தருளினார்.

காஞ்சனமாலை அப்போது சிவயோகியர்களைப் பார்த்து "கடலில் நீராடுவதற்குரிய விதி யாது? சொல்லுங்கள்" எனக் கேட்டாள். சிவயோகியர், "கற்பிற்சிறந்த காஞ்சனையாரே! கணவனது கை, குமாரனது கை பசுக்கன்றின் வால் இவற்றுள் ஏதேனும் ஒன்றைப் பிடித்துக்கொண்டு நீராடுதலே முறை" என்று செப்பினர். அது கேட்ட காஞ்சனை, "அந்தோ எனக்கு கணவனோ, புத்திரனோ இல்லையே; எனக்குக் கிடைக்கக்கூடியது கன்றின் வால் தான் போலும்" என்று தன் மகளை நோக்கி வருந்திப் புலம்பினார். தடாதகைதேவியார் உடனே தனது தலைவர் சிவபெருமான் முன்னால் சென்று வணங்கித் தன் அன்னையின் குறையை வெளிப்படுத்தி விண்ணப்பித்தாள். சுந்தரப்பெருமான் அப்போது இந்திரனோடு ஒன்று சேர்ந்து தேவலோகத்திலே அமர்ந்திருந்த மலையத்துவச பாண்டியனைத் திருவுளம் கொண்டார். மலயத்துவச பாண்டியன் சிவபெருமானது திருவுளத்திறத்தால் இந்திரலோகத்தை விடுத்து தெய்வ விமானம் ஒன்றிலே ஏறிக்கொண்டு மதுரையில் உள்ள எழு கடல் தடாகத்தருகே வந்து சேர்ந்தான். "யான் பெண்மகவு பெற்றதனால் அடைந்த பேறு இது" என்று சொன்னான். பாண்டியன், சுந்தரப்பாண்டியப் பெருமானை வணங்கச் சென்றான்; தன் மாமனாகிவிட்டபடியால் பெருமான் தடுத்துவிட்டார்.

சுந்தரப்பெருமான் அன்புள்ளங்கொண்டு மலயத்துவசனை அருளுடன் நோக்கி, "மனைவியுடன் சென்று தீர்த்தம் ஆடுவாயாக" என்று இயம்பினார். தன் மகளைக்கண்ட பாண்டியன் பெருமகிழ்வு கொண்டான். கணவனை நேரே கண்ட காஞ்சனமாலை நாணங்கொண்டு வணங்கினாள். பின்பு தனது விரலிலே பரிசுத்தத்தின் பொருட்டு பவித்திரம் அணிந்து பஞ்சாக்ஷர மந்திரத்தை உச்சரித்து மறையவர் கூறிய விதிப்படி தன் கணவன் கரத்தைப் பற்றிக் கொண்டு மிகுந்த சந்தோஷத்தோடு எழுகடலில் நீராடினாள்.

காஞ்சனமாலையும் மலையத்துவசனும் புண்ணிய தீர்த்தம் ஆடிக் கரையேறியதும் சோமசுந்தரப்பெருமானின் திருவருளாலே பாசம் விலக உமையொரு பாகத்தாரது அருள்வடிவத்தை அடைந்தனர். ஒளி தெறிக்கும் திருநீலகண்டமும், நான்கு கரங்களும், நெற்றிக் கண்ணும் கொண்ட சிவசொருபத்தை உலகோர் கண்டு வியந்தனர்.

அது சமயம் சிவலோகத்திலிருந்து தேஜோ மயமான தெய்வ விமானம் வந்து இறங்கியது. சுந்தரபாண்டியப் பெருமானின் ஆணையால் இருவரும் எல்லாத் தெய்வங்களும் வணங்க விமானத்தில் ஏறினர். தேவர்கள் பூமாலை பெய்தனர். தூ மறைகளும், துந்திபிகளும் முழங்க திவ்ய விமானம் மேலே எழுந்தது. 'ஹர ஹர' கோஷம் எங்கும் பரவியது. முனிபுங்கவர் வாழ்த்த, தேவர்கள் துதிக்க விமானம் சிவலோகத்தை நோக்கிச் சென்றது.

சுந்தரபாண்டியரும் தடாதகைப் பிராட்டியாரும் அரண்மனை திரும்பினர். அங்கு அறக்கொடியான பிராட்டியார் தன் தலைவன் திருப்பாதங்களை வணங்கி, வேதப்பொருளாகிய சிவபெருமான் தனது ரூபத்தையே தனது பெற்றோர்கட்கு அளித்தருளிய பெருங் கருணையை எண்ணி எண்ணி வியந்துமகிழ்ந்தார். "எனது தாய் நீராட அழைக்தருளினீர். ஸ்நானம் செய்து எழுந்ததும் அவர்கட்குத் தேவரீரது சொரூபத்தை ஈந்தருளினீர். பாண்டிய வம்சம் நின்று விட்டது என்று பழி ஏற்படாதவாறு செங்கோல் செலுத்தி வருகின்றீர். இந்த நிலைமைக்கு இடையூறு ஒன்றும் இனி ஏற்படாதே?" என விண்ணப்பித்துக் கொண்டார்.

சுந்தரபாண்டியனர் தனது தேவியாரின் உள்ளக்குறிப்பினைத் திருவுளம் கொண்டு மகிழ்ந்தார். ★

## 11. உக்கிரபாண்டியன் அவதாரம்.

சோமசுந்தரப் பெருமானே சுந்தர பாண்டியராக அமைந்ததனலே சேர சோழ பாண்டியர் என்னும் மூவேந்தர் குலத்துள் சந்திர குலத்தில் வந்த பாண்டிய வமிசமே மிகவும் சிறப்புற்று விளங்கியது. அச் சுந்தரபாண்டியரே பாண்டியர் குலக் குறையையும் நீக்கத் திருவுளம் கொண்டார். மகேந்திரஜாலம் செய்பவனைப் போலச் சிவபெருமான் முருகப் பெருமானைத் தடாதகைப் பிராட்டியாரிடத்தே தோன்றும்படிக்குத் திருவுள்ளங் கொண்டார். அம்மையாரும் கருப்பவதி ஆயினர். உலகப் பெண்டிர்க்கு ஏற்படுவது போலவே பிராட்டியாருக்கும் மாதம் தோறும் கருத்தரித்தற் கேற்றதான வேறுபாடுகள் தோன்றின. வேதியர்களும் முனிபுங்கவர்களும் வந்திருந்து ராஜ குலத்தாருக்குரிய விசேடங்களை மதுரையம்பதியிலே மங்களம் ததும்ப மாதந்தோறும் செய்து முடித்தனர்.

பாண்டியநாடு தான் செய்த தருமத்தின் பலனை அடையுமாறும், தூய தவத்தவரின் மனம்போல வானம் களங்கமின்றித் துலங்கவும், திங்கட்கிழமையும் திரு ஆதிரை நட்சத்திரமும் தாம் செய்த பிரார்த்தனையின் பயன் பெறுமாறு, குருவெனும் வியாழன் கேந்திரத்தில் ஒளியுடன் ஏறி விளக்கமுற்று சுபமுகூர்த்தம் நிகழவும், சதுர்வேதங்கள் தாமே முழங்க, தேவர்கள் மலர் பொழிய இலட்சுமியும் சரசுவதியும் இறும்பூது எய்தவும்; சுந்தரப்பெருமானும் சுந்தரப் பெருமாட்டியும் கொண்டருளிய திருக்கோலத்திற்கு ஏற்ப, இளஞ்

சூரியனைப் போல முருகக்கடவுள் போல தடாதகைப் பிராட்டியாரிடத்தே திருக்குமாரன் ஒருவன் அவதரித்தான்.

அவதரித்த தன் புதல்வனைப் பிராட்டியார் எடுத்து உச்சி மோந்து தழுவி ஏந்தித் தம் கணவரது திருக்கரத்திலே கொடுத்து வாங்கினார்.

மகாவிஷ்ணு, பிரம்மா, இந்திரன் ஆகிய தேவர்களும், மஹாரிஷிகளும், ஏனையோர்களும் தமது மனைவிமார்களோடு சுந்தர பாண்டியரின் திருமனையை அடைந்தனர். சேர, சோழரும் வட பகுதி வேந்தர்களும், குறுநிலமன்னர்களும் சேனைகள் சூழ்ந்து பாண்டியரையும் பிராட்டியாரையும் தரிசனம் செய்து, துதித்து திருமகன் தோன்றியது குறித்து உவகை மொழிகள் பல பேசித் தத்தம் இடங்களுக்கு ஏகினர்

"முருகப் பெருமானே குழந்தையாக வந்துள்ளான்," "இக் குமாரனது ஆணை ஏழு உலகங்கள் அனைத்தையுமே காக்கும்," "பாண்டி நாட்டார் செய்த பெருந் தவந்தான் திருக்குமாரன் தோன்றக் காரணம்," "அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கும் தனித்தனி இயற்றிய பெருந்தவத்தின் பயனேயாம் இச் செல்வக் குமாரனின் திருத்தோற்றம்" என்றெல்லாம் பலர் பலப் படி விளம்பினர்.

மதுரையம்பதி மங்கல விழாக் கொண்டாடிப் பெருமகிழ்ச்சி காட்டியது. தான தருமச் செய்கைகள் பல ஊரெங்கும் மலிந்தன. பனிநீர் சந்தனம், கஸ்தூரி முதலியவற்றைத் தெளித்துத் தூய்மை செய்தனர் நகரமாந்தர். எங்கும் கோலாகலமும் குதூகலமும் தாண்டவம் ஆடின.

சுந்தரபாண்டியர் தனது அரும்புதல்வனுக்கு வேத முறைப்படி சாதகன்மம் முதலானவற்றை நடத்தினார் அத்திருக்குழந்தைக்கு உக்கிரவர்மன் என்று பெயர்சூட்டியருளினார். திருக்குழந்தை திவ்யமாக வளர்ந்து வந்தது. அதனது ஐந்தாவது வயதிலே வேத நூல் விதிப்படி பூணூல் அணி விழாவையும் செய்து முடித்தார் சுந்தரபாண்டியர்.

சுந்தர பாண்டியர் பணித்தபடி தேவகுருவாகிய வியாழ பகவான் முறையே பதவொழுக்கம் கனம், ஜடை, சாகை, ஆரணம் நிரம்பிய வேதக் கலைகள் எல்லாம் கற்றுக்கொடுத்தார். படைக்கலப் பயிற்சியும், யானை குதிரை ஏறிச் செலுத்திடும் பயிற்சியும் கற்பித்தார். வெகு விரைவில் உக்கிரவர்மர் அறுபத்து நான்கு கலைகளையும் ஒருங்கே அறிந்துகொண்டார். பாசுபதாஸ்ரப் பயிற்சியினை மட்டும் தம் தந்தையிடத்தே கற்றுக்கொண்டார். தனது எட்டாம் வயது நிரம்புவதற்குள்ளாக எண்ணற்ற கலைகள் அனைத்தையும் கற்று உணர்ந்த பண்டிதராகி விட்டார் உக்கிரவர்மர்!

வயதுக்கேற்ற வளர்ச்சியும், எழிலும், ஆற்றலும், ஆண்மையும், ஆடலும் காட்டி வளர்ந்து வந்தார் உக்கிரவர்மர். தமது பதினாறு வது ஆண்டிலே அழகுடன் வீரமும் காட்டி "தலைவனாகிய முருகக் கடவுளே இவர்" என்று போற்றும்படிக்கு அதி தீர பராக்கிரமசாலி யாக விளங்கினார் சுந்தரகுமாரர். அதிரூப சௌந்திரத் திருவாள னை உக்கிரகுமாரனிடத்தே முப்பத்திரண்டு லக்ஷணங்கள் அமைந் திருப்பதையும், அவனது சிறந்த குணங்களையும் கண்டுகொண்டார் சுந்தரபாண்டியர். தனது குமாரன் பூலோக முழுவதும் அரசாட்சி செய்ய வல்லவன்; நெடுநாள் வாழ்வான்; கீர்த்தி, நீதி, சாதுரியம், பண்பாடு, சிவபக்தி, கருணை, கல்வி, எவரையும் வெல்லுதல், தேவ ரையும் விஞ்சுகின்ற திறமையுடைத்தாதல் உடையவனாகிய உலகப் பெருஞ் சக்கரவர்த்தியாக விளங்குவான் என்று தெரிந்தார். "குமாரனுக்கு முன்னதாகத் திருமணம் செய்வித்து விடுவோம்; அதன் பின்னர் மகுடாபிஷேகம் செய்வோம்" என்று திருவுள்ளம் கொண்டு சுமதி முதலிட்ட மந்திரியர்களோடு கூடி ஆராய்ந்தார். ★

## 12. உக்கிர பாண்டியனுக்கு வேல் வளை செண்டு கொடுத்தது.

உக்கிர குமாரனுக்குத் திருமணம் செய்யக் கருதியுள்ளார் சுந்தரபாண்டியர் என்பதை உணர்ந்த மந்திரியர் மூதறிஞரோடு கூடி ஆராய்ந்தனர். விலத்திரு, சீரிய மரபு, உயர்குடிப் பிறப்பு, கீர்த்தி ஆனவற்றால் தம் அரசரிடம் சம்பந்தம் செய்யப் பொருத்தமும் தகுதியும் உள்ளவர் யார் என்பதைத் தேர்ந்தனர். முடிவாக வட நாட்டின் கண்ணே கல்யாணபுரம் என்ற பேரூரின் வேந்தனும் சூரியகுலத் தோன்றலுமாகிய சோமசேகரன் என்பானிடத்துத் தோன்றிய காந்திமதி என்ற கன்னியாரத்தினமே தகுதி என்று தெளிந்தனர்.

மதுரையம்பதியிலே மதிமந்திரியாரும் மூதறிஞரும் ஆராய்ந்து தெளிந்த அதே இரவிலே கல்யாணபுரச் சோமசேகரன் திவ்யமான கனவு கண்டான். கனவினிலே சிவபெருமான் எழுந்தருளி. "நராதிப! யாம் மதுரைச் சொக்கநாதர். நின் திருமகளாம் வடி வணங்கை சுந்தரபாண்டியன் திருக்குமாரன் உக்கிரனுக்குத் திருமணம் செய்து வைப்பாயாக" என்று கூறி மறைந்தருளினார். அம் மாதேவ மொழி கேட்ட சோமசேகரனின் உள்ளமும் முகமும் மலர்ந்து காட்டின. விழித்தெழுந்து கரங்குவித்துச் சிவபெருமா னின் அருளின் எளிமையை எண்ணி எண்ணி வியந்து மகிழ்ந்தான்.

விடிந்ததும் தனது திருமகளுடன், அமைச்சர்களுடனும் சேனைகள் சூழ மதுரை நகரை நோக்கிப் புறப்பட்டான்.

சுந்தரபாண்டியனின் உறவினரோடு அமைச்சர்களும் கல்யாண புரம் நோக்கிப் புறப்பட்டுவிட்டனர். திருமணம் பேசி இருபுறத்

தாரும் இடைவழியிலே சந்தித்துக்கொண்டனர். மதுரைக்காரர் சோமசேகரனைக் கண்டு "முருகப்பெருமானை நிகர்த்த எங்கள் உக்கிர குமாரருக்கு உங்கள் புதல்வியைத் திருமணம் செய்து தருவீராக" என்றனர். அதுகேட்டுப் பெருமகிழ்வுற்ற சோமசேகரனும் தான் கண்ட இன்பக் கனவினை நவின்று உடனே உடன்பாடு தெரிவித்தான். இந்த நல் விஷயத்தை முன்னர் சென்று அறிவிக்கத் தூதர்கள் மதுரை நோக்கி விரைந்தனர்.

பின்னர் அனைவரும் மதுரை வந்தடைந்தனர். சூரியகுலத் தோன்றலான சோமசேகரன் சந்திரகுலத் தோன்றலான சுந்தர பாண்டியப் பெருமானை எதிர் சென்று பணிந்தான். சுந்தரர் சோமனைத் தழுவிக்கொண்டபின் அழகுப் பெருமனை யொன்றிலே தங்குமாறு அனுப்பினார்.

திருமண நன்னாள் கணிக்கப் பெற்றது. மன்னர்கட்கெல்லாம் ஓலைகள் பறந்தன. திருமண விழாச் செய்தியை ஊரெங்கும் மண முரசு அறைந்து சொல்லியது. கமுகு, வாழை, முளைப்பாலிகை, நீர்நிறை, பொற்குடம், தோரணம், கொடி முதலியன பொருந்தி வீடுகளும் வீதிகளும் வண்ணக்கோலம் பூண்டன. ஏற்கனவே பொலிவு கொண்ட மதுராபுரி பன்மடங்கு பொலிவு கொண்டது. சுந்தரபாண்டியனாரின் ஸ்ரீமுகம் பெற்று வேற்று நாட்டு வேந்தர்கள், முனிவர்கள் ஆகியோர் திருமணம் காண வந்தனர். சேர்முவேந்தன், கஜபதி, துரகபதி, நராதி எல்லோரும் வந்தனர். சீனர் முதல் சாவகர் ஈறாக அயல்நாட்டு மன்னர்களும் வந்தனர். சைவத் தவ முனிவோரும், ஐவகைச் சைவரும், அறுவகைச் சமயத்தோரும் வந்தனர். மகாவிஷ்ணு, பிரம்மா, இந்திரன் முதலிட்ட தேவரும், பதினெட்டு கணத்தார்களும் வந்தனர். வந்தோர் அனைவரும் தடாதகைப்பிராட்டியாரையும் சுந்தரபாண்டியரையும் தரிசனம் செய்து வணங்கினர். சுந்தரபாண்டியரும் வந்த அனைவரையும் தக்கபடி ஏற்றுச் சிறப்புச் செய்தார்.

சோமசேகரனின் அரும்புதல்வி காந்திமதியின் எழிலினைக் கண்டு சுந்தரபாண்டியர் வியந்தார். அவர் வியந்து மகிழும் பாங்கினை உணர்ந்த வியாழபகவான் சாமுத்திரிகா லக்ஷணத்தின்படி ஆராய்ந்து அங்குள்ளோர் யாவருக்கும் மங்கை நல்லாள் வடிவணங்கின் தன்மையைத் தெரிவித்து மகிழ்ந்தார். காந்திமதிக்கு ஒப்பான நங்கை எங்குமேயில்லை என்று தெரிந்தவர் எல்லாரும் உளம் பூரித்தனர்.

திருமண நன்னாள் வந்துற்றது. உக்கிர குமாரர் அஷ்டமங்கலங்கள் சிறக்க யானையின்மீது கொணரப்பெற்று வையை நீரிலே ஆடினார். திருமணக்கோலம் புனைந்தார். சங்கங்கள் முழங்க மணப் பொன்தவிசில் அமர்ந்தார். மணப்பெண் காந்திமதி திருமணக்கோலம் துலங்கக் குமாரரின் வலப்புறம் இடம் கொண்டார். காந்திமதியின் கரத்தினை ஏந்தி உக்கிர குமாரரின்

கரத்தோடு பொருத்தி தேவர் அறிய வேதமந்திரம் இயம்பி தாரை வார்த்துக் கொடுத்தார். அதன் பின்னர் ஏராளமான பெருஞ் சிறப்புற்ற பொருள்களைச் சீர் வரிசைகளாக்கி ஸ்ரீதனமாகக் கொடுத்தார். பல்லியம் இயம்பின. தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர். வேத கீதநாதம் எங்கும் பரவியது. நல்லோரையில் உக்கிர குமாரர் காந்திமதிக்கு மங்கல்யதாரணம் செய்து திருமண வினைகள் ஆற்றினர்

திருக்கல்யாண ஊர்வலம் மிகவும் சிறப்பாக ஆடல் பாடல்களுடன் இனிது நடந்தேறியது. நகர் வலம் வந்த உக்கிரகுமாரர் தமது தேவியாரோடு இம்மையில் நன்மை தருவாரையும், சோமசுந்தரக்கடவுளையும், மீனாட்சியம்மையையும் தரிசித்து அரண்மனையை அடைந்தார். தம் பெற்றோரை வணங்கி எழுந்தார். பின்னர் வந்து இருந்த அனைவரையும் தக்கபடி உபசரித்து விடையளித்தனுப்பினர்.

நல்லாட்சி புரிந்து வருகின்ற காலம் ஒரு நாள் சுந்தரபாண்டியர் தனது குமாரபாண்டியனை விளித்து, "மைந்த! தேவேந்திரனும் கடல்வேந்தனும் உனக்குப் பெரிய பகைவர்கள். மகாமேரு மலை செருக்குற்று நிற்கிறது. ஆதலால் நீ இந்திரனது முடி சிதறுமாறு இந்த வளையினைக் கொண்டு எறிதல் வேண்டும்; கடல் வற்றிடும்படி இந்த வேலை விடல் வேண்டும்; மேருவின் தருக்கு தகறும் வகையில் இந்தச் செண்டு கொண்டு அடித்தல் வேண்டும்" என்று மொழி பகன்று வளை, வேள், செண்டு ஆன மூன்று ஆயுதங்களையும் ஈந்தருளினர். தந்தையாரைத் தொழுது முக்கலங்களையும் பெற்றுக்கொண்டார் உக்கிரகுமாரர். பின்பு சுந்தரபாண்டியர் வேதகோஷமும் பல்லியங்களும் ஒலிக்க தன்குமாரனுக்கு முடிசூட்டி உக்கிரபாண்டிய மன்னர் என்றாக்கினர். தமது ஆணையையும், அரசுரிமையையும், செங்கோலையும் குமாரனுக்கு அருளினர். "நெடுங்காலம் நீயும் தரும மார்க்கத்திலே, சத்தியமார்க்கத்திலே ஒழுகிச் செங்கோல் செலுத்துவாயாக" என்று வாழ்த்துரை அருளினர்.

அது சமயம் சிவகணத்தார் தமது பழைய வடிவங்களைப் பெற்றன. சுந்தரபாண்டியப் பெருமான் தடாதகை தேவியாரோடு திருக்கோவிலுள் சென்று எழுந்தருளியிருந்தார்.

உக்கிரகுமாரப் பெருவழுதி நான்மறை அறங்கள் ஓங்க, நற்றவம் வேள்வி மல்க, குறைவிலாத உயிர்கள் வாழ, மழை வளம் சுரக்க, மேன்மைகொள் சைவநீதி உலகமெலாம் விளங்க கோன்முறை அரசு செய்து வாழ்ந்து கொண்டிருந்தார். ★

## 13. கடல் சுவற வேல் விட்டது.

உக்கிரப் பெருவழுதி நல்லரசு செலுத்தி வந்த நாளிலே தருமங்கள் பலவும் செய்து புகழ் பரப்பி வந்தார். அசுவமேத யாகம் தொண்ணூற்றாறு செய்து முடித்தாகி விட்டது. தனது பதவிக்கு ஆபத்து நெருங்கிக்கொண்டு வருகிறது என்பதை

உணர்ந்த தேவேந்திரன் உக்கிர பாண்டியன் மேல் கடுஞ்சினம் கொண்டான். பாண்டிய நாட்டில் மழை வளம் மிகுந்ததாலே பாண்டியன் இவ்வாறு வேள்விகள் செய்ய முடிகிறது என்பதையும் கண்டான். தேவர்கோன் சூழ்ச்சி செய்யலானான். உடனே சமுத்திர ராஜனாகிய வருணனை வரவழைத்து, "பிரளய காலத்திலே உலகினை அழிக்க வல்ல கடலைப் போலக் கோபங்கொண்டு மதுரையை வளைத்து அழிப்பாயாக" என்று ஏவினான்.

மேலைவிளைவுகள் அறியாப் பேதையான கடலரசனும் இந்திரன் கட்டளையின்படி செய்யத் துணிந்தான். வளம் பொருந்திய மா மதுரையை விரைவிலே சூழ்ந்து கொண்டு அழிக்கும் கருத்து வைத்தான். கடல் பொங்கி எழுந்தது. உயர்ந்த பேரலைகள் ஆர்ப்பரித்து ஓங்கின. கடலரசன் தனது ஆமைப்படை, சுறுமீன்படை அலைப்படைகள் முதலியன கொண்டு மதுராபுரியின் மீது படையெடுத்து வந்தான். மதுரைப்பதியின் கிழக்கே நெருங்கிப் பேரோசை புரிந்து கடல் பொங்கி வந்த நேரமோ நள்ளிரவு. உக்கிர வழுதி உறங்கிக் கொண்டிருந்தார். சிவபெருமான் சித்தர் வேடம் தாங்கி, "மாறனே! உனது பேரூரை அழிக்கும் பொருட்டுக் கடல் பூரித்து வருகிறது. ஆகையால், நீ விரைந்து சென்று உனது வேலாயுதத்தை எறிந்து வெற்றிகொள்வாயாக" என்று இயம்பியருளினார். உடனே உக்கிரபாண்டியர் தொழுது எழுந்தார். கண்ட கனவினை உணர்ந்தார். அமைச்சரோடு விரைந்து சென்றார். பொங்கிப் பெருகிப் பேரொலி செய்து வருகின்ற சமுத்திரத்தைக் கண்டு அளவற்ற ஆச்சரியம் அடைந்தார். கனவிலே தோற்றங்காட்டி அருளிய சித்தர் பெருமான் நனவிலே நேரே தோன்றினார். "குமாரா! நீ தாமதம் செய்யாதே. உனக்குற்ற பெரும்பகையே இக் கடலுருவம் கொண்டு வந்திருக்கிறது. அதனுடைய ஆற்றல் அழியும் வண்ணம் உனது வேலினை எறிந்து உலகினைக்காப்பாயாக" என்று மொழிந்தருளினார்.

சித்தர் மொழி கேட்ட உக்கிரபாண்டியர் தனதுவேலாயுதத்தை எடுத்து வலஞ்சுழித்துக் கடல்மேல் எறிந்தார். அவ்வேற்படையின் நுனி கடலில் தொட்ட மாத்திரத்திலே, பழுக்கக் காய்ச்சிய இரும்பின் மேல் பட்ட சிறு நீர்த்துளி ஆவியாக மாறுவதை நிகர்த்து, சுறு சுறு வென்று சத்தமிட்டுக்கொண்டு வற்றி மிகவும் வலிமையிழந்து விட்டது. பெருங்கடல் பாண்டியன் கைவேலிடம் தோல்வியுற்றது. வேத வேள்வியைத் தடுத்து உலகினையே அழிக்கச் சூழ்ச்சி செய்த தேவ ராஜனின் எண்ணம் பலிக்கவில்லை.

அதுசமயம் உக்கிரவழுதியின் அருகிருந்த சித்தமூர்த்தியும் மறைந்தார். அதேகணம் சிவபெருமான் தமது உமாதேவியாருடன் ரிஷப வாகனத்தோடு வானத்தில் நின்று காட்சி தந்தருளினார். அத் திருக்கோலம் கண்ட மாறனும் புவியில் வீழ்ந்து வணங்கினார்.

அஞ்சலி கூப்பியபடியே உக்கிரர் திருக்கோயிலை அடைந்து வணங்கினார். மாதர் அஷ்ட மங்கலங்களையும் ஏந்தி எதிர் வர தனது மாளிகையை மீண்டும் அடைந்தார்.

அதன் பின்னர் உக்கிரப் பெருவழுதி மதுரையம்பதிக்கும் கடலுக்கும் இடையேயுள்ள விளை நிலங்களையும் ஊர்கள் முதலிய வற்றையும் சிவபெருமானுக்கே உரிமையாக்கி நல்லாட்சி புரிந்து வரலானார். ☆

## 14. இந்திரன் முடிமேல் வளை எறிந்தது

உக்கிரபாண்டியப் பெருவழுதி செங்கோல் ஆட்சி செலுத்தி வந்த காலத்திலேயும் கோள் நிலை திரிந்தது; மாரி வறங் கூர்ந்தது. மேகங்கள் மழை பெய்யாது நின்றன. பயிர்கள் கருகின. சேர சோழ பாண்டிய மென்னும் முத்தமிழ்நாடுகளிலும் வறுமைப் பிணி வாட்டி வதைத்தது.

அது கண்டு உளம் நொந்த முத்தமிழ் வேந்தரும் பரிகாரம் காணும் பொருட்டு அகஸ்திய மாமுனிவரைக் காணுமாறு பொதிய மலையை அடைந்தனர். குறுமுனிவரிடம் தமது வறுமைக் கதை யைக் கூறினர். அகஸ்தியர் கிரக நிலையை ஆராய்ந்தார். "மூவேந் தர்களே! இனி மழை பொழிய வகையில்லை. கிரகாசாரப்படி பன்னிரண்டு வருஷங்களுக்கு மழையே பெய்யாது. ஆகையால் நீங்கள் மழைக்கதிபனாகிய தேவேந்திரனிடம் சென்று முறையிடு தலே நல்லது" என்றார். "தேவேந்திரனைக் கண்டு வரச் சுவர்க்க லோகத்திற்கு எவ்வாறு நாங்கள் செல்ல இயலும்?" என்று மூவேந் தரும் வினவினர். அப்போது அகஸ்திய மகரிஷி, "நீவிர் சோமவார விரதம் அனுஷ்டித்து வெள்ளியம்பலவாணரான நடராசப் பெரு மானின் திருவருள் பெற்று வான வழி செல்வீராக," என்று மொழிந் தார்.

பின்னர் குறு முனிவர் சோமவாரவிரதம் நோற்கும் முறை களைச் சாங்கோபாங்கமாக எடுத்து விளக்கத் தொடங்கினார். "சிறந்த தேவருள் சிறந்த தேவர் சிவபெருமான். சிறந்த சக்திகளுள் சிறந்த சக்தி உமாதேவியாரே. சிறந்த விரதங்களுள் சிறந்து விளங்குவது சோமவார விரதமே. சோமவாரம் சோமசுந்தரக் கடவுளுக்கே உரிய நன்னாள். சிவபெருமான் உமை யோடு இசைந்திருப்பதால் சோமன் என்று அழைக்கப்படுகிறார். மதுரையிலே இச்சோமவார விரதம் நோற்றல் சாலவும் நன்று. அமாவாசைச் சோமவாரமாக இருந்தால் பெரும் பயன் அளிக்கும்" என்றுகூறி அம் மாமுனிவர் விரத வகைகளையும்; செய்முறைகளை யும் முடிக்கும் முறையையும் விரித்துரைத்தார்.

சோமவார விரத மகிமையினை அகிஸ்திய முனிவர் விளக்கம் செய்யக்கேட்ட முத்தமிழ் வேந்தரும் அவரை வணங்கி விடை பெற்று, சோமசுந்தர க்ஷேத்திரமாகிய மதுரையம்பதிக்கு வந்து சேர்ந்தனர். பொற்றாமரைத் திருக்குளத்திலே நீராடிய பின்னர் சோமசுந்தரப் பெருமானையும் மீனாக்ஷியம்மையையும், உளமாரந்

துதித்து சோமவார விரதத்தினை மேற்கொண்டு அதனைச் செவ்வையாகச் செய்து முடித்தனர்.

விரதத்தின் பலனைப்பெற்ற சேர சோழ பாண்டிய மன்னர் மூவரும் வான வழியே சென்று சுவர்க்கம் புகுந்து தேவேந்திர நகரை அடைந்தனர். தேவேந்திரன் மூப் பெரு மன்னர் இருக்கும் பொருட்டு மூன்று சிங்காதனங்கள் இடச் செய்தான். அவர்களது ஆசனங்கள் தாழ்வானவையாக இருந்தன. சேரனும் சோழனும் இட்ட அரியணையின் மீது அமர்ந்துவிட்டனர். ஆனால் உக்கிரப் பெருவழுதி மட்டும் இருக்கையின் தாழ்ச்சியை உணர்ந்து இந்திரனது சிம்மாசனத்தில் ஏறி அவனுக்குச் சமமாக அமர்ந்து கொண்டார். இதுகண்டு பொறாத தேவர்கோன் சேரனையும் சோழனையும் மட்டுமே நோக்கி முகமன் கூறி, ''வந்த காரியம் யாது?'' என வினவினான். அவர்கள் தமது நாட்டிலே மழையின்மையால் பஞ்சம் மலிந்தது தெரிவித்து மழைவேண்டி நின்றனர். இந்திரன் மகிழ்ந்தான். அவ்விருவர் நாடுகளில் மட்டும் மழை பெய்ய அருளினான். அவர்கட்கு பொன்னணி, நல்லாடை தந்து விடை கொடுத்தனுப்பினான்.

சேர சோழ மன்னர்கள் சென்ற பின்பு இந்திரன் உக்கிர பாண்டியன் கர்வத்தோடு தன்னருகே அமர்ந்திருப்பதையும், மேற்கொண்டு மழைவேண்டாதிருக்கும் பெருமிதத்தையும் உன்னி சூழ்ச்சியொன்று கருதினான். மிகவும் உயர்ந்த சிறப்புச் செய்பவனைப் போல, பல ஏவலர் தாங்கி வந்த முத்துமாலை ஒன்றைப் பாண்டியனுக்கு அன்புடன் கொடுத்தான். வழுதியும் அம் மாலையை ஏற்றுப் பூமாலையைப் போல, அணிந்து கொண்டார். பெரும் பாரம்கொண்ட முத்துமாலையைத் தாங்கி வழுதியிருக்கும் பான்மைகண்ட இந்திரன் வியந்து ''ஆரம் தாங்கும் பாண்டியன்'' என்று அழைத்தான். உக்கிரவர்மர் அப்பெருமையைச் சிறிதேனும் இலட்சியம் செய்யவில்லை; மதுரையூருக்கு மீண்டுவிட்டார்.

இந்திரன் ஆணையாலே சேரமும் சோழமும் மழை நிரம்பப் பெற்று வளமிக்கோங்கின. பாண்டியத்திலே மழைப் பொழிவையே காணோம். வற்கடகம் நிலைத்தது.

உக்கிரப் பெருவழுதி ஒரு நாள் பொதிய மலையைச் சார்ந்த சந்தன வனத்திலே விலங்குகளை வேட்டையாடிக் கொண்டிருந்தார். அதுசமயம் புஷ்கலாவருத்தம், சங்காரித்தம். துரோணர், காளமுகி என்ற நான்கு மேகங்களும் பொதிய மலையிலே தாழ்ந்து மேய்ந்து கொண்டிருத்தலைக் கண்ணுற்றார். உடனே அவற்றைப் பிடித்துக் கட்டி. விலங்கிட்டுக்கொண்டு சென்று சிறைச்சாலையில் இடுவித்தார். இது தெரிந்த தேவர்கோன் கடுஞ்சினம் கொண்டு சமர் கருதிப் புறப்பட்டான்; வரும்வழியிலே மனிதன் ஒருவன்கடல் சுவற வேல் விட்டதையும் மிகவும் பாரமான ஆரத்தைத் தாங்கிய ஆற்றலையும் எண்ணி எண்ணி மனமுடைந்தான்.

உக்கிர வழுதியுடன் போர் தொடுக்கக் கருதித் தனது தேவப் படைகளோடு மதுரைமாநகரைச் சூழ்ந்துகொண்டான். பாண்டிய னது ஒற்றர்கள் உடனே ஓடோடியும் வந்து வணங்கி விஷயத்தைத் தெரிவித்தனர். உக்கிரவர்மர் சினமும் மானமும் மிகுந்தவர். சதுரங்க சேனைகளுடன் போருக்குக் கிளம்பினர். தங்களோடு சண்டையிட வந்தவர் யார் என்று எண்ணிப் பாராத தேவர்கள் கோஷமிட்டு நெருங்கிவந்து ஆயுதங்களை வீசினர்.

தேவர் படைக்கும் பாண்டியர் படைக்கும் இடையே எழுந்த போர் கடுமையாகவும் அச்சம் விளைவிப்பதாகவும் இருந்தது. பேரிகை வீளைவாக கூளிப்பேய்கள் தம் தலைவி கொற்றவையை வாழ்த்திக் களிக் கூத்தாடின. இந்திரன் சேனைகள் புறமுதுகு காட்டி ஓடின. இது கண்டு பொங்கிய இந்திரன் தெய்வப் படைகளை விடுத்தான். அனைத்தையும் எதிர்த்து முறித்தன பாண்டியன் படைகள். பின்னர் இந்திரனும் வழுதியும் மல்யுத்தம் புரிந்தனர். இந்திரன் தனது வச்சிராயுதத்தைப் பிரயோகம் செய்தான். உக்கிர பாண்டியரும் தன் கையிலிருந்த சக்கராயுதமான வளைப்படையை சுழற்றி வீசினார். வளை சென்று வச்சிராயுதத்தை எதிர்த்தொதுக்கி விட்டு இந்திரனது முடியைத் தாக்கி கீழே வீழ்த்திச் சிதைத்து விட்டது. வெட்கமும் அச்சமும் உற்ற தேவர்கோன் ஓடினான். சிவபெருமான் திருவருள் இந்திரனது தலைக்கு வந்த ஆபத்தை முடியோடு போக்கியது.

பொன்னுலகில் புகுந்துகொண்ட இந்திரன் உக்கிர வழுதிக்குத் திருமுகம் ஒன்று வரைந்தனுப்பினான். அதிலே, "பாண்டிய நாட்டிற்கு மழை வளம் தருகிறேன். தளைப்பட்டுள்ள எனது நான்கு மேகங்களையும் விடுவிப்பாயாக," எனக் கோரியிருந்தான். ஸ்ரீமுகம் கொணர்ந்த தேவதூதன் வழுதியின் அடிபணிந்து, ஒடுங்கி ஒதுங்கி ஓலையை நீட்டினான். அருகிருந்தவன் ஓலையை வாங்கிப் படித்துக் காட்டினான். செவிமடுத்த பெருவழுதி இந்திரன் மேல் நம்பிக்கை கொள்ளவில்லை. மேகங்களை விடுவிக்க மனம் ஒப்பவில்லை. அது சமயம் அருகே இருந்த இந்திரனின் நண்பனை ஏகவீரன் என்ற வேளாளன் "பெருவழுதியே! நான் பிணையாக இருப்பேன்" என்று கூறி வணங்கினான். வேளாளன் சொற்களை வேந்தர்கோன் நம்பினார். சிறைப்பட்ட நான்கு மேகங்களின் தளைகளை நீக்கச் செய்து விடுதலை வழங்கியருளினார். மேகங்கள் மேலெழுந்து சென்றன.

இந்திரனது ஆணையால் பின்னர் பாண்டிப் பெரு நாட்டிலே மழை மாதம் மும்மாரி பொழிந்தும். ஆறு, குளம், ஏரி, வாவி, மடு முதலியன நீர் நிரம்பின. பாண்டி நன்னாடு பசுமை பெற்று பொலிவுடன் துலங்கியது. ☆

## 15. மேருவைச் செண்டால் அடித்தது.

அகஸ்திய மஹரிஷி தனக்குச் சொன்ன சோமவார விரதத்தைத் தவறாது அனுஷ்டித்து வந்ததன் பயன் போல உக்கிரவர்மரின் தேவி

யின் மணிவயிற்றிலே திருக்குமாரன் வந்து தோன்றினன், பிறந்த நன்னுளை மதுரைப்பதி சிறப்பாகக் கொண்டாடியது. சாதகன்மம் முதலிய விசேஷங்களைச் செய்து தன் மைந்தனுக்கு வீரபாண்டியன் என்று நாமகரணஞ் செய்தார், உக்கிரர். உற்ற வயதில் அம் மைந்தனும் கல்வி கேள்விகளில் சிறந்தவனுகிப் படைக்கலப் பயிற்சி பெற்றுன். தனது அருமருந்தன்ன திருமகன் வளர்ச்சி கண்டு பெரு மகிழ்வெய்தினர் பெருவழுதி.

அக்காலத்திலே கிரகங்கள் தத்தம் நிலை மாறிவிட்டபடியால் மீண்டும் பாண்டிய நாட்டிலே மழைவளம் குன்றிது. நீர் நிலைகள் வறண்டன. வறுமை நோய் நாடு முழுவதையும் வருத்தியது. சோதிடரைக் கலந்தார் பாண்டிய மன்னர். ஓராண்டு காலம் மழை பொழியாது என்று தெரிந்தது. வழுதி பெரிதும் வருந்தினர். கவலை உள்ளத்தோடு சோமசுந்தரப் பெருமானின் சன்னதி சேர்ந்து, "அண்ணலே! உயிர்கள் பசியால் வாடுகின்றனவே; என்செய்வேன்?" என்று கண்ணீர் மல்கக் கூறி முறையிட்டார். பின்னர் எல்லையற்ற துன்பத்துடன் தன் மனைக் கேகினர்.

அன்றிரவு இன்னல் தோய்ந்த உள்ளத்தோடு தரையிலே நித்திரை செய்தார் பாண்டியர். சொக்கலிங்கப் பெருமான் சித்தராகக் கனவில் வந்து, "ஒளிபடைத்த வேலினுய்! இப்போது மழை பெய்யாதாகையால் நீ வீணே வருந்தவேண்டாம். மலையரசனுய் விளங்கும் மகாமேரு பருவதத்தின் பக்கத்திலே பெரிய குகையொன்றினுள்ளே அளவற்ற பொருள் சேகரித்து வைக்கப்பட்டிருக்கின்றது. நீ சென்று மேருவின் தருக்கு ஒடுங்குமாறு செண்டால் அடிப்பாயாக. அது உன் ஆணைக்குக் கட்டுப்படும். பொன் பொதிந்துள்ள அறையின் மேலுள்ள பாறையை நீக்கி, வேண்டுகின்ற அளவுக்குப் பொன்னை வாரிக்கொள். பின்னர் அறைவாயை அடைத்துவிட்டு உனது இலச்சினையை அதன் மேல் பொறித்து வருவாயாக" என்று வாய்ச்சொல் அருளினர்.

உக்கிரர் அதிகாலையில் எழுந்து திருக்கோயில் சென்று சோமசுந்தரக் கடவுளை வணங்கினர். பின்னர்த் தனது சேனைசமுத்திரத்துடன் வடதிசையை நோக்கிப் புறப்பட்டார். யானையின் மேலே மீனக்கொடி வீறுடன் பட்டொளி வீசிப் பறந்தது. சோழம், தொண்டை, தெலுங்கம், கர்நாடகம், மாளவம், விடாரம் முதலிய நாடுகளையும், இடையே குறுக்கிட்ட காடு, மலை, ஆறு, பாலை முதலானவற்றையும் கடந்து கங்காநதி தீரத்திலுள்ள காசிமா நகரை அடைந்தார். கங்கையில் ஸ்நானம் செய்து விசுவநாதரை வணங்கி விடைபெற்றூர். கொடிய விலங்குகள் வாழும் காடுகள் தாண்டி பல யோசனை தூரம் பரவியிருந்த பல கண்டங்களைத் தாண்டி, இமயம்–கிம்புருட கண்டம், ஹேமகூடம்-அரிவருஷகண்டம், நிஷதம்,–இலாவிருத கண்டம் ஆனவற்றைத் தாண்டி இறுதியாக மகாமேரு பர்வதத்தைக் கண்டார் உக்கிரபாண்டியர்.

உக்கிரப் பெருவழுதி மேருமலையைப் பார்த்து "மலையரசே! தெய்வமலையே! தேவர் ஆலயமே!" என்றெல்லாம் புகழ்ந்து விளித்தார். வாராமல் மேரு காலங் கடத்தியது. அதனது அலட்சியம் தெரிந்த பாண்டியர் தனது கையிலிருந்த செண்டினால் மேருவின் உச்சியிலே உரம்கொண்டு அடித்தார். வழுதியின் கோபம் தீர்ந்தது. மேருவின் கர்வமும் ஒழிந்தது. அசையாப் பெருமலை அசைந்து துடித்தது. அதனகத்தேயிருந்த அனைத்தும் நிலைகுலைந்தன. அடியுண்ட பின்னர் நான்கு முகங்களோடும், எட்டுக் கரங்களோடும், வெண்குடை தாங்கிய உருவங்கொண்டு மேருமலைத் தெய்வம் வழுதிமுன் வந்து வெட்கி நின்றது. சோமசுந்தரப் பெருமானை வணங்க மறந்ததனால் தான் அன்று அடிபட்டதைத் தெரிவித்து "வந்த காரணம் யாதோ?" என்று வேண்டியது. பாண்டியர் கோன், "யாம் பொருளை விரும்பிவந்தோம்" என மொழிந்தார். மகிழ்வுற்ற மேருத்தெய்வம், "அண்ணலே! விரும்பிய மாற்றுயர்ந்த செம்பொன் அந்த மாமரத்தின் நிழலின்கீழ் ஒரு பிலத்துள்ளே பாறையால் மூடப்பட்டுள்ளது. வேண்டிய அளவு எடுத்துக் கொள்க" என்று தன் கரம் சுட்டிக் காட்டியது.

பாண்டியரும் மாவின் கீழிருந்த பொன் பொதிந்த பிலத்தருகே சென்று மூடிய பாறையை நீக்கித் தனது ஆசை தீரப் பேரளவு பொன்னை வாரி யெடுத்துக்கொண்டபின் முன்போலவே மூடிவைத்து எஞ்சியிருந்த பொன்னும் தன்னது எனக் கருதி அதன்மேல் தனது பெயரையும், முத்திரையையும் பொறித்தார்.

மீளவும் தனது சேனைகள் புடை சூழப் பெருவழுதி மதுரையம்பதிக்குக் கோலாகலத்துடன் திரும்பிவந்தார். எல்லாரும் நல்வாழ்த்துக் கூறி வரவேற்றனர். பாண்டியர் திருக்கோவில் சென்று ஈசுவரனையும் ஈசுவரியையும் வணங்கிவிட்டு அரண்மனை சேர்ந்தார்.

மேருமலை அளித்த பொற்குன்றம் பாண்டிய குடிமக்களுக்குப் பசையளித்துக் காத்தது. கிரகங்களும் மீண்டும் தங்கள் நேரிய நிலை அடைந்தன. நாடு முழுவதும் மழை பொழிந்ததால் நல்வளம் பெருகியது. பசி நீங்கிய உயிர்கள் தழைத்தோங்கின.

இவ்வாறாக ஆரம்தாங்கு பாண்டியர் ஆட்சி புரிந்து தனது திருக்குமாரன் வீரபாண்டியனுக்கு முடி சூட்டினார். அரசுரிமையை நல்கிய பின்னர் சச்சிதானந்தப்பெருமான் சோமசுந்தரக் கடவுளின் திருவடியிலே இரண்டறக் கலந்து கொண்டார் உக்கிர பாண்டியர். ★

## 16. வேதத்துக்குப் பொருள் அருளியது

கண்வ மகரிஷியும், காக்க மகரிஷியும் நைமிசாரணியவாசிகள் அவர்களும் மற்றும் பல முனிவர்களும் வேதங்களை முறைப்படி பல

முறை ஓதி வந்தனர். ஆனால், ஓதி வந்தாலும் வேதங்களின் உட்பொருளை அறியாது மயங்கி உள்ளமும் முகமும் வாடியிருந்தனர். அது சமயம் அரபத்தர் என்ற முனிவர் ஆங்கே வந்தார். அவர் ஆணவ மலத்தினை அறவே ஒழித்த புனிதர். வந்தவரை எதிர்கொண்டு ஏற்றனர் முனிவர்கள். முனிவர்கள் வாடியிருப்பதன் காரணத்தை வினவினார் அரபத்தர். "முனிபுங்கவரே! வேதத்தின் உட்பொருளை எங்கட்கு உணர்த்தும் குருநாதன் இல்லாமல் மருட்சி கொண்டுள்ளோம்; ஆலோசனை எதுவோ?" என்று கூறினர்.

அரபத்த மாமுனிவர் மொழியலானார்: "ரிஷிகளே! வேதத்தை அருளிச்செய்த சிவபெருமானே அருளுருவம் கொண்டு வேதப் பொருளை உணர்த்துவது அன்றி வேறு வழி ஏது? புண்ணிய க்ஷேத்திரங்களிலே சிறந்த கோத்திரங்களுள் உத்தமோத்தமமான சிவ க்ஷேத்திரமான மதுரைப்பதியே தவத்திற்குரிய ஸ்தலம். ஏனெனில் மதுரைப் பெரும்பதியானது விராட புருஷனுடைய பிரம மந்திரத்திற்கும் மேலே பன்னிரண்டு அங்குலம் உயர்ந்து விளங்கி துவாதசாந்த க்ஷேத்திரம் என்று பெருமையாக மதிக்கப்படுவது. சோமசுந்தரக் கடவுள் கோவில் கொண்டருளும் இந்திர விமானத்தின் தென்பாங்கிலே கல்லால மரத்தினடியில் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டும் தட்சிணாமூர்த்தி எழுந்தருளியுள்ளார். அத்தகைமைசால் தட்சிணாமூர்த்தியே உமக்கு வேதப் பொருளை உணர்த்தி அருளுவார். நீவிர் அவரது சன்னதி சேர்ந்து தவம் புரியுங்கள்."

அதனைக் கேட்டு மகிழ்ந்த கண்ணுவாதி முனிவரவர்கள் மதுரை சேர்ந்தனர். பொற்றாமரைத் திருக்குளத்திலே தூய்மைபெற நீராடினர். பக்தி பெருகத் திருக்கோவிலுள் சென்று சொக்கநாதரையும் மீனாட்சியம்மையையும் வணங்கி வலம் வந்து தட்சிணாமூர்த்தியின் திருமுன் அடைந்தனர். அங்கு நளி ஆல நிழலின் கீழ் நற்புதுமை கண்டனர். கற்பவர் கனகிழவர். பொற்பவிரும் ஆசிரியன் பாலன்! அறிவிப்பன் மோனத்தால்; மாசிரியும் சீடர் மனத்து! சின் முத்திரை காட்டும் பரமாசாரியராகிய தட்சணாமூர்த்தியின் முன்பு வீழ்ந்து துதித்தனர். பின்னர் அரபத்த முனிவர் அருளியபடி மேதா மந்திரத்தை நாள்தோறும் நன்னேரத்தில் ஓதி வந்தனர். கிருத்திகா பௌர்ணமி தொடங்கி மறு கிருத்திகா பௌர்ணமிவரை ஒரு வருஷ காலம் ஜபம் செய்தனர். ஹோமம் பிராமண போஜனம் முதலியனவும் செய்துகொண்டு வந்தனர்.

ஆல்கெழு கடவுள் தட்சணாமூர்த்தி கருணைகொண்டார். முனிவர்களது உள்ளம் பக்குவம் பெற்றதுணர்ந்து மகிழ்ந்தார். முப்பத்திரண்டு வயது நிரம்பிய பிராமண குருவடிவம் தாங்கி முப்பத்திரண்டு லட்சணங்கள் விளங்க எழுந்தருளினார். நெற்றியில் திருநீறு துலங்கியது. திருமார்பில் பூணூல் இனம் காட்டியது. திருக்கழுத்திலிருந்து உத்திராட்ச மாலைகள் தொங்கின. வலக் கையில் தூய்மையான பவித்திரமும், இடக்கையில் "சிவஞான போதம்" எழுதிய ஓலைச் சுவடியும் விளங்கின. யாவரும் போற்றும்

பழம் பொருள் எளிய வந்து காட்சி தந்து நின்றருளினர். ஆசாரியக் கடவுளை எதிரே கண்ட முனிவர்கள் வணங்கி நின்று, "கலாநிதியே! வேதார்த்தமாகி விளங்கும் வேதமூர்த்தியே! அடைக்கலம் புகுந்தோம்" என்று சொல்லினர். பின்னர், "ஞானகுருவே! அடியராகிய நாங்களும் அகில உலகத்தாரும் உய்யும் வகையில் வேதப் பொருளை உபதேசித்தருளவேண்டும்" என்று மிகுந்த பணிவுடன் விண்ணப்பித்துக் கொண்டனர்.

கருணாநிதியாகிய பேராசியர் முனிவர்களை உடன் அழைத்துக் கொண்டு சிவலிங்கத்தின் திருமுன் சென்று வேதப்பொருள் உரைத்தருள்வாராயினர்.

"சுயம்புவாகி, உத்தமோத்தமமாகி, தத்துவ வடிவமாகி விளங்கும் இச்சொக்கலிங்கமே நித்தியவேதத்தின் ஆதிகாரணப்பொருள். சுத்தாத்வைத சுயம்பிரகாசப் பொருள், சாஸ்திரங்கள் பராபரன், விஞ்ஞானன், நிராமயன் என்று புகழ்வது எல்லாம் பரப்பிரம்மமாகிய இத் திருமூர்த்தியேதான். இம்மூர்த்தியின் திருவுருவமே வேதம். வேதப் பொருள் சிவலிங்கமே யாகும்! சிவலிங்கம் வேறு, வேதம் வேறல்ல!"

பின்னர் குருநாதர் சிவலிங்க தத்துவத்தையும், அகார, உகார, மகார, விந்து, நாத உண்மைகளையும், காயத்ரி, சமஷ்டி, வியஷ்டி ஆனவற்றின் விளக்கங்களையும் இயம்பியருளினர், சிவாகமங்கள் இருபத்தெட்டும், ரிக், யஜுஸ், சாமம், அதர்வம் என்னும் நான்கு வேதங்களும், கரும ஞான காண்டங்கள் ஆகியனவும் உற்பத்தியான தன்மையை விளக்கியருளினர். நித்திய, நைமித்திய, காமிய கருமங்கள் மூன்றினையும் சிவபெருமான் திருமுன் இயற்றினால் பெறற்கரிய வீடு பேறான மோக்ஷத்தையே சிவபெருமான் தந்தருள்வார் என்று திருவாய் மலர்ந்தருளினர்.

வேதத்துட் பொருளை விளங்க உரைத்த பரமகுருநாதர் அருட்கனிவுடன் கண்ணுவாதி முனிவர்களைத் தமது அருட்கரத்தால் தடவிக்கொடுத்தார். பின்னர் சிவலிங்கத்திற்குள் மறைந்தருளினர். ★

## 17. மாணிக்கம் விற்றது.

வீரபாண்டிய வேந்தனுக்குக் காமக்கிளத்தியர் பலர் இருந்தனர். அவர்களிடத்தே பேரழகு வாய்ந்த புதல்வர் பலர் பிறந்தும் குலப் பயிருக்குக் களை போல வளர்ந்தனர். தனது குலமனைவியிடம் குழந்தை தோன்றாதது கண்ட பாண்டியன் மிகவும் வருந்தினன். ஆதலால் மன்னவனும் அவனது பட்டமகிஷியும் அஷ்டமி, சதுர்த்தி, சோமவாரம் என்னும் சிவ விரதங்களை அனுஷ்டித்தனர். சில நாட்கள் சென்றபின் நன் மகன் ஒருவன் தோன்றினன். வேதம் சொன்னபடித் தன் சுகுமாரனுக்கு எல்லா விசேஷங்களையும் முறைப்

படி செய்து முடித்தான். செல்வனும் எழில் இலங்க வளர்ந்து வந்தான். ஒருநாள் வேட்டையாடச் சென்ற காட்டிலே வீரபாண்டியன் புலியால் கொல்லப்பட்டான். வீரபாண்டியன் இறந்தது கேட்ட அனைவரும் வருத்தப்பட்டனர். அதுதான் சமயம் என்று நினைத்த காமக்கிழத்தியரின் புதல்வர் யானை, குதிரை, பல்வகைப் பொருள்கள், பொன்நகைகள், ரத்தினங்கள் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு ஓடி மறைந்தனர். மந்திரியர் ஆலோசனை செய்து காலமான வீரபாண்டியனது அந்திமக்கிரியைகளை இளங்குமாரனைக் கொண்டு செய்துமுடித்தனர்.

பாண்டியகுமாரனுக்குத் திருமுடி சூட்ட நினைத்த மந்திரிகள் பொக்கிஷத்தைத் திறந்து பார்த்தபோது திகைப்படைந்தார்கள் நவரத்தினங்கள் பதித்த பொன்முடியையும், மற்றும் சில அதி முக்கியமான பொருள்களும் அங்கே காணமல் வருந்தினர். காமக்கிழத்தியரின் மக்களே களவாடிச் சென்றிருக்கவேண்டுமெனத் தெரிந்தனர். "சிறந்ததான மணிமுடி இன்னும் ஒன்று செய்யக் கருதினல் சிறந்த பெரிய மணிகள் இல்லை; மகுடம் இல்லாது போனல் சிம்மாசனம் இல்லை; பின்னர் அரசியல் இல்லை; என்ன செய்வது?" என்று ஏங்கித் தவித்தார்கள் மந்திரிமார்கள். சிவபெருமானை தரிசித்து. அவருடைய திருவருளைத் தெரிந்துகொள்ளலாம் என்று நினைத்து ராஜகுமாரனுடன் திருக்கோவிலின் வாசலை அடைந்தார்கள்.

அச்சமயம் சோமசுந்தரக் கடவுளே ரத்தின வியாபாரியைப் போல வேஷந் தரித்துக்கொண்டு கோபுர வாசலில் வந்துநின்ருர்; அவருடைய தோளின்மேல் ரத்தினங்கள் கொண்ட மூட்டை இருந்தது. அந்தத் தெய்வ ரத்தின வியாபாரி மந்திரிகளைப் பார்த்து "நீங்கள் எதற்காகக் கவலைப்படுகின்றீர்கள்?" என்று கேட்டார், மந்திரிகளும் தங்கள் பட்டத்துக்குரிய ராஜகுமாரன் கிரீடம் புனைவதற்கு முடியாதிருப்பதைத் தெரிவித்தார்கள்.

"நீங்கள் கவலையை விட்டுவிடுங்கள். என்னிடம் ஒன்பதுவகையான ரத்தினங்களும் இருக்கின்றன. அவை எல்லாம் பதினறு கோடிப் பொன் விலையுள்ளவை. இதோ காட்டுகிறேன்" என்று சொல்லிவிட்டு அந்த வியாபாரி கருப்புக் கம்பளியைக் கீழே விரித்து அதிலே நடுவாக மாணிக்கக் கல்லை வைத்து, அதைச் சுற்றிவர எட்டுத் திக்குகளிலும் எட்டுவகையான ரத்தினங்களை வைத்தார். பார்த்தவர்கள் ஆச்சரியப்பட்டுக்கொண்டிருக்கும்போதே, "இந்த நவரத்தினங்களும் வலன் என்ற அசுரனுடைய உடம்பின் பகுதிகள்" என்று சொன்னர். மந்திரிகள் பெருத்த ஆச்சரியம் அடைந்து வலனைப் பற்றிய விவரங்கள்கேட்டனர்.

வணிகப் பெருமான் மதிரிகளைப் பார்த்து, "அசுர குலத்தில் பிறந்த வலன் சிவபக்தன். அவனது பூஜையினல் சந்தோஷப்பட்ட சிவபெருமான் அவன் முன்னல் தோன்றி "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார். "தான் சண்டையிலே இறந்து போகக் கூடாது

என்றும், எதேச்சையாகத் தான் இறந்து போனால் தன்னுடைய உடம்பின் பகுதிகள் எல்லாரும் ஆசைப்படும்படியான நவரத்தினங்களாக வேண்டும்" என்றும் வரம் கேட்டான். சிவபெருமான் அருளினார். உடனேயே வலன் தேவலோகம் சென்றான். இந்திரனை எதிர்த்துச் சண்டை செய்தான். இந்திரன் தோற்று ஓடிப்போனான். ஆனால் வேறு வழியில் சதிசெய்து வலாசுரனைக்கொல்ல நினைத்தான். திரும்பவும் யானையின் மேல் ஏறிவந்து, "உன்னுடைய வீரத்தையும் வெற்றியையும் மெச்சுகிறேன். உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள், தருகிறேன்" என்றான் இந்திரன். வலாசுரன் இடியைப் போல சிரித்துவிட்டு, "சிவபெருமானிடம் வரம் பெற்றிருக்கும் நான் உன்னிடம் வரம் வேண்டமாட்டேன். உனக்கு ஏதாவது வேண்டுமானால் கேள், தருகிறேன்" என்று எதிர் சொன்னான். தனது சூழ்ச்சி பலிக்கும் நேரம் வந்துவிட்டதை உணர்ந்தான் இந்திரன் "வல்லாசுரனே! சிவபெருமான் இருக்கும் வெள்ளியங்கிரிச் சாரலை அடைந்து நான் பெரிய யாகம் செய்யப் போகிறேன், நீ யாகப் பசுவாக உடனே வரவேண்டும்" என்று சொல்லிவிட்டான். இந்திரன் விரும்பியதைக் கேட்டான், வல சுரன். "நீ என்னுடைய பகையாளி அல்ல; என்னுடைய நண்பன். தேவர்களே என்னைப் புகழ்வார்கள். எனக்குப் புகழோடு புண்ணியமும் கிடைக்கும். அப்படியே வருகிறேன்" என்று இணங்கிவிட்டான்.

தனது மகனுக்குப் பட்டம் கட்டிவிட்டு விரைவாகச் சென்று நல்ல லட்சணங்கள் கொண்ட பசுவாகி யாகசாலையிலே நின்றான். வலாசுரப்பசு கொல்லப்பட்டது. அந்தப் பசுவின் வபையை வச்சிராயுதத்தால் எடுத்து இந்திரன் யாகத்தீயில் ஆகுதி செய்து தேவர்களைச் சந்தோஷப்படுத்தினான். இந்திரனுடைய சூழ்ச்சி வெற்றி பெற்றுவிட்டது.

யாகப்பசுவாக வந்து உயிர்கொடுத்த உத்தம வள்ளல் வலாசுரனுடைய இரத்தமே மாணிக்கம் ஆனது; பற்கள் முத்துக்கள் ஆயின. மயிர் வைடூரியம் ஆயிற்று. எலும்பு வைரம் ஆயிற்று. கொழுப்பு கோமேதகம் ஆயிற்று. தசை பவளம் ஆயிற்று. கண்கள் இரண்டும் நீல மணிகள் ஆயின. கோழை புஷ்பராகம் ஆயிற்று. இவை அனைத்தும் சிவபெருமானுக்குப் பிடித்தமானவை என்று கூறினார்.

பின்பு நவரத்தினங்கள் தோன்றும் இடங்களையும், அவைகளுடைய நிறங்களையும், இனங்களையும், தெய்வங்களையும், பிரகாசத்தையும், நல்ல ரத்தினங்களை உடம்பிலே போட்டுக்கொண்டால் ஏற்படும் பலனையும் விரிவாக விளக்கிக் கூறினார் தேவ வியாபாரி. பிறகு வடக்குத் திசையைப் பார்த்து உட்கார்ந்துகொண்டு நவரத்தினங்களைப் பூஜை செய்து, எல்லாவற்றையும் கையில் எடுத்துக் கொண்டு சோமசுந்தரக் கடவுளை அஞ்சலி செய்து, "ராஜகுமாரனுக்கு அளவற்ற ஆயுசும் ஐசுவரியமும் ஓங்குக" என்று வாழ்த்திக் கொடுத்தார். ராஜகுமாரனும் சொக்கலிங்கப் பெருமானை வணங்கி

இருகைகளாலும் ரத்தினங்களை வாங்கிக் கொண்டான். அப்போது வணிகப் பெருமான், "இந்த நவரத்தினங்களைக்கொண்டு புதிதான கிரீடம் செய்து குமாரனுக்கு முடிசூட்டி அபிஷேக பாண்டியன் என்று பெயர் இடுங்கள்" என்று சொன்னார். மந்திரிகள் நவரத்தினங்களுக்கு விலைகொடுக்க வருவதற்குள்ளாக ரத்தின வியாபாரியைக் காணோம். எல்லோரும் திகைத்து நின்றபோது வணிகப் பெருமான் உமாதேவியாருடன் ரிஷப வாகனத்தின் மேல் ஏறி கோவிலுக்குப் போவதைப் பார்த்தார்கள். வியாபாரியாக வந்தவர் சிவபெருமானே என்று தெரிந்துகொண்டதும் எல்லாரும் கோவிலுக்குள் சென்று ஈசுவரனையும் ஈசுவரியையும் வழி பட்டனர்.

நவ மா மணிகளைக் கொண்டு திறமையாகச் செய்யப்பட்ட புதுக் கிரீடத்தைச் சிறந்த நல்ல நாளிலே ராஜகுமாரனுக்கு வைத்து "அபிஷேக பாண்டியன்" என்று பெயர் விளங்கச் சொல்லி பட்டாபிஷேகம் செய்தனர்.

அபிஷேக பாண்டியன் தனது வீரத்தால் பகைவர்களை வென்றான். தனது கருணையால் உலகை ஆட்சி செய்தான். அரண்மனைப் பொக்கிஷத்திலிருந்து களவாடப்பட்ட பொருள்களையும் மீட்டிக் கொண்டான். களவாடினவர்களுக்கு கடுமையான தண்டனை விதித்தான். ★

## 18. வருணன் விட்ட கடலை வற்றச் செய்தது.

சித்திராபௌர்ணமி தோறும் அபிஷேக பாண்டியன் சொக்கலிங்கப் பெருமானுக்கு அதி விசேஷமான பூஜைகளைச் செய்வது வழக்கம். பச்சைக் கர்ப்பூர நன்னீரால் அபிஷேகம் செய்து "கர்ப்பூர சுந்தரேசா!" என்று சொல்லித் துதி செய்வான். அதே சித்ரா பௌர்ணமி இரவிலேதான் இந்திரனும் பூஜை செய்ய வருவது வழக்கம். அபிஷேக பாண்டியன் பூஜை செய்து முடிக்கும் வரையிலும் தாமதித்துக் காத்திருந்து பிற்பாடு தன் பூஜையை முடித்துச் செல்லவேண்டியதாயிற்று.

ஒரு வருஷம் இப்படி நடந்த சமயத்தில் வருணன் இந்திரனைப் பார்க்கச் சென்றான். "தேவேந்திரா! இன்று நீ வருத்தத்தோடு இருக்கக் காரணம் என்ன?" என்று கேட்டான். "மதுரைச் சொக்கநாதரைப் பூஜை செய்வதிலே பாண்டியனால் தாமதம் ஏற்பட்டுவிட்டது; அதனால்தான் கொஞ்சம் கவலை" என்றான் இந்திரன்! "சொக்கலிங்கம்தான் எல்லா லிங்கங்களைக் காட்டிலும் சிறந்ததோ?" என்று கேட்டான் வருணன். உடனே இந்திரன், "வருணா, அன்று என்னுடைய பிரம்மஹத்தி தோஷத்தையும், வெள்ளையானையின் சாபத்தையும் போக்கி அருள் புரிந்தது சொக்கலிங்க மூர்த்திதானே? இது உனக்குத் தெரியாதா?" என்றான். "அப்படியானால் என்னை வருத்தப்படுத்துகின்ற பெரிய வயிற்று நீர்நோயைச் சொக்க

லிங்கம் தீர்த்துவைப்பாரா?" என்று கேட்டான் வருணன். "பிறவி நோயைத் தீர்க்கவல்ல சிவபெருமான் உனது வயிற்று நோயையா தீர்க்கமாட்டார்? வேண்டுமானால் எம்பெருமானின் சக்தியைச் சோதித்துப்பார். பிறகு அவரது திருவிளையாடலை நீயே நன்றாகத் தெரிந்துகொள்வாய்" என்று பதில் சொன்னான் இந்திரன். வருணன் விடை பெற்றுச் சென்றான்.

மதுரைச் சொக்கலிங்கப் பெருமானின் திருவிளையாடலைக் கண்டு தன்னுடைய வயிற்று நீர்வியாதியை ஒழித்துவிட எண்ணினான் வருணன். உடனே கடலைக் கூப்பிட்டு மதுரை நகரத்தை அழித்து வரும்படியாக ஏவி விட்டான். கடல் குமுறிக்கொண்டு பொங்கி எழுந்தது. ஆரவாரம் செய்து மரங்களை வேரோடு பிடுங்கி வீசி எறிந்தது.

பிரளய காலமே வந்துவிட்டதோ என்று என்னும்படி சூழ்ந்து வந்தது கடல். வருணனது சூழ்ச்சியைத் தெரிந்துகொள்ளமாட்டாத தேவர்கள் பிரம்ம கல்பத்திலும் அழிவடையாத மதுரையம்பதியும் அழிவடைந்துவிடுமோ என்று பயந்தனர். கலக்கமடைந்தமனத்தோடு சோமசுந்தரக் கடவுளை வணங்கினார்கள். மதுரை மக்கள் "இது சொக்கநாதர் திருவிளையாடலா? அல்லது நாம் செய்த பாவத்தின் பலனோ?" என்று மனம் தடுமாறினார்கள். அபிஷேக பாண்டியனும் செய்வது இன்னது என்று புரியாமல் திருக்கோவிலுக்குள் சென்று, "எம்பெருமான் திருவடிகளே புகல்; ஓலம், ஓலம்" என்று கதறினான்.

உடனே சோமசுந்தரக்கடவுள் முன்தோன்றி, "பயப்பட வேண்டாம், பாண்டியா!" என்று புன்னகையுடன் மொழிந்தருளினார். பிறகு தன்னுடைய ஜடாமகுடத்திலிருந்து நான்கு மேகங்களையும் பார்த்து, 'நீங்கள் விரைவாகச் சென்று மதுரை நகரத்தை அழிக்க வந்துகொண்டிருக்கும் கடலை அது வற்றிப் போகும்படிக்கு நன்றாக உறிஞ்சி விடுங்கள்" என்று ஆணையிட்டருளினார்.

மேகங்கள் நான்கும் எழுந்து முழங்கிப் புறப்பட்டன. சென்று பொங்குமாங்கடலை வற்றிப்போகும்படி நீரை உறிஞ்சிக் குடித்துவிட்டன. நீர் வற்றிய கடல் சிவபெருமானே முழுமுதற் காரண புராதனன் என்று தெளிவாகத் தெரிந்துகொண்டது. மதுரை நகரம் பிழைத்தது.

தேவர்கள், அபிஷேகபாண்டியன், நகர மக்கள் எல்லாரும் சோமசுந்தரக்கடவுளின் திருவிளையாடலைப் பாராட்டியவாறு மிகுந்த சந்தோஷத்துடன் தங்கள் இடம் சென்றனர். ★

## 19. நான் மாடக்கூடல் ஆனது.

வருணன் தனது வலிமை குறைந்தது கண்டு மிகவும் வெட்கப்பட்டான். கண்கள் சிவந்தன, கோபத்தீ அவனைக் காய்த்தது. அவன்

இன்னம் சோமசுந்தரப் பெருமானின் திருவிளையாடலைத் தெரிந்து கொள்ளவில்லை. ஆதலால், மீண்டும் தன்னுடைய ஏழு மேகங்களையும் கூப்பிட்டு மழை பெய்து மதுரையை அழிக்குமாறு ஏவிவிட்டான். ஏழு மேகங்களும் விரைவாகக் கிளம்பின. கருத்த உருவங்கொண்டு மேலே எழுந்தன மேகங்கள். மின்னலை வீசின. திக்குகளும் ஆகாயமும் அதிர்ச்சி அடையும்படி இடித்து முழங்கின. பெரிய பெரிய ஆலங்கட்டிகள் விழுந்தன. பளிங்குத் தூணைப்போல மழைத் தாரைகள் கொட்டின. சப்த மேகங்களும் கூடி வானை மறைத்தன. பெரிய புயல்காற்று சுழன்று சுழன்று வீசியடித்தது. மதுரை மாநகரம் மேகங்களால் முற்றுகையிடப்பட்டது.

அபிஷேக பாண்டியனும் மதுரை மக்களும் "இன்றே உலகம் அழிந்துவிடும்" என்று நினைத்து மனம் கலங்கி வாட்டமடைந்தார்கள். "நம்மை எல்லாம் காத்தருள வல்லவர் சிவபெருமானே" என்று தெளிவடைந்து மக்கள் உடன்வர அபிஷேகபாண்டியன் திருக்கோவிலுக்குச் சென்றான். எம்பெருமான் திருவடியில் விழுந்து காக்கும்படி கெஞ்சி வேண்டினான்.

சோமசுந்தரக் கடவுள் உடனே தனது சடைமுடியிலுள்ள நான்கு மேகங்களையும் பார்த்து, "நீங்கள் சென்று இம் மதுரையம் பதியின் நான்கு எல்லைகளையும் சூழ்ந்து கொள்ளுங்கள். நான்கு மாடங்களைப்போல் அமைந்து ஏழுமேகங்களையும் விலக்கி விடுங்கள்" என்று ஆணையிட்டருளினார். நான்கு மேகங்களும் இறைவன் திருவாணை தாங்கி உடனே புறப்பட்டன. மதுரையின் நான்கு திசைகளிலும் சூழ்ந்து வளைந்துகொண்டன. இடைச்சந்து தெரியா வண்ணம், ஊரிலுள்ள மாடங்களையும் கோபுரங்களையும் தூண்களாகக் கொண்டு, ஒன்று சேர்ந்து மதுரை மாநகரத்தை ஒரு பெரிய கூடாரத்தைப்போல் மூடிக் கொண்டுவிட்டன. பாண்டியனும் மக்களும் பெரிய சந்தோஷம் கொண்டனர். மலையுச்சியிலே பெய்யும் மழைத்துளிகள் உடைபட்டுச் சிதறிப்போவது போல, சிவபெருமான் அனுப்பிய மேகங்கள் சேர்ந்து செய்த மாடத்தின் மீது மழைத்துளிகள் உடைந்து சிதறின. வருணன் விடுத்த மேகங்கள் வறண்டுவிட்டன. வருணதேவன் தோல்வியடைந்து நிரம்ப வெட்கமடைந்தான்.

வெட்கம் அடைந்து நின்ற வருணன் பயத்தால் மிகவும் நடுநடுங்கினான். அவனது மானம் ஒடுங்கி விட்டது. ஆனாலும் அவனது மனத்துக்குள்ளே உள்ளூற ஒரு சந்தோஷம் ஏற்பட்டது. பொற்றாமரைத் தீர்த்தக் கரையை அடைந்தான். அதை அடைவதற்கு முன்பாகவே அவனுடைய வயிற்று நீர் வியாதி நீங்கிவிட்டது. வருணன் பொற்றாமரைக் குளத்திலே ஸ்நானம் செய்து முடித்துச் சோமசுந்தரக் கடவுளைப் பூசிக்க எண்ணினான். மிகுந்த பயபக்தியோடு விபூதி, உருத்திராட்ச மாலை எல்லாம் போட்டுக் கொண்டான். கங்கை முதலான மாதர்கள் தங்கக் குடங்களிலே வாசனை கலந்த திருமஞ்சன நீர் கொண்டு வந்து கொடுத்தனர். கற்பகத்தரு நல்ல பூக்கள்,

சந்தனம், வாசனைத் திரவியங்கள், ரத்தினங்கள் பதித்த தங்கப் பாத்திரங்கள், பொன்னுடை எல்லாம் எடுத்துக் கொடுத்தது. காமதேனு ஐந்து வகையான பழங்கள், பஞ்சாமிர்தம், பஞ்சகவ்யம், நைவேத்தியம், தூபம், தீபம் எல்லாம் எடுத்துக் கொடுத்தது. வருணன் சோமசுந்தரப் பெருமானை முறை தவறாதபடி பூஜை செய்தான். இறைவனது ஆயிரம் திருப்பெயர்களைச் சொல்லி முத்துக்களால் திருவடிகளில் அர்ச்சனை செய்து வணங்கி நின்றான்.

வருணனது வழிபாட்டிலே கடவுள் திருவுளம் மகிழ்ந்தார். "வருணா! உனக்கு என்ன வேண்டும்?" என்று வினவியருளினார். வருணன், "மணி மந்திர ஔஷதங்களால் போகாத எனது வியாதி தங்களது த்வ்ய தீர்த்தத்திலே நீராடுவதற்கு முன்பே போய்விட்டது. தங்கள் அருமை பெருமைகளை அறியாத பேதை நான் தங்களைச் சோதனை செய்யத் துணிவு கொண்டேன். குணங்கெட்டவனை என்னிடமும் கருணை காட்டினீர்கள். இந்த அறிவு கெட்டவன் சோதனை செய்ததெல்லாம் நோய்க்கு மருந்தாகிவிட்டது. எனது ஆணவம் நீங்கிவிட்டது. தங்கள் திருவருளால் எனக்கு உரியகாலத்தில் மோக்ஷம் கிடைத்துவிடும். எனக்கு இனி எதுவும் வேண்டாம். இந்தப் பொற்றாமரைத் தீர்த்தத்திலே ஸ்நானம் செய்தாலே எல்லா வியாதிகளும் நீங்கிவிடும். எளியேன் செய்த பிழைகளைப் பொறுத்தருள வேண்டும்", என்று கூறிப் பல முறை வணங்கி வரங்கள் வாங்கிச் சென்றான்.

நான்கு மேகங்கள் மலைபோல உயர்ந்து நான்கு மாடங்களாகக் கூடியதால் மதுரையம்பதி அன்றிலிருந்து 'நான் மாடக் கூடல்' என்று பெயர் பெற்றது.

## 20. எல்லாம் வல்ல சித்தர் ஆனது.

நவரத்தினங்கள் பதித்த மணிமுடி சூடிய அபிஷேக பாண்டியனும், பாண்டிய நாட்டில் இருப்பவர்களும் இகத்திலும் பரத்திலும் எல்லா வகையான நன்மைகளையும் அடைய வேண்டும் என்று சோமசுந்தரப் பெருமான் திருவுள்ளம் கொண்டார். ஆதலால், சித்த புருஷரைப்போலத் திருவுருவம் கொண்டருளினர்.

நீண்ட சடைமுடியும், நெற்றியிலே திருநீரும், புலித்தோல் உடையும், தங்கம் கட்டிய பிரம்பு ஏந்திய திருக்கரமும் விபூதிப் பையும் விளங்க நல்ல அழகும் இளவயதும் கொண்ட சித்த புருஷராகத் தோன்றியருளினர் பெருமான்.

மதுரை மாநகரக் கடைவீதி, சித்திரகூடம், நாற்சந்தி, நிலா முற்றம், மாளிகை, மாடம், திண்ணை ஆகிய எல்லா இடங்களிலும் தோன்றினர். தெற்கே இருப்பார் போலக்காட்டி வடக்கே இருப்பார். கிழக்கே தோன்றியிருந்து மேற்கே காட்சி தந்திடுவார். தேடத் தேடக் காணாதவராகித் திடீரென்று இந்திரஜாலம்போல மறைவார்,

வெகுதூரத்திலுள்ள மலையை வெகு அருகில் வரவழைப்பார். வயதானவர்களை வாலிபர்கள் ஆக்குவார். சிறியவர்களைக் கிழவராக்குவார். ஆண்களைப் பெண்களாக்குவார். பெண்களை ஆண்களாக்குவார். கூனர்கள், குருடர்கள், செவிடர்கள், ஊமைகள், முடவர்கள், எல்லாருடைய உடல் குறைகளையும் போக்கிச் சரியாக்கி விடுவார். இரும்பு, ஈயம், தாமிரம், வெள்ளி என்னும் நான்கு உலோகங்களையும் பொன்னாக மாற்றிவிடுவார். சித்தர் புரிந்து காட்டிய விளையாடல்கள் பல வகையானவை. ஆகர்ஷணம், அதிரிச்சியம், அஞ்சனம், வசியம், வாதம், வியஸ்தம்பம் ஆகியவற்றைச் செய்து காட்டினார். படிப்பே இல்லாதவருக்கு வாயிலே விபூதியைப் போட்டு பண்டிதராக்கிவிடுவார். சகல லோகத்திலுள்ள பொருள்களையெல்லாம் மதுரைக்குக் கொண்டு வருவார். இப்படியாக அளவிட முடியாத சித்துவித்தைகளை மதுரையம்பதியிலே புரிந்தருளினார். ஆணழகனை சோமசுந்தர சித்தமூர்த்தி திருவிளையாடல்களைக் கண்ட மதுரை மக்கள் பெரும் திகைப்பு அடைந்திருந்தார்கள்.

இந்த சித்து நிகழ்ச்சிகளையும் சித்தர் வல்லமையையும் தெரிந்து கொண்டான் அபிஷேக பாண்டியன். அருகே யிருந்த சேவகர்களை நோக்கி "வித்தகம் நிரம்பிய சித்தப்பெருமானை இங்கு அழைத்து வாருங்கள்" என்று ஆணையிட்டான்.

ஆணைபெற்ற ஏவலாளர்கள் சித்தரிடம் சென்றார்கள். ஆனால், அங்கே சென்று அவர் செய்த திருவிளையாடலைப் பார்த்து ஆச்சரியம் அடைந்து தங்களையும் மறந்து அங்கேயே இருந்து விட்டார்கள். வேலைக்காரர்கள் வராததைக் கண்ட பாண்டிய மன்னன் தன்னுடைய மந்திரிகளை அனுப்பி வைத்தான். மந்திரிமார்கள் சித்தரைக் கண்டு வணங்கினார்கள். "சித்தர்பெருமானே! தாங்கள் எங்கள் அரசர் முன்பு எழுந்தருளவேண்டும்" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்கள். "உங்கள் மன்னனால் எனக்கு ஒரு பிரயோஜனமும் இல்லை. நான் வர முடியாது" என்று மறுப்புச் சொல்லி விட்டார் சித்தர். மந்திரிகளும் வணங்கி ஏமாந்த மனத்துடன் வந்த வழி திரும்பினார்கள். அரசனிடம் போய் சித்தமூர்த்திகளின் பதிலைச் சொன்னார்கள்.

அபிஷேக பாண்டியன் இது கேட்டான். "கடவுளின் திருவருள் பெற்று இக பர சுகங்களை வெறுத்த யோகிகள் மகாவிஷ்ணு, பிரம்மா, இந்திரன் ஆகியவர்களையே மதிக்கமாட்டார்களே! பூவுலக அரசனாகிய என்னையா மதிப்பார்கள்?" என்று மந்திரிமார்களிடம் சொல்லிவிட்டுச் சும்மா இருந்தான். ★

## 21. கல்யானைக்குக் கரும்பு அருத்தியது.

அபிஷேக பாண்டியன் மனதிலே பக்தியும் பயமும் உண்டாகின. "சித்தமூர்த்திப் பெரியாரை மதிக்காமல், சாதாரண மனிதரைப்

போல் எண்ணி என்னிடம் வரச்சொல்லி அவமதித்து விட்டேன். என்ன மதியீனம்! நான்தான் அவரை நாடிச்சென்று போகவேண்டும்; போய் தரிசனம் செய்யவேண்டும்; இதுவே முறை'' என்று நினைத்தான். அதே சமயத்தில் சித்த மூர்த்தியும் பாண்டியனது வரவை எதிர்பார்த்து திருக்கோவிலின் இந்திர விமானத்துக்கு வடமேற்கே எழுந்தருளி அமர்ந்திருந்தார். அன்று தை மாதப் பிறப்பு நாள்; மகர சங்கராந்தி புண்ணியகாலம். ஆதலால், அபிஷேக பாண்டியனும் திருக்கோவில் சென்றான். சோமசுந்தரப் பெருமானைத் துதித்து விட்டு பிரதட்சிணமாக வந்து கொண்டிருந்தான். அப்போது அரசனுக்கு முன்பு போய்க்கொண்டிருந்த மெய்க்காப்பாளர்கள் சன்னியாசிக் கோலத்தில் இருந்த சித்தரைப் பார்த்து, ''இந்த இடத்தை விட்டு எழுந்து போய்விடுங்கள்'' என்று கூறினார்கள். அதற்குள்ளாகப் பாண்டியன் அங்கே வந்து சேர்ந்தான். சித்த மூர்த்தியைப் பார்த்து, ''யோகியாரே! தாங்கள் நாடும், ஊரும் எவை? தங்களுக்கு என்னவெல்லாம் வரும்? என்ன வேண்டும்? தங்கள் திருப்பெயர் என்ன? சொல்ல வேண்டுகிறேன்'' என்றான். ''அப்பனே! நம்முடைய இடம் காசி; சிவனடியார்களே எனது சொந்தக்காரர்கள். சித்து வித்தை செய்து காட்டுவதே என்னுடைய வேலை. மதுரை மக்களுக்குச் சித்துகள் காட்டி அவர்கள் விரும்புவதை அருள் புரிவோம். வேதம், கலைஞானங்கள் எல்லாம் எமக்குத் தெரியும். நான் உன்னிடம் பெற்றுக் கொள்ள வேண்டியது ஒன்றுமில்லை, பாண்டியா!'' என மொழிந்தார் சித்தர் புன்னகையுடன்.

சித்தரின் கம்பீரமான பதிலைக் கேட்டு அவரது கருவத்தையும் வல்லமையையும் சோதிக்க விரும்பினான் பாண்டியன். அதைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தான். அந்தச் சமயம் பார்த்து வேளாளன் ஒருவன் வளமாகப் பருத்து வளர்ந்திருந்த ஒரு கரும்பைக் கொணர்ந்து முன் வைத்து வணக்கம் செலுத்தினான். பாண்டியன் அந்தக் கரும்பைத் தன் கையில் வாங்கிக்கொண்டான். உடனே சித்த மூர்த்தியைப் பார்த்து, ''வல்லவர்களுக்கெல்லாம் வல்லவர் என்று மதித்துக் கொண்டவரே! இதோ, பக்கத்திலுள்ள கல் யானைக்கு இந்தக் கரும்பை எடுத்துத் தின்ன வைத்து விட்டீர்களானால் எல்லாம்வல்ல சித்தர் தாங்கள் தாம்; சோமசுந்தரக் கடவுளும் தாங்கள் தாம், தாங்கள் விரும்பியதைக் கொடுப்பேன்'' என்றான். இது கேட்ட சித்தர் புன்னகை செய்தார். ''மன்னவா! எமக்கு உன்னால் பயன் ஒன்றும் இல்லை. எல்லா வித்தைகளையும் அறிந்துள்ள எமக்கு எதிலுமே ஆசை கிடையாது. இதோ, இந்தக் கல் யானை கரும்பைக் கடித்துத் தின்பதைப் பார்'' என்றார். சித்தர் பெருமான் கல் யானையின் மீது கடைக்கண் பார்வை செலுத்தியருளினார். என்ன அற்புதம்! கல்யானை கண் திறந்தது; துதிக்கையைநீட்டியது; பாண்டியன் கைக் கரும்பைப் பற்றித் தனது வாய்க்குள் செலுத்திச் சாறு ஒழுகும் படிக்குக் கடித்துத் தின்றது. துதிக்கையை இங்குமங்கும் ஆட்டிக் கொண்டு நின்றது.

மறுபடியும் சித்த மூர்த்திப் பெருமான் யானையைக் கடைக் கணித்தார். உடனே யானை தனது துதிக்கையை வீசிப் பாண்டியன் கழுத்தில் போட்டுக்கொண்டிருந்த மணிமாலையை எட்டிப்பிடித்தது. மன்னனின் மெய்க் காவலர்கள் கோபங்கொண்டு யானையை அடிப் பதற்காகப் பிரம்பை ஓங்கிக்கொண்டு வந்தனர். சித்தர் யானையைக் கோபத்தோடு பார்த்தார். உடனே கல் யானை மாலையை விழுங்கி விட்டது. பாண்டியன் பெருங்கோபம் கொண்டான். மெய்க்காவலர் கள் மன்னன் கோபத்தை அறிந்ததும் சித்தர் பெருமானையே அடிக்க வந்துவிட்டனர். புன்னகை மலர்ந்த திருமுகத்தோடு, "நில்லுங்கள்" என்றார் சித்தர். காவலர்கள் உடனே சிலை உருவம்போல அப்படியே ஆடாமல் அசையாமல் நின்று விட்டார்கள்.

அந்த அற்புத நிகழ்ச்சியைக் கண்ட பாண்டியனுக்குக் கோபம் விலகிவிட்டது. பக்தி நிரம்ப ஏற்பட்டது. சித்தமூர்த்திப் பெரு மானின் திருவடிகளில் தன்முடி சேர்த்து வணங்கினான். "மாயை யால் மயங்கிப் பாசத்தால் கட்டுப்பட்டதாலே எளியேன் செய்த அப சாரக்குற்றத்தைப் பொறுக்க வேண்டும்; மன்னித்தருளவேண்டும்" என்று முறையிட்டுக் கொண்டான். கருணைக் கடலாகிய மூர்த்திகள் சந்தோஷம் அடைந்தார். "உனக்கு வேண்டும் வரத்தைக் கேள்; தரு வோம்" என்றார். அபிஷேக பாண்டிய அரசன் உடனே வணங்கி, "பெருமானே! எளியேனுக்கு நல்ல குமாரன் பிறக்கும்படி அருள வேண்டுகிறேன்" என்று விண்ணப்பித்தான். சித்தர் பெருமான் "அப்படியே ஆகட்டும்" என்று நல் வரம் தந்தருளினார். பின்னர் யானையின் மேலே தனது திருக் கையை வைத்துக் கடைக்கண் செலுத்தினார். யானை தனது துதிக்கையை நீட்டிப் பாண்டியனிடம் அவனது கண்டமாலையைக் கொடுத்துவிட்டது. பாண்டியன் கை யேந்தி மாலையை வாங்கினான். வாங்கி நிமிர்வதற்குள்ளாகச் சித்த மூர்த்தி மறைந்துவிட்டார். யானையும் மீண்டும் கல் யானையாகி விட்டது. காவலர்களும் உயிர்வரப் பெற்றார்கள்.

பேரற்புதத்தைக் கண்ட பாண்டிய மன்னன் பயந்து இந்த திருவிளையாடல் சோமசுந்தரப் பெருமானுடைய திருவிளையாடல் தான் என்பதைத் தெரிந்து கொண்டுவிட்டான். திருக்கோவில் கரு வறைக்குள்ளே சென்று சொக்கலிங்கப் பெருமானைப் பணிந்து புகழ்ந்தான். இறைவனைச் சோதிக்கத் துணிந்த தனது புத்திக் கேட்டை எண்ணி அபராதம் செலுத்தினான்.

சித்தமூர்த்திப் பெருமான் அருளிய நல்வரத்தின் பயனாக அபி ஷேக பாண்டியனுக்கு புதல்வன் பிறந்தான். விக்கிரமன் என்று நாம கரணம் செய்து பெருவீரனாக்கி வளர்த்தான். உரிய காலத்திலே தன் மகனுக்குப் பட்டாபிஷேகம் செய்தான். சின்னாட்கள் சென்று சிவ பரஞ்ஜோதியில் இரண்டற ஐக்கியமாகிவிட்டான். ★

## 22. யானை எய்தது.

விக்கிரமப்பாண்டியன் புவி முழுவதும் தன் புகழ் பரவும்படிக்கு நல்லாட்சி செய்து வந்தான். வேத, சிவாகமநெறியைக் கடைப்

பிடித்துச் செங்கோல் செலுத்தி வந்தான். புத்தம், சமணம் ஆன புறச்சமயங்களை ஒழித்தெறிந்தான். பக்தி நெறி எங்கும் தழைத் தோங்கியது. திருக்கோயில் இந்திர விமானத்துக்குச் சற்று வடக்கே திருக்கோவில் எடுப்பித்துச் சித்தமூர்த்திகளின் திருவுருவத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டு வந்தான்.

வீரபாண்டியனது பெருஞ் சிறப்பையும் வீர மரபையும் கண்ட சூரியகுலச் சோழனானவன் பொறாமைப்பட்டான். சமண மதத்தைச் சார்ந்திருந்ததினாலே சைவ மதத்தைச் சார்ந்த விக்கிரம பாண்டிய னைப் பகைத்தான். பலமுறை நேரிலே எதிர்த்துப் போராடியும் சோழவேந்தன் தோல்வியே கண்டு ஓடினான். ஆதலால் சூழ்ச்சி செய்து பாண்டியனைக் கொல்லத் துணிந்தான். எண்ணியது செய்யத் துணிந்த சோழன் அஞ்சனம் ஆகிய எட்டு மலைக் குகைகளில் வாழ்ந்த சமணக் குரவர்கள் எட்டாயிரம் பேர்களுக்கும் ஓலை எழுதி அனுப்பினான். ஓலையைப் பெற்றதும் சமணர்கள் அனைவரும் சோழனைக் காண காஞ்சிமாநகரத்தை நோக்கி வேகமாக வந்து சேர்ந் தனர். சோழவேந்தன் அந்த முனிவர்களைப் பார்த்து, "வசியம் முத லிய அறுதொழில் வல்லவர்களே! நீங்கள் அபிசாரஹோமம் செய்து விக்கிரம பாண்டியனைக் கொல்லவேண்டும்; அப்படிச் செய் தால் எனது இராச்சியத்தில் பாதியை உங்களுக்குக் கொடுப்பேன்," என்று சொன்னான்.

சமண முனிவர்களும் சோழனது விருப்பத்திற்கு உடன்பட்ட னர். பாலி என்ற ஆற்றின் கரையிலே மூன்று காதம் பரப்புக் கொண்ட பெரிய யாகசாலையை அமைத்தார்கள். அந்த நிலத்திற்கு நடுவிலே ஒரு யோசனை சதுரத்திற்கு நிலத்தைத் தோண்டினார்கள். அதற்கு நடுவில் அஷ்டகோணமான ஹோமகுண்டம் ஒன்றை அமைத்தனர். அகோரமான முறையிலே அபிசாரம் செய்ய ஆரம் பித்தனர். குண்டத்திலே எட்டியைப் போல விஷக் கட்டைகளை இட்டுத் தீ வளர்த்தனர். வேம்பு நெய்யுடன் விஷ ஜந்துக்களின் கொழுப்பினையும் தசையையும் கலந்து ஆகுதி செய்தனர். கொடிய நச்சுவேள்வி கோரமாக நடைபெற்றது. விஷ யாகத்தை விஷமிகள் செய்தனர்.

யாகத்தின் விளைவாகப் பெரிய கரிய யானை ஒன்று எழுந்து வெளிவந்தது, நீல நிறமான மலையொன்றே புறப்பட்டது போலிருந் தது. யானையின் தோற்றமும் அளவும் மிகுந்த பயத்தைத் தந்தன. அந்தக் கொல் யானையைப் பார்த்துச் சமணர்கள், 'நீ வேகமாகச் சென்று விக்கிரம பாண்டியனையும் அவனது மதுரை ஊரையும் அழித்து வருவாயாக" என்று கூறி தெற்குத் திக்கை நோக்கி அது போகும்படிக்கு ஏவினார்கள். யானை இடி முழக்கம் செய்து, நிலம் அதிர விரைந்து மதுரை நோக்கிப் புறப்பட்டது. யானையுடன் கூடவே சோழனது சைனியங்களும், சமணர்களும் சென்றனர்.

மதுரைமாநகரம் நோக்கி மாபெரும் யானையொன்று கடுகி வருவது தெரிந்த மாந்தர் மன்னன் விக்கிரமனிடம் சென்று சேதி சொல்லினர். மனம் கலங்கிய பாண்டியன் திருக்கோவில் சென்று சோமசுந்தரப் பெருமானைப் பலமுறை வணங்கி, "பெருமானே! யானையைக் கொன்று அடியேனைக் காத்தருளவேண்டும்" என்று விண்ணப்பம் செய்தான். "பாண்டிய! யாம் வில்லேந்திய வீரனாக வருவோம்; கொடிய யானையைக் கொல்வோம்; நகருக்குப் பக்கத்திலே கிழக்குத் திசையில் அட்டாலை மண்டபம் ஒன்று அமைத்திடுக" என்று ஆகாயத்திலிருந்து திருக்குரல் எழுந்தது. அதைக் கேட்ட பாண்டியன் வணங்கினான். விரைந்துசென்றான். பதினாறு தூண்கள் தாங்கிய அட்டாலை மண்டபத்தையும் அமையச் செய்தான்.

சோமசுந்தரப் பெருமான் வில்வீரனைப் போல வெளிப்பட்டார். அவரது குடுமியிலே மயில் தோகை சொருகியிருந்தது. சிவப்புநிறமான கச்சை இடுப்பிலே இலங்கியது. பக்கத்திலே உடைவாள் விளங்கியது. முதுகிலே அம்புறைத்தூணி இருந்தது தோளிலே நீண்ட வில் இருந்தது. கருப்பு நிறத்தோடு, யௌவனக் காமனைப் போல அழகுகொண்ட கம்பீரமாக மண்டபத்தின் மேலேறி நின்றார். அபிசார ஹோம யானையின் வருகை எதிர்பார்த்திருந்தார். கூப்பிடு தூரங்கள் ஐந்திலே அந்த யானை வருவதை கண்டுவிட்டார் திருவேடர்.

உடனே வில்லிலே அம்பு பொருத்தி வளைத்துவிட்டார் தெய்வ வேடர். அவர் பூட்டியது நரசிங்கக்கணை. அம்பு விரைந்து சீறிச் சென்று, மேகம்போல முழங்கிக் கொண்டுவந்த யானையின் மத்தகத்தைக் கிழித்தது. கொடிய கொல்யானை பயங்கரமாக பிளிறிக் கொண்டு தரையிலே சாய்ந்தது. யானை இறந்து போனதைக் கண்ட சமணர்கள் பெரும் துன்பத்தில் ஆழ்ந்தனர்.

சாய்ந்து கிடந்த யானை இருள் மலையை ஒத்திருந்தது. அம்பு பாய்ந்த இடத்திலிருந்தும், அதன் வாயிலிருந்தும், அருவிபோல ரத்தம் பெருக்கெடுத்து ஓடியது. யானை இறந்துவிட்டதைக் கண்ட விக்கிரம பாண்டியன் எல்லையற்ற சந்தோஷம் அடைந்தான். ஆனால் சோழனது படையினரையும், அவர்கள் பின்னே பேய்க்கூட்டம் போல வந்துகொண்டிருந்த சமண முனிவர்களையும் கண்டு பொங்கி எழுந்தான். அவர்களையெல்லாம் பாண்டிய வீரர் சரியான முறையில் தாக்கி தண்டித்து அனுப்பிவிட்டனர்.

யானையை அம்பெய்து கொன்று அட்டாலை மண்டபத்தில் வில்லேந்திய சேவகனாகி நின்ற சோமசுந்தரப் பெருமானின் இரண்டு திருவடிகளையும் தன் கைகளால் பிடித்துக்கொண்டு வணங்கினான் பாண்டியன். சில வரங்களைப்பெற்று தனது அரண்மனையை அடைந்தான்.

சில நாட்களில் விக்கிரமபாண்டியனுக்கு மகன் ஒருவன் பிறந்தான். தன் அழகுக் குமாரனுக்கு இராஜசேகரன் என்று பெயரிட்டு

மிகவும் செல்லமாக வளர்த்து வந்தான். மிகுந்த பரிவுடன் புவியை ஆண்டு வந்தான்.

## 23. விருத்த குமார பாலர் ஆனது.

விக்கிரம பாண்டியன் சிறந்த முறையில் ஆட்சி புரிந்து வந்த காலத்திலே மதுரைமா நகரத்திலே விருபாக்ஷன் என்ற வேதியன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு கற்பிலே சிறந்த சுபவிரதை என்ற மனைவி இருந்தாள். பல ஆண்டுகளாகக் குழந்தை பிறக்காததால் இருவரும் சேர்ந்து பல சிவதருமங்களைச் செய்தனர்; விரதங்களை அனுஷ்டித்தனர். இவ்வாருக அருந்தவம் புரிந்ததாலே அவர்களுக்குப் பெண் குழந்தையொன்று பிறந்தது. குழந்தைக்கு கௌரி என்று பெயரிட்டுப் போற்றி வளர்த்து வந்தார்கள்.

கௌரிக்கு ஐந்து வயதாயிற்று. அந்தச் சிறு வயதிலேயே அவள் பிறவி நோயைப் போக்குவதற்கான உயர்ந்த வழியை ஆராயத் தொடங்கினாள். தனது தகப்பனாரிடம் சென்று, "தந்தையே! இந்தப் பிறவியை ஒழிக்கும் திவ்ய மந்திரம் எதுவோ?" என்று வினவினாள். விருபாக்ஷன் வியப்படைந்தான். மிகுந்த சந்தோஷத்தோடு தன் மகளுக்குப் பராசக்தி மகா மந்திரத்தை பேரன்புடன் உபதேசம் செய்தான். இது கேட்டுணர்ந்த கௌரியும் மகா மந்திரத்தை மிகுந்த பய பக்தி சிரத்தையுடன் ஜபம் செய்து கொண்டு வந்தாள்.

வயது ஏற ஏற கௌரியும் எழில் மிகுந்தவளாகிப் பூரித்து வளர்ந்து வந்தாள். கல்யாண வயதும் வந்து விட்டது. தன் அருமைக் குமாரியின் மணத்தின்பொருட்டு நல்லவரனை எதிர்நோக்கியிருந்தான் விருபாக்ஷன். இப்படியிருந்த காலத்தில் அயலூர் பிரம்மச்சாரியொருவன் பிச்சையெடுத்துக்கொண்டு வந்தான். அவன் ஒரு வைஷ்ணவப் பிரம்மச்சாரி. அவனுக்குத் தனது மகளைக் கொடுக்க விருப்பங்கொண்டான் விருபாக்ஷன். யாரையும் கலந்து ஆலோசிக்காமல் வைணவப் பிரம்மசாரிக்குத் தன் மகள் கௌரியைக் கன்யாதானம் செய்து கொடுக்கத் துணிந்து விட்டான். எதையும் ஆராய்ந்து பார்க்காமல் தன் மகள் கௌரியை தாரை வார்ப்பதைக் கண்ட சுபவிரதையும் சொந்தக்காரர்களும் மிகுந்த கவலை கொண்டனர். "விதியின் செயலே" என்று எண்ணி வருந்தினர். பிரம்மச்சாரியின் குலம், கோத்திரம், சூத்திரம் எல்லாவற்றையும் ஆராய்ந்ததில் எல்லாம் ஒத்திருந்தன; ஆனல் மதம்தான் வைஷ்ணவமாக இருந்தது. குற்றம் என்றால் அது ஒன்றுதான் இருந்தது. இதனைத் தெரிந்த சுபவிரதையும் சொந்தக்காரரும் ஒருவாருக ஒப்புக்கொண்டனர். வேத நீதிக்கு உட்பட்டு விவாகம் நடந்தேறியது. பிற்பாடு பற்பல சிறந்த சீர் வரிசைகளுடன் தன் மகள் கௌரியை அவளது மணவாளனோடு அவனது ஊருக்கு அனுப்பி வைத்தான் விருபாக்ஷன்.

வைஷ்ணவப் பிராமணன் மனைவி கௌரியுடன் வீடு சென்றான். வைஷ்ணவப் பெற்றோர்கள் மகனின் செய்கை கண்டு வாட்ட

முற்றனர். சிவக்கோலம் கொண்டு சிவ சிந்தனையுடன் துலங்கிய கௌரியின் மீது மிகுந்த வெறுப்புக்கொண்டனர். அவளை ஒதுக்கி வைத்தனர். ஒருநாள் அவர்கள் எல்லாரும் பக்கத்து ஊருக்கு ஒரு கல்யாணத்திற்காகச் செல்ல வேண்டி வந்தது. வீட்டிலே கௌரியைத் தனியே விட்டு விட்டுப் பூட்டிக்கொண்டு போய்விட்டனர். தனியே விடப்பட்ட கௌரி பலவாறாக எண்ணமிட்டாள். குற்றம் நீங்குமாறு ஒரு சிவனடியாரையும் காணமுடியவில்லையே என்று ஏங்கினாள். பெருங்கவலை கொண்டிருந்தாள்.

தனது அருமைப் பக்தையின் கவலையைப் போக்கத் திருவுள்ளம் கொண்டார் சோமசுந்தரப் பெருமான். உடனே சைவக்கிழவர் போன்ற உருவம் கொண்டார். சிவ சின்னங்கள் சிறந்து விளங்க விருத்த வேதியரான சிவபெருமான் கௌரியின் வீட்டுக்குள்ளே வந்து புகுந்தார். கௌரி மிகுந்த அன்புடன் அவ்வந்தண முதியவரை வரவேற்று உபசரித்தாள். வேதியர் தாம் பசியோடு வந்திருப்பதைத் தெரிவித்தார். வீடு பூட்டப்பட்டிருப்பதைப் பற்றிக் கௌரி பெரிதும் வருந்தினாள். இது கண்ட கிழவர், "நீ தொட்டால் பூட்டு திறந்து கொள்ளும்" என்று பரிவுடன் அருளினார். கிழவர் சொன்னபடியே நடந்தது. அடுக்களையில் சென்ற கௌரி அமுது சமைத்து கிழவருக்கு இட ஆயத்தமானாள். சைவக் கிழவருக்கு ஏற்ற சிறந்த உபசாரங்களையெல்லாம் செய்து மிகுந்த அக்கரையுடன் அமுது படைத்தாள். வேதக்கிழவர் திருவமுது செய்தருளினார். அமுதுண்ட கிழவர் மூப்பு நீங்கப் பெற்றார்! என்ன விந்தை! மன்மதனைப் பழிக்கச் செய்யும் பேரழகுடன் நல்ல கட்டுடைய வாலிபனாக மாறி நின்றார்! வெண்ணீறு சந்தனமாயிற்று; உருத்திராட்சமாலை நல்ல பொன் மணி மாலையாக மாறியது. அந்த யௌவனக் கோலத்தைக் கண்ட கௌரி கற்பிற் சிறந்தவள் ஆகையால் திகைத்தாள். மனம் பதைக்க உடல் வியர்க்க, மிகுந்த பயத்துடன் நடுங்கிப்போய் ஒரு பக்கமாக ஒதுங்கி நின்றாள்.

அது சமயம் பார்த்து அயலூர் சென்றிருந்த கௌரியின் மாமியும் சொந்தக்காரரும் திரும்பி விட்டனர், பதினாறு வயதுடன் விளங்கிய அந்தணப் பெருமான் உடனே பச்சைக் குழந்தையாகமாறி விட்டார். விரித்த ஆடையின் மேல் கிடந்தது சிவக் குழந்தை. குழந்தை அழத்தொடங்கியது. பரபரப்புடன் உள்ளே புகுந்த கௌரியின் மாமி குழந்தையைக் கண்டாள்; திகைப்புக் கொண்டாள். தன் மருமகளைப் பார்த்து, "ஏது இந்தக் குழந்தை?" என்று சினத்துடன் வினவினாள். அதற்கு கௌரி, "தேவதத்தன் என்னும் அந்தணன் தனது மனைவியோடு இங்கே வந்தான். குழந்தையைப் பார்த்துக் கொள்ளுமாறு சொல்லி விட்டுப் போனான்" என்றாள். இதைக்கேட்ட வைணவராகிய மாமியும் மாமனும் பொறுமையும் கருணையும் இழந்தவர்களானார்கள். "சைவக் குழந்தையின் மேல் அன்பு கொண்டவளே! நீ எங்களுக்கு வேண்டாதவள். இந்தக் குழந்தையையும் எடுத்துக்கொண்டு வீட்டை விட்டு வெளியேறி

விடு" என்று கோபத்துடன் சொல்லி அவளைக் குழந்தையும் கையுமாகத் துரத்தி விட்டனர்.

வெளியேறிய கௌரி ஒன்றும் தெரியாதவளாகி மனம் கலங்கினாள். தாயற்ற குழந்தையின் திருமுகம் பார்த்துத் தளர்ந்தாள்: சோமசுந்தரப்பெருமானை இடைவிடாது தியானம் செய்துகொண்டே உமா மகா மந்திரத்தை உச்சரித்தாள். என்ன ஆச்சரியம்! கையிலிருந்த குழந்தைக் காணோம். உடனே ஆகாயத்திலே சிவபெருமான் உமாதேவியாருடன் ரிஷப வாகனத்திலே திருக்காட்சி தந்தருளினார். தேவக் காட்சி கண்ட கௌரி சிவானந்தக் கடலில் மூழ்கினாள்.

உமாதேவியின் திருமந்திரத்தை உச்சரித்து வந்த கௌரிக்கு சாரூபம் அளித்தருளினார் சிவபெருமான். கௌரியையும் உமையின் திருவடிவாக்கி தன்னிடம் ஐக்கியமாக்கிக் கொண்டார். கண்டயாவரும் வணங்கினர். தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர். ரிஷப வாகனம் கௌரி சுந்தரரைத் தாங்கி விண்ணேறிச் சென்றது. ★

## 24. கால் மாறி ஆடியது.

உரிய காலத்தில் விக்கிரம பாண்டியன் தனது ஆட்சிப் பொறுப்பைத் தன் மகன் ராஜசேகரனிடம் தந்துவிட்டு சில நாட்கள் சென்ற பின் சிவலோகம் சென்றான். மகுடம் சூடிய ராஜசேகர பாண்டியன் செம்மையாகக் கோல் நடத்தி உலகைப் பாதுகாத்து வந்தான். மொத்தம் உள்ள அறுபத்து நான்கு கலைகளில் அறுபத்து மூன்று கலைகளையும் கற்று தேர்ந்து அவற்றில் வல்லவன் ஆனான். அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்றான பரதசாஸ்திரம் மாத்திரம் கற்றுக்கொள்ளவில்லை; ஏனென்றால், வெள்ளியம்பல நடராஜப்பெருமானுக்கு பாண்டியன் காட்டி வந்த பக்தியே காரணம்.

ராஜசேகரபாண்டியன் காலத்திலே சோழநாட்டைக் கரிகால் பெருவளத்தான் என்ற புகழ் பெற்ற மன்னவன் ஆண்டுவந்தான். அறுபத்து நான்கு கலைகளையும் தெள்ளத் தெளியக் கற்று அறிவில் சிறந்து விளங்கினான். ஒரு முறை சோழனது ஆஸ்தான வித்வான் ஒருவன் பாண்டியனைக் காண வந்தான். பேச்சோடு பேச்சாக, 'தென்னவரே! எமது சோழ மன்னர் அறுபத்து நான்கு கலைகளிலும் வல்லவர்; தங்களுக்குப் பரதம் வராது. ஆதலால் தாங்கள் சகல கலா வல்லவர் அல்லர்' என்று சொன்னான். சோழப் புலவர் கூறிய சொற்கள் பாண்டியன் உளத்தைப் புண்படுத்தின. "சிவபெருமானது திருநடனத்தை சிறியேனும் ஆடிப்பயிலவேண்டுமோ? சொக்கநாதர் திருவுள்ளம் இதுவே போலும்" என எண்ணலானான். ஆடலில் ஆசைகொண்ட பாண்டியன் பரதநாட்டிய சாஸ்திரத்திலே மிகவும் தேர்ச்சியும் அனுபவமும் கொண்ட தக்க ஆசிரியர்களை வரவழைத்

தான். அவர்கள் மனம் மகிழும்படிக்கு ஆடை, ஆபரணம், பொன்; மணி முதலியவற்றைக் கொடுத்தான். சாஸ்திரத்தை வரன்முறையாக நிரம்ப அக்கறையுடன் கற்றுக்கொண்டான். நவரசங்களையும், மெய்ப்பாடுகள் பத்தினையும், அபிநய வகைகள் இருபத்துநான்கையும், எல்லா வகையான ராகங்களையும், ஏழு வகைத் தாளங்களையும் நன்ருகக் கற்றுத் தேர்ந்து விட்டான் ராஜசேகர பாண்டியன்.

பரதநாட்டியப் பயிற்சி செய்யும் போது தனது உடலிலே வலியும் சோர்வும் ஏற்படுவதை உணர்ந்தான். உடனே அவனது சிந்தை வெள்ளியம்பலத்துள்ளே திருக்கூத்தாடும் நடராஜப் பெருமான் பால் சென்றது. "ஆஹா! இப்படிப்பட்ட வலியும் அயர்ச்சியும் நடராஜப் பெருமானுக்கும் ஏற்படுமே! பெருமானின் திருவடிகளுள் ஒன்று தானே பல நாட்களாக ஆடியபடி நின்று கொண்டிருக்கிறது. நான் இதைப் பொறுத்துக்கொண்டிருப்பதா? அவருடைய திருவடி வருந்துமே" என்று பல வகையாக எண்ணிக் கவலைப்பட்டான்.

துணிந்த மனம் உடையவனுகி எழுந்து சென்று திருக்கோயிலினை அடைந்தான். அன்று சிவராத்திரிப் புனித நன்னுள். சோமசுந்தரப் பெருமானுக்கு சிவாகம விதிப்படி நான்கு ஜாமங்களிலும் பூஜை செய்தான். பின்னர் வெள்ளியம்பலத்திலே நடராஜப் பெருமானது திரு நடனத்தைத் தரிசனம் செய்து மகிழ்ந்து வணங்கினுன். ஆனந்த பாஷ்பம் பெருகக் கைகளைச் சிரமேல் கூப்பி, "நடராஜப் பெருமானே! பதித்த திருவடியை மேலே தூக்கியருள வேண்டும்; எடுத்த திருவடியை நிலத்தின் மேல் பதித்தருளவேண்டும். எளியேன் காணும்படிக்குக் கால் மாறி நடனம் புரியவேண்டும். அடியேனது வருத்தத்தைப் போக்கி அருளவேண்டும், இல்லையேல் இறப்பேன்" என்று விண்ணப்பித்தான். பிறகு சிவசந்நிதானத்திலே தனது வாளை நாட்டி அதன் மேலே விழ ஆயத்தமானுன். பாண்டியனது சங்கல்பத்தை உணர்ந்த நடராஜப்பெருமான், அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையாம் கூத்தப்பன், மனம் கனிந்தார். உடனே தமது இடது பாதத்தை நிலத்திலே பதித்து வலது பாதத்தை மேலே எடுத்துக் கால் மாற்றி நடனம் செய்து அருளினுர். பாண்டியனது கவலை, வருத்தம் ஆனவற்றையும், ஆணவம், கன்மம், மாயை ஆன மும்மலங்களையும் போக்கி அவனைப் பேரின்ப வாரிதியில் முழுக்காட்டினுர். தனது உளம், சொல், உடம்பு மூன்றையும் சிவனுருக்கே உரிமைப் படுத்தி பக்தி மயமாகித் தோத்திரம் செய்யலானுன் ராஜசேகரன்.

"வெள்ளிமன்றப்பெருமானே! கால் மாறி ஆடிய இந்த அற்புதத் திருநடனத்தை எல்லாரும் கண்டு தரிசனம் செய்யும்படி, எம்பெருமான் இப்படியே நின்றிருந்து அருள்புரியவேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். பாண்டியன் வேண்டியபடியே நடராஜப்பெருமான் வெள்ளிமன்றிலே கால்மாறி ஆடிய திவ்யக்கோலம் காட்டி அருள் வாராநுர்.

★

# 25. பழி அஞ்சியது

காலம் சென்றது. ராஜசேகரன் தனது அருமருந்தன்ன குமாரன் குலோத்துங்கனுக்குப் பட்டங் கட்டிவிட்டுச் சோமசுந்தரக் கடவுளின் திருவடி நிழல் சேர்ந்தான். குலோத்துங்க பாண்டியன் ஒவ்வொருநாளும் சோமசுந்தரப் பெருமானை பக்தியுடன் வழிபடும் நியமத்தை மேற்கொண்டான்.

பாண்டியன் குலோத்துங்கன் அரசு புரிந்து வருகின்ற நாளிலே திருப்புத்தூரிலிருந்து ஒரு பிராமணன் தனது மனைவியுடனும் கைக் குழந்தையுடனும் வந்து கொண்டிருந்தான். தனது மாமன் வீடு மதுரையிலே இருந்ததால் காட்டு வழியே வந்து கொண்டிருந்தான். வருகின்ற வழியிலே அவனது மனைவிக்குத் தாகம் கண்டது. ஆதலால் தனது மனைவியைக் குழந்தையுடன் பெரிய ஆலமரத்தின் நிழலிலே அமர்த்திவிட்டுத் தண்ணீரைத் தேடிச் சென்றான். இதற்கிடையே அந்த அம்மாள் குழந்தையைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு அயர்ச்சியினால் படுத்துக்கொண்டாள். ஆலமரத்தின் அடர்ந்த இலைகளுக்கு நடுவே கூர்மையான அம்பு ஒன்று சிக்கிக் கிடந்தது. என்றோ ஒருநாள் யாரோ ஒரு வேடனால் எய்யப்பட்ட அம்பு அது. காற்று வீசியது. அதனால் மரத்தின் கிளைகளும், இலைகளும் அசைந்தாடின. அசைவினால் அந்தப் பழைய அம்பு கீழே விழுந்தது. விழுந்த அம்பு மல்லார்ந்து படுத்திருந்த பார்ப்பனியின் வயிற்றிலே பாய்ந்து ஊடுருவியது. விதிப்பயன் காரணமாகப் பார்ப்பனி இறந்துபோனாள். அந்த நேரம் பார்த்து இயல்பாக வேட்டையாட வந்த வேடன் ஒருவன் வில்லும் கையுமாக மரத்தின் அப்புறத்திலே நின்றுகொண்டிருந்தான். பிராமணன் தண்ணீர் கொண்டு திரும்பிவிட்டான். பக்கத்தில் குழந்தை கிடக்க இரத்த வெள்ளத்திலே தனது மனைவி இறந்துகிடப்பதைக் கண்டான். அவள் வயிற்றிலே அம்பு பாய்ந்துள்ளதையும் பார்த்தான். கலங்கிய அறிவால் மனம் வதங்கினான்.

பின்னர் "இந்த ஸ்திரீ ஹத்தியைச் செய்தது யார்?" என்று ஆராய்பவனாகி ஆலமரத்தைச் சுற்றி வந்து பார்த்தான். பார்த்து வருகையில் வில்லுடன் வேடன் தென்பட்டான். அந்த வேடன்தான் அம்பெய்தித் தன் மனைவியைக் கொன்றுவிட்டிருக்கவேண்டும் என்று பார்ப்பனன் நினைத்தான். "ஏ, வேடனே! என் மனைவியைக் கொலை செய்தவன் நீயே; பாண்டிய மன்னன்மேல் ஆணை" என்று கூறி முழங்கி, வேடனைத் தன்னுடன் இழுத்துச் சென்றான். இறந்த தன் மனைவியைத் தோளிலே தூக்கிக் கொண்டான். குழந்தையை தன் இடுப்பிலே அணைத்துக்கொண்டான். அழுத கண்ணும் விம்மிய நெஞ்சமும் கொண்டு வேகமாக நடந்து மதுரையைச் சேர்ந்தான்.

குலோத்துங்க பாண்டியனது அரண்மனையை அடைந்து வாசலில் தனது இறந்த மனைவியைக் கிடத்தி முறையிட்டு அழுது

நின்றான். "இந்தப் பொல்லாத வேடன் என் மனைவியைக் கொலை செய்து விட்டானே" என்று ஏங்கிக் கதறினான். வாயில் காப்பவர்கள் உடனே விரைந்து சென்று மன்னனிடம் சொல்லினர். நிலைகுலைந்த மன்னன் மிகவும் பயந்து தன்னையே வெறுத்துக்கொண்டு வெளி வந்தான்.

அந்தணனது அவல நிலையைக்கண்ட அரசனின் மனம் பெரிதும் இரங்கியது. வந்து குறை கேட்டான் வேந்தன். "புகழ்ப் பாண்டிய! மனைவிக்காகத் தண்ணீர் கொண்டு வருவதற்காகச் சென்றபோது இவ்வேடன் அவளைக் கொன்றுவிட்டான்" என்று குற்றம் சாட்டினான் பார்ப்பனன். வேடன் வேந்தனை நோக்கினான். "அரசர் பெருமானே! இளைப்பாறுவதற்காகத்தான் நான் மரத்தடியில் நின்று கொண்டிருந்தேன்; நான் கொலை செய்தவன் அல்ல; கொலை செய்தவனையும் பார்க்கவில்லை; நான் ஒரு பாவமும் அறியாதவன்" என்று பணிந்து கெஞ்சினான். உடனே மந்திரிகள். "அப்படியானால் அம் மாதின் உடலிலே அம்பு பாய்ந்தது எப்படி?" என்று கேட்டனர். அதற்கு வேடன் "ஐயன்மீர்! அதைப்பற்றி உண்மையாகவே எனக் கொன்றும் தெரியாது" என்றான். மந்திரிமார்களின் யோசனையின் படி மன்னன் வேடனைப் பல் வகையான தண்டனைக்கு உட்படுத்தினான். வேடன் உறுதியான உள்ளத்தோடு ஒரே மாதிரியான பதிலையே சொல்லிக்கொண்டிருந்தான். அரசனும் பலபடியாக ஆராய்ந்து பார்த்தான். ஏதும் புலப்படவில்லை. "இந்த விஷயம் மனித ஆராய்ச்சிக்கு உட்பட்டதன்று; தெய்வம்தான் தெளிவாக்க வேண்டும்" என்று கருதினான். ஆதலால் பார்ப்பனனை அவனது மனைவிக்கு ஈமக்கடன் செய்யுமாறு அனுப்பிவிட்டு வேடனைச் சிறையிவிட்டான்.

ஈமக்கடன் முடித்துத் திரும்பிய பார்ப்பனனை அரண்மனை வாசலிலே இருக்கச்செய்துவிட்டுக் குலசேகர பாண்டியன் திருக்கோவில் சென்றான். சோமசுந்தரப் பெருமான் முன்பு நின்று, "பெருமானே! தெளியாத மனத்தோடு வந்துள்ளேன். பார்ப்பனியைக் கொன்றது வேடனா? அன்றி வேறு யாரேனுமா? காரணம் தெரியவில்லை. சாஸ்திரங்கள் இது விஷயத்தில் துணை செய்யவில்லை. எம் பெருமானே அருள்புரிந்து எளியேனது குறை தீரத் தெளிவாக்கி அருளவேண்டும்" என்று வணங்கி விண்ணப்பித்துக் கொண்டான். அது சமயம் ஆகாசத்திலிருந்து, "பாண்டிய! கேள். இத்திருநகரின் வெளியே செட்டித் தெருவிலுள்ள ஒரு வீட்டிலே இன்றிரவு விவாகம் நடக்கும். பிராமணனையும் அழைத்துக் கொண்டு அங்கே செல். அவ்விடத்திலே உனது மனம் தெளிவடையுமாறு செய்வோம்" என்று ஆகாசவாணி எழுந்தது. அமைதி அடைந்த உள்ளத்தோடு பாண்டியன் திரும்பினான்.

மாலை நேரம் சென்றதும் மாறுவேஷம் கொண்ட மன்னன் தன்னோடு பார்ப்பனனையும் அழைத்துக் கொண்டு விவாக வீட்டுக்குச் சென்று ஒரு புறமாக அமர்ந்திருந்தான். மன்னவனுக்கும் மறைய

வனுக்கும் பக்கத்திலே இரண்டு பேர்கள் பேசிக்கொண்டிருந்தனர். அவர்கள் இருவரும் யமதூதர்கள். கடவுள் அருளால் அவர்கள் பேசியது இந்த இரண்டு பேருக்கு மட்டுமே கேட்டது. "இப்பொழுது இங்கேயே மணமகன் உயிரை வாங்கி வரும்படி நமது யமதர்ம ராஜா ஆணையிட்டிருக்கிருரே. அவரது ஆணையை எப்படி நிறைவேற்றுவது? மணமகன் ஆரோக்கியமாக இருக்கிருனே, என்ன செய்வது?" என்று ஒரு தூதன் சொன்ஞன். அதற்கு மற்ருெரு தூதன், "இதில் என்ன கஷ்டம் இருக்கிறது? இன்று பகலிலே, ஆலமர இலைகளில் சிக்கியிருந்த பழைய அம்பை காற்றினல் விழச்செய்து கீழே கிடந்த பார்ப்பனியைக் கொன்று அவள் உயிரை வாங்கவில்லையா? அதைப்போலவே இப்போதும் செய்துவிடுவோம். இவ்வீட்டிற்கு வெளியே ஒரு மாடு நின்று கொண்டிருக்கிறது. கெட்டிமேளம் கொட்டி ஆரவாரம் செய்யும் நேரத்திலே அந்த மாட்டை மருண்டு ஓடச் செய்வோம். மாட்டின் மூலமாகவே மணமகனின் உயிரை வாங்குவோம்" என்று யுக்தி சொன்ஞன். வேந்தன் வேதியனைப் பார்த்தான். விவரம் தெரிந்த வேதியனும் வேந்தனுடன் இருந்து மேலே விளைவுகள் தெரிய அமர்ந்திருந்தான். மண வீட்டிலே ஏகப்பட்ட ஆரவாரம். நல்ல நிமித்தம் நெருங்கியதும் மங்கையர் மங்கலம் முழக்கினர்; பல வாத்தியங்கள் முழங்கின. பேரொலி கேட்டுப் பசுமாடு வெருண்டது. தானும் அலறிக்கொண்டு கட்டிய கயிற்றை அறுத்துக்கொண்டது. உள்ளே ஓடிச்சென்று மணமகனைத் தன் கொம்புகளால் முட்டிக் கொன்றுவிட்டது. மணமகன் பிணமகஞுன்; மணப்பறையே பிணப்பறை ஆயிற்று. மங்கையர் வாழ்த்து அழுகையாயிற்று. என்ன செய்யலாம்? விதியே வென்றது!

இந்த நிகழ்ச்சியைக் கண்ட பார்ப்பனன் மிக மிக வருந்திஞன். குற்றமற்ற வேடனைத் துன்பத்துக்குள்ளாக்கியதை எண்ணி எண்ணி மனம் புழுங்கிஞன். பின்னர் மன்னனேடு அரண்மனைக்குத் திரும்பிஞன். அரண்மனை சேர்ந்த பாண்டியன் நடந்த எல்லாவற்றையும் தனது மந்திரிகளிடமும் மற்றவர்களிடமும் கூறிஞன்.

குலோத்துங்க பாண்டியன் பின்பு அந்தணனைப் பார்த்து, "நீ வேறொரு விவாகம் செய்து கொள்" என்று சொல்லி நிரம்பப் பொருள் கொடுத்து அனுப்பிஞன். சிறை கிடந்த வேடனையும் உடனடியாக விடுவித்து அவனிடம் மன்னிப்புக் கோரிஞன். அவனுக்கும் வேண்டியது வழங்கி செல்லச் செய்தான்.

பாண்டியன் பின்னர் திருக்கோவில் சென்று, சோமசுந்தரப் பெருமானை வணங்கி, "பெருமானே! எளியேன் பொருட்டு தேவரீர் பழியஞ்சு நாதராய் இருந்தீர்!" என்று, வியந்து போற்றி விசேஷ பூசைகளைச் செய்தான். ★

## 26. மாபாதகம் தீர்த்தது.

பாண்டியன் குலோத்துங்கன் ஆட்சி புரிந்து வந்த நாளிலே அவந்தி என்ற நகரத்திலே ஒரு மறைக்குலத்தான் வசித்து வந்தான்.

அவனுக்கு மனைவி யொருத்தி இருந்தாள். அவள் நிரம்ப அழகைப் பெற்றிருந்தாள். அவர்களுக்குக் காலாகாலத்திலே மகன் ஒருவன் பிறந்தான். அந்த மகன் இளமை கொழிக்க வளர்ந்து வந்தான். வயது ஏற ஏற பல கொடிய செய்கைகளையும் செய்து வந்தான். நல்ல காளைப் பருவம் வந்தது அவனுக்கு. அதன் காரணமாக காமம் மிகுந்தது. கருத்திழந்த பாவியும் ஆனான். காமவெறி கண்ணை மறைத்து அறிவைஅழித்தது. கட்டுக்குலையாமல் பேரழகியாயிருந்த தனது அன்னையாரையே தனது இச்சைக்குரிய பொருளாகக் கோரினான். குணங்கெட்டு இழிந்த அவனது அன்னையும் மகனது தகாத விருப்பத்திற்கு இணங்கி விட்டாள். பெண் குலத்திற்கே உரிய அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்ற நான்கு சிறந்த குணங்களையும் நீக்கி மிருகமாகி விட்டாள் தாயும்!

காமத்து இன்பம் சிறிதேயானாலும் துன்பம் பெரிதே வரும் தீவினை மகனை மேலும் வாட்டியது. காமப் பாம்பு அறிவுத்திங்களை விழுங்கியது. அந்தக்கடைமகன் அன்னையுடன் கூடிஒழுகுதலை அவன் தந்தை அறிந்திருந்தாலும் விஷயம் வெளிப்படாதபடி சும்மாயிருந்தான். ஒரு நாள் நேரடியாகப் பார்த்த போதும்கூட ஏதும் சொல்லாமல் சென்று விட்டான். மகனுக்குத் தந்தையின் மேல் கோபம் வந்தது. தந்தை இருப்பதே பெரிய இடைஞ்சலாகப் பட்டது. ஆதலால், ''தந்தையைக் கொன்று விடுகிறேன்'' என்று கிளம்பினான். அதைக்கண்ட மனைவித் தாய், ''அன்னையிடம் காமக் களியாட்டம் புரியும் பாவியான நீ அப்பனைக் கொன்றாயானால் பெரும் பாவி ஆவாய்'' என்றாள். பாவி மகன் செவி சாய்க்கவில்லை. ஒரு மண் வெட்டியை எடுத்துக்கொண்டு சென்று தனது தந்தையைத் துண்டு துண்டாக வெட்டிக் கொன்றுவிட்டன். பின்னர் அந்த மகாபாதக மகன் அன்று இரவே தந்தையின் உடலைக் கொளுத்திவிட்டுத் தனது தாய் மனைவியுடன் சுமக்கக்கூடிய அளவு பொருள்களையும் எடுத்துக் கொண்டு காட்டுவழி நடந்து நெடும் தொலைவு சென்று விட்டான்.

செல்கின்ற வழியிலே வழிப்பறி வேடர் சிலர் இருவரையும் வளைத்துப் பிடித்துக் கொண்டனர். அவன் கையிலிருந்த அத்தனை பொருள்களையும் பிடுங்கிக் கொண்டனர். அவனது தாயையும் இழுத்துச் சென்று விட்டனர். எல்லாப் பொருள்களையும் ஒருங்கே ஒரே சமயத்தில் இழந்த இழிந்த மகன் தனியன் ஆனான்.

மண்வெட்டியால் வெட்டப்பட்டு இறந்துபோன தந்தை, இப்போது பிராமணக் கொலையும் தந்தைக் கொலையும் ஒன்று சேர, ஒரு மகாபாதக உருவமாய் வந்து தன் மகனைப் பிடித்துக் கொண்டான். கொலைப் பழி மகனைப் படாதபாடு படுத்தி வைத்தது. அவனை முன்னும் பின்னும் சூழ்ந்து அல்லும் பகலும் அனவரதமும் தொந்தரவு செய்து கொண்டே இருந்தது. ''ஐயோ! நான் என்ன செய்வேன்?'' என்று புலம்பிக் கடும் துன்பம் அடைந்து பல நாட்கள்

நாடெங்கும் பயந்து வருந்தித் திரிந்தான். திரிந்து கொண்டிருந்த மகாபாதக மகன் மதுரையம்பதிக்கு வந்து சேர்ந்தான்.

அச்சமயம் மீனாட்சியம்மையும் சோமசுந்தரக் கடவுளும் முறையாக வேடுவச்சியாகவும் வேடுவனாகவும் வேஷம் தாங்கி கோபுர வாசல் பக்கத்திலேஅமர்ந்தருளிச்சொக்கட்டான் விளையாடிக்கொண்டிருந்தனர். அப்போது அங்குவந்துகொண்டிருந்த மாபாதக மகனைக் கண்டு, கடவுள், "எவரும் மனத்தாலும் நினைத்துப் பார்க்கமுடியாத பெரிய படுபாவி வருவதைப் பார்; காமவெறியால் குணம் கெட்டவன்; குலம் கெடுத்தவன்; பெரும்பழி பூண்டவன்; கொலைகாரன் இத்தகைய இழியவனுக்கு நரகமே கிடைக்கும்" என்றார். நெருங்கி வந்த மாபாதகனைப் பார்த்து, "நீ ஏன் துன்பத்தால் அலைந்து வாடுகிறாய்?" என்று வினவினார்.

முன்பிறப்பில் தான் செய்த பாவ முதிர்வாலே, தான் காமவெறியடைந்து தன் தாயையே கூடியதையும், தந்தையைக் கொன்றதையும், தன்னை பிரம்மஹத்தி பிடித்து வருத்துவதையும் எடுத்து விளக்கி அழுதுகொண்டு நின்றான் மாபாதகன். அவனது பேரவல நிலையைக் கண்ட பரம்பொருள் உள்ளத்திலே கருணைகொண்டார். "உனது கொடிய பாவம் இந்த நகரத்தில்தான் விலகும்; வேறெங்கும் விலகாது. ஆதலால், நீ இவ்வூரிலேயே பிச்சை எடுத்து ஒரு வேளை உண்பாய். சிவனடியார்களுக்குத் தொண்டு புரிவாய். சூரியோதயத்துக்கு முன்பே எழுந்து அறுகம்புல்லை பசுக்களுக்குக் கொடுக்க வேண்டும். ஒவ்வொருநாளும் மூன்று வேளைகளிலும் திருக்கோவிலில் உள்ள புறத்தொட்டித் தீர்த்தத்திலே ஸ்நானம் செய்து விட்டு சிவபெருமானை நூற்றெட்டுத் தடவை அங்கப் பிரதட்சிணம் செய்யக் கடவாய். இத்தகைய தவநெறியைக் கைக்கொண்டால் உனது பிரம்மஹத்தி தோஷம் நீங்க வழியுண்டு" என்று பரிகார மொழி பகர்ந்தருளினார்.

சிவபெருமான் மொழிந்தவற்றைக் கேட்ட வேடுவச்சியான மீனாட்சியம்மையார் மிகவும் வியப்படைந்தார். "பெருமானே! என்ன விந்தை! கடுநரகத்திலே கோடி வருஷங்கள் கிடந்து வருந்தவேண்டியவனுக்கு உய்யும் வழிகாட்டி அருளியது என்னவோ?" என்றார். "அத்தகைய கொடும்பாவியர்களையும் காப்பதுதானே எமது தருமம்" என்று திருவாய் மலர்ந்தருளினார் வேடச் சிவனார். "எல்லாம்வல்ல எம்பெருமானே! தாங்கள் திருவுளம் வைத்தால் கொடும் பாவிகளும் உய்ந்துவிடுவார்களே: தேவரீர் திருவிளையாடல்களை அறிய வல்லவர் யார்?" என்று கூறி மகிழ்ந்தார் மீனாட்சியம்மையார். இருவரும் பின்னர் மறைந்தருளினர்.

அதைக்கண்ட மாபாதகனும் பேராச்சரியம் அடைந்தான். மதுரைத் தெய்வம் அருளிய வண்ணமே செய்து வந்தான் பழிகாரப் பார்ப்பான். நல் விரதங்களையும், தவநெறியையும் கைக்கொண்டு மூன்று மாதங்களிலேயே தனது மாபாதகம் நீங்கப்பெற்றான்,

திவ்வியமான பிராமண உருவம் அடைந்தான். வாசாமகோசரனாகிய சோமசுந்தரப்பெருமான் மீது பல வடமொழித் துதிப்பாடல்களைப் பக்தியுடன் பாடி அவரது திருவடிகளில் சூட்டினான். பின்னர், சச்சிதானந்த ஸ்வரூபமாகிய சிவபெருமானின் சேவடிகளிலே கலந்து கொண்டான்.

## 27. அங்கம் வெட்டியது.

குலோத்துங்க பாண்டியனது ஆட்சிக் காலத்திலே வேற்று நாட்டைச் சேர்ந்த முதியவன் ஒருவன் மதுரையில் வந்து குடியேறினான். அவன் வாள்வித்தையைச் சொல்லிக்கொடுத்து வாழ்ந்து வந்தான். சோமசுந்தரப்பெருமானை தினந்தோறும் வழிபடும் குணவானாக இருந்தான். வாள் வித்தையிலே சிறந்து விளங்கிய அப்பெரியவனைப் பல இளைஞர்கள் சார்ந்து அவ்வித்தையைக் கற்றுக்கொண்டனர். அத்தகைய சிஷ்யர்களுள் சித்தன் என்பவனும் ஒருவன். அக்கறையோடு வாள் வித்தை கற்று அதிலேமிகுந்த வல்லமை பெற்றுவிட்டான். பலர் அவனை மதித்ததனால் மிகவும் கர்வம்கொண்டான். தவிர, தன்னுடைய ஆசிரியனுக்கு எதிரிடையாக தானும் ஒரு வாட் பயிற்சிக் கூடத்தை நிறுவினான். சித்தனிடமும் பலர் வந்து பயிற்சி பெற்றனர். ஆசிரியனைக் காட்டிலும் அவனுக்கு வரும்படி அதிகம் கிடைத்தது.

செல்வம் பெருகியதால் சித்தனது கர்வமும் பெருகியது. தானிருக்கும்போது மற்றொரு ஆசிரியர் எதற்கு என்று கருதினான். எல்லா ஊதியமும் தனக்கே கிடைத்தால் என்ன என்றும் எண்ணினான். எல்லாவற்றுக்கும் மேலாகத் தனது ஆசிரியனையே ஊரைவிட்டு வெளியேற்றிவிடக் கருத்து வைத்தான். நாள்தோறும் தனது ஆசிரியனுக்கு இன்னல் விளைவிக்க முயன்றான். அம்மட்டோடு அவன் நிற்கவில்லை. தனது ஆசிரியன் இல்லாத நேரம் பார்த்து அவர் வீடு சென்று அவரது துணைவியாரைப் பார்த்து, "இடம் உண்டா? இடம் உண்டா?" என்று துணிந்து கேட்டுத் துன்புறுத்தினான். ஆசிரியன் மனைவி சும்மா இருந்தாள். சித்தன் ஒரு நாள் அவள் கையைப்பிடித்து இழுத்தான். வெளியே தள்ளிக் கதவைத் தாழிட்டுக் கொண்டு தனது கற்பைக் காத்துக்கொண்டாள் அவ்வம்மை. சித்தனிடம் காமத்தீ கொழுந்துவிட்டெரியத் தொடங்கியது. ஆசிரியனின் மனைவி எல்லாவற்றையும் பொறுமையுடன் சகித்துக்கொண்டு சோமசுந்தரக் கடவுளை நினைத்தவாறு வருந்திக் கொண்டிருந்தாள்.

தனது பக்தையின் பொறுமையையும் அவள் மௌனமாக அனைத்தையும் ஏற்று வருந்துவதையும், தன்னையே நம்பியிருப்பதையும் நன்குணர்ந்தார் சோமசுந்தரப்பெருமான். சித்தனைத் தண்டிக்கத் திருவுளங்கொண்டார். வாளாசிரியனைப் போல வேடம் புனைந்துகொண்டார். சித்தனிடம் போய், "சித்தா! இளைஞனாகிய

நீயும் முதியவனாகிய நானும் வாட்போர் செய்யலாம். இருவரும் திறமையை நன்கு காட்டுவோம். நாளைக்கு நீ ஊருக்கு வெளியே வா; நானும் வருகிறேன்" என்று கூறினார். "நல்லது" என்று சொல்லிச் சம்மதம் தெரிவித்தான் சித்தன்.

மறுநாள் செய்நன்றி கொன்ற சித்தன் போர்க்கோலம் பூண்டான். வாளாயுதத்தையும் கேடயத்தையும் கைகளில் ஏந்தி வாளாசிரியர் சொன்ன களத்தை அடைந்தான். வாளாசிரியர் கோலம் தரித்த சிவபெருமானும் போருக்கு ஆயத்தமாகி களத்திலே நின்று கொண்டிருந்தார், சித்தனின் வருகையை எதிர்பார்த்து.

ஆசிரியப்பிரானும் சித்தனும் போர் தொடங்கினர். தாக்குதல், எதிர்த்தாக்குதல், முறியடித்தல், வெட்டுதல், மறைதல், பாய்தல் என்று மாறிமாறிச் சுற்றிச்சுற்றிவந்துபோராடினர். இந்தவெம்போர் இருபது நாழிகை நேரம் நடைபெற்றது. போர் உச்சநிலை அடைந்தது. வாளாசிரியப் பெருமான் யாவரும் கேட்குமாறு, "சித்தா! நீ உன் குரு பத்தினியை விரும்பினாய்; அவளை நோக்கித் தகாத வார்த்தைகள் பேசினாய்; அவளைத் தொட்டு இழுத்தாய்; காமத்தோடு பார்த்தாய்; ஆதலால் உன்னைக் காத்துக்கொள்வாய். உனது நெஞ்சைப் பிளப்பேன்; நாக்கைத் துண்டிப்பேன்; கையை வெட்டுவேன்; கண்களைப் பிடுங்குவேன்" என்று கூறினார். கூறியபடியே சித்தனது அங்கங்களை வெட்டி வெட்டி எறிந்தார். இறுதியிலே அவனது தலையையும் வெட்டி வீழ்த்திவிட்டு மறைந்தருளினார்.

தமது வாளாசிரியருடன் வந்திருந்த மாணவர் பலரும் ஆசான் இல்லாததைக் கண்டு அவர் வீடு சென்று தேடினர். ஆசிரியர் கோவிலுக்குச் சென்றிருப்பது தெரிந்தது. உடனடியாக ஆசிரியனும் திரும்பி வந்துவிட்டான். தமது ஆசிரியரைக் கண்ட மாணவர் பலவாறாக வியந்து போற்றி வினவினார்கள். ஆசிரியனுக்கு உண்மையாக எதுவுமே விளங்கவில்லை. ஆதலால் மிகுந்த வியப்புடன், "நான் சித்தனோடு போராடவுமில்லை; அவனது அங்கங்களை வெட்டவும் இல்லை. என்னைப்போல் வந்தவர் வேறு யாரோ?" என்றான். "இது மதுரை சோமசுந்தரப்பெருமானது திருவிளையாடலாகத்தான் இருக்கவேண்டும்" என விளக்கினார். அவனது மனைவியும் நடந்ததை யெல்லாம் ஒளிவின்றி மொழிந்தாள். குருபத்தினி சொன்னவையும் சித்தனோடு போரிட்டவர் சொன்னதிலும் ஒற்றுமை கண்டனர் கேட்டவர்கள் எல்லாரும். அப்போது நடந்த போராட்டம் சொக்கநாதப் பெருமான் திருவிளையாடலே என்று நன்றாகத் தெரிந்துகொண்டனர். அனைவருமாகத் திருக்கோவிலை அடைந்து சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்து மகிழ்ந்தனர்.

இது தெரிந்து மகிழ்ச்சியுற்ற பாண்டியன் குலோத்துங்கன் திருக்கோவில் சென்று சிவபெருமானை வழிபட்டு "அடியாருக்கு எளியவரான சொக்கநாதர் 'பரதேசி காவலர்' என்பதில் ஐயமில்லை" என்று கூறி வணங்கினான்.

பின்னர் வாளாசிரியனையும் அவனது மனைவி மாணிக்க மாலையையும் யானைமேல் ஏற்றி வைத்து ஊர்வலம் செய்வித்துச் சிறப்பித்தான்.

பல நாட்கள் சென்றன. குலோத்துங்க பாண்டியன் தனது தவக்குமாரன் அணந்தகுண பாண்டியனுக்கு உரிய பிராயத்தில் முடி சூட்டி வைத்துவிட்டுச் சிவபெருமான் திருவடி சேர்ந்தான். ★

## 28. நாகம் எய்தது.

பாண்டியன் அணந்தகுணன் சிறந்த பண்பாளன். சிவசின்னங்களின் மெய்ப்பொருள் தெரிந்து எல்லையற்ற பக்திகொண்டு சிவநேசச் செல்வனாக விளங்கினான். நாடெங்கும் சைவமணம் நன்கு பரவியது. பாண்டித் திருநாடே சிவவேடம் கொண்டு சிறந்து விளங்கியது. பாண்டிப் பெருநாடு சிவத்திருநாடாகப் பொலிவதைக் கண்ட சமண குரவர் எட்டாயிரம் பேர்களுக்கும் பொறாமை உண்டாயிற்று. பொறாமையின் காரணமாக சிவபக்த சிகாமணியாம் அணந்தகுண பாண்டியனைக் கொல்ல வழி தேடினர். ஒரு காத அளவிற்கு யாக சாலை அமைத்தனர். அதிலே நெருப்பு வளர்க்கும் குண்டமும் அமைத்தனர். மிகவும் கோரமாக நாடு நடுங்கும் முறையில் யாகத்தைச் செய்தனர். யாகத்தின் விளைவாகக் குண்டத்திலிருந்து அரக்கன் ஒருவன் திடீரெனத் தோன்றினான். தலை படம் காட்டியது: வாய் இருள் காட்டியது; வளைந்த விஷப் பற்கள் வாய்க்கு வெளியே தெரிந்தன. கண்கள் தீ கக்கின. அவ் அவுணன் வெளிப்பட்டது ஒரு பெரிய மலையே பெயர்ந்து வந்ததுபோல இருந்தது. சினம் பொங்க சமணர்களைப் பார்த்து, "எனக்குப் பசியும் தாகமும் அதிகமாக இருக்கிறது. உடனே சொல்லுங்கள், நான் என்ன செய்ய வேண்டும்?" என்று வினவி இடிமுழக்கம் செய்தான். சமணர்களும், "நீ வேகமாகச் சென்று பாண்டியனையும் அவனது ஊரையும் அழித்து விட்டு வா." என்று ஏவிவிட்டனர்.

பசியாலும் கோபத்தாலும் தூண்டப்பெற்ற அரக்கன் பெரும் பாம்பின் உருவம் எடுத்துக்கொண்டு மதுரை மாநகரத்தை நோக்கிப் புறப்பட்டான். பாம்பரக்கன் செல்லும் வழியெல்லாம் பாழ் ஆயிற்று. பசுமை கருகியது. நீர் வற்றியது. அதிவேகமாக வந்த பாம்பன் மதுரைக்கு அருகே மேற்குத் திசையில் வந்துவிட்டான். இதனை அறிந்த மக்கள் ஓடிச்சென்று பாண்டியனை அடிபணிந்து நாகத்தின் வருகையைப் பற்றி முறையிட்டனர். உடனே பாண்டியன். முன்பு யானையைக் கொன்று மதுரையைக் காத்த பெருவள்ளலாகிய சுந்தரேசப்பெருமானை நினைத்தான். இம்முறையும் அவரே காக்கவல்லர் என்று கருதி கடவுள் முன்பு சென்று, "பெருமானே! சமணர்கள் ஏவிய பெரிய நாகப்பாம்பொன்று ஊரை அழிக்க வருகிறது. எளியேனுக்குக் கருணை காட்டியருள்க" என மனமுருகி வேண்டினான்.

சிவபெருமானிடம் விடைபெற்றுச் சென்றான், பாண்டியன் பின்பு பெருமானது திருவடிகளையே சிந்தித்த வண்ணம் வில்லையும் அம்பையும் எடுத்துக்கொண்டு ஊரின் மேற்குவாசலை அடைந்தான். பாம்பினைக் கண்டான், அனந்த குணன். பெரிய ஆரவாரம் செய்தான். கையில் வில்லை எடுத்து நாண் பூட்டினான். பல வகையான அம்புகளையும். நெருப்புக் கணையையும் விடுத்தான். பாம்பு அத்தனை அம்புகளையும் கடித்து உமிழ்ந்து நாசம் செய்தது. பாண்டியனுக்குப் பொறுக்கவில்லை. சோமசுந்தரப் பெருமானின் திருவடிகளை உளமாரச் சிந்தனை செய்து அர்த்த சந்திரபாணம் ஒன்றைப் பிரயோகம் செய்தான். பாணம் பெரும்பாம்பின் உடலைச் சின்ன பின்னப்படுத்தியது. பாம்பரக்கன் பெரிய ஓசை செய்துகொண்டு அலறி விழுந்தான். மரண வேதனையில் கொடிய விஷத்தைக் கக்கினான்.

கொடிய கருநாக விஷம் ஊர் முழுதும் பரவியது. நகர மாந்தர் விஷத்தின் கடுமையால் மயங்கி வாடினர். நச்சு வாயு நகரை நரகம் ஆக்கிக்கொண்டிருந்தது. இது கண்ட பாண்டியன் அஞ்சினான், வருந்தினான். நேரே திருக்கோயில் சென்றான். அண்ணலைப் பார்த்து, "ஆதி அந்தமாய் நிறைந்த சோதியே! முன்பு ஒரு முறை வேண்ட நஞ்சினை அமுதாய் உண்டாய்! யானையை மாய்த்து மதுரையைக் காத்த புண்ணியரே! மதுரை மூதூர் விஷத்தால் வருந்துகிறது; விஷத்தைப் போக்கி மதுரையைக் காத்தருளும்." என்று வேண்டினான்.

அன்பருக்கு எளியவரான சோமசுந்தரப் பெருமான் கருணை கொண்டார். தமது ஜடாமகுடத்திலே உள்ள பிறைச்சந்திரனிடமிருந்து அமுதத்தைச் சிறிதே சிந்தினார் பெருமான் அருளிச்சிந்திய அமுதத்துளி நகர் முழுவதும் பரவியது; நஞ்சின் கடுமையையும், கொடுமையையும் போக்கி மதுரத்தை அளித்தது. மீண்டும் மதுரை மாநகரம் இனிமையும் தூய்மையும் பெற்றது. மக்கள் மகிழ்ந்தனர்; இன்பம் கொண்டாடினர்.

அனந்தகுண பாண்டியன் நாகாபரணரும், சந்திரசேகரருமான பெருமானுக்கு ஆளாகி ஆண்டு வரலானான். ★

## 29. மாயப் பசுவை வதைத்தது.

அனந்தகுண பாண்டியனால் அபிசார ஹோமப் பாம்பு துண்டிக்கப்பட்டதும் அதனைத் தொடர்ந்து வந்த சமணர்கள் எல்லாரும் மனம் கவன்று ஓடினர். ஓடிச்சென்ற சமணர்கள் எல்லாரும் ஒரு இடத்திலே மறுபடியும் கூடினர். ஆலோசிக்க ஆரம்பித்தனர். 'நாம் முன்பு அனுப்பிய யானையைப் போலவேதான் இந்த நாகமும் நாசமாயிற்று. இனி எதனை ஏவலாம்?" என்று சிந்தித்தனர். "நாம் இந்த முறை பசு மாட்டை ஏவி விடுவோம்; பசுவை யாரும் வதை செய்யமாட்டார்கள்; ஆதலால் பசுவை ஏவிவிடுவதே சிறந்த உபாயமாகும்; அப்படியே செய்வோம்" என்று முடிவு செய்தார்கள்,

பாவகாரிகளாகிய சமணர்கள் மறுபடியும் முன்போலவே ஒரு கொடிய ஹோமத்தைச் செய்தார்கள். அதன் விளைவாக ஹோம குண்டத்திலிருந்து பசுவின் உருவம் தாங்கிய அரக்கன் ஒருவன் தோன்றினன். அரக்கப் பசுவை மதுரையின் மீது ஏவி விட்டார்கள் சமண குரவர்கள்.

ஏவப்பட்ட பசு காற்றினைக் காட்டிலும் அதி வேகமாக மதுரையை நோக்கி வந்துகொண்டிருந்தது. வரும் வழியெல்லாம் நாசம் செய்தது. பல உயிர்களைக் கொன்று குவித்தது. வெறியுடனும் வெற்றியுடனும் மதுரை நகருக்கருகே வந்தது. பாண்டியனும் மதுரை நகரச் சான்றோர்களும் திருக்கோயிலை அடைந்தார்கள். "சோமசுந்தரேசா! அறுதாட்சகா! ஆபத்பாந்தவா! இது முறையோ? இது தகுமோ? இது அழகோ?' என்று கதறி முறை செய்தார்கள். கடவுள் பக்தர்களின் உள்ளக் கிடக்கையை உணர்ந்தார். உடனே திருவருள் பெருகத் தமது ரிஷப நந்தியை அழைத்தார். "ஏ, ரிஷபமே! நீ சென்று சமணர்கள் ஏவிய கோரப் பசுவைக் கொன்று வருவாயாக" என்று ஆணையிட்டருளினார்.

ரிஷப நந்தியும் யமனே பயப்படும் வண்ணம் கோபம் கொண்டு எழுந்தது. அதன் கண்கள் தழல் தெறித்தன. காலடிகளிலே புழுதி கிளம்பியது. பேராரவாரம் செய்துகொண்டு மாயப் பசுவைத் தாக்க விரைந்து நடந்தது. பசுவைக் கண்டதும் உக்கிரமாக அதனை முட்டி வெருட்டியது. எல்லாத் திசைகளிலும் பசுவை விரட்டி அலைக் கழித்தது. களைத்துப்போன அப்பசுவைத் தனது கொம்புகளால் வயிற்றிலே குத்தியது. கொம்புகளிலே ஏந்தி வீசியது. ரிஷபம் பல படியாக வீரப்போர் புரிந்தது. பெருந்தாக்குதலுக்கு உட்பட்ட பசு பலமிழந்து விழுந்து தன் உயிரை விட்டது. பசுவின் உடல் விழுந்த இடத்திலேயே ஒரு மலை உருவம் பெற்று விட்டது.

அதனைக் கண்ட மதுரை மக்கள் அனைவரும் பெருமகிழ்ச்சி அடைந்தனர். பாண்டியனின் தோள்கள் பூரித்தன. மதிகெட்ட சமணர்கள் அனைவரும் பெருத்த வெட்கமடைந்து புறங்காட்டி ஓடினர்.

உலகமக்கள் தெரிந்துகொள்ள நல்ல சான்றாக விளங்குமாறு ரிஷப நந்தி தனது ஸ்தூல சரீரத்தை அங்கேயே விட்டு விட்டது. அந்த உடல் ரிஷப மலையாகி விட்டது. பின்னர் தனது சூக்ஷ்ம சரீரத்துடன் சொக்கநாதரிடம் சென்றது. பெருமான் அருள் புரிந்து அதற்கு முன்னைய வடிவத்தை அருளினார்.

நகரமாந்தரும் அணங்கனை பாண்டியனும் மிகுந்த சந்தோஷம் அடைந்து சிவ சன்னிதானத்தில் இருந்த நந்திகேசுவரரை வணங்கிச் சென்றனர்.

சோமசுந்தரப் பெருமானும் நந்தியாரின் வீரத்தையும் வெற்றியையும் பற்றி மீனாட்சியம்மையாரிடம் இனிதே சொல்லி வீற்றிருந்தார்.

நாட்கள் சென்றன அனந்தகுண பாண்டியனுக்குக் குல பூஷணன் தோன்றினன். அரசாட்சிப் பொறுப்பைத் தன் மைந்தனிடத்திலே தந்துவிட்டு அனந்தகுணன் சிவபுரம் சென்றான். ☆

## 30. மெய் காட்டியது.

குலபூஷண பாண்டியன் தருமவழி நின்று சிறப்பான முறையில் அரசு செலுத்தி வந்தான். சுந்தரசாமந்தன் என்பவன் பாண்டியனது சேனாதிபதியாக இருந்தான். சாமந்தன் சிவனடியார்களையே சிவனாக பாவித்தவன். இம்மை மறுமை இரண்டுக்குமே மன்னனது உறு துணையாக நின்றவன்.

அக்காலத்தில் சேதிராயன் என்ற குறுநில மன்னன் பல வெற்றிகள் பெற்று விளங்கினான். அதனால் கர்வம் மிகுந்தவனாகிப் பாண்டிய மன்னனையே பகைத்தான். பாண்டிய நாட்டின் மீது படையெடுக்கவும் எண்ணினான். சேதிராயன் படையெடுப்புக் கருத்தை அறிந்தான் குலபூஷணன் தனது சேனாதிபதி சுந்தரசாமந்தனைக் கூப்பிட்டு, "நமது பொக்கிஷசாலையைத் திறந்துகொண்டு வேண்டிய அளவு பொருளை எடுத்துக்கொள். மேற்கொண்டு புதிய சேனைகளைச் சேர்த்துப் பதிவு செய்துகொள்" என்றான்.

சாமந்தன் பொக்கிஷசாலையை நோக்கிச்சென்றான். சிவபெருமான் திருவருள் முன்னுக்கு இழுத்தது; மன்னவன் கட்டளை பின்னுக்கு இருந்து தள்ளியது. பொக்கிஷத்தைத் திறந்தான்; வேண்டிய அளவு பொன்னையும் மணியையும் வாரி எடுத்துக்கொண்டான். அளவற்ற சந்தோஷத்தோடு திருக்கோவிலுக்குப் போனான். பொற்றாமரைக் குளத்தில் நீராடினான். சோமசுந்தரப் பெருமானைத் துதித்து வணங்கினான். "வேத முதல்வா! அடியார்கள் கருத்தறிந்து முடிப்பவனே! இப் பொருள்களெல்லாம் தேவரீருக்கும் தங்கள் அடியவருக்கும் அர்ப்பணம்" என்று வேண்டிக்கொண்டான். பிற்பாடு அந்தப் பொருள் முழுவதையுமே சிவ சம்பந்தமான திருப்பணிகளில் ஈடுபடுத்தினான். திருக்கோவிலுக்குப் பணி பல புரிந்தான். தான தருமங்கள் பல செய்தான். சிவக்கோலம் பூண்டவருக்கெல்லாம் அறுசுவையுடன் அமுது படைத்தான். இவ்வாறாக சுந்தரசாமந்தன் நாள்தோறும் செய்து வருவதை ஒற்றர்கள் மூலமாகக் கேள்விப்பட்டான் பாண்டியன்.

ஆனால், சேனாதிபதி சுந்தரனோ ராஜ சபையில் தோன்றும் போதெல்லாம் ராஜ காரியம் பார்ப்பவன் போலவே பாவனை செய்து வந்தான். பொய்யாக ஓலைகளைப் பல நாடுகளுக்கு அனுப்புவது போலவும் பாவனை செய்தான். ஆனால் எங்கிருந்தும் எவரும் வந்து சேனையில் புதிதாகச் சேர்ந்தவர்களாகத் தெரியவில்லை, ஆறுமாத காலம் ஆகிவிட்டது. ஆதலால் ஒருநாள் குலபூஷணபாண்டியன் சுந்தரசாமந்தனை அழைத்து, "நாளை சாயந்திரத்திற்குள்ளாக ஓலை

விடுத்து சேனை வீரர்கள் அனைவரையும் அழைத்துக்காட்டுவாய்" என்றார்.

சுந்தரனும் அதற்கு உடன்பட்டான். நேராகத் திருக்கோவிலை அடைந்து சோமசுந்தரக் கடவுளின் திருவடியில் விழுந்து வணங்கினான். "மதுரேசா! மன்னன் அளித்த மலையளவு பொருள்கள் அனைத்தையும் ஏற்றுக்கொண்டு அடியேனைப் பணி கொண்டு அருளினீர்; இனி நான் சேனைகளை எவ்வாறு திரட்டுவது?" என்று வினவி ஏங்கினான். "யாம் நாளைக்குச் சேனை வீரர்களோடு உரிய காலத்தில் வந்து தோன்றுவோம். நீயும் படைஞர் வரவை எதிர்பார்த்து பாண்டியனது சபையில் இருப்பாயாக" என்று ஆகாசவாணி சொல்லியது. சோமசுந்தரக்கடவுளின் திருவருளால், சுந்தரன் ஆனந்த சாகரத்தில் மூழ்கினான்.

"எப்போது விடியும்?" என்ற நினைவோடு இரவைப் போக்கினான் சாமந்தன்.

சோமசுந்தரப் பெருமான் தமது கணங்களை வில்வீரர்களாகச் செய்தார். தாமும் குதிரை வீரனைப்போலக் கோலம் பூண்டார். விடியலாயிற்று. சுந்தரசாமந்தன் திருக்கோயில் சேர்ந்து பொற்றாமரைக் குளத்தில் ஸ்நானம் செய்து, சொக்கேசரைப் பணிந்து போற்றித் தனது குறையிரந்து பின்னர் ராஜசபையை அடைந்தான்.

சங்கு முதலிட்ட பிரதம சிவகணங்களும், குண்டோதரன் முதலிட்ட பூதவீரர்களும் சேனைவீரர் வடிவம் கொண்டனர், வில், வாள், வேல் ஆகிய பல வகை ஆயுதங்களையும் ஏந்தி விரைந்து வந்தனர். நந்தி, மாகாளன், பிருங்கி, நிகும்பன், கும்போதரன் ஆகிய சிவகணத் தலைவர்கள் எல்லோரும் போர்க்கோலம் பூண்டு குதிரை வீரர்களாகச் சூழ்ந்து வந்தனர். சிவபெருமான் தனது ரிஷப வாகனத்தையே குதிரையாக மாற்றிக்கொண்டார். அதன் மேல் அமர்ந்துகொண்டு ஒற்றைச் சேவகராய்க் காட்சி தந்தருளினார். பேரிரைச்சல் செய்து கொண்டு சேனையானது மதுரையை நோக்கி வந்தது.

சேனையின் வரவு தெரிந்த சுந்தரசாமந்தன் குலபூஷண பாண்டியன் முன்னால் சென்று வணங்கி விண்ணப்பம் செய்தான். பாண்டியன் உளம் மகிழ்ந்தான். கடைவாசலுக்கு வந்து அங்கிருந்த மண்டபத்திலே வந்து அமர்ந்தான். சேனைப் பெருக்கத்தின் சிறப்பை நோக்கினான். சேதிராயனைக் கொல்லப்போகும் மகிழ்ச்சி ஏற்பட்டது பாண்டியனுக்கு. எதிரே அணிவகுத்து நின்ற சேனை வீரர்களையெல்லாம் இனம் தெரிந்து காட்டி அவர்கள் எந்த எந்த நாட்டிலிருந்து வந்தவர்கள் என்பதை முறையாக அறிமுகப்படுத்தினான் சாமந்தன் மன்னனுக்கு. கொங்கம் தொடங்கிச் சோழம் ஈறாகப் பதினாறு நாட்டவர் சேனையை அவரவர் மெய்யினைக் காட்டித் தெரிவித்தான் சுந்தரன். "எவ்வளவோ தூரத்திலிருந்தெல்லாம் வீரர்களை வரவழைத்திருக்கிறாயே? என்னே உனது சாமர்த்தியம் என்று என்னைக் கேட்டுவிடாதீர்கள், மன்னவரே! தங்கள் பொருள் அனைத்தையும்

கட்டுப்பாடின்றிச் செலவழித்ததால் இவர்கள் எல்லாரும் இங்கே வந்திருக்கிறார்கள்," என்றும் கூறினர்.

பாண்டியன் பிரமித்து விட்டான். அந்த சேனா சமுத்திரத்திலே சற்றுத் தொலைவிலே ஒற்றைச் சேவகர் குதிரைமீது ஆரோகணித்திருப்பதைக் கண்டான். பாண்டியன் மனம் அவர்பால் சென்றது. உடனே, சாமந்தனை நோக்கி. "அவர் யார்?" என்று வினவியதோடு, "அவரை எம்மிடம் அழைத்துவருக" என்று பணித்தான். இதனையறிந்த ஒற்றைச் சேவகரும் குலபூஷணன் முன்னே வந்தருளினர். பாண்டியன் மிக மிக மகிழ்ந்தான். நவரத்தின மாலைகளையும். பொன்னுடைகளையும் கொடுத்தான். சுந்தரனைத் திருப்திப்படுத்த வேண்டி சோமசுந்தரப் பெருமானும் அவற்றையெல்லாம் ஏற்றுத் தமது பரிவாரங்களுக்கு ஈந்தருளினர். தமது குதிரையைத் தூண்டி ஐந்து வகைக் கதிகளிலும் நடாத்திக் காண்பித்தார். பின்னர் தமது சேனைக்குள்ளே புகுந்துகொண்டார்.

அது சமயம் ஒற்றன் ஒருவன் ஓடிவந்தான். பாண்டியனை வணங்கி நின்று, "சேதிராயன் வேட்டையாடச் சென்றிருந்தபோது புலியினால் கொல்லப்பட்டு விட்டானாம்" என்ற சேதியைச் சொன்னான். தன் எதிரே போர் முரசு முழக்கும் சேனையைக் கண்டு மகிழ்ச்சி கொண்ட பாண்டியன் சேனாதிபதியான சுந்தர சாமந்தனுக்கு சிறப்பான தலைமைப் பதவி அளித்ததுடன் வரிசைகளையும் ஏராளமாகத் தந்தான். "இந்தப் படைவீரர்களையெல்லாம் அவரவர்கள் நாட்டுக்குப் போகுமாறு விடையளித்து அனுப்பிவிடுக" என்றான் பாண்டியன்.

சுந்தர சாமந்தனும் சேனைகளை அனுப்பி வைப்பதுபோலப் பாவனை காட்டினான். சோமசுந்தரக் கடவுள் அங்கிருந்தபடியே மனித வேஷங்கொண்ட சேனையராகிய சிவ கணங்களோடு திடீரென மறைந்து அருளினர். அதனைக் கண்டு பேராச்சரியம் கொண்டான் பாண்டியன். எண்ணத்தில் தோன்றிய சந்தேகத்தை தானே உணர்ந்து தெளிவாக்கிக் கொண்டான். "சோமசுந்தரப் பெருமான் செய்தருளிய திருவிளையாடலே இது" என்று தேர்ந்து ஆனந்த பாஷ்பம் பெருக்கினான். தனது இன்னுயிர்த் துணையான சாமந்தனைப் பார்த்து, "சோமசுந்தரப் பெருமான் உனக்காக ஏன் வந்தார் என்றால், எனக்கு அக் கடவுளே நீதான்." என்று புகழ்ந்து கூறி அவனுக்குப் பலவகைச் சிறப்புகளை வழங்கினான்.

பின்னர் உள்ளத்திலே சற்றேனும் கவலையின்றி அரசு செய்து வாழ்ந்து வந்தான் குலபூஷண பாண்டியன்.

★

## 31. உலவாக்கிழி அருளியது.

பாண்டியன் குலபூஷணன் பெரிய வள்ளலாக விளங்கினான். சோமவார, அஷ்டமி, சதுர்த்தசி என்னும் விரதங்களை மிகுந்த

சிரத்தையுடன் அனுஷ்டித்து வந்தான். அதனாலே, அவனுக்கு மிகவும் கர்வம் உண்டாயிற்று. கர்வம் மிகுந்து விட்டதாலே பாண்டியன் நாட்டிலுள்ள மறையவர்களை மதிக்காமல் அலட்சியம் செய்து வந்தான். அதனால் மழை பெய்யவில்லை; மறையவர் வறுமையால் வாடியதால் வேதம் ஓதுவதைக் கைவிட்டனர். யாக யக்ஞங்கள் நின்றுவிட்டன. நாட்டிலே எங்கும் வறுமை தாண்டவம் ஆடியது. இதை உணர்ந்த குலபூஷணன் உளம் வருந்தினான்.

ஒரு சோமாவாரத்தன்று திருக்கோவிலுக்குச் சென்றான். பொற்றாமரைத் திருநீரிலே நீராடிவிட்டு சித்தி விநாயகரை வணங்கியபின்னர் மீனாட்சியம்மையையும் சோமசுந்தரப் பெருமானையும் வணங்கி வழிபட்டான். சோமசுந்தரப் பெருமான் முன்பு அஞ்சலி செய்து நின்று, "பெருமானே! உயிர்களுக்கெல்லாம் உயிரானவரே! பாண்டியநாட்டு உயிர்களெல்லாம் பசியால் வருந்துவது ஏனோ? அடியேனது பொருள்களெல்லாம் சிவ புண்ணிய கைங்கரியங்களிலே சென்றன. எளியேனது துன்பம் நீங்குமாறு திருவருள் புரிய வேண்டும்" என்று இறைஞ்சினான். இறையவர் பாண்டியனது பிழையை உணர்ந்ததால் செவி சாய்க்காதது போலிருந்தார். பாண்டியன் அரண்மனை சேர்ந்தான். சிவபெருமானைச் சிந்தித்த வண்ணம் தரையிலே கிடந்து நித்திரை போனான். கனவிலே சிவபெருமான் சித்த மூர்த்தியாய் எழுந்தருளினார். "பாண்டியனே! என்பால் சிறந்த பக்தி பூண்டவன் நீ. செங்கோலாட்சி புரிபவன். இருந்தும் உன்னிடம், ஒரு குறை இருக்கிறது. நீ மறை ஓதும் வேதியர்களை மதிக்காமல் இருந்து விட்டாய்; ஆகையால், நாட்டிலே வேள்விச் செல்வம் குறைந்து விட்டது. வேதமே நமது இருக்கை, வாகனம், கண், வாக்கு, சக்தி, வடிவம் எல்லாம். இப்பெரும் சிறப்புடைய வேதம் ஓதுபவர்கள் அந்தணர்கள். வேதியர் செய்யும் வேள்வியே மழைக்குக் காரணம். வேதத்தவர்களை நீ நிரம்பவும் அலட்சியம் செய்து விட்டாயே; இனி நீ அந்தணர்களைப் போற்றி வருவாயாக. யாம் உனக்கென ஓர் உலவாக்கிழி அருள்கின்றோம். இவ்வுலவாக்கிழியிலிருந்து எவ்வளவு பொன்னை எடுத்துச் செலவழித்தாலும் அது குறையாமலிருக்கும். இதனை வைத்துக்கொண்டு நாட்டில் உள்ள வறுமையைப் போக்குவாய்" என்று திருவாய் மலர்ந்தருளிப் பாண்டியன் கையிலே உலவாக்கிழியை ஈந்து, நெற்றியிலே விபூதியை இட்டு மறைந்தருளினார்.

குலபூஷண பாண்டியன் உடனே விழித்தெழுந்தான். தன் கனவு நினைவாகியிருப்பதைக் கண்டான். சோமசுந்தரக் கடவுளின் திருவடியே என்று கருதிப் பொற்பையை தனது தலையிலே வைத்துக்கொண்டு ஆனந்தத் தாண்டவம் செய்தான். பின்னர் தனது மந்திரிகளிடத்திலும் சேனாதிபதிகளிடத்திலும் கிழியைக் காண்பித்து கனவு நிகழ்ச்சிகளைச் செப்பினான்.

குலபூஷணன் உலவாப் பொற்கிழியை அரியணையின் மேல் வைத்துக் கோலாகலமாக பூசை செய்தான்., சோமசுந்தரக்

கடவுளாகவே மதித்துக் கிழியினை வழிபட்டான். பிறகு அந்தப் பையின் கட்டை அவிழ்த்து அதிலிருந்து பொன்னை எடுத்து மறையவர்களுக்கும், யாக யக்ஞங்களுக்கும், ஏனைய நற்காரியங்களுக்கும் அளவற்றபடி வாரி வாரி வழங்கினான். பாண்டியனும் ஏனையோரும் ஆச்சரியப்படுமாறு கிழியில் இருந்த பொன் அளவு குறையாமலிருந்தது.

உலவாக் கிழியிலிருந்து விளைந்த பொன்னைக் கொண்டு குலபூஷண பாண்டியன் சோமசுந்தரக் கடவுளது திரு விமானத்தை பொன் கொண்டு இழைத்தான். மீனாட்சியம்மையின் திருக்கோவிலையும், அறுகால் பீடத்தையும், கோபுர வாசலையும் அழகுறப் பணி செய்தான்.

பாண்டியநாடு செல்வச் சிறப்பால் தழைத்தோங்கியது. வேதியர்களும், வேதாந்தியர்களும், வையாகரணர்களும், நியாயிகளும், சிவவிரதிகளும், சிவாகமியர்களும், துறவிகளும் வறுமையால் வாடாது செழிப்போடு வாழ்ந்து வந்தனர். ★

## 32. வளையல் விற்றது.

தாருக வனத்தில் இருந்த ரிஷிபத்தினிகளின் கற்பு நிலையை அளந்துகாட்டும் பொருட்டு முன்பொருக்கால் சிவபெருமான் பிட்சாடனர் திருக்கோலம் பூண்டருளினார். மன்மதனே தவக்கோலம் கொண்டு வந்ததுபோலிருந்தது. அவரது திருவுருவத்தையும் அமுத கீதத்தையும் கண்டு கேட்ட ரிஷிபத்தினிகள் தங்கள் நிறையழிந்தனர். பிச்சையிடவந்த பத்தினிமார்கள் தவமூர்த்தியைக்கண்டு காமத்தால் மதிமயங்கி அவரது பாத்திரத்திலே பிச்சையுடன் தங்கள் வளையல்களையும் போட்டுவிட்டனர். நாணம் இழந்ததோடு நில்லாமல் இடுப்பிலே அணிந்திருந்த மேகலையையும் இழந்தனர். அவர்களது ஆடைகள் நெகிழ்ந்தன. தாருக வன ரிஷிபத்தினிகள் பிட்சாடனரப் பெருமானை நெருங்கி வந்து நின்று இமைகொட்டாமல் பார்த்தனர். அவர்கள் அனைவரும் கரம் குவித்து பிச்சைப் பெருமானின் திருவடியில் விழுந்து "எமக்குத் துணை நீரே" என்று சொல்லி அவரைத் தழுவ நெருங்கினர். இறைவன் விலகி விலகிச் சென்றான். அப்போது அம் மாதர்கள், "எம்மைத் தழுவாது போனால் அவிழ்ந்து போன ஆடையையாவது உடுத்திவிடுங்கள்; கைகளை விட்டுக் கழற்றிய வளையல்களை எங்கள் கைகளில் இட்டு விடுங்கள்" என்று பரிதாபகரமாக வேண்டினர். "நாளை வந்து இடுவோம்" என்று கூறி பிட்சாடன மூர்த்தி மறைந்தருளினார்.

தாருக வனத்துப் பத்தினிகள் பிச்சைமூர்த்தி கவர்ந்து சென்ற நாணத்தையும் மனத்தையும் மீட்க முடியவில்லை. ஆடைகளும் வளையல்களும் ஒழியப் பசலை படர நின்றிருந்தனர். தமது பத்தினியரின் அலங்கோல நிலையைக் கண்டனர் கணவர்களாகிய ரிஷிகள்.

சோமசுந்தரப் பெருமானே இவ்வாறு வந்து திருவிளையாடல் புரிந்தாரென்பதைத் தமது ஞான திருஷ்டியால் தெரிந்து கொண்டனர் ரிஷிகள். கற்பு நிலையில் மாறிய தமது மனைவிமார்களைப் பார்த்து, "நீங்கள் மதி மயங்கினீர்கள்; ஆதலால், மதுரை மாநகரத்தில் வசிக்கும் வணிகக்குல மகளிர்களாகப் பிறப்பீர்கள்; செல்லுங்கள்" என்று சாபம் ஈந்தனர். மனைவிமார்கள், "எங்களுக்குச் சாப விமோசனம் எப்படி, எப்போது?" என்று வேண்டி வினவினர். "மதுரை மாநகருக்கு இறைவனாகிய சோமசுந்தரப் பெருமான் உங்களுடைய கைகளைத் தொடும்போது சாபம் விலகும்" என்றனர் ரிஷிகள்.

ரிஷி பத்தினிகள் அனைவரும் சாபத்தால் சிந்தை தளர்ந்தார்கள். மதுரை மாநகரத்திலே வணிகர் குலத்திலே பெண்டிராக வந்து தோன்றினார்கள். வளர்ந்து வளர்ந்து மங்கைப் பருவம் அடைந்து அழகும் இளமையும் பொங்க விளங்கினார்கள். அக்காலம் குலபூஷண பாண்டியன் செங்கோல் செலுத்தி வந்தான்.

சிவபெருமான் பண்டைய ரிஷி பத்தினியர் பால் கருணை காட்டத் திருவுளம் கொண்டார். தனது திவ்ய மேனியை மறைத்துக் கொண்டு வளையல் விற்கும் வணிகர்போல வேஷம் புனைந்தார். தான் முன்பு ரிஷி பத்தினியர்களிடம் கவர்ந்து வந்த அதே வளையல்களை பட்டுக் கயிற்றிலே கோத்துக் கொண்டு வந்தார். அவற்றையே திரும்ப அவர்களுக்கு இடுவோம் என்று திருவுள்ளம் கொண்டார். மதுரை மாநகரப் பெருவீதிகளிலே, வேத முரைக்கும் தம் திருவாயினல், "வளையல் வாங்குவீர், வளையல் வாங்குவீர்!" என்று இயம்பிச் சென்றார். வணிகர் குல மங்கையர் அனைவரும் திவ்யக் குரல்கேட்டுச் சிந்தை தளர்ந்தவராய் வீதிக்கு ஓடி வந்து வளையல்காரர் முன்பு நின்றார்கள். மன்மதனை நிகர்த்த எழிலுருவத்தைக் கண்டு காமுற்றனர். முதலில் அச்சம் முதலான நால்வகைக் குணங்களும் தடைசெய்து நிறுத்தின. மனம் தடுமாறிய வணிகக்குல மகளிர் நிலைகுலைய வளையல் விற்பவரைச் சூழ்ந்து நின்றனர். தங்களது மங்கலக் கைகளுக்கு வளையல் இடுமாறு வணிகரைக் கெஞ்சிக் கரங்களை அவர் முன்னே நீட்டினர். வணிகப் பெருமானும் தம் திருக்கரத்தால் மங்கையினரின் கைகளைப் பற்றி முகிழ்பித்துப் பலவகையான நல்ல வளையல்களை இட்டுக் காதலைப் பெருக்கினார். மங்கையரும் மனம் இழந்தவராகித் திரும்பத் திரும்ப ஏதேனும் ஒரு காரணத்தை வைத்துக்கொண்டு தேவ வணிகர் முன்னே வந்து நின்றனர். அவர்கள் மனமும் நெகிழத் தொடங்கியது. "வணிகரே! இம்மாதிரியான சிறந்த வளையல்களை நாங்கள் எங்கும் இதற்கு முன்பு பார்த்தது இடையாது. இவ்வளையல்களெல்லாம் எங்களைப் புளகாங்கிதம் அடையச் செய்தன. நாளைக்கும் வளையல் போட வரவேண்டும்; சற்றே இருங்கள்; சற்றே இருங்கள்; வளையல்களுக்கான விலையைத் தருகிறோம்" என்று சொல்லினர். "அதற்கென்ன? விலையை நாளைக்கு வாங்கிக் கொள்கிறேன்." என்று கூறிவிட்டு மறைந்தருளினார், வணிகதேவர்.

மதுரை மக்கள் அனைவரும் வளை வணிகராக வந்து வணிககுல மகளிரின் சிந்தை கவர்ந்து சென்றவர் சிவபெருமானே என்பதைத் தெரிந்து ஆச்சரியம் அடைந்தனர். ஆனந்த பாஷ்பம் பெருகப் பெரு மகிழ்ச்சி அடைந்தனர்.

சோமசுந்தரப் பெருமானே தமது திருக்கரத்தால் தொட்டு வளையல் அணிவித்த பாங்கினால் வணிகர்குல மங்கையர்கள் எல்லாரும் கருவுற்றனர். முருகப் பெருமானை நிகர்த்த அளவற்ற புத்திரர்களைப் பெற்றனர். அந்தத் திருக்குமாரர்கள் எல்லாரும் பெருமையும், வீரமும், வெற்றியும், களிப்பும் கொண்டு வாழ்ந்து வந்தனர்.

வணிக மாதர் அனைவரும் சிவபெருமான் திருவருளால் சில நாட்கள் இருந்து வாழ்ந்து பின்னர் சிவலோகம் சென்றனர். ★

# 33. அட்டமாசித்தி உபதேசித்தது.

முன்னொரு காலத்தில் திருக்கயிலாயத்திலே கல்லால மரத்தின் கீழே சிவபெருமான் அமர்ந்திருந்தார். அருகே இருந்த உமாதேவியார் தமது திவ்வியக் கரங்களாலே வெற்றிலைச் சுருளை மடித்துக் கொடுத்துக் கொண்டிருந்தார். அன்பும் அருளும் பெருகிய போக குரு மூர்த்தியான சிவபெருமான் அண்டியிருந்த சிவகணத் தலைவர் கட்கும் சனகாதி முனிவர்கட்கும் அமுத நல்லுரைகளை வழங்கிக் கொண்டிருந்தார். அந்தப் புனிதமான சூழ்நிலையிலே முருகப் பெருமானுக்குப் பாலூட்டிய கார்த்திகைப் பெண்களான யக்ஷமாதர் ஆறுபேர்களும் சிவ சின்னங்கள் துலங்கச் சிவபெருமான் திருமுன்னர் வந்து பணிந்து நின்றனர். பின்னர் பெருமானின் சேவடி வணங்கி, "கருணைக்கடலான எந்தையீர்! எளியவர்களாகிய எங்களுக்கு அஷ்டமாசித்தியை உபதேசித்தருள வேண்டும்" என்று விண்ணப்பம் செய்துகொண்டார்கள்.

கைலாசபதி தமது இடம் கொண்ட உமாதேவியாரைச் சுட்டிக் காட்டி விட்டு, "உமாதேவியே பராசக்தி, மகேஸ்வரி, அணிமா முதலான அஷ்டமா சித்திகளும் பணிப் பெண்களாகத் தன்னைச் சுற்றிலும் குற்றேவல் புரிய அமர்ந்திருப்பவள் ஆதலால், உமா தேவியை நீங்கள் உள்ளத்தில் இருத்தி தியானம் செய்தால் உங்கள் வினைகளைப் போக்கி அஷ்டமா சித்திகளையும் தந்தருளுவாள்" என்று திருவாய் மலர்ந்தருளினார். பின்னர் அஷ்டமாசித்திகளையும் யக்ஷ மாதர் அறுவருக்கும் உபதேசம் செய்தருளினார். அவர்கள் அறுவரும் உமாதேவியாரைத் தியானிக்காது இருந்து விட்டதனால் உபதேசத்தையே மறந்துவிட்டனர். சிவபெருமான் அறுவரது குற்றத்தையும் மன்னிக்கமுடியாதபடி கோபம் கொண்டார். "நீங்கள் அறுவரும் பட்டமங்கை என்னும் ஸ்தலத்திலுள்ள ஆலமரத்தின் கீழே கற்பாறையாய்க் கிடக்கக் கடவீர்கள்" என்று சாபம் கொடுத்தார். சாபம் பெற்ற அறுவரும் மனக்கவலை மிகுந்தவர்களாகி "விமோசனம்

எப்படிக் கிடைக்குமோ?" என்று ஏக்கத்தோடு கேட்டனர். "ஆயிரம் ஆண்டுகள் பாறையாகக் கிடக்கவேண்டும். அப்பால் யாம் மதுரையிலிருந்து அங்கே வந்து உங்களது சாபத்தைப் போக்குவோம்; உங்களுடைய பழைய வடிவத்தையும் ஈந்து அஷ்டமா சித்திகளையும் விளக்கிக் காட்டுவோம்." என்று மாற்றுரை மொழிந்தார்.

யக்ஷமாதர் அறுவரும் பட்டமங்கை ஸ்தலத்திலிருந்த ஆலமரத் தடியிலே கற்பாறையாகிக் கிடந்தனர். ஆயிரம் ஆண்டுகளும் கழிந்தன. எண்குணம் தங்கிய ஒரு பெருந் தலைவனாகிய சிவபெருமான் தனது இச்சையினால் ஞானசார்ய வடிவம் கொண்டார். கற்பாறையாகக் கிடக்கும் கார்த்திகைப் பெண்கள் அறுவரின் முன்பு வந்து தோன்றினார். அவர்களது வினை கெடுமாறு திருப்பார்வை செய்தருளினார். உடனே கிருபா கடாக்ஷம் பெற்ற அறுவரும் பாறை உருவம் நீங்கப் பெற்றவர்களாகித் தங்கள் சுயரூபத்தை அடைந் தனர். அறுவரும் பக்தி பெருகச் சிவபெருமான் திருவடியிலே வீழ்ந்து வணங்கினர். பின்பு சிவபெருமான் பெருங்கருணை கொண்டு அவர்கள் சிரங்களின் மீது தமது திருக்கரத்தை வைத்து அஷ்டமா சித்திகளையும் தெள்ளத் தெளிய உபதேசித்தருளினார்.

"அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராப்தி, பிராகாம்யம், ஈசத்வம், வசித்வம் என சித்திகள் எட்டு வகைப்படும். இவை அனைத்தும் ஒப்பற்ற மெய் ஞானிகளின் விளையாட்டின் வகை களாகும். பரமாணுவாய்த் தங்கும் தன்மையே அணிமா. எங்கும் நிறைந்திருக்கும் பெருமையே மகிமா. பாரமற்று இருப்பது லகிமா. கனமுற்று இருப்பது கரிமா. எல்லா உலகும் சென்று வரும் தன்மை பிராப்தி. வேறு உடம்புக்குள் புகுதல், வான சஞ்சாரம் செய்தல், நினைத்த இடத்திலே நினைத்தபடி செய்தல் பிராகாம்யம். உலகப் பொருள்களனைத்தையும், மூன்று காலங்களையும், வானுலகப் பொருள்களைத் தன் உடலிலே உள்ள ஒளியால் விளங்கச் செய்தல், இருந்த இடத்தில் உள்ளவாறே அனைத்தும் அறிதல் பிராகாம்யம், சிவபெருமானை நிகர்த்து முத்தொழில்களும் செய்து நவக்கிரகங்களை யும் தன் கட்டளைக்கிணங்கச் செய்து ஈசத்வம். எல்லாவகை உயிர் களையும், இந்திராதி திக்கு பாலகர்களைத் தன்வசமாகச் செய்து கொள்வது வசித்வம். ஆனால், எம்மை யறிந்த சிவஞான யோகியார் கள் இந்த சித்திகளை விரும்பமாட்டார்கள். இருந்தபோதும் இச் சித்திகள் யோகியர்களின் பெருமையை உலகிற்கு உணர்த்தும் பாங்குடையன" என்று திருவாய் மொழிந்தருளினார் யோகராஜா வான சிவபெருமான்.

சிவபெருமான் தெளிவாக உபதேசம் செய்தருளிய அஷ்டமா சித்திகளையும் யக்ஷமாதர் ஆறு பேர்களும் உமாதேவியாரின் தியானத்தின் மகிமையாலே நன்றாகப் பயின்றனர். பிறகு ஆகாச மார்க்கமாகச் சென்று கைலாச மலையை அடைந்தனர். ★

## 34. விடை இலச்சினை இட்டது.

குலபூஷண பாண்டியன் மதுரையை ஆண்டுவந்த காலத்தில் காஞ்சிமா நகரத்தைக் காடுவெட்டிய சோழன் என்ற மன்னன் ஆண்டுவந்தான். அவன் காஞ்சிப்புறமுள்ள காடுகளை வெட்டித் திருத்தி நகரம் கண்டதால் அப்பெயர் பெற்றான். அச்சோழ மன்னன் உத்தம சிவபக்தர்களுக்குள்ளே உத்தமமான சிவபக்தன். திருநீறும், உருத்திராட்சமாலையும் இலங்கிய மேனியான். சிவபெருமானே எல்லாவற்றுக்கும் மேலான பொருள் என்பதைத் தெரிந்து உறுதி கொண்டவன். வேத வேதாந்தங்களை நன்றாக ஓதி உணர்ந்தவன். சிவ புண்ணியக் கதைகளை நாள்தோறும் செவி மடுப்பவன். சிவ லீலைகளைக் கேட்டு உளம் களி கூர்பவன்.

சோமசுந்தரப் பெருமானை மதுரை சேர்ந்து தொழ வேண்டுமென்று பெருங் காதல் கொண்டான், காடுவெட்டிய சோழன். நாளாக நாளாக மதுரைச் சொக்கநாதர் பால் கொண்ட பக்தி முறுகியது. "எப்போது நான் மதுரைப் பெருமானின் சேவடி காண்பேன்?" என்ற சிந்தனையோடு ஓர் இரவிலே நித்திரை செய்தான். மதுரைப் பெருமான் சோழனது கனவிலே சித்தமூர்த்தியாகத் தோன்றி, "சோழனே! நீ பயம்கொள்ள வேண்டாம்; மாறுவேஷம் போட்டுக்கொண்டு நீ தன்னந்தனியனாய் இன்றே புறப்பட்டு மதுரைக்கு வா; வந்து எம்மைத் தரிசனம் செய்து திரும்பலாம்." என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார்.

காடுவெட்டிய சோழனும் சித்தப் பெருமானையும் அவர் திருமொழியையும் சிந்தித்தபடியே விழித்துணர்ந்தான். பெரிதும் வியப்படைந்தான். தன்னந்தனியாக அவ்விரவு நேரத்திலேயே தன் நகர் நீங்கி மதுரை நோக்கிப் புறப்பட ஆயத்தமானான். சிவபக்தியைக் குதிரையாகக் கொண்டான். பஞ்சாக்ஷர மகா மந்திரத்தையே தனது உடைவாளாகக் கொண்டான். மதுரையை நோக்கித் தனி வழி ஏகினான். பலவகை நிலங்களையும், மலைகளையும், ஆறுகளையும் கடந்து வையை நதியின் கரையை வந்தடைந்தான். வையை நதியிலே வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருந்தது. ஆற்றின் கரையிலே நின்று வெள்ளப் பெருக்கினைக் கண்டு கவலையோடு நின்றான் சோழன். "சோமசுந்தரப் பெருமானைத் தரிசிக்க வந்த தருணம் பார்த்து இவ்வெள்ளப்பெருக்கு இடையூறாக வந்ததே; கைக்கெட்டியது வாய்க்கெட்டாது போய்விடுமோ? சூரியோதயம் ஆகிவிட்டால் பகைவனான பாண்டியன் எனக்குத் துன்பம் இழைப்பான். பாண்டியனை மட்டுமே பகையாளி என்று எண்ணினேன். இந்த ஆறும் பகையாகிவிட்டதே" என்று கருதி மனம் நைந்தான்.

சோழனது பெருங் கவலையை நன்குணர்ந்த சிவபெருமான் கருணை கொண்டு சித்தமூர்த்திக் கோலம் தரித்து அவன் பக்கத்திலே வந்து நின்றார். வையை யாற்றிலே நீர் வற்றிப் போகும்படி கடா

க்ஷம் செய்தார். வெள்ளம் வற்றியது. சோழ மன்னனைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு சித்தப்பெருமான் வையை நதியைக் கடந்து சென்றார். மதுரைக் கோட்டையை அடைந்து அதன் வடக்குவாசலைத் தன் திருவருளால் திறந்தார். உள்ளே புகுந்து கட்டுக்காவல் எல்லாம் மீறிப் பல வீதிகள் கடந்து திருக்கோவில் புகுந்தார். கோவிலுள்ள பொற்றாமரைத் தீர்த்தத்திலே சோழனை நீராடச் செய்தார். பிறகு உள்ளே சென்று சொக்கநாதரையும் மீனாக்ஷியம்மையாரையும் தரிசிக்கச் செய்தார். சித்த மூர்த்திகளின் திருவருளால் அம்மையாரைக் கண்ட சோழன் தூய்மையும் இன்பமும் நிரம்பப் பெற்றான்.

சுந்தரப் பெருமானையும் மீனாக்ஷியம்மையாரையும் உளமாரத் தரிசனம் செய்த சோழன் பேரின்பத்திலே மூழ்கியவனாகி, "முதல்வா, போற்றி! அடியவர்க்கெளியவனே போற்றி! எளியவர்கள் எண்ணிய எண்ணியாங்கு எய்துமாறு அருள்புரியும் தனிப்பெரும் பொருளே, போற்றி" என்று பல தோத்திரம் கூறித் துதித்தான். பல நல் வரங்களையும் வேண்டிப் பெற்றுக்கொண்டான்.

பின்னர் சித்தர் பெருமான் சோழனைப் பார்த்து, "மன்னவனே, நீ இங்கு வந்துள்ள செய்தியைத் தெரிந்தால் பாண்டியன் உனக்கு இன்னல் செய்ய நேரிடலாம்" என்று சொன்னார். பிறகு, அவனை வந்தவாறே அழைத்துச் சென்று வடக்கு வாசல் வழியிலே இட்டுச் சென்று வையையின் வடகரையிலே சேர்த்தருளினார். அவனது நெற்றியிலே திருநீற்றைச் சாத்தி, "உள்ளம் நிறைவு பெற்ற உனக்கு நல்ல துணை கிடைக்கும்" என்று ஆசி கூறி வழியனுப்பினார் சித்த மூர்த்தி. திரும்பி வந்து தான் முன்பு திறந்துகொண்டு வந்த வடக்கு வாசற் கதவுகளை மூடி அதனிடத்தே ரிஷப மூர்த்தியை வைத்துத் தான் விமானத்துள் மறைந்தருளினார்.

விடிந்தது. மதுரைக் கோட்டையின் நான்கு வாசல்களும் திறக்கப்பட்டன. வடக்கு வாசலிலே ரிஷபக்குறி இருந்ததைக் காவலாளிகள் கண்டனர். மற்ற வாசற் கதவுகளிலே மீனக்குறி இலங்கி நின்றபோது வடக்குப்புறக் கதவுகளிலே புதுக் குறி எப்படி வந்தது என்பது எவருக்கும் புரியவில்லை. "இந்த நிகழ்ச்சி எதிலே சென்று முடியுமோ?" என்று அஞ்சிய காவலாளிகள் ஓடோடியும் சென்று பாண்டியனை வணங்கி "மாமன்னவரே! நமது வடக்கு வாசற் கதவிலே இருந்த மீனக்குறியை முற்றிலும் மாற்றி ரிஷபக் குறி இடப் பெற்றுள்ளது. இப்படித் துணிந்து செய்தது யார் என்பது எங்களுக்குத் தெரியாது; மன்னிக்கவேண்டும்" என்று சொல்லினர். பாண்டியனும் சென்று வடக்குப் புறக் கதவிலே விடை இலச்சினை இடப்பட்டிருப்பதைக் கண்டான். "ஏதோ அற்புதம் அல்லவா நிகழ்ந்துள்ளது: இந்த மாயத்தைச் செய்தது யார்? ஏதும் விளங்கவில்லையே." என்று சந்தேகப்பட்ட மனத்தவனாய் அரண்மனைக்குச் சென்றான்.

அன்று பகலில் பாண்டியன் உணவு கொள்ளவில்லை. இரவிலும் உணவு கொள்ளாமல் படுக்கையை வெறுத்து நிலத்திலே நித்திரை போனான். சிவபெருமான் கனவிலே தோற்றம் காட்டியருளினார். "குணபூஷணா! காஞ்சிப் பதியிலுள்ள காடுவெட்டிய சோழன் நம்பால் நிரம்ப பக்தியுடையவன். அவன் மதுரைக்கு வந்து நம்மைத் தரிசித்து வணங்க விரும்பினான். நாம் அவனை வடக்கு வாசலைத் திறந்து உள்ளே கூட்டிவந்து தரிசனம் செய்வித்தோம். அவனை மீண்டும் வெளியே அனுப்பிவிட்டு கதவினைத் தாளிட்டு நமது விடை இலச்சினையை இட்டோம்" என்று திருமொழி பகர்ந்தருளினார்.

குணபூஷண பாண்டியன் விழித்தெழுந்தான். அவனது சந்தேகம் விலகியது. அஞ்சினான். வியர்த்தான். பூரிப்படைந்து பல வகைப் பாடல்களாலே சோமசுந்தரப் பெருமானைத் துதித்தான். பக்தனுக்காக எளிமையுற்று வந்த பெருமானின் பெருந்தன்மையை எண்ணி எண்ணிச் சிவானந்தத்திலே மூழ்கினான். சோமசுந்தரப் பெருமானின் திருச் சன்னதியை அடைந்து துதி செய்தான். எல்லாரிடத்திலும் எம்பெருமானது திவ்யத் திருவிளையாடலைச் சொல்லிச் சொல்லி மகிழ்ந்தான்.

பல நாட்கள் சென்றன. குலபூஷண பாண்டியன் தனது குமாரன் ராஜேந்திர பாண்டியன் வசத்திலே தனது கொற்றக் குடையையும், செங்கோலையும், மகுடத்தையும் அளித்துவிட்டுப் பேரமைதி கொண்ட உள்ளத்தோடு சிவலோகம் சேர்ந்தான். ★

## 35. தண்ணீர்ப் பந்தல் வைத்தது.

ராஜேந்திர பாண்டியன் அரசாட்சி செய்துவந்த காலத்திலே காடுவெட்டிய காஞ்சிச்சோழன் எல்லாரும் அறியும்படி மதுரைக்குப் பலமுறை வந்து சொக்கநாதரைத் தரிசனம் செய்ய விரும்பினான். அதே நோக்கத்தோடு பாண்டியனை நேசம் கொள்ளும் பொருட்டு அவ்வப்பொழுது காணிக்கைப் பொருள்களை அனுப்பி வந்தான். சோழன் அனுப்பிய சுவர்ணாபரணம், பொன்னாடை முதலியவற்றைப் பாண்டியன் ஏற்று மகிழ்ந்தான். எதிர் சீராகப் பாண்டியனும் பல சிறந்த காணிக்கைகளை அனுப்பி வைத்தான். சோழன் மிகவும் மனம் மகிழ்ந்தவனாகித் தனது குமாரியை பாண்டியனுக்குக் கொடுக்க முன் வந்தான்.

அந்த விவாகம் பற்றிய செய்தியை அறிந்தான் பாண்டிய மன்னனின் தம்பி ராஜசிம்மன். தம்பி பழிக்கும் பாவத்துக்கும் பயந்தவனல்ல. பெரும் வஞ்சனைக்காரன். தானே சோழ மன்னனின் மகளைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பினான். இந்த எண்ணத்தோடு அவன் காஞ்சிபுரம் போய்ச் சேர்ந்தான். தன் நகருக்கு வந்து சேர்ந்த ராஜசிம்மனை சோழன் தனது பரிவாரங்களுடன் எதிர்கொண்டு வரவேற்றான். தவிரவும் அண்ணனுக்கு மணம் செய்விக்க

நினைத்த தனது குமாரியை தன்னை நாடிவந்த தம்பிக்குக் கொடுத்து விட்டான்.

ராஜசிம்மன் தனது மருமகன் ஆனதும் சோழனின் சிந்தை திரிந்தது. பாண்டியனது ஆட்சியையே பிடுங்கித் தன் மருமகனுக்குக் கொடுத்துவிடக் கருதினன். ராஜேந்திர பாண்டிய மன்னனைப் பிடித்துத் தன்வசமாக்கும் எண்ணத்தோடு தனது மருமகனுடன் சதுரங்க சேனைகளையும் கூட்டிக்கொண்டு, பாண்டிநாடு நோக்கிச் சென்றான் யுத்த பேரிகை முழங்கச் சேனைகள் சென்றன. மதுரை மாநகரத்திற்கு இரண்டு யோசனை அளவு தூரத்திலே நெருங்கி வந்து விட்டான் சோழன்.

அந்தச் சேதியை ஒற்றர்கள் மூலம் தெரிந்தான் பாண்டியன். உடனே சோமசுந்தரக் கடவுளின் சன்னதிக்குச் சென்று முறையிட்டான். "எம்பெருமானே! அன்றொரு இரவு தேவரீரைத் தரிசிக்க வந்த அதே காடுவெட்டிய சோழன் இன்றும் வந்துள்ளான். உள்ளொன்று வைத்துப் புறமொன்று செய்கின்றவனாகிப் போர்க் கோலம் பூண்டு வந்திருக்கிறான். அன்று அவனது பக்திக்கு ஈடு செய்த பெருமானாகிய தாங்களே தான் இப்போதும் அவனது பகைமைக்கும் ஈடுசெய்தருள வேண்டும். எளியேன் வெற்றி கொள்ளும்படி செய்தருளவேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொண்டான். பெருமான் திருவருளாலே அசரீரி எழுந்தது. "பாண்டியனே! பயப்படாதே. உனது சேனையுடன் சென்று எதிர்த்துப் போராடு. உனக்கே வெற்றி உண்டாகும்படி யாம் செய்வோம்" என்றது. அசரீரி கேட்ட அரசன் இறைவன் திருவடியில் விழுந்து ஆனந்தம் அடைந்தான். பின்னர் தன் அரண்மனை சேர்ந்தான்.

சூரியோதயத்துக்கு முன்பே எழுந்தான். சந்தியாவந்தனாதிகள் செய்து சிவபூஜை முடித்துக் கொண்டான். தனது சேனைகளைக் கூட்டிக்கொண்டு சோழனை எதிர்த்துப் போரிடச் சென்றான். பாண்டிய சேனை ஓர் ஆறுபோல இருந்தது; சோழ சேனை கடல்போல் இருந்தது. போர் தொடங்கியது; மிகவும் கடுமையாக நடந்து கொண்டிருந்தது. இடிமுழக்கம்போல ஒலியும், சண்டமாருதம் போன்ற வேகமும் உண்டாயின.

சோமசுந்தரப் பெருமான் திருவருளாலே பாண்டிய சேனா வீரன் ஒவ்வொருவனும் சோழ வீரர் கண்களுக்குப் பல பேர்களாகத் தோன்றினார்கள். தாக்குதல், எதிர்தாக்குதல் பிரயோகம், எதிர்ப்பிரயோகம் என்று போர் வெகு மும்முரமாக நடைபெற்றது. காலையிலே தொடங்கிய வெம்போர் நண்பகல் முடியக் கோரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. உச்சி வெயில் உக்கிரமாக எரித்ததால் வீரர்கள் அனைவரும் நீர் கிடைக்காமல் பெருந்தாகத்தால் பரிதவித்தனர்.

பாண்டியர் சேனை வாடி வருந்துவதைக் கண்ட சிவபெருமான் அந்தச் சேனையின் நடுவாக நான்கு கால்கள் கொண்ட தண்ணீர்ப்

பந்தல் ஒன்று அமைத்தார். பந்தலின் நடுவே விபூதி தரித்து தவக் கோலம் கொண்டு நீராளாக நின்றிருந்தார். பந்தலின் உள்ளே பெரும் பானைகளிலே ஆற்று நீர் நிரம்பியிருந்தது. ஒரு கமண்டலத்திலே நீரை முகர்ந்துகொண்டு தன்னை நாடி வந்த வீரர் அனைவருக்கும் சலியாது நன்னீர் வார்த்தார் பந்தல் பெருமான்.

விடாய் தீர்ந்த பாண்டிய வீரர்கள் புத்துணர்ச்சியும் பலமும் பெற்றவராகி சோழ சேனையைப் பன் மடங்கு உக்கிரத்தோடு எதிர்த்தனர். சோழர் சேனை சின்னா பின்னப்பட்டுச் சிதைந்தோடியது. வெற்றிவாகை சூடிய பாண்டிய சேனா வீரர்கள் காடுவெட்டிய சோழ வேந்தனையும் அவனது மருமகனாகிய ராஜசிம்மனையும் சிறைப் பிடித்தனர். அவர்கள் இருவரையும் ராஜேந்திர பாண்டியன் முன்பு கொண்டு வந்து நிறுத்தினர்.

பாண்டியன் தன்முன்னே சிறைப்பட்டு நின்ற சோழனையும் தன் தம்பியையும் கொண்டுபோய்ச் சோமசுந்தரப் பெருமானின் திருமுன் நிறுத்தி "எம்பெருமானே! தேவரீர் திருவுள்ளம் எதுவோ?" என்று வணங்கி வேண்டினான். அதுகேட்ட பெருமானார், "பாண்டியா! நீ அறநெறி தெரிந்தவன்; உன் இஷ்டப்படியே செய்யலாம்" என்று அசரீரியாக மொழிந்தருளினார்.

அசரீரி வாக்கைத் தெய்வ வாக்கென்று உணர்ந்த பாண்டியன் தரும சாஸ்திரப்படி சோழனுக்குச் சில தேர்கள், யானைகள், குதிரைகள், வீரர்கள் முதலியவற்றைக் கொடுத்துச் சில ஆபரணங்களையும் தந்து அனுப்பினான். தனது தம்பி ராஜசிம்மனுக்குத் தனது அரசிலே சிறிது பங்கு கொடுத்து அவனைத் தனியாக ஒதுக்கி விட்டான்.

எல்லா உயிர்களையும் காப்பவனாகிக் கடவுள் அருளாலே பல் வளம் பெருக அரசு செய்து இனிதே வாழ்ந்திருந்தான் ராஜேந்திர பாண்டியன்.



## 36. இரசவாதம் செய்தது.

பாண்டிய வளநாட்டிலே, மதுரைமா நகருக்குக் கிழக்கே, வையை ஆற்றின் தென் கரையிலே திருப்பூவனம் என்ற சிவ க்ஷேத்திரம் உண்டு. பூவனநாதப் பெருமான் திருக்கோவில் தொண்டர்களும், தாசிகளும், மற்றவர்கள் செய்த தவப்பயன் போல அவ்வூரில் பொன்னனையாள் என்ற பெண்மணியொருத்தி தோன்றினாள். அவள் பெண்டிரில் சிறந்தவள்; தேவரும் கண்டு மோகம் கொள்ளத் தக்க பேரழகு உடையவள்; அமுதச் சாயல் பெற்றவள். வீணை இசைப்பதிலே, இனிமையாகப் பாடுவதிலே, அருமையாக ஆடுவதிலே தேவமாதரை நிகர்த்திருந்தாள். அறநெறி தவறாமல் நடக்கும் தகுதி கொண்டவள். ஒவ்வொரு நாளும் விடிவதற்கு முன்னதாகவே தனது தோழிமார்களுடனே எழுந்து, வையையாற்றிலே

நீராடி, சிவபூஜை செய்து, பின்பு திருக்கோவில் சேர்ந்து, சிவ சன்னதியடைந்து, பூவணநாதரை வணங்குவாள். அங்கே தெய்வத் திருமுன் நாட்டியம் ஆடுவாள். சிவனடியார்களையே பெரும் பொருளாக மதித்து, அவர்களை வணங்கி, அவர்களை அறுசுவை உண்டி புசிக்கச் செய்வதையே தனது பெருங் கடமையாகக் கொண்டு, பின்னர் தான் உணவு கொள்வதையே நியமமாகக்கொண்டு ஒழுகி வரலானாள்.

அத்தகைய நாட்களில் பொன்னனையாளின் பக்தியின் திறத்தை உலகுக்கு எடுத்துக்காட்ட வேண்டி, பூவண நாதர் தமது திருப்படிவத்தைப் புதிதாகப் பிரதிஷ்டை செய்யவேண்டுமென்று எண்ணத்தை அவளுக்கு ஈந்தருளினார். அதே நற்கருத்தோடு பொன்னனையாள் இருந்து வந்தாள். ஆனால், தனக்கு அன்றன்று கிடைக்கும் பொருளையெல்லாம் சிவனடியார் பூசைக்கே செலவழித்து வந்ததால் ஏதும் மிஞ்சவில்லை. "இறைவன் திருவுருவத்தைக் காண்பது எப்படி?" என்று ஏங்கியிருந்தாள். பாண்டிய மன்னனுக்கு அன்றொருக்கால் உலவாப் பொற்கிழி அருளிய சோமசுந்தரப் பெருமானையே தியானம் செய்துகொண்டிருந்தாள். எப்போதும் தன்னையே சிந்தை செய்துகொண்டிருக்கும் பொன்னனையாளுக்கு அருள் புரியத் திருவுளம் கொண்ட சிவபெருமான் சித்தர் உருவம் கொண்டார். திருநீறு பூசிய திருமேனியும், யோக பட்டம் கட்டிய இடுப்பும், யோக உடையும், செஞ்சடையும் கொண்டு விளங்கினார்.

சித்தர் பெருமான் ஒவ்வொரு நாளும் பொன்னனையாள் வீட்டிற்குச் சிவனடியார்களோடு சேர்ந்து வருவார். ஆனால், உணவு எதுவும் கொள்ளாமல் ஒரு பக்கத்திலே ஒதுங்கியிருப்பார். சிவனடியார்கள் எல்லாரும் திருவமுது செய்துகொண்டிருந்தபோது ஒருவர் மாத்திரம் உணவருந்தாமல் ஒருபுறமாக இருப்பதை வேலைக்காரிகள் கண்டார்கள். உடனே அவர்கள், "சுவாமி, தாங்கள் உள்ளே எழுந்தருளவேண்டும்." என்று வேண்டினர். சித்தர் பெருமானும் "நல்லது, உங்களது தலைவியை இங்கே வரச்சொல்லுங்கள்." என்றார். வேலைக்காரிகள் அகத்தே சென்று பொன்னனையாளைக் கண்டு, "அம்மா! வந்த சிவனடியார்கள் எல்லாரும் அமுது செய்தார்கள்; ஒரு அடியார் மட்டும் அரியகுணம் உள்ளவராகப் புன்னகை பூத்த முகத்தோடு விளங்குகிறார்; அவர் உங்களைத் தம்மிடத்தே வரும்படிக்கு அழைக்கின்றார்" என்று சொல்லினர். ஊழியர் சொன்னதைக் கேட்டாள், பொன்னனையாள். நகை பூத்துக்குலுங்கும் எழிற் கொடிபோலச் சிவனடியார் பக்கம் வந்து நின்று, "தேவரீர் வரவு நல்வரவாகுக" என்று கூறினாள். பின்னர் எல்லாவகையான உபசாரங்களையும் செய்தாள். சித்தருக்காகத் தன்னால் முடிந்த எதையும் செய்யச் சித்தமானாள். அதுகண்ட சித்தர் தமக்குள்ளே சிரித்துக்கொண்டு, "பெண்ணே, யாது காரணத்தால் நீ மிகவும் மெலிந்திருக்கிறாய்?" என்று வினவியருளினார்.

அது கேட்ட பொன்னனையாள், "சுவாமி! அடியவளுக்கு யாதொரு வருத்தமும் கிடையாது. ஆனால், பூவணநாத சுவாமியின் திரு உருவத்தைக் கருவினாலே கண்டு பிரதிஷ்டை செய்ய எண்ணினேன். கிடைக்கின்ற பொருள் எல்லாம் சிவனடியார்க்கு அமுது படைப்பதிலே சென்று விடுகிறது. ஏதும் மிஞ்சுவதில்லை. நான் என்ன செய்வது?" என்று தன் நோக்கம் தெரிவித்தாள். சித்தர் பெருமான், "மாதே! தருமமே நிலையானது. சிவ தருமமே சிறந்தது; சிவனடியார்க்கு அமுதூட்டுதலே மிகச் சிறந்தது என்று கருதித் திருப்பணி செய்து வருகிறாய். இம்மைக்கும் மறுமைக்கும் நன்மை கண்டாய். நீ கோரியபடியே, உன் நற்பெயர் விளங்குமாறு, சுவர்ண மூர்த்தியொன்று பிரதிஷ்டை செய்வதும் சித்தியாகிவிடும்; ஐயமில்லை. ஆதலால், நீ உனது வீட்டிலுள்ள இரும்பு, செம்பு, ஈயம், பித்தளை முதலியவற்றால் ஆகிய பாத்திரங்களை யெல்லாம் கொண்டுவா" என்று அருளினார். உடனே பொன்னனையாளும் வீட்டிலிருந்த அத்தகைய பாத்திரங்களை எல்லாம் கொணர்ந்து சித்தர் முன்னே குவித்தாள். சித்தர் பெருமான் அவை மீது விபூதியைத் தெளித்தார். பின்பு, "மகளே! இன்று இரவு முழுவதும் இந்தப் பாத்திரங்கள் எல்லாம் நெருப்பிலே புடமிடப்பட்டிருக்கட்டும்; காலையிலே இவை யெல்லாம் பொன்மயமாக மாறியிருக்கும். அந்தப் பொன்னைக் கொண்டு உனது பக்திக்குகந்த பூவணநாதரின் திரு உருவத்தைப் பொன்னால் அமைக்கலாம்." என்று திருவருள் புரிந்தார். பின்னர் மதுரைச் சித்தர் மறைந்தருளினார்.

சித்தர் பெருமான் மறைந்தருளியதும் அவ்வாறு வந்தவர் அன்று உலவாக்கிழியருளிய சோமசுந்தரப் பெருமானே என்பதைத் தெரிந்துகொண்டாள். பெருமகிழ்வு கொண்டவளாகித் திருவருளைச் சிந்தித்தபடியே அந்தப் பாத்திர வகைகளையெல்லாம் நெருப்பி விட்டாள். புடமிடப்பட்ட கீழ்வகை உலோகங்களெல்லாம் தமது மாசும், களிம்பும், இயல்பும் நீங்கப்பெற்றனவாகிப் பசும்பொன்னாய்த் திகழ்ந்தன.

அந்தப் பொன்னையெல்லாம் கொண்டு பொன்னனையாள் பூவணநாதரது திவ்விய உருவத்தைச் சமைத்தாள். நல்ல நாள் ஒன்றிலே பிரதிஷ்டை செய்து தேர் திருவிழா முதலியன சிறப்பாக நடத்தினாள். தினந்தோறும் சுவர்ணமேனிப் பூவணநாதரைக் கண்டு தரிசித்துப் பேரானந்தம் அடைந்தாள். சிலநாள் கழித்து முக்தியடைந்தாள்.

பூவணநாதரும் காலத்திற்கேற்ற கோலம் கொண்டு தனது பொன்மேனி மறைத்து இருந்தருள்வாராயினார். ★

## 37. சோழனை மடுவில் வீழ்த்தியது.

இராஜேந்திர பாண்டியன் வமிசத்திலே வந்த சுந்தரேசபாத சேகர பாண்டியன் சிவநேசச் செல்வனாக விளங்கி ஆண்டு வந்தான்,

குறுநில மன்னர்களையெல்லாம் தனது திறமையால் அடக்கினான், அவனுக்குத் தனது படை பலத்தைப் பெருக்குவதிலே மனம் இல்லை. ஆதலால், பத்துத் தேர்கள், நூறு யானைகள், ஆயிரம் குதிரைகள், பத்தாயிரம் வீரர்கள் என்று எண்ணிக்கையை அளவு கட்டிக் குறைத்து அவர்கட்கெல்லாம் தக்கபடி ஊதியம் கொடுத்தான். அவ்வாறு செய்ததாலே பொருள் மிஞ்சியது. மிஞ்சிய பொருளை யெல்லாம் சிவத்திருப்பணிக்கே செலவிட்டான் சுந்தரேச பாதசேகர பாண்டியன். சிவபெருமானுக்குக் கண்டிகை, மகுடம் முதலான திருவாபரணங்களைச் செய்தான். கோபுரம் மண்டபம் முதலிய வற்றைச் செப்பம் செய்து, திருத்திப் புதுப்பித்தான்.

திருப்பணியிலே நாட்டங்கொண்டு சேனையைச் சுருக்கிய பாண்டியனது நிலையைக் கண்டான் சோழ மன்னன். அவன் பாண்டியனை வெல்லக் கருதி வஞ்சிமாலை அணிந்து ஆயிரக்கணக்கான சதுரங்க சைனியத்துடன் பாண்டிய நாட்டின்மேல் படையெடுத்து வந்தான்.

அதனை அறியப்பெற்ற சுந்தரேச பாதசேகர பாண்டியன் திருக்கோவில் சென்று, "எம்பெருமானே! தேவரீரது திருவருளாலே அடியேன் ஆட்சி செய்து வருவதைத் தெரிந்துகொள்ளாமல், எளியேனது சேனையின் குறைந்த எண்ணிக்கையைக் கண்டு காவிரி சோழன் தனது சேனைக் கடலோடு படையெடுத்து வருகின்றான். இதற்கு நான் என்ன செய்வது?" என்று வருந்தி வேண்டினான். விண்ணொலி எழுந்தது. "பாண்டியா! கொஞ்சமும் நீ அஞ்சவேண்டாம். நாமே சென்று போர் செய்து நீ வெற்றியடையுமாறு செய்கிறோம்" என்றது. பாண்டியன் பேருவகையடைந்து திருவருளைச் சிந்தை செய்த வண்ணம் மனை சேர்ந்தான்.

பின்னர் போர்ப்பறைகளும் பல கருவிகளும் முழங்கத் தனது சிறிய படைகளோடு சோழனது சேனாசமுத்திரத்தை எதிர்க்கச் சென்றான். ஆனாலும், இறைவன் திருவருளால் சோழநாட்டவர் கண்களுக்குப் பாண்டியப் படை பல மடங்காகப் பெருகித் தெரிந்தது. சோமசுந்தரப் பெருமானே தனது வேதப்பரிமேல் ஏறிக்கொண்டு பாண்டியன் சேனைக்கு முன்னதாகச் சென்றார். பெருமான் வேட வடிவாகிக் காட்சியளித்தார். காதிலே தந்தக்குழை, கழுத்திலே முத்துமாலை, வெட்சிமாலை, கொண்டையிலே மயிலிறகு, கைகளிலே தந்தக்கடகங்கள் முதலியன விளங்கின. கறுநிறங்கொண்ட திருமேனி கொண்டிருந்தார். அவரது திருக்கரத்திலே கொலைவேல் மின்னியது.

வேடப் பெருமானைச் சோழன் கண்டான். "ஆயிரம் குதிரைகளுக்கொரு தனிப்பெரு வீரன் நான்! நீ எவ்வளவு?" என்று கர்வத்தோடு வினவினான். "இவ்வளவு தானே நீ! நான் அளவில்லாத குதிரைகளுக்கு ஒரு சேவகன் காண்பாய்." என்று விடையிறுத்தார், கடவுள் வேடனார். அதைக்கேட்ட சோழன் பெரிதும் பயந்து விட்டான். பயந்து நின்ற சோழனை நோக்கி வேடர்பிரான் தனது

கைவேலை மின்னல்போல் சுழற்றிக்கொண்டு சினந்து அதிர்ந்து சீறி வந்தார். சோழன் பெரும் பயமடைந்தான். "இவன் கைவேலால் நாம் இறப்பதற்குக் கொஞ்சமும் சந்தேகம் கிடையாது" என்று பதறி ஓடினன். அது சமயம் இறைவனாகிய வேடன் மறைந்தருளினர்.

அதுகண்ட பாண்டியன் குதிரையுடன் ஓடுகிற சோழனைத் துரத்திக்கொண்டு சென்றான். சோழன் திரும்பிப் பார்த்தான். தன்னைத் துரத்தி வருவது வேடனல்ல பாண்டியனே என்று கண்டான். உடனே சோழன் திரும்பிப் பாண்டியனைத் துரத்த ஆரம்பித்தான். பாண்டியன் மதுரையை நோக்கி விரைந்தோடினன். ஓடுகின்ற வேகத்தில் தவறி ஆழ்ந்தவோர் கிடங்கிலே விழுந்து விட்டான். பாண்டியன் விழுந்த மேற்றிசை மடுவிலே துரத்திவந்த சோழனும் தன் குதிரையுடன் விழுந்தான்.

விழுந்துபட்ட இருவருள் சோமசுந்தரப் பெருமான் திருவருளால் சுந்தரேசபாதசேகர பாண்டியன் மடுவிலிருந்து எழுந்து வந்து கரையேறினன். சோழன் மடுவிலே அழுந்தி இறந்தான். இறந்த சோழனது ஆடையாபரணங்கள் சதுரங்கசேனைகள் எல்லாவற்றையும் கவர்ந்து கொண்டான் பாண்டியன்.

பின்னர் சோமசுந்தரப் பெருமானுக்குத் தொண்டுகள் பல செய்து நல்லாட்சி செய்து வாழ்ந்தான் சுந்தரேசபாதசேகர பாண்டியன்.



## 38. உலவாக்கோட்டை அருளியது.

அதிராச் சிறப்புக் கொண்ட மதுரை மூதூரிலே அடியார்க்கு நல்லான் என்ற வேளாளன் ஒருவன் வாழ்ந்து வந்தான். தருமத்திற்கும் தருமத்தால் வரும் கீர்த்திக்கும் பாத்திரமாக இருந்தான். அவனது தரும காரியங்களுக்கு உறுதுணையாக நின்றாள் அவனது மனைவி தருமசீலை அவள் அன்பிலும், அருளிலும், கற்பிலும் சிறந்தவள். சிறந்த ஒழுக்கமுடையவள்.

அடியார்க்கு நல்லான் நிலம்பல உடையவனாகி உழவுத்தொழிலைச் சிறப்புறச் செய்து வந்தான். நல்ல விளைச்சல் கண்டது. ஆறில் ஒரு பங்கை அரசனுக்குக் கொடுத்துவிட்டு எஞ்சியதையெல்லாம் சிவனடியார்களுக்குத் திருவமுது படைப்பதிலே செலவு செய்தான். ஏராளமான அடியார்கள் நல்லான் அளித்த நல்விருந்தினை உண்டு சென்றனர் நல்லானது செல்வமும் மேலும் மேலும் பெருகி வந்தது.

அந்த நிலையிலே சோமசுந்தரப்பெருமான் உலகினுக்கு ஒன்றை உணர்த்த திருவுள்ளம் கொண்டார். தனது மிகுந்த செல்வம் குறைந்துவிட்டாலும் தனது அன்புக்குரிய இனிய பண்பினின்று அடியார்க்கு நல்லான் சிறிதும் வழுவமாட்டான் என்ற தன்மையை

உலகிற்கு உணர்த்த விரும்பினார். நீர்வளம் மிகுந்த அவனது நன்செய்களிலே விளைவு குறையும்படி செய்தார். அடியார்க்கு நல்லான் அதைப் பற்றிச் சற்றேனும் சிந்தை செய்யவில்லை. கடும் வட்டி கொடுத்தும், வட்டிக்கும் வட்டி கொடுத்தும் பணம் கடனாகப் பெற்று சிவனடியார்களுக்கு அமுதூட்டி வந்தான். சிறிது நாட்களில் கடன் பெறவும் இயலாது போயிற்று. தனது கொள்கையை நிறைவேற்ற நல்லானால் இப்போது முடியவில்லை. சிவனடியார்கட்கு அமுது படைக்க முடியாது போனதால் தானும் எதுவும் உண்பதில்லை என்று உபவாசம் இருந்தான். அவனது மனைவியும் கணவனுடன் சேர்ந்து உபவாசம் இருந்தாள். பட்டினியிருந்த இருவரும் நெஞ்சம் புண்ணாகினர். பசியால் உடல் வாடினர்.

பின்னர் அறக்குன்றென விளங்கிய அடியார்க்கு நல்லான் சிந்திக்கலானான். "இவ்வுடம்பு என்றாவது ஒரு நாள் அழியவேண்டியதுதான். இவ்வுடம்பிலிருந்து தரும காரியம் செய்ய முடியவில்லை. இந்த உடம்பு இருந்தென்ன, போயென்ன? மனைவியோடும் சென்று சோமசுந்தரப் பெருமானிடம் விண்ணப்பித்து விட்டு உயிர் விடுதலே நன்று" என்ற உறுதி பூண்டான். அதன்படியே தனது மனைவி தருமசீலையை அழைத்துக்கொண்டு திருக்கோவில் சென்றான். "விஷத்தை அமுதம்போல உண்டு தேவர்களைக் காப்பாற்றிய பெருமானே! உன்னுடைய மெய்யடியார்கள் அன்னம்பாலிப்பு வழிபாடு தடைப்படுமாறு எளியேனது நிலங்கள் எல்லாம் விளைச்சல் குறைந்து விட்டன. கடன் தருவதற்கும் யாரையும் காணோம். கடன் தரவல்லவர்களைத் தேவரீரே எனக்குக் காட்டியருள வேண்டும். இல்லாவிட்டால் இந்த உடலைத் திருச் சன்னதிமுன் கட்டையாகக் கிடத்திடுவேன்." என்று தனது மனந்திறந்து சொன்னான். அப்பொழுது மதுரைப் பெருமான் திருவருளால், "வேளாளப் பெருந்தகையே! அஞ்சவேண்டாம். உனது வீட்டிலே நாம் அரிசிக்கோட்டையொன்று சேர்த்துள்ளோம். அது எப்போதும் எடுக்க எடுக்கக் குறைவுபடாத உலவாக்கோட்டை. அதிலிருந்து வேண்டிய அளவு அரிசியை நீ எடுத்துக் கொள்ளலாம். சிவநேசம் குன்றாத அடியார்களுக்கு அமுதளிப்பதோடு ஏனைய தருமங்களையும் நீ செய்யக் கடவாய். முடிவில் உனக்கு மோக்ஷம் தருவோம்." என்று ஆகாச வாணி கூறியது.

வானொலி கேட்டு சந்தோஷமும் ஆச்சரியமும் கொண்டான். சோமசுந்தரப் பெருமானைப் பலமுறை வணங் அடியார்க்கு நல்லான். சோமசுந்தரப் பெருமானைப் பலமுறை வணங் கினான். பின்னர் இல்லாளுடன் இல்லம் சேர்ந்தான். அங்கே தனது தவத்தின் பயனைக் கண்டான். எடுக்கும்போதெல்லாம் குறையா திருக்குமாறு இறைவன் அருளிய அரிசிக்கோட்டையைக் கண்டு மிக மிக அகமகிழ்ந்தான். பெருமான் அருளிய உலவாக்கோட்டையை அனுதினமும் புஷ்பம், சந்தனம், தூபதீபம் முதலியவற்றால் வழிபட்டுப் பின்னர் அன்னம் ஆக்கும் பொருட்டும், காய்கறிகள் வாங்கும் பொருட்டும் வேண்டிய அளவே அரிசியை எடுத்துக்கொள்வான்.

அதனால், சிவனடியார்க்கும் அந்தணருக்கும், தென்புலத்தவர்களுக்கும், தெய்வங்களுக்கும், உறவினர்களுக்கும், விருந்தினர்களுக்கும், நட்புடையவர்களுக்கும் மாரிபோல வரையாது வாரி வழங்கினான். எந்நாளும் வறுமை யில்லாமல் குபேரனைப் போல வாழ்ந்து வந்தான்.

அடியார்க்கு நல்லான் இவ்வாறே பலப்பல ஆண்டுகள் தருமம் செய்து வாழ்ந்தான். பிற்பாடு தனது மனைவியோடும் உறவினர்களோடும் சிவரூபம் பெற்றுச் சிவபுரம் சேர்ந்தான். ★

## 39. மாமனாக வந்து வழக்குரைத்தது.

மதுரைமா நகரத்திலே தனபதி என்பவன் வாழ்ந்து வந்தான். அவன் வணிகர் குலத்திலே தோன்றியவன். குபேரசம்பத்து உடையவன். அவனது மனைவி சுசீலை அழகிலும் கற்பிலும் சிறந்து விளங்கினாள். செல்வம் சிறந்த அவர்கள் இருவரும் நெடுங்காலம் குழந்தைப் பேறு இல்லாமல் வருந்தினார்கள். ஆதலால், தனபதி தனது தங்கையின் மகனையே தனது அபிமான புத்திரனாக ஏற்றுக்கொண்டு உள்ளம் மகிழ்ந்தான். அவனது மனைவியும் மகனை ஏற்றுப் பரிவுடன் போற்றி வந்தாள். பலவகையான ஆபரணங்களை அவனுக்கு அணிவித்து அழகுறச் செய்தாள்.

தனபதி தனது தங்கையிடம் நன்றி மறந்தவனாக நடந்துகொண்டான். தன் மனைவியின்பால் கொண்ட காதல் மயக்கத்தாலே தன் தங்கையோடு அடிக்கடி கடுமையாகச் சண்டையிட்டு வந்தான். தங்கை ஒருநாள் கோபம் கொண்டு, "உனக்குக் கருவம் எதற்கு? குழந்தையில்லாத பாவி நீ! என்னுடைய அருமைக்குமாரனலல்லவோ நீ இருமைப் பயன்களை அடைவாய்." என்று கூறினாள். அச்சொல் கேட்ட தனபதி மிகவும் ரோஷமும் வெட்கமும் அடைந்தான். "அடுத்த பிறவியிலாயினும் குழந்தைப்பேறு கிடைக்கத் தவம்செய்ய வேண்டும்." என்று விரும்பினான். ஆதலால் தனது செல்வம் முழுவதையும் தனது மருமகனுக்கே உரிமை செய்துவிட்டுத் தனது மனைவியோடு வானப்பிரஸ்த நெறியைக் கடைப்பிடிக்கச் சென்றான்.

தவ வழி சென்ற தனபதி வருவதற்கு நாளாயிற்று. அதற்கிடையே அவனுடைய தாயாதிக்காரர்கள் வல்லடி வழக்குச்செய்து மருமகனிடமிருந்து எல்லாச் செல்வத்தையும் பறித்துக்கொண்டார்கள். நன்செய்கள், நகைகள், பல பொருள்கள், அடிமையாட்கள், பசுமாடுகள் அனைத்தையும்தாயாதிக்காரர்கள்கவர்ந்துகொண்டனர். செய்வது இன்னதென்று அறியாத தாயும் மகனும் கவலைகொண்டு வருத்தப்பட்டார்கள். திக்கற்றவருக்குத் தெய்வமே துணை. திருக்கோவில் சேர்ந்து சோமசுந்தரப் பெருமானை வணங்கி "எவருக்கும் அம்மையப்பர் ஆனவரே! எங்களது அவலநிலை தாங்கள் அறியாததல்லவே! எல்லாவற்றையும் பறிகொடுத்துவிட்டு உமது திருமுன்

வந்து நிற்கிறோம். நானோ தமியள்; எனக்கோ ஒரே மகன்; அவனும் விவரம் தெரியாத சிறுவன். எளியவர்களாகிய எங்களைக் காக்க வேண்டியது தேவரீர் கடன்" என்று கூறி அழுது நிலத்திலே விழுந்தாள் தனபதியின் தங்கை. விழுந்தவள் சிறிது உறக்கம்கொண்டாள், சிவபெருமான் திருவருளாலே. அப்போது கனவொன்று கண்டாள். அதிலே சிவபெருமான் அந்தண உருவத்தோடு எழுந்தருளி, "பெண்ணே! பொழுது விடிந்ததும் தாயாதிக்காரர்களை யெல்லாம் அரசன் மீது ஆணை கூறி தருமசபைக்குக் கொண்டுவந்து விடு. யாமே வருவோம். அறிவில் சிறந்த பெரியவர்கள் ஒப்புக்கொள்ளும்படி பொய் வழக்கைத் தீர்த்து பொருள்கள் எல்லாவற்றையும் உனக்கு மீட்டித் தருவோம்" என்று அருளிச் செய்தார். விழிப்புற்ற மாது வியப்பும் உவகையும் கொண்டாள். சோமசுந்தரப் பெருமானை வாழ்த்திக் கொண்டே தன் மகனோடு வீடு திரும்பினாள்.

மறுநாள் விடிந்தது. திருக்கோவில் சென்று அம்பலவாணரை வணங்கி வந்த வணிகமாது தாயாதிக்காரர் இருப்பிடம் சென்று பலர் கேட்கும்படி, "தருமநெறி தவறிய பொய் வழக்கிலே நீங்கள் வெற்றிபெற அனுமதிக்கமாட்டேன்; இங்குள்ள எல்லாரும் சாட்சியாக அரசன் மீது ஆணையிட்டேன். தருமசபைக்கு வாருங்கள்; பெரியவர்கள் ஆராய்ந்து சொல்லும் தீர்ப்பைக் கேளுங்கள். எங்களது உரிமைப் பொருளைத் தந்துவிட்டுச் செல்லுங்கள்" என்று கூறி மறித்தாள். தாயாதிக்காரர்கள் வலிமையுடைய முரடர்கள். அவர்கள் அவளை வைது அடித்தார்கள். அவள் உடனே தன் மகனோடு "இது முறையோ?" என்று கத்திக்கொண்டே தருமசபைக்குச் சென்று தனது வழக்கைக் கூறி முறையிட்டாள். விவரம் அறிந்து கொண்ட சபையோர் ஏவலர்களை அனுப்பி வைத்தனர். தனபதியின் தங்கை அப்போது ஏவலர்களோடு சென்று தாயாதிக்காரர்களை நியாய சபைக்கு இழுத்து வந்தாள்.

சோமசுந்தரப் பெருமானும் வானப்பிரஸ்தம் செய்யச் சென்றிருந்த தனபதியைப் போலவே உருவம் கொண்டு சபையில் எழுந்தருளினார்; அவர் கண்களிலே கோபம் வீசியது. தாயாதிக்காரர்களைப் பார்க்கும்போது முகம் வாடியது. மகனை நோக்கும்போது முகம் மலர்ந்தது. "மன்னன் இல்லையா? பெரியோர்கள் இல்லையா? கடவுள் இல்லையா? தருமமும் நியாயமும் ஒளிந்து கொண்டு விட்டனவோ?" என்று முறையிட்டார் தனபதிப் பெருமான்.

தனபதியே நேரடியாக வந்து தோன்றியதைக் கண்ட தாயாதிக்காரர்கள் பேராச்சரியம் அடைந்ததோடு மனம் தளர்ந்துவிட்டனர். மன வலிமையை இழந்து, "வெல்லமாட்டோம்" என்ற எண்ணமும் கொண்டனர். தங்களது தகாத செயலை உணர்ந்து வெட்கமும் பயமும் கொண்டனர். மாமனாகி வந்த சிவபெருமான் தனது மருமகனையும் தங்கையையும் அணைத்துக் கொண்டார். "ஐயோ! நீங்கள் பரம ஏழைகள் ஆகிவிட்டீர்களா?" என்று கூறி வருந்தினார்.

தாயும் மகனும் தனபதிப் பெருமான் காலில் விழுந்து கண்ணீர் விட்டனர். வணிகப் பெருமான் மருமகனை அன்போடு எடுத்துத் தழுவி அவன் முன்பு அணிந்திருந்த ஒவ்வொரு நகையாகப் பெயர் சொல்லி எல்லாரும் மனம் இரங்கும்படி வாய்விட்டு அழுதார். பிறகு சோமசுந்தரப் பெருமான் இருந்தருளும் திக்கு நோக்கி வணங்கி. "மாணிக்கம் விற்றருளிய எங்கள் குலத் தலைவா! வழக்கைத் தீர்த்துப் பொருளைத் தருவாய்" என்று முறை செய்தார். தாயாதிக்காரரை வெகுண்டு பார்த்து விட்டுச் சபையை நோக்கி, "நியாயம் வழங்குங்கள்" என்று விண்ணப்பித்துக்கொண்டார்.

இருதிறத்தாரின் வழக்குகளையெல்லாம் நன்கு கேட்டு ஆராய்ந்து சீர்தூக்கிய நீதிநூல் வல்ல அறவோர் 'தாயாதிக்காரர்கள் வழக்கு பொய்யானது" என்று தீர்ப்புக் கூறினர்.

அதனைக் கேட்ட தாயாதிக்காரர்கள் வேறு வழியிலே தமது வழக்கைத் திரித்துக் கூற முயன்றார்கள். "வழக்காட வந்தவர் தனபதி வணிகர் அல்ல" என்று எதிர்வாதம் செய்தனர். அதுசமயம் தனபதிப் பெருமான் தமது கைகொட்டிச் சிரித்து தாயாதிக்காரர்கள் ஒவ்வொருவரையும் விளித்து அவரவர்களது குடிப்பெயர், பட்டம், காணி, தாய், தந்தை, உடன் பிறந்தவர்கள், சொந்தக்காரர்கள், அவரவர்கள் குண வேறுபாடுகள், செய்கின்ற தொழில்கள் எல்லாவற்றையும் சிறிதும் பிழையில்லாமல் முறையாகச் சொல்லிக்காட்டினார். அதுகேட்ட நீதிப்பெரியோர் "இவர் தனபதிச் செட்டியாரே" என்று முடிவாகக் கூறிவிட்டனர். "நம்முடைய வழக்கு தோற்று விட்டது; பாண்டிய மன்னன் அறிந்தால் நம்மைத் தண்டிப்பானே" என்று பயந்து ஏதேதோ காரணங்களைக் கூறிக்கொண்டு பல இடங்களுக்குச் சிதறி ஓடினார்கள், தாயாதிக்காரர்கள்.

தாயாதிகள் ஓடிச்சென்றதும் நீதிமான்கள், "தனபதி வணிகர் முன்பு தந்திருந்த பொருள்கள் அனைத்தும் தத்துப் புத்திரனுக்கே உரியவை" என்று முடிவு கூறிச் சாசனம் செய்தனர். சாசனத்தை வணிகத் தந்தையிடம் தந்தனர். தனபதியாகத் தோன்றிய சிவ பெருமான் அனைவரும் காண மறைந்தருளினார்.

சுந்தரேச பாத சேகரபாண்டியன் அந்த வழக்கைப் பற்றிக் கேள்விப்பட்டான். தனபதி வணிகனாகத் தோன்றி மறைந்தவர் சிவபெருமானே என்பதைத் தெரிந்து மிகுந்த அதிசயம் கொண்டான். தனபதியின் தத்துப்புத்திரனுக்கு வரிசைகள் பல வழங்கினான். சிவபெருமான் திருக்கோவிலைப் பொன்னால் புதுப்பித்தான். சிறிதுகாலம் சென்றபின் தனது அருமைக்குமாரன் வரகுணனுக்கு முடிசூட்டித் தனது அரசியலைத் தந்துவிட்டுச் சிவலோகம் புகுந்தான்.

★

## 40. வரகுணனுக்குச் சிவலோகம் காட்டியது.

பாண்டியன் வரகுணன் திரிகரணசுத்தியோடு சோமசுந்தரப் பெருமானை வழிபடும் பண்புடையவன். சிறந்த அழகையும் பெருஞ்

சிறப்பையும் உடையவன். வேத வேதாந்தங்களையும் ஆராய்ந்து அவற்றின் கொள்கைகளை நிலைபெறச் செய்தவன். குணத்தின் குன்று; பக்தியின் பொக்கிஷம்.

வரகுணபாண்டியன் ஒருநாள் வேட்டையாடச் சென்றான். காடு மலை எங்கும் திரிந்து புலி, யானை, பன்றி ஆகிய பல விலங்குகளை வேட்டையாடிக் கொன்றான். மாலை நேரம் வந்தது. ஆதலால், மதுரைமா நகரத்தை நோக்கித் தனது கனவட்டம் என்ற குதிரை மேலேறி அதிவேகமாக வந்து கொண்டிருந்தான். வழியிலே அந்தணன் ஒருவன் தூக்க மயக்கத்திலே சோர்ந்து கிடந்தான். வேக மாக வந்த குதிரை தன் காலை அந்த அந்தணன் மேல் வைத்து மிதித்துவிட்டது. அவன் இறந்துபோனான். விவரம் ஏதும் அறியாத வரகுணன் அரண்மனை சேர்ந்தான்.

அது சமயம் குதிரையின் கால்பட்டிறந்த அந்தணனது உற வினர்கள் அவனது சவத்தை அரண்மனை வாசலிலே கொண்டுவந்து கிடத்தி நடந்ததைக் கூறினர். அது கேட்டுப் பாண்டியன் பெரிதும் வருந்தினான். உறவினர் கையில் நிரம்பப் பொருள் தந்து இறந்த வனுக்கு இறுதிக் கடனாற்றுமாறு பணித்தனன். இருந்தாலும் கொலைப்பழி பிரம்மஹத்தியாக வந்து பாண்டியனைப் பிடித்துக் கொண்டது.

தன்னைப் பற்றிய தோஷம் விலகுமாறு பாண்டியன் பல பிராயச் சித்தங்களைச் செய்தான். மறையவர் மொழிந்தபடி நடந்தான். ஐவகை உண்டிகளை ஆற்றின் கரையிலே வேதியருக்குக் கொடுத் தான். திருமூர்த்திகளின் வடிவமாகி நிற்கும் அரசமரத்தினை வலம் வந்தான். இன்னும் பலவகையான தானங்களைச் செய்தான். எவ் வளவு செய்தபோதிலும் தோஷம் விலகாமல் கண்ணுக்குத் தெரியும் வண்ணம் பாண்டியனைச் சூழ்ந்து கொண்டது. கொலைப்பழி மன்னனைப் பெரும்பாடு படுத்திவைத்தது. பாண்டியனது தேசு மங் கியது. மனம் நைந்தது. தோஷம் பெருகிவருவதைக் கண்ட வேதியர் களும் கவலை கொண்டு, "வேந்தனே! நீ நாள்தோறும் நியமவிரதத் தோடு சோமசுந்தரப் பெருமானை ஆயிரத்தெட்டு முறை பிரதட் சிணம் செய்வாயாக. இப்படிப் பத்து நாட்கள் செய்து வந்தால் பிரம்மஹத்தி தோஷம் விலகும்படிக்கு எல்லாம் வல்ல பிரானே வழி காட்டி அருள்வார்," என்று மொழிந்தனர்.

பாண்டியன் திருக்கோயில் சென்று சோமசுந்தரப் பெருமானை வணங்கி, "கங்காதரரே! இந்திரன் பழி தீர்த்தருளினீர்! மாபாதகம் தீர்த்தருளினீர்! எளியேனது தோஷத்தையும் விலக்கியருளவேண்டும்" என்று விண்ணப்பித்துக்கொண்டு தரையில் விழுந்து பணிந்தான். பின்னர் மறையவர்கள் கூறியவாறே ஆயிரத்தெட்டு முறை வலம் வந்து தோத்திரம் செய்தான். இவ்வாறாகப் பத்து நாட்களும் பய பக்தியுடன் பாண்டியன் வலம் புரிந்து துதி செய்தான். இறுதி நாளிலே சொக்கேசர் அருளால் வானொலி எழுந்தது. அது சொல்லி

யது, "மாறனே! நீ செய்த பிரதட்சிணம் பெரும்பயன் கொடுக்க வல்லது. உனது செய்கையால் நாம் மிகவும் உள்ளம் பூரித்தோம். எதற்கும் நீ பயப்படவேண்டாம். காவிரிச்சோழன் உன்னேடு சமர் செய்ய வருவான்; நீயும் எதிர்ப்பாய். போரிலே தோற்கும் சோழன் புறமுதுகு காட்டி ஓடுவான். நீ அவனைத் துரத்திச் செல்வாய். அப்படிச் செல்லும்போது திருவிடைமருதூர் என்னும் திவ்ய க்ஷேத்திரத்தை அடைவாய். அத்தலம் நாமே நம்மைப் பூசை செய்து கொள்ளும் பெருமை உடையது. அங்கே உனது தோஷத்தைப் போக்கி அருளுவோம்" என்று சொல்லியது. பாண்டியன் பேருவகை கொண்டான். மதுரேசனைப் போற்றிக் கொண்டே அரண்மனை சேர்ந்தான்.

சில நாட்கள் சென்றன. காவிரிச்சோழவேந்தன் புலிக்கொடி உயர்த்திப் போர்முரசு கொட்டி பெருஞ்சேனையுடன் படையெடுத்து வந்தான். பாண்டிய நாட்டினைச் சுற்றி வளைத்துக்கொண்டான். பாண்டியன் எதிர்த்துக் கடும்போர் புரிந்தான். போரின் விளைவாகச் சோழன் தோற்று ஓடினன். மீனக்கொடி தூக்கிய பாண்டியன் அவனைத் துரத்திக்கொண்டு போனன்.

வரகுணபாண்டியன் காவிரிக்கரையை அடைந்தான். திவ்விய க்ஷேத்திரத்தினருகே பூசத்துறை சேர்ந்து நீராடினன். பின்னர் திருவிடைமருதூரிலே எழுந்தருளிய மகாலிங்கக் கடவுளை வணங்கும் பொருட்டு திருக்கோவிலின் கிழக்கு வாசலைக் கடந்து உள்ளே சென்றான். அப்போது அந்த இடத்திலேயே, கிழக்கு வாசலுக்கு வெளியே, பிரம்மஹத்திதோஷம் பாண்டியனைத் தொடராது நின்று விட்டது. பழி நீங்கிய பாண்டியன் பரவசமானன். பக்தியுணர்ச்சி பொங்க நெடுநேரம் உருகி நின்றான். மகாலிங்கமூர்த்தியைப் பல வாறாகத் துதி புரிந்தான்.

அப்போது பெருமான், "பாண்டியா! உன்னைப் பிடித்திருந்த பிரம்மஹத்தி கிழக்கு வாசலிலே நின்றுகொண்டிருப்பதால் நீ அந்த வாசல் வழியாகச் செல்லவேண்டாம். மேற்கு வாசல் வழியாக நமது மதுரையம்பதிக்குச் செல்வாயாக" என்று பணிந்தருளினர்.

வரகுண பாண்டியன் திருவிடைமருதூரிலே சில நாட்கள் தங்கினன். பல திருப்பணிகளைக் கோவிலுக்குச் செய்தான். திருக்கோவிலின் மேலைக் கோபுரத்தைத் தன் பெயரால் கட்டி முடித்தான். பின்னர் மதுரை நோக்கித் திரும்பினன். திரும்பும் வழியிலே பல சிவக்ஷேத்திரங்களிலே தரிசனம் செய்துகொண்டே வந்தான்.

வரகுணபாண்டியன் சோமசுந்தரக் கடவுளை தினந்தோறும் தரிசனம் செய்து மகிழ்ந்தான். பல பெரியவர்களின் மூலமாக, சிவ பரமான விஷயங்களைக் கேட்டு உவகை கொண்டான். அவ்வாறு கேட்டு வரும்போது வேதம், ஆகமம், புராணம், ஸ்மிருதிகள் எல்லாவற்றிலுமே, "உலகங்களில் எல்லாம் மிக உயர்ந்தது சிவலோகம்" என்று உணர்த்தப்பட்டிருப்பதை மனத்தில்

கொண்டான். ஆதலால் பாண்டியனுக்குச் சிவலோகம் காணவேண்டு மென்ற எண்ணம் மேலோங்கியது.

ஆசை மேலிட்டதால் மகாசிவராத்திரியிலே திருக்கோவிலை அடைந்தான். சோமசுந்தரப் பெருமானைத் துதித்து ''எம்பெருமானே! மெய்யடியார்கள் சூழத் தேவரீர் சிவலோகத்தில் எழுந்தருளியிருக்கும் திவ்யமான திருக்காட்சியை அடியேன் தரிசனம் செய்து வணங்க ஆவல் கொண்டுள்ளேன்'' என்று விண்ணப்பித்துக்கொண்டான். பக்திக்கு எளியவரான சிவபெருமானும் பாண்டியனுக்காக இப்பூலோகத்திலேயே சிவலோகத்தைக் காட்டியருளத் திருவுளம் கொண்டார். சோமசுந்தரப் பெருமானின் திருவுளக் குறிப்பை உணர்ந்த அச்சிவலோகம் வானத்திலிருந்து இறங்கியது. எங்கும் தேவப் பேரொளி வீசியது. சிவபெருமான் நந்திகேசுவரரை அழைத்து தமது மெய்யன்பனும் பாண்டியனுக்குச் சிவலோகத்தைக் காட்டி வரும்படி பணித்தார். நந்திதேவரும், ''வழுதியே! வருக! சிவலோகம் இதுவே! காண வருவாயாக'' என்று கூறியருளினர்.

வரகுணன் கண்ட சிவலோகம் பெருந் திருக் காட்சி உரை கடந்த ஒன்று; கற்பனைக்கெட்டாத வண்ணக்கோலம்; தென்றல் காற்று வீசியது; அதிலே கருப்பூர மணம் கமழ்ந்தது. எங்கு பார்த்தாலும் தேவகானமும் இன்னிசைக் கருவி முழக்கமும்தான். காண்பதற்கரிய காட்சிகளைக் கண்டு பேரானந்தமடைந்தான் வரகுண பாண்டியன். நந்திகேசுவரர் பாண்டியனை எங்கும் இட்டுச் சென்று நான்முகன் வாழும் பதம், திருமாலின் பதி, உருத்திரர்களின் நகரங்கள், அஷ்டதிக்கு பாலர்கள், இந்திரன் ஆகியோர் வாழும் இடங்கள் எல்லாவற்றையும் காண்பித்தார். பிறகு சிவசாலோக்ய பதத்திலே வாழும் தாசமார்க்கிகளையும், சிவசாமீப்பிய பதத்திலே வாழும் புத்திர மார்க்கிகளையும், சிவசாரூப்ய பதத்திலே வாழும் சக மார்க்கிகளையும் காட்டிக்கொடுத்தார். அறநெறி நின்று சிவனடியார்க்கு அமுதுபடைத்துச் சிறந்தவர்களையும், சிவபதம் அடைந்த பாண்டிய மன்னர் பலரையும் காண்பித்தார் நந்திசர். வரகுண பாண்டியன் ஒவ்வோர் இடத்திலும் நின்று பல தரம் வணங்கிக் கைகுவித்து வந்தான். இறுதியில் நந்திகேசுவரர் பாண்டியனை அழைத்துக்கொண்டு வந்து சிவ சன்னிதானத்திலே கொணர்ந்து நிறுத்தினர்.

சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் காட்சியைக் கண்டான் பாண்டியன். என்ன கோலாகலம்! என்ன குதூகலம்! வேதங்களும் ஆகமங்களும் திருவுருவம் எடுத்து இரு பக்கங்களிலும் நின்று வாழ்த்திக் கொண்டிருந்தன. தும்புருவும் நாரதரும் யாழ்மீட்டி தேவகானம் பொழிந்தனர். தேவமங்கையர் திருநடனம் ஆடினர். விநாயகப்பெருமான், முருகக்கடவுள், வீரபத்திரர் மூவரும் சிவபெருமானை வணங்கி, ஏவல் ஏற்றுப் பணி செய்து நின்றனர். மஹாவிஷ்ணுவும் பிரம்மாவும் மரியாதையுடன் ஒதுங்கி நின்றனர்.

தேவேந்திரனும் எண்டிசைக் காவலரும் நடுநடுங்கி விண்ணப்பம் செய்தபடி இருந்தனர். அடியவர்கள் எல்லாரும் அருள்கனிந்த சிவானந்தப் பேரமுதினைப் பருகி, "சங்கரா! சிவ, சிவ!" என்று முழக்கிக் கைகுவித்து நின்றனர். அவரவர்கள் தகுதிக்கு ஏற்றபடி வரங்களை அருள்புரிந்து கொண்டிருந்தார் சிவபெருமான். உமாதேவியார் புன்னகை பூத்தவண்ணம் தேஜோமயமாகத் திகழ்ந்தார். அரியணையிலே அமர்ந்திருந்த சோமசுந்தரப் பெருமானைத் தரிசனம் செய்து வணங்கினான் பாண்டியன். வாய்ச் சொற்கள் குழறின; புளகாங்கிதம் ஏற்பட்டது. கருணைப் பெருங்கடலிலே மிதந்து சென்ற பாண்டியன் பரமானந்தம் என்ற தேவாமிர்தத்தைப் பருகினான்.

பக்திமயமாக நின்ற வரகுண பாண்டியன் எதிரே அருள்மயமாகத் துலங்கிய சிவலோகம் மறைந்தது. பழைய மதுரை தோன்றியது. சோமசுந்தரப் பெருமானும் உமையம்மையும் எழுந்தருளி இருந்தனர். வரகுணபாண்டியன் எம்பெருமான் முன்பு நின்று கண்ணீர் சொரிய, நாக்குழறத் துதிக்கலானான். 'நாயினை நிகர்த்த எளியேனது கொலைபாதகம் போக்கியருளிய தாயாகிய தயாபரனே! அடியவருள் கடையவனாகிய நானும் கண்டு மகிழும் வண்ணம் சிவலோகம் காட்டியருளிய தேவதேவனே! பாழ்பட்ட என்னையும் ஆட்கொண்ட பெருவள்ளலே! பக்தி செய்பவர்களுக்குச் சிவலோகம் உண்டு என்று சாஸ்திரம் மொழிவதை மெய்யென்று எளியேனுக்குக் காட்டி அருளிய பெருங்கடவுளே! தேவரீரது திருவடிகட்கு வணக்கம்! வணக்கம்! வணக்கம்!" என்று பலவாறாகப் போற்றி துதிசெய்தான். சோமசுந்தரப் பெருமானுக்கு பூஜை முதலான விசேஷங்களைச் சிறப்புடன் செய்து செங்கோல் செலுத்தி வாழ்ந்து வந்தான்.

ஒப்பும் உயர்வும் இல்லாத அம்மதுரையம்பதி அன்றிலிருந்து பூலோக சிவலோகம் என்று பெயர் பூண்டு புகழுடன் விளங்குவதாயிற்று. ★

## 41. விறகு விற்றது.

வரகுண பாண்டியன் பெருஞ் சிறப்புடன் மதுரைப்பதியை ஆண்டு வருகின்ற நாளிலே ஏமநாதன் என்ற யாழ்ப்பாணன் வடநாட்டிலிருந்து மதுரைக்கு வந்து சேர்ந்தான். அவன் பல வெற்றி விருதுகள் பெற்றவன். வரகுண பாண்டியனது சபையை அடைந்து மன்னனைப் பலபடியாகப் புகழ்ந்து போற்றினான். பிறகு தனது யாழினை சுருதி சுத்தமாகக் கூட்டி இன்னிசை பாடினான். இன்பகீதம் கேட்ட வேந்தன் உவகை மிகவும் கொண்டான். ஏமநாதனுக்குப் பல ஆடைகளையும் பொன்னணிகளையும் வழங்கினான். உணவுக்கு வேண்டிய பல பொருள்களைக் கொடுத்து உதவியதோடு பெரிய வீடொன்றையும் அவன் தங்குவதற்காக அளித்தான். தனக்கென்று அமைந்த வீட்டிற்கு மிகுந்த சந்தோஷத்தோடு சென்றான் ஏமநாதன்.

சீர் வரிசை பெற்ற ஏமநாதனுக்கு கருவம் தலைக்கேறி விட்டது. ஏற்கனவே பல வெற்றிகள் கண்டவனுக்குப் பாண்டியன் பரிசிலும் சேரவே தனக்கு ஒப்பானவரும் மேற்போனவரும் யாரும் இல்லை என்று எண்ணி இறுமாந்திருந்தான். அதனை உணர்ந்த பாண்டியன் ஏவலாளர்களை விளித்து பாணபத்திரனை அவைக்கு அழைத்து வருமாறு பணித்தான். ஏவலர் பாணபத்திரனை இட்டுவத்தனர். அவனும் பாண்டியன் அடிபணிந்து அருகில் நின்றான். "பாணபத்திரா! இசை வல்லானாகிய ஏமநாதனோடு நீ பாட வல்லவனோ?" எனக் கேட்டான். "தென்னவரே! அடியேன் உமது திருவுளத்தின் பலத்தாலும் சிவபெருமானது அருள் வலிமையாலும் பாட வல்லமை பெறுவேன். சிறப்பாகப் பாடி ஏமநாதனது வெற்றி விருதுகளையெல்லாம் பறித்து அவனது கருவத்தையும் போக்குவேன்" என்று சொன்னான். "நல்லது; நீ நாளை வந்து அவனோடு பாடுக; இப்போது போகலாம்" என்று சொல்லிப் பாணபத்திரனை அனுப்பி வைத்தான் பாண்டியன்.

பாணபத்திரன் தனது இல்லம் சென்றிருந்தான். ஊரின் பல பாகங்களிலே ஏமநாதனது சிஷ்யர்கள் சென்று நல்லிசை பரப்பினார்கள். பாணபத்திரனும் அவர்கள் பாடுவதைக் கேட்டு மெச்சினான். வியப்போடு, "ஏமநாதனிடம் இசை கற்றுக் கொள்பவர்களே இப்படிப் பாடினால், ஏமநாதன் எப்படிப் பாடுவானோ? நாளை நான் பாட்டுப்பாடி அவனை வெற்றி கொள்வது எப்படி?" என்று கவலை கொண்டான். திருக்கோவிலை அடைந்து சிவபெருமானை வணங்கி, "ஐயனே! மெய்யனே! அடியேனுக்குத் தேவரீரது திருவருள் தான் துணைபுரிய வேண்டும்." என்று வேண்டிக்கொண்டு தனது வீடு சென்று கவலையை ஒழித்துச் சுகமே இருந்தான்.

சச்சிதானந்த வடிவமான சோமசுந்தரப் பெருமான் பக்தன் பாணபத்திரனது பகைவனான ஏமநாதனை ஓட்டத் திருவுளம் கொண்டார். ஆதலால், வயது முதிர்ந்து இளைத்துப்போன ஒரு விறகாளைப் போல தமது இச்சாமாத்திரத்திலே தம்மை மாற்றிக் கொண்டார். இடையிலே கந்தைத் துணியை உடுத்தியிருந்தார். வலப்பக்கத்திலே கொடுவாளைச் செருகியிருந்தார். திருவடிகளிலே தேய்ந்த பழைய செருப்புகளை அணிந்திருந்தார். பழைய உறையிலே போட்டிருந்த யாழைத் தோளிலே தொங்கவிட்டுக் கொண்டிருந்தார். தலையிலே விறகுச் சுமை இருந்தது. மதுரை மூதூரின் தெருக்களிலே விறகுச் சுமையை விலை கூறிச் சென்றார். விறகின் விலையைக் கேட்டவருக்கு உயர்ந்த விலையைச் சொல்லிப் பல தெருக்களைக் கடந்து வந்தார் விறகாளப் பெருமான். பகற்பொழுது சென்று விட்டது. ஏமநாதனது வீட்டுக்கருகே வந்து சேர்ந்தார். தாம் தலையிலே தாங்கி வந்த விறகுச் சுமையை ஒருபுறத்திலே வைத்துவிட்டு ஏமநாதனது வீட்டின் புறத் திண்ணையிலே உட்கார்ந்து இளைப்பாறினார். அப்போது இனிமையான கானத்தைக் கொஞ்சம் பாடினார்.

உள்ளேயிருந்த ஏமநாதன் இன்னிசையைக் கேட்டான். இசையின் நயம் இசைவல்லானாகிய அவனையும் இழுத்தது. வெளியே வந்து

இளைப்பாற அமர்ந்த தெய்வ விறகோனைக் கண்டான். "நீ யாரப்பா?" என்று வினவினான். "நான்யாழிலேவல்லமைபெற்றபாணபத்திரனது அடிமை. பாணபத்திரனுக்குஎத்தனையோ சிஷ்யர்கள்உண்டு. நானும் கீதம் கற்றுக்கொள்ள விரும்பினேன். என் வயது முதிர்ச்சி காரண மாக என்னைத் தகுதியற்றவனாகக் கருதி என்னை ஒதுக்கிவிட்டான். அதனால் தான் நான் விறகு விற்றுப் பிழைக்கிறேன்" என்றார் தேவ விறகாள். அதுகேட்ட ஏமநாதன், "அப்பனே! நீ பாடிய அதே இசையை மற்றும் ஒரு முறை பாடு; கேட்போம்" என்றான்.

விறகாளப்பெருமான் தனது யாழை உறையிலிருந்து பரிவுடன் எடுத்து, நரம்பு முடுக்கிச் சுருதி சேர்த்துக்கொண்டார். விரல் பரி மாறி சுநாதம் எழுப்பினார். இனிமையான ராகங்களுள் ஒன்றான சாதாரிப் பண்ணை அசை, வீதிப்போக்கு. வண்ணம், திறம் ஆகிய வற்றால் யாவரும் விரும்பும் நல்லிசை எழுப்பினார். யாழின் கீதமும் குரலின் இசையும் ஒன்றுகூடி இழைந்தன. குற்றமற்ற முறையிலே பண் எழுந்து சிறந்து விளங்கியது. பாடலின் பல்வகை குணங்கள் மேலோங்கி விளங்கின. இன்னொலி கூட்டிய நல்லிசைத் தேவகாந் தாரி ராகம் எங்கணும் பரவியது. ஏமநாதனது உடலிலே, நாடி நரம்பிலே, மயிர்க் கால்களிலே, உள்ளத்திலே, ஆவியிலே, கலந்து கிளர்ச்சி செய்தது தேவப்பண். ஏமநாதன் பேராச்சரியம் அடைந்த வனாகி, "இது நானறிந்த சாதாரிப்பண் அன்று. இது தேவகானமே யாகும்! என்ன விந்தை! பாணபத்திரனால் ஒதுக்கித் தள்ளப்பட்ட கிழவனின் இசையே இப்படியிருக்குமானால், அந்த பாணபத்திர னுடைய இசை எப்படியிருக்குமோ?" என்று கருதிக் கவலை கொண்டான். உடனே அங்கிருந்து எழுந்தான். தன்னுடைய மாண வர்கள் நிலைகுலைந்து செல்ல இரவோடு இரவாக ஓடிப்போக முற் பட்டான். எல்லாவற்றையும் அவையவை கிடந்த இடத்திலேயே போட்டுவிட்டு ஏமநாதன் வடக்கு திசையை நோக்கி விரைந் தோடினான்.

சோமசுந்தரப் பெருமான் அன்றிரவே பாணபத்திரனது கன விலே தோன்றியருளினார். "பாணபத்திரா! நீ வேண்டிக்கொண்ட படி நாம் இன்று விறகாளாகச் சென்று ஏமநாதனைக் கண்டோம். 'யாம் பாணபத்திரனது அடிமை' என்று கூறி சாதாரிப்பண் பாடி வென்று உன்னைக் காத்தோம்" என்று இயம்பியருளினார். உள்ளத் தாலும் நினைப்பதற்கரிய மொழிகளைக் கேட்ட பாணபத்திரன் நடுக் கம் கொண்டு கண்விழித்து எழுந்தான்.

உவகையும் பக்தியும் பொங்கிய உள்ளத்தோடு சூரியோதயத் திற்கு முன்னதாகவே திருக்கோவில் சென்று சோமசுந்தரப் பெரு மானை வணங்கினான். "எம்பெருமானே! நான் என்ன அபசாரம் செய்துவிட்டேன்! தேவர்கோன்அறியாத தேவதேவனை விறகாளாகச் செய்துவிட்டேனே! மகாதேவனை மனிதனாக்கிவிட்டேனே! மன்னிக்கக் கூடாத எவ்வளவு பெரிய பிழை செய்துவிட்டேன் நான்! அபசாரம்

செய்த என்னை மன்னித்தருளவேண்டும் பெருமானே!" என்று கூறி இரங்கி வணங்கி வலம் வந்து வெளிவந்தான்.

பின்னர் பாணபத்திரன் அரசருக்கரசனான பாண்டியன் முன்னிலே சேர்ந்து பணிந்து நின்றான். பாண்டியனும் உடனடியாக வடபுல வல்லகனாகிய ஏமநாதனை அழைத்து வருமாறு ஏவலர்களைப் பணித்தான். ஏவலர் சென்று தேடினர். ஏமநாதனைக் காணோம். அதைக் கண்டு அக்கம் பக்கத்து வீட்டில் இருந்தோர் சிலர் அவர்களைப் பார்த்து, "சேவகர்களே! ஏமநாதன் நேற்றுவரை இங்கே தான் இருந்தான். நேற்று அந்திசாயும் வேளையிலே கிழட்டு விறகு வெட்டி ஒருவன் வந்தான். அவன் தன்னைப் 'பாணபத்திரனது அடிமை' என்று கூறிக்கொண்டான்; இனிதே கீதம் பாடினான். பிற்பாடு என்ன நடந்ததோ எங்களுக்குத் தெரியாது ஆனால் ஏமநாதன் நடுராத்திரியிலே ஓடிவிட்டான்" என்று சொன்னார்கள். ஏவலாளர்கள் வேகமாகச் சென்று பாண்டிய மன்னனிடம் இச் செய்தியைத் தெரிவித்தார்கள்.

பாண்டியன் வரகுணன் பெரும் வியப்படைந்தான். சந்தேகம் அடைந்து பாணபத்திரனைப் பார்த்து, "ஏமநாதன் ஏன் ஓடிப் போனான்? இங்கிருந்து சென்ற பிற்பாடு நீ என்ன செய்தாய்?" என்று வினவினான். அதற்கு விடையாகப் பாணபத்திரன் தான் சோமசுந்தரப் பெருமானிடம் விண்ணப்பித்துக் கொண்டதையும் பெருமான் தன் கனவிலே தோன்றித் திருவாய் மலர்ந்தருளியதையும் சொன்னான்.

ஏவலர்கள் வந்து கூறியதும் பாணபத்திரன் கூறியதும் ஒன்றாக இருந்தது கண்ட பாண்டியன், "இது சோமசுந்தரப் பெருமானின் திருவிளையாடலே!" என்று தெளிந்தான். இறைவன் திருவருளின் திறத்தையும் பாணபத்திரனது பக்தியின் பெருமையையும் நன்கு உணர்ந்து கொண்டான். திருக்கோவில் சென்று சிவபெருமானை வணங்கிய பின்னர் பாணபத்திரனை யானை மேல் அமர்த்தி ஊர்வலம் செய்வித்தான்.

தனது இசைப் புலவன் மகிழும்படிக்கு ஏராளமான வரிசைச் சிறப்புகள் செய்து, "இசை வேந்தரே! சிவபெருமானே உமக்காகக் குற்றவேல் புரிந்தார் என்றால் நாங்கள் எல்லாரும் உம்முடைய ஏவலர்கள் அல்லவா! ஆதலால் நீங்கள் எம்முடைய தலைவர்; நாங்கள் உமது அடிமை. இன்று முதல் நீங்கள் சோமசுந்தரப் பெருமானைப் பாடுவதையே கடமையாகக் கொள்ள வேண்டுகிறோம்" என்று நயந்து விடைகொடுத்தனுப்பினான் வேந்தன்.

வரகுண பாண்டியன் கொடுத்த செல்வம், ஆடை, ஆபரணம் எல்லாவற்றையும் புலவர்களுக்கும் சிஷ்யர்களுக்கும் உறவினர்களுக்கும் பங்கிட்டுக்கொடுத்து இனிது வாழ்ந்து வந்தான் பாணபத்திரன். சோமசுந்தரப் பெருமானது திருவடிகளை மறவாத நெஞ்சினனாகி, திருப்பாடல்கள் பாடி இசையோடு வாழ்ந்து வரலானான். ★

# 42. திருமுகம் கொடுத்தது

பாணபத்திரன் பாண்டியனது அவைக்களத்திலே பாடுகின்ற உரிமை நீங்கியவனுகி தினந்தோறும் சோமசுந்தரப்பெருமான் சன்னிதானத்தையடைந்து முக்காலங்களிலும் பக்திரசம் பொருந்திய தெய்வத் தமிழ்ப் பாடல்களைப் பாடும் நியமத்தை மேற்கொண்டான். பெருமான் திருவடிமுன் பாடுவதைத் தவிர வேறெதுவும் செய்யாத பாணபத்திரன் வறுமையில் ஆழ்ந்து வருந்தினுன். பக்தனது ஏழ்மை நிலையைக்கண்ட இறைவன் அன்ருடம் பாண்டியனது பொக்கிஷத்திலிருந்து செல்வத்தைக் கவர்ந்து கொணர்ந்து பாணபத்திரனது முன்பு வைக்கலானுர். பொற்காசுகள், மணிகள், நகைகள், பொன் ஆடைகள், சாமரங்களின் பொற்பிடிகள், ஆசனத்தின் பொன் தகடுகள் என்று பலவகைப் பொருள்களைப் பாணபத்திரன் பெற்றுச் செல்வானுனுன்.

இவ்வாறு நடைபெற்றது இறைவனுகிய கள்வனுக்கும் பக்தனுகிய பாணபத்திரனுக்குந்தான் தெரியும். பத்திரனும் அவற்றையெல்லாம் உருக்கி, உருமாற்றி விற்று வந்த பொருளைக் கொண்டு தன்னை அண்டியவர்கட்கும், யாசகர்களுக்கும் வேண்டியது அளித்து வாழ்ந்து வந்தான். இப்படியாக ஒவ்வொரு நாளும் ஏதேனும் ஒரு செல்வம் அளித்துவந்த சிவபெருமான் சில நாட்கள் சென்ற பின் எதுவும் ஈயாமல் இருந்துவிட்டார். பாணபத்திரன் ஒவ்வொரு நாளும் திருக்கோவில் சென்று சோமசுந்தரப் பெருமானை உளமார வணங்கி ஒன்றும் பெருமல் வெறும் கையோடு திரும்பி வந்துகொண்டிருந்தான். வறுமையால் மிகவும் வாடினுன். ஓர் இரவு வருந்திய உள்ளத்தோடு பசியானது எரிக்கத் தூங்கிப் போனுன். அப்போது பத்திரன் கனவொன்று கண்டான். சோமசுந்தரக் கடவுள் தோன்றினுர். "பாணு! பாண்டியனது பொக்கிஷத்திலிருந்து அவ்வப்போது பல பொருள்களைக் கவர்ந்து அளித்துவிட்டோம். பாண்டியனும் என்னுடைய பக்தன். பொக்கிஷத்தை வெறுமை ஆக்குவதும் நியாயமில்லை. தவிர, இதைப் பாண்டியன் தெரிந்துகொண்டால் விபரீதம் விளையும். களவுபோனது தெரிந்தால் காவலாளிகளுக்கு கடுமையான தண்டனை கிடைக்கும். ஆதலால், யாம் உன்னிடம் திருமுகம் ஒன்று எழுதிக் கொடுப்போம். அந்தத் திருமுகம் எமது பக்தனை சேரமானுக்கு எழுதப்பட்டிருக்கும். நீ அதனை எடுத்துக் கொண்டு சேர நாட்டுக்குச் செல்லக் கடவாய்" என்று திருவாய் மலர்ந்தருளினுர். விழித்தெழுந்த பாணபத்திரன், அருகே ஓலைச் சுருள் ஒன்று இருப்பதைக் கண்டெடுத்தான். ஆடினுன்; பாடினுன்; மகிழ்ச்சிக் கடலில் திளைத்தான். இறைவன் அருளிய திருமுகப் பாசுரம் இவ்வாறு அமைந்திருந்தது.

"மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிற
கன்னம் பயிற்மொழி லால வாயில்
மன்னிய சிவ'னியான் மொழி தருமாற்றம்

பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளி திகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பால் யாழ்பயிற் பாண பத்திரன்
றன்போ லென்பா லன்பன் றன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே''

திருமுகப் பாசுரம் பெற்ற பாணபத்திரன் அதனை வெகு பத்திரமாக ஒரு பட்டாடையிலே சுற்றி வைத்துக் கொண்டு இறைவன் சேவடி வணங்கினுன். பின்னர் திருக்கோவில் சென்று சோமசுந்தரப் பெருமானை வணங்கி விடைபெற்றுக்கொண்டு சேர நாட்டை நோக்கி மேற்குத் திசையில் பயணமானுன். பலவகையான நிலங்களைக் கடந்து சென்று நல்ல வளம் பொருந்திய மலை நாட்டை அடைந்தான்.

மலைநாட்டின் திலகம் போல விளங்கி நின்றது திருவஞ்சைக்களம் என்ற திருப்பதி. அப்பதியிலே தரும தேவதை வாசம் செய்தாள். இலக்குமிதேவி திருநடம் புரிந்தாள். வீரமகள் நன்னடம் செய்தாள். வடமொழியும் தென்மொழியும் சிறந்து விளங்கின. கீர்த்தி பெற்ற அந்த நல்லூரின் திருவீதிகள் ஒன்றிலேயிருந்த தண்ணீர்ப் பந்தலில் சென்று தங்கினுன் பாணபத்திரன்.

அப்போது சேர நன்னுட்டை சிருடன் ஆண்டு வந்தவன் சேரமான் பெருமாள் எனும் வேந்தனுவான். சிவபெருமான் அன்றிரவு சேரமானது கனவினிலே தோன்றினுர். ''சேரமன்னு! யாம் மதுரைச் சித்தராவோம். உன்னை அண்டி நல்ல பொருள் பெறுவதற்காக எம்முடைய திருமுகம் பெற்றுக்கொண்டு பாணபத்திரன் என்னும் எம் பக்தனெருவன் வந்துள்ளான். அரிய பொருள் அவனுக்கு அளித்து விரைவாக அனுப்புக'' என்று மொழிந்து மறைந்தருளினுர்.

வியப்புற்று விழித்தெழுந்த சேரமான் பெருமாள் தாம் கண்ட நற்கனவைத் தமது மந்திரிமார்களிடம் சொன்னுர். ''உமையம்மை பங்கரான சுந்தரப்பெருமானிடம் ஸ்ரீமுகம் பெற்று வந்த பாணபத்திரனைத் தேடிக் கொணர்க'' என்று சேவகர்களுக்குக் கட்டளை இட்டார். பல இடங்களிலும் தேடிச் சென்ற ஏவலர்கள் முடிவாகப் பாணபத்திரரைத் தண்ணீர் பந்தலில் கண்டுகொண்டனர். விரைவாகச் சென்று அரசனிடம் செய்தி சொல்லினர். விவரம் தெரிந்த சேரமானும் தனது பரிவாரங்களுடன் புறப்பட்டுச் சென்று பாணபத்திரனைக் கண்டு மகிழ்ந்தார். சிரமேல் கைகூப்பி ஆனந்தத் தாண்டவம் ஆடினுர். தனக்கெனச் சொக்கேசர் அருளி விடுத்த திருமுக ஓலையை வாங்கித் தமது கண்களிலே ஒற்றிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். பாசுரத்தைப் பலமுறை படித்துப்

படித்து புளகாங்கிதம் அடைந்தார். எல்லையற்ற உவகையில் மூக் குளித்தார். தெய்வத் திருமுகத்தைப் பொன்னாசனத்திலே வைத்து, யானை மேலேற்றி எடுத்துச் சென்றார். தக்க மரியாதைகளுடன் பாணபத்திரனை உடனழைத்துக்கொண்டு தமது திருமாளிகைக்குப் போனார்.

அரண்மனை சேர்ந்ததும் பாணபத்திரனுக்குப் பதினாறு வகை யான உபசாரங்களைச் செய்து மகிழ்வித்தார் சேரவேந்தன்.

சோமசுந்தரப் பெருமான் அருளிய திருமுகப் பாசுரத்திலே' ,'மாண்பொருள் கொடுத்து வரவிடுப்பதுவே'' என்ற கட்டளையை நன்கு உணர்ந்து கொண்டவராகையால் காலந்தாழ்த்த விரும்ப வில்லை சேரமான். தம்முடைய பொக்கிஷத்திற்குக் கூட்டிச் சென்று ''சிவநேசச் செல்வரே! இங்குள்ள ஐசுவரியங்கள் எல்லாவற்றையுமே நீர் கொண்டு செல்லலாம்.'' என்று வேண்டினான். ''தாங்கள் தரு வதே போதும்'' என்று பணிவுடன் மொழிந்தான், பாணபத்திரன். ''எல்லாச் செல்வமும் அவன் அருளியது'' எனக் கருதிய சேரமானும் ஏராளமான செல்வத்தை வாரி வாரிக் கொடுத்தார். ஆனால், பாண பத்திரன் தனக்கு வேண்டிய அளவு பொன்னணிகள், காசுகள், ஆடைகள், சிவிகை, யானை, குதிரை முதலியவற்றை ஏற்றுக்கொண்டு புறப்பட்டான். சேரமான் பெருமானும் நெடுந்தொலை சென்று பத்திரனை வழியனுப்பித் திரும்பினார்.

வறுமையில் வாடிய கலைஞனைச் சேரநாடு சென்ற பாணபத் திரன் குபேரனை நிகர்த்து மதுரைமா நகருக்குத் திரும்பினான். ஊர் சேர்ந்ததும் முதல் காரியமாகச் சோமசுந்தரப் பெருமானைத் தரிசித்து வணங்கினான். பின்னர், மதுரை மாந்தர் யாவரும் அறியுமாறு வேதியர், விற்பன்னர், வறியோர் முதலான எல்லார்க்கும் தான தருமம் வழங்கி இனிதே வாழ்ந்திருந்தான். ★

## 43. பலகை இட்டது.

சோமசுந்தரப் பெருமானின் முன்னிலையில் முன்பு முப்பொழுது சென்று தெய்வத் தமிழ் பாடிவந்த பாணபத்திரன் சேரமான் பெரு மானிடம் பெரும் பொருள் பெற்று வந்த பின்பு அர்த்த ஜாமத்திலும் சென்று வணங்கி ஏழிசை பாடி வரும் நியமம் மேற்கொண்டான். நியமம் தவறாத திருத்தொண்டன் பாணபத்திரன் என்பதை உலகுக் குக் காட்டத் திருவுள்ளம் கொண்டார் சோமசுந்தரப் பெருமான். எவ்வித இன்னலையும் கடந்து தனது இசைத் தொண்டைச் செய்ய வல்லவன் என்பதை நிரூபிக்க விரும்பினார் சொக்கேசர். ஆதலால், ஓர் இரவு இறைவன் திருவிளையாடலினால் எங்கும் கார்மேகங்கள் சூழ்ந்துகொண்டு இடித்து முழங்கின; மின்வெட்டின. பெரிய மழை தாரை தாரையாகப் பொழிந்தது. அந்த மாமழையிலே நனைந்து கொண்டே திருக்கோவிலை அடைந்தான் பாணபத்திரன். சோம சுந்தரக் கடவுளைப் பணிந்து நின்றான்.

பின்னர் நந்திகேசுவரருக்குப் பின்னால் சென்று யாழ் வாசித்துப் பாட விரும்பினான். மழையிலே நன்றாக நனைந்து விட்டதால் யாழ் நரம்பு இசை மழுங்கியது. உடம்பும் மழைப்பொழிவிலே நனைந்து விட்டதால் நடுக்கமுற்றது; அதனால் குரல் நடுங்கியது. விரல்கள் வலியெடுத்தன. சேற்றிலே புதைந்த கால்கள் விறைத்தன. இருந்த போதிலும் செந்தமிழ் கனிந்த அமுத கீதப் பாடல்களைப் பாடி பெருமானுக்கு இசைத் தொண்டு செய்தான்.

பாணபத்திரனது நல்லிசைத் தொண்டை நன்குணர்ந்த சோமசுந்தரப் பெருமான் அருள் கூர்ந்து: ''பாணபத்திரா! இந்தப் பலகை உனக்கே உரிமையாவது; இதன் மேலே நின்று இசை பாடுக'' என்று ஆகாசவாணியாகி இயம்பினார். உடனே பாணபத்திரன் அருகிலே நவரத்தினங்கள் இழைத்த பொன்னாலான பலகை ஒன்று தோன்றியது. பெருமானது ஆணையை மறுக்க அஞ்சிய பாணபத்திரனும் அந்தப் பொற் பலகையின் மீதேறி நின்று கொண்டு இசையமுதம் பொழிந்தான்.

பின்னர் சோமசுந்தரப் பெருமான் திருவடிகளை அகத்தே கொண்ட கலைஞன் பொன்மணிப் பலகையைத் தன் கையிலே பக்தியுடன் எடுத்துக்கொண்டு வீடு சென்றான். வீடு திரும்பும்போது மழையும் நின்று விட்டது. இல்லத்திலே பாணபத்திரன் நன்கு நித்திரை செய்தான்.

மறுநாள் பொழுது விடிந்தது. சோமசுந்தரப் பெருமான் பாணபத்திரனுக்கு நவரத்னம் பதித்த பொற்பலகை அருட் கொடையாகத் தந்ததைக் கேட்டறிந்தான் வரகுண பாண்டியன். பாணபத்திரனைப் பரிவுடன் அழைத்து வந்து அப் பொற்பலகையின் மீது இருக்கச் செய்தான். ''எங்கள் மதுரைநாயகன் இவனே!'' என்று கருதி பொன்னும் மணியும், கலன்களும் அளித்தான். நன்செய்களையும் பெரு நிதியங்களையும் நிரம்பக் கொடுத்து முறையாகப் பன்னாட்கள் நடத்தி வந்தான்.

பாண்டியன் வரகுணன் கொடுத்த பரிசில் வரிசைகளை ஏற்ற பாணபத்திரனும் தேவாலயத்திற்கு நாள்தோறும் நான்கு ஜாமங்களிலும் சென்று சோமசுந்தரப் பெருமானுக்கு இசை வழிபாடு செய்து வந்தான்.

சில நாட்கள் கழித்துப் பாண்டியன் வரகுணன் சாரூப்யம் பெற்றுச் சிவலோகம் சேர்ந்தான். ★

## 44. இசை வாது வென்றது.

பாண்டியன் வரகுணன் சிவலோகம் சேர்ந்த பின் அவனது குமாரன் ராஜராஜ பாண்டியன் சிம்மாசனம் ஏறினான். நாட்டை

நல்ல முறையில் ஆண்டு வந்தான். அவனுக்கு அரசகுலத்தைச் சேர்ந்த மனைவிமார்கள் பலரும், காமக்கிழத்தியர் பலரும் இருந்து வந்தனர். காமக்கிழத்தியர்களுள் ஒருத்தியிடம் பாண்டியன் தன் உயிரையே வைத்திருந்தான். அவள் கீதம் பாடுவதிலே வல்லவளாக விளங்கினாள். அவளுக்கும் பாணபத்திரனுடைய மனைவிக்குமிடையே இசைக் கலைத் துறையிலே பகைமை ஏற்பட்டது. பாண்டியனது காமக்கிழத்திக்கு அது பொறுக்கவில்லை. ஆதலால் பாணபத்திரனின் மனைவிக்கு எதிராக ஒரு பாண் மகளைப் பாடவிட்டு அவளது கருவத்தை அடக்கவேண்டும் என்று கருதினாள். தன் கருத்தைப் பாண்டியனிடம் தெரிவித்தாள்.

தனது காமக்கிழத்தி சொல்லிய வண்ணம் செய்யும் இயல்புடையவன் பாண்டியன். ஆதலால், அவள் கருத்துக்கு இசைந்தான். இசைப் போட்டியிலே பாணபத்திரனது மனைவியை வெல்லும் தகுதியுடைய பாடினி ஒருத்தியை ஈழ தேசத்திலிருந்து வருமாறு அழைத்தாள். ஈழப் பாடினியும் பாண்டியன் சபைக்குப் பாண் மாணவியர் பலர் சூழ வந்து சேர்ந்தாள். அவள் கின்னரமாதர் போல நல்லிசை நயமுடன் மொழிந்தாள். பாண்டியன் மகிழ்ந்தான். காமக்கிழத்தியிடம் கொண்ட மோகத்தால் வரவிருக்கும் பழியைக் கவனிக்க மாட்டாத பாண்டியன். "பாடினியே! நாளை நீ பாணபத்திரன் மனைவியை எமக்கு முன்னால் பாடுவதற்கு அழைப்பாய். அவள் மறுத்தாலும், நான் உன்னைத் தடுத்தாலும் நீ அவளைப் போக விடாதே. அவள் வெட்கமடையும்படி 'நீ போகாதே, நில்' என்று வஞ்சினம் கூறித் தடுத்துவிடு" என்று கூறி அவளுக்கு வேண்டியதெல்லாம் வழங்கி, "நாளை வருவாயாக" என்று அனுப்பிவைத்தான்.

பின்னர் பாண்டியன் பாணபத்திரனது மனைவியைத் தனது அரண்மனைக்கு அழைத்து வரச் செய்தான். தனது உள்ளும் புறமும் வேறுபட்ட நிலையிலிருந்து, "பாடினியே! ஈழத்திலிருந்து இசையிலே வல்லவள் ஒருத்தி வந்திருக்கிறாள். தன்னோடு பாட யாராலும் முடியாது என்று கருவப்பட்டுக் கொண்டிருக்கிறாள். அவளுக்கு இணையாக நீ பாடமுடியுமா? சொல்" என்று கேட்டான். "அரசே! சோமசுந்தரப் பெருமானின் திருவருளாலும் எனதுகற்பின் திறத்தினாலும் அவளோடு போட்டியிட்டுப் பாடி வெல்வேன் என்ற நம்பிக்கை உள்ளது. தோற்றுப் போனாலும் மனம் கலங்கமாட்டேன்" என்று சொன்னாள். பாண்டியன் அவளையும் மறுநாள் வரும்படி பணித்தனுப்பி விட்டான்.

மறுநாள், ராஜராஜ பாண்டியன் ஈழத்துப் பாடினியையும் பாணபத்திரன் மனைவியையும் தனதுசபைக்கு வரவழைத்தான். ஒருவரையொருவர் எதிர்த்து இருக்குமாறு நேர் நேராக அமர்த்தினான். பாண்டியன் அவர்களைப் பார்த்து யாழ் வாசிக்குமாறு கேட்பதற்கு முன்னதாகவே, ஈழப் பாடினி பாணபத்திரன் மனைவியை இழிவாகப்

பேசினாள். மேலும் "இசைக் குற்றங்கள் எத்தனை? குணங்கள் எத்தனை? யாழுக்குரிய தெய்வம் யாது?" என்றெல்லாம் பலவாறான வினாக்களை அடுக்கிக் கொண்டிருந்தாள். தன் வினாக்களுக்கெல்லாம் பத்திரன் மனைவி விடை தந்த பின்புதான் இசைவாதுக்கு வரவேண்டும் என்று வற்புறுத்தினாள்.

பாணபத்திரன் மனைவி கற்பில் சிறந்தவள் ஆகையால், "பெண்ணே! நீ உனது கல்விப் பெருமையையும், வாதம் செய்யும் ஊக்கத்தையும், பலர் காமுறுகின்ற பெண்ணலச் செருக்கையும் பாண்டியன் அவையிலுள்ளோர் தெரிந்துகொள்ளும் பொருட்டு வாய் திறந்தாய் போலும்! நான் உன்னோடு இசைவாதுக்கு வந்திருக்கிறேனேயல்லாமல் வாய்திறந்து பேசும் போருக்காக அல்ல. உன் போன்ற மானம் விற்கும் பெண்தான் உனக்குச் சரி" என்று கூறினாள். பாண்டியன் இடைபுகுந்து அவர்கள் இருவரையும் விலக்குபவன் போல நடித்து, "பெண்டிரே! வீண் பேச்சு எதற்கு? பாடத் தொடங்குங்கள்.. தோற்றுப் போனவர் வெற்றி பெற்றவருக்கு அடிமையாக வேண்டும்" என்று சொன்னான்.

ஈழநாட்டுக்காரி யாழைத் தனது இடதுதோளிலே சாய்த்துக் கொண்டு மீட்டிச் சுருதிகூட்டி ஏழிசையைப் பாண்டியன் செவிகளிலே பெய்தாள். அவ்விசை பாண்டியனுக்குத் தன் காமக்கிழத்தியின் பேச்சுக்கு நிகராக இனித்தது. பாணபத்திரனுடைய மனைவியும் யாழ்கூட்டி இன்னிசை வெள்ளம் பொழிந்து சபையோர் செவிகளிலே கானமுதம் செய்தாள். மன்னனது உள்ளக் கருத்தை அறியமாட்டாத சபையோர்கள் எல்லாம் பத்திரன் மனைவி பாடியதையே பாராட்டினார்கள். பாண்டியனோ ஈழமகளின் பாடலைத்தான் மெச்சினான். உடனே சபையோர்களும் தங்கள் கருத்தை மாற்றிக்கொண்டனர். மன்னவனோடு சேர்ந்து கொண்டு ஈழத்தவளின் கீதத்தையே மெச்சினர்.

மையலில் வீழ்ந்த பாண்டியன் நன்றும் தீதும் தெரியாத அறிவிலியானான். "இந்த ஒரே நாளில் இசைவாதின் முடிவை அறிவது முடியாத காரியம்", என்று கூறிப் பாடினியையும் பத்திரன் மனைவியையும் போக விடுத்தான்.

தனது மாணவியர்கள் புகழ்பாடிச் சூழ்ந்து வர ஈழப் பாடினி தன் இருக்கை சேர்த்தாள். தன் இசை கேட்டுப் பாண்டியன் வியந்ததையே புகழ்ச்சியெனக் கருதி கருவமும் களிப்பும் பொங்கக் கவலையின்றிப் படுக்கையின் மீது அமர்ந்தாள்.

பாணபத்திரன் மனைவியோ மிகுந்த கலக்கம் அடைந்திருந்தாள். திருக்கோவில் சென்று சோமசுந்தரப் பெருமானின் சேவடி வணங்கிக் கண்ணீர் சொரிய வாடி நின்றாள். "கடவுளே! ராஜராஜபாண்டியன் பாரபட்சம் செய்கிறான். அவனது எண்ணத்தை ஒட்டியே அவையினரும் இருக்கின்றனர். நடு நிலை காண்பார் யாரும் இல்லையே. இறைவனே! நான் என்ன செய்வேன்? தமியள் துன்பத்தைத்

தேவரீர் தான் போக்கவேண்டும்" என்று மனமுருகி வேண்டினாள். அப்போது "மகளே! பயப்படவேண்டாம்; நாளைக்கு நீயே வெற்றியடையும்படி செய்வோம்" என அசரீரி வாக்கு எழுந்தது. அதைக் கேட்டு அமைதியும் உவகையும் கொண்ட பத்திரன் மனைவி தனது இல்லம் சென்று மகிழ்ச்சியோடு இருக்கலானாள்.

மறுநாள் வந்தது. பாண்டியன் தனது சபைக்கு இசைவாதுக்காக இருவரையும் அழைப்பித்தான். அவர்கள் இருவரும் பாடுவதைக் கேட்டபின் முதல்நாள் தான் கூறியது போலவே அன்றும் கூறினான். அது கேட்ட அவையினரும் பாண்டிய மன்னன் கருத்துக்கிணங்கியே ஓரவஞ்சனையாகக் கூறினர். பாணபத்திரன் மனைவி அதைக் கேட்டு மனம் புழுங்கி நின்றாள். ராஜராஜ பாண்டியனைப் பார்த்து, "ராஜசிங்கமே! மனுநீதி தெரிந்த மன்னர்பெருமானே! நீவிர் ஒருதலைப் பட்சமாகப் பேசுவது கேட்ட சபையோர்களும் அப்படியே சொல்வதற்குத் துணிந்தார்கள். ஆதலால் நடுநிலை கொண்ட சோமசுந்தரப் பெருமானின் சன்னதி சேர்ந்து நாங்கள் இருவரும் பாடுவோம். இருவர் பாடுவதையும் எல்லாரும் கேட்கட்டும். யாராவது ஒருவர் மனம் துணிந்து 'இவள் வென்றாள்' என்று சொன்னாலும்போதும்" என்று செப்பினாள். அது கேட்ட பாண்டியன், "நீங்கள் அவ்வாறே செய்யலாம்" என்று சொல்லிவிட்டான். சபை கலைந்தது. ஈழத்துப் பாடினியும் பாணபத்திரன் மனைவியும் தங்கள் தங்கள் வீடு சென்றனர்.

மூன்றும் நாள் கீத ஞானம், இலக்கிய ஞானம், சுருதி ஞானம், தாள ஞானம் முதலிய கொண்ட இசைப் புலவர்களும் தன் மந்திரிகளும் புடைசூழப் பாண்டியன் சோமசுந்தரப் பெருமான் திருச்சன்னதியை அடைந்தான். இசைவாதிடும் இருவரையும் அங்கே வரவழைத்தான். "இன்று பத்திரன் மனைவி எனக்கு அடிமையாகி விடுவாள்; இதிலே ஐயமில்லை" என்று எண்ணி மிகுந்த கர்வத்தோடு வந்தாள் ஈழமகள். தெய்வ பக்தியும், கற்பும், கல்வியும் நிறைந்த பத்திரன் மனைவியோ அமைதியுடன் வந்தாள். சோமசுந்தரப் பெருமானும் இசைப் பெரும் புலவர்போல ஆபரணங்கள் பூண்டு கலைஞர் நடுவிலே எழுந்தருளியிருந்தார்.

முதன் முதலாக ஈழப் பாடினி வேத்திசை பாடினாள். கூட்டத்திலே அமர்ந்திருந்த பெரியோர் எவரும் எதுவும் கூறாமல் இருந்தனர். அடுத்து பாணபத்திரன் மனைவி பதுமாசனத்தமர்ந்து வீணை மீட்டி இன்னிசையை ஆராய்ந்து எழுப்பிப் பாடினாள். சொக்கநாதப் பெருமானுக்கு அர்ப்பணம் செய்து பெருந்தேவ பாணி பாடினாள். மனங்கனிந்த முறையிலே முதல் தொழில் எட்டும் இசைக் கரணம் எட்டும் பொருந்திய யாழிசையோடு பாடலின்னமுத கீதம் பொழிந்தாள். உள்ளாள கீதத்தை அமைதியுடன் தெளிவாகப் பாடினாள். இசையினைச் செவிமடுத்த அனைவரும் பேரானந்தம் அடைந்தனர்.

ராஜராஜபாண்டியனால் இம்முறை முன்போல முடிவு சொல்வதற்குத் துணிச்சல் கொள்ளவில்லை. சோமசுந்தரப்பெருமானின் திருவருளால் உளக்கொடுமை நீங்கியது. இருவர் கானத்தையும் சீர் தூக்கி ஆராய்ந்து பார்த்தான். நடுநிலைமை கொண்ட மனத்தோடு, "பாணபத்திரன் மனைவியே வென்றவள்" என்று தீர்ப்புக் கூறினான். அப்படியே அரசன் வழிமொழிந்தனர் சபையினரும். இசைவாதிலே அறுதியிட்டுக் கூறப்பட்ட முடிவினை எல்லாரும் ஏற்று மகிழ்ந்தனர். இசைப் புலவர்களோடு புலவராய் வீற்றிருந்த சோமசுந்தரப்பெருமானும், "ஆகா, இது அற்புதம்! அற்புதம்!" என்று சபையிலுள்ளோர் அனைவரும் கேட்கும் வண்ணம் மொழிந்து மறைந்தருளினார். பார்த்தோர் அனைவரும் பேராச்சரியம் அடைந்தனர். ராஜராஜ பாண்டியன் பயத்தினால் நடுநடுங்கிப் போனான்.

"சோமசுந்தரப் பெருமானின் திருவிளையாடலே இது" என்று எல்லாரும் நன்கு புரிந்து கொண்டனர். சிவபெருமானின் திருவருளையும் பாணபத்திரன் மனைவியது பக்திச் சிறப்பையும் அனைவரும் எண்ணி எண்ணி இன்பம் எய்தினர்.

பாண்டியன் பின்னர் இசைவாதிலே வெற்றிபெற்ற பத்திரன் மனைவிக்கு முத்தாரங்களையும், பொற்கலசங்களையும், பொன்னுடைகளையும் வரிசையாக வழங்கிப் பல் சிறப்புகள் செய்தான். தன்னாலே வரவழைக்கப்பட்டவள் ஆகையால் தோல்வியுற்ற ஈழப் பாடினிக்கும் பரிசுகள் பல வழங்கிச் செல்லவிடுத்தான்.

ராஜராஜ பாண்டியன் குழுமியிருந்த அனைவருடனும் சென்று திருக்கோவிலில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளுக்கும் அரிய ரத்தினாபரணங்களைக் காணிக்கையாகக் கொடுத்தான். உளமார வழிபாடு செய்து, "மன்னவர் வலிமை தெய்வங்களின் வலிமை முன் நிற்க மாட்டார்; தெய்வங்களின் வலிமையெல்லாம் சிவபெருமான் வலிமை முன் நிற்கமாட்டா!" என்று கூறி வியந்து போற்றினான். இறைவனைப் பிரதட்சிணம் செய்து பின்னர் அரண்மனை சேர்ந்தான்.

ராஜராஜபாண்டியன் சுகுணன் என்ற நல்ல மைந்தனைப் பெற்று இனிது வாழ்ந்திருந்தான். ★

## 45. பன்றிக்குட்டிக்குப் பால் கொடுத்தது.

மதுரமா நகரத்துக்கு மேற்கே சிறிது தூரத்திலே வையையாற்றின் தென்கரையிலே குருவிருந்துறை என்னும் ஊர் இருந்தது. தேவ குருவாகிய வியாழபகவானே அவ்விடம் இருந்து சிவபெருமானை நோக்கித் தவமிருந்ததால் அப்பெயர் பெற்றதாயிற்று. அவ்வூரிலே சுகலன் என்ற வேளாளன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவனது மனைவி சுகலை என்பவள். சுகலை பன்னிரண்டு புத்திரர்களுக்குத் தாயாக இருந்தாள். மிகுந்த செல்வத்தோடு தமது மக்களை அவர்கள்

வளர்த்து வந்ததால் அவர்களும் செருக்கு மிகுந்து வழிதவறிச் செல்லலாயினர். மக்களின் வயது ஏறியதே தவிர ஒழுக்கம் ஏற்படவில்லை. இப்படி வளர்ந்து வருகின்றபோது பெற்றோர்கள் இறந்துவிட்டனர். அவ்வழிச் சென்ற பன்னிரண்டு பேர்களும் காட்டிற்குச் சென்று வேடர்களோடு கூடி வேட்டையாடும் தொழிலை மேற்கொண்டனர்.

ஒருநாள் சுகலன் மக்கள் வேட்டையாடித் திரிந்தபோது தவம் புரிந்துகொண்டிருந்த பிரகஸ்பதியைக் கண்டனர். அவரைக் கண்டு அவர்கள் கைகொட்டி ஆரவாரம் செய்து சிரித்தனர். அவர் மீது கல்லையும் மண்ணையும் வாரி வீசினர். தனது தவத்திற்கு இடையூறு ஏற்படுவதை அறிந்த பிரகஸ்பதி மனம் வாடிக் கோபம் கொண்டார். அவர்களைப் பார்த்து, "பெரியவரைக் கண்டு வணங்கத் தெரியாத மூடர்களே! உங்கள் குலத்தொழில் நிலத்தை உழுவதேயானதால் நீங்கள் எல்லாரும் பன்றிக் குட்டிகளாகப் பிறந்து, பெற்றோரையும் இழந்து வருந்துவீர்களாக" என்று கடுமையான சாபம் ஈந்தார்.

பாவப் பிள்ளைகள் பயந்தனர். சாபம் ஏற்றனர். "இந்தச் சாபம் எப்போது விலகும்?" என்று வேண்டிப்பணிந்தனர். சினம் தணிந்த தேவகுருவும் சிவபெருமானைச் சிந்தித்தவராய், "சோமசுந்தரப் பெருமானே உங்களுக்குத் தாயாக வந்து பால் கொடுத்து உங்களைக் காப்பார்; பாண்டிய மன்னனுக்கு உங்களை மந்திரிகளாகச் செய்தருளுவார்; அதன்பின் முக்தியும் வழங்கியருளுவார்" என்று கூறினார்.

சுகலன் பாவப் பிள்ளைகள் பன்னிரண்டு பேர்களும், குருவிருந்த துறைப் புறத்திலே இருந்த காடுகளில் திரியும் பன்றிகளுக்கெல்லாம் தலைவனான பன்றியினது பெட்டையின் வயிற்றிலே சேர்ந்து குட்டிகளாகப் பிறந்தார்கள்.

சுகலனது மக்கள் பன்றிக்குட்டிகளாக இருந்துவரும் நாட்களிலே அந்தக் காட்டிலே வேட்டையாடுவதற்காக ராஜராஜபாண்டியன் தனது சேனைபரிவாரங்களோடு வந்து சேர்ந்தான். வேட்டை வெகு மும்முரமாக நடைபெற்றது. பறை, உடுக்கை, கொம்பு முதலிய பல கருவிகள் ஒலித்தன. புலிகளும், யானைகளும், மான்களும் வெருண்டு ஓடின. பாண்டியனும் அவனது வீரர்களும் அம்பு தொடுத்தும், வேல் எறிந்தும், விலங்குகளைத் தாக்கினர். பல காட்டு விலங்குகள் அவர்களது வேட்டைக்கு இலக்காகின. மான்கள், கரடிகள், யானைகள், புலிகள் எல்லாம் பட்டு விழுந்தன. பன்றிகள் பல வலைகளில் வீழ்ந்தன.

இவ்வாறாகப் பலவகையான விலங்குகளை வேட்டையாடிக் கொண்டே ராஜராஜபாண்டியன் மேற்கு நோக்கிச் சென்றுகொண்டிருந்தான். இதனைக்கண்ட பன்றியொன்று பன்றியரசன் இருக்கும் காட்டுக்குச் சென்று "எம் அரசே! இக்காட்டிலுள்ள மிருகங்களையெல்லாம் பாண்டிய மன்னன் வேட்டையாடிக் கொன்றுவருகிறான்" என்று கூறியது. அதைக் கேட்ட அரசப் பன்றியும் மிகவும் மகிழ்ச்சி

கொண்டு உடனே போருக்குப் புறப்பட ஆயத்தமானது. செல்லும் காலத்திலே தனது உயிர் நிகர்த்த பெண் பன்றியைப் பார்த்து, "இன்று நான் பாண்டியனை எதிர்த்துப் போர் செய்யப் போகிறேன். வெற்றியுடன் திரும்புவேனோ அல்லது இறப்பேனோ தெரியாது. ஆதலால், நீ இங்கேயே இருந்து நம் குழந்தைகளைக் காப்பாயாக" என்று சொல்லியது. அது கேட்ட பெண் பன்றி, "பிராணபதி! உம்மைவிட்டு நான் பிரிந்திருக்கமாட்டேன்; உம்முடனேயே வருவேன். நீர் வெற்றியுடன் திரும்பினால் நானும் உடன் திரும்புவேன்; நீர் இறந்தால் உடனே நானும் இறப்பேன்" என்று உரைத்து உடன் புறப்பட்டு விட்டது. தனது குட்டிகளையும் உதறித்தள்ளி விட்டுச் சென்றது. பன்றியரசன் கடுகிச் சென்றது. பலவகை இனத்தைச் சேர்ந்த பன்றிக் கூட்டங்கள் பெருகிவந்தன. பன்றிப் படை வீரர் சூழ அவற்றின் அரசனும் கோபம் கொண்டு முன்னேறியது. அரசுப் பன்றி இடிபோல உறுமியது.

பன்றிப்படை பாண்டியன் படையைக் கடுமையாகத் தாக்கியது. காட்டுப் பன்றிகளின் கடுமையான தாக்குதலைச் சமாளிப்பது சிரமமாகத்தானிருந்தது பாண்டிய வீரர்களுக்கு. அந்தக் கடும் போரின் விளைவாகப் பல பன்றிகள் உயிரிழந்தன.

அந்த அவல அலங்கோலத்தைக் கண்ட பெண் பன்றி தனது அரசனைப் பார்த்து, "நம் சேனைகள் அழிந்தன; இனி நம்மால் என்ன செய்யமுடியும்? ஆதலால், நாம் இருவரும் உயிர் தப்பி ஓடிவிடலாம்" என்று கூறியது. அதனைக் கேட்ட பன்றி வேந்தன் மானம் மிகவும் கொண்டு, "வீரக்குடியில் தோன்றிய நான் பின்வாங்கமாட்டேன். வீரம் விளைத்தே தீருவேன், பேதையே! இங்கேயே நிற்கலாம்" என்றது. பின்னர் பாண்டிய மன்னனை எதிர்த்துப் போரிடத் தொடங்கியது. பெரிய ஆரவாரம் செய்துகொண்டு சினத்தோடு நிலம்கீறிப் பாண்டியன் மேல் பாய்ந்தது. பாண்டியன் கடுமையான அம்புகளை அதன்மேல் எய்தான். பன்றியரசன் மிகவும் கடுமையான போர் செய்தது. பாண்டியனது யானையையும், தேரையும், குதிரையையும் அழித்துவிட்டது. அதனைக்கண்டு கடுஞ்சினம் கொண்ட பாண்டியன் பெரிய இரும்பு உலக்கையைக் கொண்டு பன்றியின் தலையிலே பலமாக அடித்தான். உடனே, இரத்தம் வெள்ளமாகப் பெருக பன்றியரசு இறந்து வீர சுவர்க்கம் புகுந்தது.

தன் துணைவனை இழந்து நின்ற பெண்பன்றி வேகமாகத் தாக்கி வெம்போர் செய்தது. அதை எதிர்த்து வெகுநேரம் போர் புரிந்தான் பாண்டியனது வேடர் தலைவன். அவனைத் தாக்கி வீழ்த்தியது பெண் பன்றி. அவனும் தன் கையிலிருந்த இரும்புத் தண்டால் அப் பன்றியைக் கொன்று விட்டுத் தானும் இறந்தான். ஒருவாறாக வேட்டையை முடித்துக்கொண்ட பாண்டியன் ராஜராஜன் மதுரை சேர்ந்தான்.

பன்றிகள் விழுந்து இறந்த இடம் மலையாகிவிட்டது. அம்மலை பன்றிமலை என்று வழங்குவதாயிற்று. முன் பிறப்பிலே புலத்திய

முனிவரது தவத்துக்கு இடைஞ்சல் செய்த ரங்க வித்தியாதரன் என்ற ஒரு யட்சனே சாபம் பெற்றுக் காட்டுப் பன்றியாக வந்து பிறந்தான். சாப விமோசனமாகத்தான் பாண்டியன் கையால் மாண்டான்.

தமது தாய் தந்தையரை இழந்த பன்றிக்குட்டிகள் பன்னிரண்டும் அவற்றைத் தேடித் தேடித் திகைத்தன. அலைந்து வாடின. தாய்ப் பாலுக்கு ஏங்கித் தவித்தன. தாகம் அவற்றைப் பெரிதும் வருத்தியது. வெயிலின் கடுமை பொறுக்காமல் வெதும்பின. இப்படியாகப் பன்றிக்குட்டிகள் துன்பப்படும்போது சோமசுந்தரப் பெருமான் மீனாக்ஷியம்மையுடன் விமானத்திலே இருந்து கண்டு கொண்டிருந்தார். அந்த நிலையில் பெருமான் பன்றிக்குட்டிகளின் இன்னல் கண்டு இரங்கி யருளினார். உடனே, அவற்றினுடைய தாய்ப் பன்றியின் உருவம் எடுத்துக்கொண்டு பசியாலும் தாகத்தாலும் வாடிய குட்டிகளின் முன்பு நின்றருளினார்.

தாயின் வரவைக் கண்ட சேய்கள் குதூகலம் அடைந்தன. வேகமாக ஓடிவந்து முட்டின; மோந்து கண்டன; முதுகிலே தாவி எட்டிப் பார்த்தன; துள்ளின, ஓடின; மீண்டும் வந்தன. தாய்ப் பன்றியும் தன் குட்டிகளை நெருங்கி நின்று மோந்து கொடுத்தது. கருணைப் பெருக்கினால் ஊறிய பாலைக் குட்டிகளுக்கு ஊட்டியது. மிகச் சிறந்த சிவதேவப் பால் அல்லவா? வலிமையையும், வெற்றியும் அறிவும் தகைமையும் ஏற்படுமாறு அருளியது. பின்பு அந்தக் குட்டிகளுக்கு முகத்தை மட்டும் பன்றியினதாக அமைத்து, உடலிலுள்ள மற்ற அங்கங்களை மனிதர்களுக்குள்ளதைப்போல அமைத்தது தாய்ப் பன்றி; அப்படிச் செய்தருளிய பின் சோமசுந்தரப்பெருமான் தாம் ஏற்ற பன்றி வடிவத்தை விட்டு மறைந்தருளினார்.

தாய்ப் பன்றியாக வந்த தயாபரன் தாயற்ற பன்றிகட்குப் பாலூட்டி அறிவில்லாத அவைகட்கு அறிவு தந்து இனிமேல் வரும் பிறவியையும் தூய்மையாக்கினார். ★

## 46. பன்றிக்குட்டிகளை மந்திரிகள் ஆக்கியது.

தாய்ப் பன்றியாக வந்த சிவபெருமான் மறைந்தருளிய பின்பு பன்றிமுகம் கொண்ட குமாரர்கள் பன்னிருவரும் இளங்கதிரவனைப் போல விளங்கினார்கள். பல கலைகளிலும் வல்லவர்களாகத் திகழ்ந்தார்கள். எல்லாரும் ஒன்றுசேர்ந்து பன்றிமலையில் இருந்தார்கள்.

அந்த நாளிலே மீனாக்ஷியம்மை சோமசுந்தரப்பெருமானைப் பார்த்து "இறைவா! அறிவில்லாக் கொடிய விலங்குகளான பன்றிக் குட்டிகளுக்குப் பால் ஊட்டத் தாங்கள் பரிவெய்தியது ஏனோ?" என்று நயந்து வினவினார்.

அப்போது சோமசுந்தரப் பெருமான் தேவியாரை நோக்கி, "வேதங்களும் ஆகமங்களும் எம்மைச் சகல ஜீவதயாபரன் என்று மொழிகின்றன. சேதனம் அசேதனம் இரண்டும் எமக்கு ஒன்று தான். ஆதலால்தான் தாயிழந்த பன்றிக்குட்டிகளுக்கு மனம் இரங்கித் தாயாகிப் பாலூட்டி அருளினேம். அதனாலே பன்றிக் குட்டிகளும் வலிமையும் வெற்றியும் கல்வி முதிர்ச்சியும் ஞானமும் பெற்றன. இனி அப் பன்றிமுகக் குமாரர்கள் ராஜராஜ பாண்டிய னுக்கு அமைச்சர்களாக இருந்து பலவகை வளங்களையும் பெருக்கு வார்கள்; பின்பு பாசங்களை ஒழித்துப் பதவி பெற்று எம்முடைய பெருங்கணத்தவர்கள் ஆவார்கள்" என்று விடை பகர்ந்தருளினர்.

சோமசுந்தரக் கடவுள் அன்று இரவிலேயே ராஜராஜ பாண்டி யனது கனவிலே தோன்றினர். "பாண்டியனே! பன்றிமலையிலே பன்றி முகத்தோடு பன்னிரு குமாரர்கள் வாழ்கின்றனர். அவர்கள் பேரறிவுடையவர்கள். அவர்களை உனது சபையிலே அமைச்சர் களாக அமர்த்திக் கொள்வாய்" என்று திருவாய் மலர்ந்து பின் மறைந்தருளினர். பாண்டியன் பெருமகிழ்ச்சியுடனும் பெரு வியப் புடனும் விழித்தெழுந்தான்.

விடிந்ததும் தனது அமைச்சர்களை அழைத்துத் தனது விந்தைக் கனவினைச் சொன்னன். பன்றிமலைப் பன்றிமுகப் பன்னிரண்டு வீரர் களையும் அழைத்து வருமாறு பணித்தான். மந்திரிகளும் பன்றி மலை சேர்ந்தனர். பன்றிமுகத்தோரையும் கண்டனர். ராஜராஜ பாண்டியனது விருப்பத்தைத் தெரிவித்து அவர்களை மதுரைக்கு வருமாறு வேண்டிக்கொண்டனர். பாண்டியன் விருப்பத்தை அமைச்சர்கள் மூலம் கேட்ட அப்பன்னிருவரும் மனமிசைந்து புறப் பட்டு மதுரை வந்தடைந்தனர். பாண்டிய வேந்தன் திருமுன் சென்று வணங்கி நின்றனர். பாண்டியன் அவர்களை மிகுந்த மகிழ் வுடனும் பரிவுடனும் வரவேற்றான். அவர்களுக்கு மந்திரி பதவியைக் கொடுத்துப் பல்வேறு சிறப்பான வரிசைகளையும் வழங்கினன். தவிர, தனது பழைய மந்திரிமார்களின் மகளிரையும் அவர்களுக்கு வேத விதிப்படி விவாகம் செய்வித்தான்.

பன்றிமுக அமைச்சர்கள் பன்னிரண்டு பேர்களும் பாண்டியனைக் காக்கின்ற கவசம் போலவும், வழிகாட்டும் கண்கள் போலவும் பழகி வந்தார்கள். 'உடல்கள் பன்னிரண்டு; ஆனல் உயிர் ஒன்று' என்று கூறும்படிக்கு அவ்வளவு ஒற்றுமையாக வாழ்ந்து வந்தார்கள். தங் களுக்கு உரிய கடமைகளை ஏற்றுச் செவ்வையாகப் புரிந்து வந்தனர். உளம் பொருந்திய உவகையோடு செயல் ஆற்றினர். பாலும் தேனும் கலந்தாற்போலக் கல்வியும் அறிவும் சேர்ந்து விளங்கினர். இனிய மொழிகளே பேசி யாவருக்கும் இங்கிதமாக நடந்தனர். தமக்குக் கிடைத்த பதவியினல் கருவம் கொண்டு விடாமல் ஒரு நிலையிலே நின்று ஒழுகினர். அரசனை அனல் போல எண்ணி நெருங்கியும் நெருங்காமலும் தீக்காய்பவர்கள் போலத் தம்மைக் கட்டுப்படுத்திக்

கொண்டு பழகினர். வேந்தன் விரும்பிய பொருள் எதையும் தாம் வேம்பு எனக் கொண்டனர்.

பன்றிமுக மந்திரிமார்களுடைய திறமையான நல்லாட்சியிலே குடிமக்கள் நல்வழியிலே சென்று சிறந்தனர். பாண்டியனது கொள்கைகளை நன்ருக ஆராய்ந்து தரும மார்க்கத்திலே நடந்தனர். இவ்வாருகப் பன்னிருவரும் தருமம், நியாயம், நீதி, யோக்கியம், யுக்தம் முதலியன காட்டும் நேரிய வழியிலே சென்றனர். அவர்களால் பாண்டியன் ஈகையிலே, தருமத்திலே, கீர்த்தியிலே பெருகி விளங்கினன்.

சில காலம் கழிந்ததும் பன்றிமுகத்தார் பன்னிருவரும் சிவலோகம் சேர்ந்து சிவகணத் தலைவர்கள் ஆயினர்.

ராஜராஜ பாண்டியனும் இந்திர பதவி பெற்ருன். ★

## 47. கரிக்குருவிக்கு உபதேசம் செய்தது.

பாண்டியன் ராஜராஜன் இந்திர பதவியைப் பெற்ற பின்னர் அவனது திருக்குமாரனுகிய சுகுணன் பாண்டியன் ஆனன். அவன், சிங்க ஏற்றினைப் போல விளங்கி உயிர்களின் துன்பங்களைப் போக்கி நல்லாட்சி செய்து வந்தான்.

அந்த நாளிலே வலிமை மிகுந்த ஒருவன் தனது பூர்வஜன்மத்திலே எல்லா வழிகளிலும் தருமமே புரிந்து கொஞ்சம் பாவமும் செய்ததால் இந்தப் பிறவியிலே கரிக்குருவியாக வந்து பிறந்தான். அந்தக் கரிக்குருவிக்குக் காக்கை முதலான வேறு பறவைகள் பகையாகித் துன்பம் கொடுத்தன. பல பறவைகளால் கொத்தப்பட்ட அக்குருவியின் தலையில் இரத்தம் ஒழுகிக்கொண்டே இருந்தது. அதனல் பயமடைந்து நகரத்திலே சில நாட்கள் வாசம் செய்தது. பின்னர் ஒரு காட்டுக்குச் சென்றது. பூத்துக்குலுங்கிய மரக்கிளையொன்றின்மேல் சென்று இருந்தது. வெட்கத்தோடும் சோர்வோடும் பெருமூச்சுவிட்டுக் கொண்டிருந்தது.

அப்போது அந்த மர நிழலில் தங்கும் பொருட்டு சிவபக்தர் ஒருவர் வந்து அமர்ந்தார். விபூதியும், உருத்திராட்சமும் அணிந்திருந்த அப்பெரியவர் தீர்த்த யாத்திரை செய்து வருபவர். அவர் அங்கு இருந்தபடியே அங்கிருந்த சில பேர்களைப் பார்த்து 'எவருக்கும் நல்ல பலனைத் தரும் ஸ்தலம் மதுரை; தீர்த்தம் பொற்ருமரைக் குளம்; மூர்த்தி சோமசுந்தரப்பெருமான். ஒரே இடத்தில் இந்த மூன்று வகைச் சிறப்புக்களையும் ஒருங்கே பெற்ற இடம் உலகத்திலே வேறெங்கும் கிடையாது. ஆதலால் மதுரையம்பதிக்கு இணையான ஸ்தலம் வேறில்லை. சோமசுந்தரப்பெருமான் தம்மை வணங்கி வழிபடும் அடியவர்களுக்கு எளியவர்; கோரிய வரங்களை இந்தப் பிறவியிலேயே அருளுவார். ஆதலால், விசேஷமான மூர்த்தி சோம

சுந்தரக் கடவுளேயாவார்" என்று நல்லுபதேசம் செய்துகொண்டிருந்தார். சிவபக்தர் போதித்ததைச் சோர்ந்து கிடந்த கரிக்குருவியும் கேட்டது. உடனே அதற்கும் ஞானம் பிறந்துவிட்டது. அதனால், தான் பறவையாகப் பிறந்த காரணம் தெரிந்தது. "நான் இந்தப் பிறவியை ஒழிக்கவேண்டுமானால் இச் சிவபக்தர் சொன்னபடிக்கே செய்யவேண்டும்" என்று உறுதி கொண்டு காட்டைவிட்டுப் பறந்து சென்று மதுரையம்பதியை அடைந்தது.

திருக்கோவிலைச் சார்ந்த பொற்றாமரைக் குளத்திலே தீர்த்தம் ஆடியது. சோமசுந்தரப் பெருமானைப் பிரதட்சிணம் செய்தது. மனமார்ந்த பக்தியுடன் மானசீக பூஜை செய்தது. இவ்வாறாக மூன்று நாட்கள் கழிந்து விட்டன. மீனாக்ஷியம்மையார் சோமசுந்தரப் பெருமானைப் பார்த்து, "தேவதேவா! கரிக்குருவி எதற்காக வழிபாடு செய்கிறது? இது இங்கு வந்த காரணம் என்ன?" என்று வினவினார். மதுரேசரும் அக்கரிக் குருவியின் வரலாற்றை முறையாக மொழிந்தருளினார். பின்னர் கரிக்குருவியின் மேலே திருவருள் நோக்கம் பாலித்து மிருத்தியுஞ்சய மந்திரத்தை உபதேசித்தருளினார்.

மதுராபுரி நாதர் அருளிய மிருத்தியுஞ்சய மந்திரம் செவியில் பட்டவுடனே அதனுடைய பிறவித் துன்பம் ஒழிந்தது. அதனது சிற்றறிவு நீங்கிப் பேரறிவு சித்தியாகிவிட்டது. சிவபெருமானின் திருவடிகளை உள்ளத்தில் தியானம் செய்துகொண்டு "அண்ணலே! அடியேனை ஆளவும் வேண்டுமோ? எளியவர்களைத் தேடிச் சென்று அருள்புரிவதே தேவரீரது தன்மைபோலும்! எளியேன் முற்பிறப்பிலே செய்த தருமத்தால் தான் இப்பிறப்பிலே எம்பெருமான் வாயிலாக மந்திரோபதேசம் பெற்றேன். மறுமையில் சிவபக்தி பெறவும் இது காரணமாயிற்று. ஆயினும், அடியேனுக்கு குறையொன்று உள்ளது ஐயனே! கொடிய பறவைகள் எளியேனைத் துன்புறுத்தின்றன. என் கதி அனைவரும் பார்த்து சிரிக்கும்படி ஆயிற்று" என்று விண்ணப்பித்துக்கொண்டது. அப்போது கடவுள் "அந்தக் கொடிய பறவைகளுக்கெல்லாம் நீ வலியான் ஆகக்கடவாய்" என்று திருவாய் மொழிந்தருளினார். பிற்பாடும் அந்தக் கரிக்குருவி, "பெருமானே! எளியேனுக்கு இன்னும் ஒரு வரம் தந்தருளவேண்டும். தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய வலியான் எனும் பெயர் அடியேனது மரபிலே வருகின்ற பறவைகளுக்கெல்லாம் விளங்கவேண்டும். அப் பறவைகளும் தாங்கள் உபதேசித்த மந்திரத்தை ஓதியோதி உய்யவேண்டும். அருள்புரிவீராக" என்று இறைஞ்சியது. சோமசுந்தரப் பெருமானும் "அவ்வாறே ஆகட்டும்" என்று உறுதி கூறியருளினார். பின்னர் திரியம்பகம் என்னும் அவ் வேதமந்திரத்தைத் தெய்வம், ரிஷி, சந்தம் என்பனவற்றோடு உதாத்தம், அநுதாத்தம், சோரிதம் என்னும் மூவகைப் பட்ட ஓசையுடன் தெரிவித்தருளினார்.

கரிக்குருவியும் இறைவன் அருளிய திருமந்திரத்தை இடைவிடாது பயின்று வந்தது. அதனுடைய சாதிப் பறவைகளும் சிவ

பெருமான் அருள்வலிமையால் பறவைகளுக்கெல்லாம் வலிமை பெற்றனவாய் வலியான் என்னும் காரணப் பெயர் பெற்று பறவை உலகிலே சிறப்புற்று வாழ்ந்தன.

பின்னர் கரிக்குருவி சிவபெருமானுடைய திருவடி நிழலை அடைந்து ஆனந்த நிலை எய்தியது. ★

## 48. நாரைக்கு முக்தி கொடுத்தது.

பாண்டிய நாட்டின் தெற்குப் பகுதியிலே மாடங்கள் நிறைந்த ஊர் ஒன்று இருந்தது. அங்கே அழகான தாமரைக்குளம் ஒன்று இருந்தது. அக்குளத்தில் வாழும் மீன்களைக் கொத்தியுண்டு ஒரு நாரை வாழ்ந்து வந்தது.

சில நாட்கள் மழை பெய்யாததால் அந்தத் தாமரைக் குளத்திலே நீர் வற்றிப்போயிற்று. தனக்கு இரை கிடைக்க வழியில்லாமல் போனதால் நாரை ஒரு காட்டுக்குச் சென்று சோர்ந்து விழுந்தது. அந்தக் காட்டிலே ஜீவன் முக்தர்களான ரிஷிகள் பலர் வசித்து வந்தார்கள். அம்முனிவர் கூட்டத்திலே சிவானந்த மயமாகிய சத்தியன் என்ற தவசிரேஷ்டர் இருந்தார். அதே கானகத்தில் சதுரமாக அமைந்து படித்துறைகள் அமைக்கப்பட்ட தடாகம் ஒன்று இருந்தது. அதன் கரையிலே சந்தியா மடம் இருந்தது. அந்தத் தடாகம் அதோ தீர்த்தம் என்று சொல்லப்பட்டது. அந்தக் குளத்தைச் சுற்றிலும் நன்மணம் வீசும் இனமலர்கள் பூக்கும் பாதிரி, வேங்கை, வஞ்சி, குரா, மரா, முருக்கு, மருது முதலிய மரங்கள் வளர்ந்திருந்தன.

ரிஷிகள் அந்தத் தடாகத்திலே நீராடும்பொழுது மூழ்கி எழுந்தனர். அப்போது அவர்களது புறத்திலே சாய்ந்து கிடந்த சடைக் கற்றையிலே மீன்கள் பாய்ந்து புரண்டன. நாரை அம் மீன்களைப் பார்த்தது. ஆனால் "இந்தத் தவமுனிவோரின் உடம்பைத் தீண்டுவதற்கு இந்த மீன்கள் என்ன தவம்செய்தனவோ! நான் இவற்றைத் தின்னக்கூடாது" என்று எண்ணி இரையை வெறுத்திருந்தது.

நீராடிக் கரையேறிய முனிவர்கள் எல்லாரும் தங்கள் நித்திய கர்மாவை முடித்துவிட்டுச் சந்தியா மடத்திலே அமர்ந்து சோமசுந்தரப்பெருமானின் மதுரைப் புராணத்தை ஓதி வந்தனர். அப்போது சொக்கலிங்க மூர்த்தியின் சிறப்பையும், மதுரையின் பெருமையையும், பொற்றாமரைக்குளத் தீர்த்தத்தின் மகிமையையும், பெருமானின் திருவிளையாடல்களையும், அம் மூர்த்தி ஸ்தலம், தீர்த்தங்களை அடைந்தவர்க்கு சோமசுந்தரப்பெருமான் எழுந்தருளி வந்து அருள் புரிபவர் என்னும் பாங்கினையும் எடுத்துச் சொல்லிக்கொண்டிருந்தனர். இந்தப் புனிதமான விஷயங்களை யெல்லாம் நாரையும்

நன்ருகக் கேட்டுக்கொண்டது. உடனே நாரைக்கு அறியாமை நீங்கியது; வினைத்தொடர்பு அறுந்தது; மெய்யுணர்வு தோன்றியது. சிவபக்தி இழுத்துச் செல்லப் பறவை மதுரையம்பதி சேர்ந்தது. பொற்ருமரைக்குளத்திலே நீராடியது; சோமசுந்தரப்பெருமானை வணங்கி விமானப் பிரதட்சணம் செய்தது. பெருமான் தனது அருள் திருக்கண்ணுல் நோக்கினுர். நாரையும் கருணுமூர்த்தியின் திவ்யரூபத்தைத் தியானம் செய்தது.

நாரை இவ்வாருகப் பதினைந்து நாட்கள் நியமம் தவருமல் வழிபாடு செய்து வந்தது. பதினுருவது நாள் பொற்ருமரைத் தீர்த்தத்திலே நீராடச் சென்றபோது அதிலே துள்ளிய மீன்களை இரை கொள்ள நினைத்தது. உடனே பெருமான் அருளால் அறிவு பெற்றது. "அந்தோ! இத் திருக்குளத்தில் வாழும் மீன்களைத் தின்னும் எண்ணம் எனக்கு உண்டாயிற்றே; என்ன பரிதாபம்! இப்படியிருந்தால் என்னுடைய பிறவித் துன்பம் எப்போது ஒழியும்?" என்று கருதி மிகவும் வருத்தப்பட்டது. இவ்வாறு நினைத்த நாரை மீன்களை உண்ணுது அங்கேயே இருந்துவிட்டது. அதனது கடுமையான விரதத்தைக் கண்டு மகிழ்ந்த சோமசுந்தரப் பெருமான், நாரை எவ்வாறு தன்னை அதன் மனதில் தியானித்ததோ, அதே உருவத்தில் அதன் முன்பு தோன்றினுர். "எமது அன்புக்குகந்த பறவையே! வேண்டும் வரம் யாது? சொல்வாய்" என்று திருவாய் மலர்ந்தருளினுர்.

செங்கால் நாரையும் பெருமான் திருமுன்பு விழுந்து வணங்கி, "அண்ணலே! இந்தப் பிறவியைப் போக்கி அடியேனையும் சிவலோகத்திலே சேர்த்துக்கொண்டருளவேண்டும். மற்றுமொரு விண்ணப்பம். எனது இனத்தைச் சேர்ந்த பறவைகளும் வேறு பறவைகளும் இந்தத் தீர்த்தத்திலே மீன்கள் இரையெடுத்தால் அவற்றுக்குப் பெரும் பாவம் வந்து சேரும். ஆதலால், இத்திருக்குள நீரில் எப்போதும் மீன்கள் இல்லாதபடி அருளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டது. சொக்கநாதப் பெருமானும் அவ்வாறே வரம் வழங்கி மறைந்தருளினுர்.

நாரையும் நான்கு புறங்களும் மூன்று கண்களும் கொண்ட சிவரூபம் பெற்று, தேவர்கள் மலர்மாரி பொழிய விமானத்தில் ஏறியது. தேவ துந்துபிகள் முழக்கம் செய்யச் சிவலோகத்தை அடைந்து நந்தி கணங்களுள் ஒன்ருகத் திகழ்ந்தது.

பொற்ருமரைத் திருக்குளம் அன்றிலிருந்து மீன்கள் ஒழியப் பெற்று விளங்கியது.

சுகுணபாண்டியன் தனது பாண்டித் திருநாட்டிலே தருமமெனும் பயிரை நன்கு வளர்த்து அதன் பயனை அனுபவிக்கும் பொருட்டு சுவர்க்கலோகம் சேர்ந்தான். ★

(கூடற்காண்டம் முற்றிற்று)

# 49. திரு ஆலவாய் ஆனது.

சுகுணபாண்டியனுக்குப் பின்பு சித்திரவிரதன் முதலாகத் தொடங்கி அதுலகீர்த்தி என்பவன் முடிய இருபத்திரண்டு பாண்டிய ராஜகுமாரர்கள் வழிவழியாகத் தோன்றி உலகைச் செவ்வனே ஆண்டனர். அதுலகீர்த்தி என்ற பாண்டிய மன்னனுக்குப் பின் அவனது மைந்தனாகிய கீர்த்திபூஷண பாண்டியன் அரசு புரிந்து வந்தான். அவனது ஆட்சிக் காலத்திலேதான் பிரளய காலம் வந்தது. கருங்கடல்கள் ஏழும் பொங்கி யெழுந்தன. உலகம் அழிந்தது. ஏழு தீவுகளும் அழிந்துவிட்டன. அவற்றிலே வாழ்ந்த பொருள்கள் அனைத்தும் அழிந்தொழிந்தன.

உலகம் முழுவதுமே அழிவுற்றபோதிலும் மீனாக்ஷியம்மையின் திருக்கோவிலும், விமானமும், பொற்றாமரைத் திருக்குளமும், ரிஷப மலையும், யானைமலையும், நாகமலையும், பசுமலையும், பன்றிமலையும் அழியாதிருந்தன.

பிரளய நீர் வற்றிவிட்டது. சிவபெருமான் முன்னைப்போலவே உலகத்தையும் தேவர்களையும் மக்களையும் பறவைகளையும் மிருகங்களையும் சிருஷ்டி செய்தார். சந்திர, சூரிய, அக்னி என்னும் குலத்திலே முன்னைப் போலவே பாண்டிய சோழ சேரத் தமிழக வேந்தரையும் படைத்து அருளினார்.

சந்திரகுலமாகிய பாண்டிய மரபிலே வங்கியசேகரன் என்ற மன்னன் தோன்றினான். அவன் சோமசுந்தரப் பெருமானது திருக்கோவிலைச் சுற்றிலுமாக அழகான சிறிய ஊர் ஒன்றைக் கண்டு ராஜ்ய பாரம் புரிந்து வந்தான். சேகரன் மனுதர்ம சாஸ்திர நெறி நின்று நல்லாட்சி புரிந்து வந்தபடியால் கலிப் பகை யொழிந்தது. நாடு பல வளம் சுரந்தது. மக்கள் இனம் பெருகியது. மனிதர்கள் எண்ணிக்கை அதிகமானதாலே வசிப்பதற்கு இடம் போதவில்லை.

அதனைக் கண்ட வங்கியசேகர பாண்டியன் திருக்கோவிலையடைந்து சோமசுந்தரப் பெருமானை வணங்கி, "எம்பெருமானே! தேவரீரது அருள் வலிமையினால் எளியேன் ராஜ்ய பாரம் புரிந்து வருகிறேன். அடியேனுக்கு ஒரு குறை ஏற்பட்டுள்ளது; என்னுடைய குடிமக்கள் அனைவரும் இருப்பதற்குத் தகுந்த பெரிய நகரம் ஒன்றினை அமைக்கவேண்டும். இந்த நகரத்திற்கு ஆதியிலே ஏற்பட்ட எல்லையைத் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆதலால் எளியேன் அதனைத் தெரிந்துகொள்ளும் வண்ணம் அருள் புரியவேண்டும்," என்று வேண்டினான்.

உடனே சோமசுந்தரப் பெருமான் பாண்டியனது அன்புக்கு எளியவராகி அறமும் அருளும் சேர்ந்த இன்னுருவமான சித்த மூர்த்தியாகி எழுந்தருளினார். சித்தர் பெருமான் பாம்பலங்காரப் பெருமானாக விளங்கினார். அவருடைய அரைநாண், பூநூல்,

வெற்றிமாலே, பாதகிங்கிணி, கங்கணம் எல்லாம் பாம்புகளாகவே யிருந்தன. அந்தத் திருக்கோலம் பூண்டு மகாமண்டபத்தின் அருகே நின்றார் தனது திருக்கரத்திலே கங்கணமாகத் துலங்கிய பாம்பைப் பார்த்து, "ஏ, நாகமே! பாண்டியனுக்கு இந்த நகர எல்லையைக் காட்டுவாயாக" என்று பணித்தருளினர். நாகப் பாம்பு சித்தர் பெருமானது அடிபணிந்து. "இறைவரே! இந்த நகரம் அடியேனது பெயரால் விளங்கும்படி அருள் புரியவேண்டும்," என்று பிரார்த்தித்துக்கொண்டது. பெருங் கருணைத் தடங்கலாக விளங்கும் பிரான் "அவ்வாறே ஆகுக" என்று மொழிந்தருளினர்.

பெருமானது கங்கணப் பாம்பு உடனே இறங்கிச் சென்றது. நீண்ட உருவம் எடுத்துக்கொண்டது. கிழக்குத் திசைக்குச் சென்று தனது வாலே நகருக்கு வலமாக நிலத்திலே படியவைத்து வளைத்துக் கொண்டு வந்தது. முடிவில் தனது வாலைத் தனது வாயிலே கவ்விக் கொண்டு பெரிய வளையமிட்டுப் பாண்டிய மன்னனுக்கு மதுரைமா நகரத்தின் பழைய எல்லையினைக் காட்டிக் கொடுத்தது. பின்னர் திரும்பிச் சென்று சித்தமூர்த்திகளின் திருக்கரத்திலே கங்கணமாகி விட்டது. சித்தமூர்த்தியும் மறைந்தருளினர்.

அதன் பின்னர் வங்கியசேகர பாண்டியன், பாம்பு வளைந்து சென்று வரம்பு காட்டியபடியே சுவர் எடுத்தான். சக்கரவாளகிரி என்ற நெடும் பெருமதில் கட்டுவித்தான். தெற்குவாசலுக்குத் திருப்பரங்குன்றம், வடக்குவாசலுக்கு ரிஷபமலே, மேற்குவாசலுக்குத் திருவேடகமும், கிழக்கு வாசலுக்குத் திருப்பூவனமும் எல்லையென அமைத்தான் பாண்டியன்.

பாண்டியன் எழுப்பிய புதுப் பெருமதில் ஆலவாய் மதில் என்று அழைக்கப்பட்டது; அந்தப் புதுநகரம் ஆலவாய் என்னும் பெயர் கொண்டு நிலைப்பதாயிற்று.

வங்கியசேகர பாண்டியன் ஆலவாய்ப் புதூரை முன்போல ஒழுங்கு செய்தான். கொடிகள் இலங்கிய நீண்ட திருமதிலும், திரு மண்டபமும், திருக்கோபுரமும், திருவீதியும், பொழில்களும் மற்றும் பலவற்றையும் பாங்குற அமைத்தான். சோமசுந்தரப் பெருமானுக்கு நவமான ரத்தின கவசமும், ரத்தின மகுடமும், பல்வேறு வகையான ரத்தினுபரணங்களும் செய்து கொடுத்தான்.

அந்த ஆலவாய்த் திருநகரத்திலே குடியேறிய மக்கள் எல்லாரும் மிகவும் சுகமாக வாழ்க்கை நடத்தினர். நகரத்திலே வளம் கொழித்தது.

வங்கியசேகர பாண்டியன் மிகுந்த புகழ் பெற்று நல்லரசு செய்து கொண்டிருந்தான்.



# 50. சுந்தரப் பேரம்பு எய்தது.

வங்கியசேகர பாண்டியனது செங்கோல் ஆட்சியினாலே நாட்டிலே நிலமகளும், திருமகளும், கலைமகளும் மங்கலமான வாழ்வு பெற்று விளங்கினர்.

அதே நாட்களில் சோழ நாட்டை விக்கிரம சோழன் என்பவன் ஆண்டு வந்தான். அவன் வாகைமாலை சூடிய வெற்றிப் பெருவீரன். வங்கியசேகரனோடு சமர்புரிய எண்ணிப் பெரிய படையுடன் கிளம்பினான். வடதிசை வேந்தர் பலரும் அவனுக்குத் துணை தந்தனர். பல வகைக் கருவிகள் இடிமுழக்கம் செய்யத் தனது காவிரிப்பதியிலிருந்து புறப்பட்டுப் பாண்டிய நாட்டை வந்தடைந்தான்.

சோழ நாட்டுப் படைகள் பாண்டி நாட்டுக்குள் புகுந்தும் பசுக் கூட்டங்களைக் கவர்ந்தும், மலர் வாவிகளைப் பாழாக்கியும், ஏரிகளை உடைத்தும், வழிப்பறிக் கொள்ளை செய்தும் போர் புரிவதற்கான வகைகளைக் கையாண்டனர். வங்கியன் அதனை அறிந்தான். "நான் என்ன செய்ய முடியும்? சோழர் படையோ சமுத்திரம் போலப் பெருகியுள்ளது; அதை எதிர்த்து எவ்வாறு சண்டை செய்யக்கூடும்? சோமசுந்தரப் பெருமானை அண்டிக் குறையிரப்பதைத் தவிர வேறு வழியில்லை" என்று எண்ணியவனாகித் திருக்கோவில் அடைந்தான்.

பாண்டியன் திருக்கோவில் சேர்ந்து சிவபெருமானை வணங்கி, "வேண்டியதருளும் பெருமானே! விக்ரம சோழன் எளியேனோடு அமர் செய்யும் பொருட்டு தனது பெருஞ் சேனையோடும், பிறநாட்டு வேந்தர்களோடும் வந்து தங்கியுள்ளான். எதிர்த்துப் போராட எளியேனிடத்திலே போதிய அளவு பெருத்த சைனியம் இல்லை. எனக்கு வேறு கதியில்லை; எம்பெருமானே! அடியேனைக் காத்து அருள் புரிவது தேவரீர் கடமை." என்று விண்ணப்பம் செய்தான். அதுசமயம் சோமசுந்தரப்பெருமான் ஆகாசவாணியாக, "பாண்டியா! நீ சென்று சோழனோடு போர் செய்; நாமும் அங்கே வருவோம்; உனக்குத் துணையாகி நின்று வெற்றி பெறும்படி செய்வோம்," என்று மொழிந்தருளினார். அம்மொழிகளைக் கேட்டான் பாண்டியன்; அளவிலாத மகிழ்ச்சியடைந்தான். சிவபெருமானைப் பணிந்து ஏத்திய வண்ணம் திருக்கோவிலை விட்டு வெளியே வந்தான். அந்தச் சமயம் ஓர் ஒற்றன் ஓடோடியும் வந்து, "விக்கிரம சோழனது சேனை ரிஷப மலைக்குப் பக்கத்திலே வந்துவிட்டது." என்று சொன்னான்.

வங்கியசேகர பாண்டியனும் பல கருவிகள் முழங்கத் தனது சதுரங்க சேனைகள் புடைசூழப் போர் செய்யச் சென்றான். சோழனது பெருஞ்சேனை ஆலவாய் மதிலுக்கு வெளியே வளைத்துக்கொண்டு நின்றது. வஞ்சி மாலை சூடிய பாண்டிய சேனை வீரர்கள் ஆர்ப்பரித்து நெருங்கினர். இரண்டு பக்கத்துப் படை வீரர்களும் வஞ்சினம் கூறி கடும்போர் விளைவிக்கலாயினர்,

தேருக்குத் தேர், யானைக்கு யானை, குதிரைக்குக் குதிரை, வீரருக்கு வீரர், வாளுக்கு வாள், வேலுக்கு வேல் என்று எதிர் எதிர் நின்று தாக்கி வெம்போர் புரிந்தனர். பாண்டியன் தனது தேரில் ஏறிக்கொண்டு சென்று சோழனை எதிர்த்தான். பல வகையான பேரொலிகளும் பெருங்கூச்சல்களும் எழுந்தன. இப்படியாக இரு பக்கத்துப் படைகளும் பின்னடையாமல் சண்டை செய்து கொண்டிருந்தன. அந்த நேரத்திலே சோழன் வடவர் படையோடு கடுமையுடன் எதிர்த்து வந்தான். அது கண்டு ஆற்றமாட்டாத பாண்டிய சேனை மருண்டு ஓடிச் சிதைந்தது. எல்லாவற்றையும் அப்படி அப்படியே போட்டுவிட்டுச் சென்றனர் வீரர்கள் எல்லாரும். அதைப் பார்த்த சோழன் பாண்டியன் தோற்றுவிட்டதாகவே எண்ணினான்; கருவம் மிகுந்ததால் தனது வெற்றிச் சங்கை எடுத்து ஊதி முழக்கம் செய்தான்.

சோமசுந்தரப் பெருமான் அப்போதுதான் பாண்டியனுக்கு அருள்புரியத் திருவுள்ளம் கொண்டார். முன்னொருக்கால் தண்ணீர்ப் பந்தல் வைத்தும், சோழனை மடுவில் வீழ்த்தியும் பாண்டியனுக்கு அருள்பாலித்த பெருந்தகையான சிவபெருமான் வேடமன்னராக உருவம் ஏற்று வந்து பாண்டியன் படைக்குத் தலைவராக ஆனார். சிவவேடப் பெருமான் தமது வில்லை வளைத்துக் கூரிய அம்புகளைச் சோழ சேனையர் மேல் விடுத்தார். அந்த அம்புகளிலெல்லாம் 'சுந்தரேசன்' என்ற அருமைத் திருப் பெயர் பொறிக்கப்பட்டிருந்தது. வெற்றிச் சங்கு ஊதிய சோழனது சேனை வீரர்களில் பதினாயிரம் பேர்களது உயிர்களை சுந்தரப் பேரம்பு ஒவ்வொன்றும் குடித்தது. சோழன் அதுகண்டு பெருந்திகைப்புக் கொண்டான். "ஓர் அம்புக்கு இவ்வளவு ஆற்றல் ஏது?" என்று சந்தேகப்பட்டு ஆச்சரியமடைந்தான். அக்கணைகளுள் ஒன்றைக் கொணரச் சொல்லிப் பார்த்தான்; அதிலே 'சுந்தரேசன்' என்று தீட்டியிருப்பதைக் கண்டான். "ஆகா! இது பாண்டிய மன்னனுக்கு ஆலவாய் அண்ணல் துணைதரும் செயல்" என்று எண்ணினான். பயமடைந்து தனது சேனைகளுடன் திரும்பச் செல்வதானான்.

திரும்பிச் செல்லும் சோழ வேந்தனைப் பார்த்து வடநாட்டு வேந்தர் வியந்தனர். சோழனைத் தடுத்து நிறுத்தினர். அவனைக் கோபித்துத் திட்டி "நீ தோற்று ஓடலாமா? உனது வீரம் என்ன? பெருமை என்ன?" என்று கூறி மறித்தனர். மறுபடியும் சோழன் வடவர் துணைகொண்டு பாண்டியன் சேனை மீது மிகவும் கடுமையுடன் தாக்கினான். பல அம்புகளைத் தொடுத்தனர் சோழ வீரரும் பிறரும். வேடச்சிவனார் அது கண்டார். தனது பெருவில்லை வளைத்து ஓர் அம்பினை விடுத்தார். சோழ வீரரும் வேறு வீரரும் விடுத்த கணைகளையெல்லாம் அது கண்டித்தது. பின்னர் பத்துப் பத்துக் கணைகளாக எய்து ஆயிரம் ஆயிரம் தேர்களையும், யானைகளையும், குதிரைகளையும், வீரர்களையும் வீழ்த்தினார். அதன் பின்னர் நூறு நூறு அம்புகளை விடுத்துப் பதினாயிரம பதினாயிரம் தேர்களையும் யானை

கனையும் வீரர்களையும் அழித்தார். அதற்குப் பின்னர் ஆயிரமாயிரம் கணைகள் தொடுத்து லட்சோபலட்சமாக எல்லாவற்றையும் அழித்தார். போர்க்களம் எங்கும் பிணக்குவியல்; இரத்தவெள்ளம் ஆறுகிப் பெருகி ஓடியது. கழுகுகள், காக்கைகள், நரிகள் எல்லாம் பெரு விருந்து கொண்டாடின. கூளிப் பேய்கள் களிநடம் புரிந்தன.

சோழ வேந்தனுக்குத் துணையாகச் சார்ந்து நின்ற அயல் நாட்டு அரசர் எல்லாரும் சுந்தரப் பேரம்பு பட்டு மடிந்தனர். இதனையெல்லாம் கண்டு மயங்கிய சோழன் எஞ்சிய வீரர்களுடன் இகழ்ச்சியும் அச்சமும் தன்னைச் சூழ்ந்து வர ஓட்டம் பிடித்தான்.

வங்கிய சேகர பாண்டியனது வெற்றி முகம் கண்ட சிவவேடப் பெருமான் அருள் நகை சிறிதே புரிந்து மறைந்தருளினர்.

பின்னர் பாண்டியன் வெற்றிச் சங்கை முழக்கினன். தனது பட்டத்து யானைமீதமர்ந்து ஆலவாய்ப் பதியை அடைந்தான். அங்கே மங்கல மடந்தையர் அஷ்டமங்கலங்கள் ஏந்தி எதிர்கொளப் பெருமிதத்தோடு அரண்மனை புகுந்தான்.

சோமசுந்தரப் பெருமானுக்கு நிலையான பூசைப் பொருள்களைக் கொடுத்தான். நவரத்தினங்கள் பதிக்கப்பட்ட ஆபரணங்களையும், ஒளி தெறிக்கும் மாணிக்கம் இழைத்த பொன்னுலான வில்லும், சுந்தரப் பேர் எழுதி அம்பும் செய்து சாத்தினன் பாண்டியன்.

அறநெறி வழுவாமல் நீதியுடன் செங்கோல் செலுத்தி வாழ்ந்து வந்தான் வங்கியசேகர பாண்டியன். ★

## 51. சங்கப்பலகை தந்தது.

ஆலவாயில் வங்கிய சேகர பாண்டியன் ஆட்சிபுரிந்து வருகின்ற நாளிலே காசி க்ஷேத்திரத்திலே பிரம்மா பத்து அசுவமேத யாகங்களை வேத முறைப்படி புரிந்தார். மறுநாள் நீராடுவதற்காக, கங்கா நதியை நோக்கி தமது மூன்று மனைவிமார்களான சரஸ்வதி, சாவித்திரி, காயத்திரியுடன் சென்ருர். அப்படிச் செல்லும் வழியிலே, வான வீதியிலே வித்தியாதர மாதொருத்தி கானம் பாடுவதைக் கேட்டு அதிலே மனதைச் செலுத்தியதாலே, சற்றே தயங்கி நின்ருள் சரசுவதி. அதற்குள்ளாக கங்கைக் கரையை அடைந்து விட்டார் பிரம்மதேவர். வாணி வரக் காலம் தாழ்ந்ததாலே தமது இரு மனைவிகளோடு நீராடிக் கரையேறினர். "என்னை விட்டுவிட்டு நீராடியது எப்படி?" என்று வினவிக்கொண்டே வந்தாள் கோப மடைந்த சரசுவதிதேவி "குற்றம் உன்மேல் உள்ளபோது எம்மை எதற்காகக் கோபிக்கிருய்? வீணுக என்னைக் கோபித்த குற்றத்தாலே நீ எண்ணற்ற மனிதப் பிறவி எடுத்துக் குற்றம் நீங்குவாய்" என்று சாபமிட்டார் பிரம்மா. சாபம் பெற்ற சரசுவதி பெரிதும் பயந்தாள். "மனிதப் பிறப்பின் துன்பங்களுக்கு ஆளாகாத தேவரீரது மனைவி

யான எனக்கு எண்ணற்ற பிறவியா வேண்டும்?" என்று பணிவோடு வினவினாள்.

சினம் தணிந்த பிரம்ம தேவரும் சிந்தித்தார். "வாணி! உன்னுடைய வடிவமாகிய முதலெழுத்து ஐம்பத்து ஒன்றினுள்ளே விளங்குகிற ஆகாரம் முதலாக ஹாகாரம் ஈறாக நாற்பத்தெட்டு எழுத்துக்களும் நாற்பத்தெட்டுப் புலவர்களாகி பல்வேறு வருணங்களிலே தோன்றக் கடவனவாக. அவ்வெழுத்துக்குள் எல்லாவற்றிலும் உயர்ந்து நின்று உயிர் தரும் தனி முதலான அகரத்திற்குத் தலைமையான கடவுள் சோமசுந்தரப் பெருமானே யாவார்! ஆதலால் அவரும் ஒரு புலவராகி புலவர் கூட்டத்தை நாற்பத்தொன்பதாக ஆக்கிவிடுவார். அந்தப் புலவர்களது 'உள்ளத்திலே புகுந்து கொண்டு அறிவைத் தோற்றுவித்து அருள்வார்" என்று கூறினார்.

நான்முகனின் ஆணையின்வண்ணம் ஆகார முதலிட்ட நாற்பத்தெட்டெழுத்துக்களும் வெவ்வேறு இனத்திலே மக்களாய்ப் பிறந்தன. பிறந்த அக்ஷரக் குழந்தைகள் வயதிலே வளர்ந்தன. வயது ஏற ஏற அறிவும் புலமையும் பெருகின. பல கலைகளின் வகைகளை அவர்கள் தெரிந்துகொண்டார்கள். சம்ஸ்கிருத பாஷையையும், மற்றும் பதினெட்டு பாஷைகளையும் ஆராய்ந்து அறிந்தனர். தமிழ் மொழியிலே தலைமைப் புலமையைப் பெற்றனர். பொன்மாலை ரத்தின மாலைகள் தவிர்த்து உத்திராட்ச மாலையும் தரித்தனர். வெள்ளிய திருநீறு அணிந்தனர். சிவபூஜை செய்யும்போது பாமாலையும் பூமாலையும் சூட்டி மகிழ்ந்தனர். பெருந் தகுதியும், தகைமையும், தன்மையும் ஒருங்கே பெற்றுத் துலங்கிய புலவர் நாற்பத்தெட்டுப் பேர்களும் நாடு முழுவதும் சுற்றி வந்தனர். தங்கள் புலமையின் வலிமையால் அங்கங்கே இருந்தவர்களை வென்றனர். பின்னர் தன் பொருநையாற்றால் வளம் கொழிக்கும் பாண்டி நன்னாட்டிற்கு வந்து சேர்ந்து பாண்டிய ராஜதானியாகிய ஆலவாயம்பதியை நோக்கி வந்துகொண்டிருந்தனர்.

அச்சமயம் கலாந்தமும் ஞானமூர்த்தியும் ஆலவாயப்பனுமாகிய சோமசுந்தரப்பெருமான் தமது இச்சா சக்தியால் ஒரு புலவர் வேடம் கொண்டருளினார். நாற்பத்தெட்டுப் புலவர்களின் முன்னே சென்று, "நீங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று கேட்டருளினார். "நாங்கள் புலவர்கள், தன்னை வந்தடைந்தவரது பாபம் போக்கும் தண்பொருநைப் பாண்டிப் பகுதியிலிருந்து வருகிறோம்" என்றார்கள் புலவர்கள். அது கேட்ட புலவர் பெருமான், "இனிய தமிழ்மொழி பயிலும் ஆலவாய்ப் பதியிலுறையும் சோமசுந்தரப் பெருமானைக் கண்டு வணங்கவேண்டும்; இப்பொழுதே வருவீர்களாக" என்று பணிந்தருளினார். புலவர்கள் 'அனைவரும் சோமசுந்தரக் கடவுளை நேரிலே தரிசித்தவர்போல மட்டற்ற மகிழ்ச்சி கொண்டனர். கடவுட் புலவரும் அவர்களையெல்லாம் ஆலவாயம்பதிக்கு அழைத்துச் சென்றார். திருக்கோவிலடைந்து பெருமானை வழிபடச் செய்து தான் மறைந்தருளினார். புலவர்கள் அனைவரும் வியப்பெய்தி,

"இது சிவபெருமானின் அருட்செயலே!" என்று தெளிவடைந்து சோமசுந்தரப்பெருமானை வகைவகையான செய்யுட்களாலே தோத்திரம் செய்து வணங்கினர்.

பின்னர் வங்கிய சேகர பாண்டியனது சபையை அடைந்து அவனைக் கண்டனர். தன்னிடம் வந்த நாற்பத்தெட்டுப் புலவர்களையும் கண்ட வழுதியும் அவர்களது அறிவொழுக்கத்தையும் கல்வியின் மேம்பாட்டையும் புலமையின் உயர்வையும் ஓர்ந்து, "இவர்களே ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர்: அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்பன பொருந்திய ஆன்றோர்கள்" என்று தெரிந்தான். அவர்கள் அனைவரையும் ஏற்று உபசரித்து வரிசைகள் பல வழங்கினான். சோமசுந்தரப் பெருமானின் திருக்கோவிலுக்கு வடமேற்கே சங்கமண்டபம் என ஒன்று நிறுவி அதிலே புலவர்களை இருக்கச் செய்தான்.

புதுப் புலவர்கள் பெற்ற சிறப்புகளைக் கண்டு பழைய புலவர்கள் மனம் புழுங்கினர். சங்கப் புலவர்களோடு வாதமிட்டுத் தங்கள் ஆற்றலும் செருக்கும் கெட அவமானமடைந்து சென்றனர். அயல் நாட்டிலிருந்து வந்த புலவர் பலரும் வாதமிட்டுத் தோற்றுப் போயினர்; சங்கப் புலவர்கள் வெற்றி பெற்று விளங்கினர்.

சங்கப் புலவர்கள் அனைவரும் சேர்ந்து ஒரு நாள் திருக்கோவில் சென்று சோமசுந்தரப் பெருமானை முறைப்படி துதித்து வணங்கினர். "எம்பெருமானே! பலர் தொடர்ந்தாற்போல வந்து எங்களோடு வாதம் புரிகின்றனர். ஆதலால், அவர்களது புலமையைச் சீர்தூக்கி அளக்கும் கருவியாகச் சங்கப் பலகையொன்று எங்களுக்குத் தந்தருள வேண்டும்" என்று விண்ணப்பம் செய்தனர். தாமே வலிய வந்து பாணபத்திரனுக்குப் பொற்பலகை ஈந்த பெருவள்ளலான சிவபெருமான் புலவர்கள் வலிய வந்து வேண்டும்போது அருளாமல் இருப்பாரா? ஆதலால் பெருமானே புலவர் உருவம்கொண்டு ஒரு பலகையையும் கைக்கொண்டு எழுந்தருளினார். "புலவர்களே! இந்தப் பலகை இரண்டு சாண் சதுர அளவுள்ளது; சந்திரனைக்காட்டிலும் வெண்மையானது; அறிவைக் காட்டிலும் தூய்மையானது; மந்திரசக்தி கொண்டது; உம்மைப் போன்ற அறிவிலே சிறந்தவர்கள் வந்தால் ஒவ்வொரு முழமாக வளர்ந்து இடம் தரும் ஆற்றல் உடையது; இப்பலகை உங்களுக்கு பிறர் திறமை அளக்கும் கருவியாக அமையும்" என்று இயம்பி அருமைப் பலகை தந்தருளினார்.

இறைவன் அருளிய அப்பலகையைப் பரிவுடன் பெற்றுக் கொண்ட சங்கப் புலவர்கள் திருக்கோவிலைப் பிரதட்சிணம் செய்து கொண்டு தமது மண்டபம் சேர்ந்தனர். திருப்பலகையைப் பாங்கான இடத்திலே அமைத்துப் பூமாலை சூட்டினர். பன்னீர் தெளித்துச் சந்தன குங்குமம் சாத்தினர். தூப தீபம் காட்டிப் பூசனை செய்து வணங்கினார்கள். பின்னர், சங்கப் பலகையின் மேல் முதல் முதலாக நக்கீரர் ஏறினார். அடுத்து கபிலனும் பாணனும் ஏறினர்

ஏனைய புலவர்களும் ஒருவர்பின் ஒருவராகச் சங்கப் பலகை ஏறி ஒன்றாக அமர்ந்தனர். சோமசுந்தரப் பெருமான் அருளிய சிறு பலகையொன்றே ஒவ்வொரு புலவருக்கும் ஒவ்வொரு முழமாகப் பெருகி வளர்ந்து எல்லாருக்கும் இடம் அளித்தது.

தெய்வப் பலகை பெற்ற சங்கப் புலவர்கள் பெருமையிலே சிறந்து விளங்கினர். நாற்பத்தெட்டுப் புலவர்களும் தமது சிறந்த புலமையினாலே கணக்கில் அடங்காத தூய தமிழ்ப்பாடல்களை இயற்றித் தத்தம் போக்குப்படி இனிதே இருந்தனர். சொல்வளம், பொருளழகு கொண்ட அந்தப் பாடல்கள் எல்லாம் ஏறக்குறைய குறித்துக் காட்டிய பொருள்களிலே ஒற்றுமை உடையனவாகியிருந்தன. அதன் காரணமாக எந்தப் பாடலை யார் பாடியது என்று தெளிய வகையில்லாமல் இருந்தது. புலவர்கள் தமக்குள் ஆச்சரியமடைந்து "இது என் பாடல்; அது உமது பாடல்" என்று மாறுபாடு கொண்டு மயங்கினர்.

அது சமயம் சோமசுந்தரப் பெருமான் புலவர் வடிவம் கொண்டு அவர்கள் முன்பு தோன்றினார். அந்த அருட்பெரும் தெய்வப் புலவரைச் சங்கப் புலவர்கள் வரவேற்றார்கள். புலவர்பெருமான் அவர்களைப் பார்த்து, "புலவீர்! மயக்கம் தரும் உங்களது செய்யுட்களைக் கொண்டு வருவீர்களாக" என்று அருளிச் சொன்னார். புலவர்களும் தம்மை மயக்கிய பாக்களைக் கொணர்ந்து தேவப் புலவர் திருமுன் வைத்து நின்றனர். அப்புலவரும் ஒவ்வொரு பாடலாகப் படித்துப் பார்த்து ஆராய்ந்து "இது உம்முடையது; இது உம்முடையது" என்று சொல்லி அவரவர்கள் ஏற்று மகிழ்ந்துகொள்ளும் வண்ணம் ஈந்தருளினார். தங்கள் தங்கட்குரிய பாடல்களைப் பெற்ற புலவர் நாற்பத்தெட்டுப் பேர்களும் புலவர் பெருமானின் தன்மையைக் கண்டு வியந்து களிகூர்ந்து போற்றினர். "புலவர் பெருந்தகையே! தாங்களும் எங்களோடு ஒரு புலவராய் இருந்தருள்க" என்று வேண்டினர். சங்கப் பலகையில் அவரையும் அமர்த்தினர். தெய்வப் புலவரும் தலைமை ஏற்று நடுநாயகமாக வீற்றிருந்து அருளினார்.

சங்கமிருந்த தமிழனாகிய சிவபெருமானைத் தலைவராகக்கொண்ட புலவர்கள் செவ்விய மதுரம் சேர்த்த ஒண்டீந்தமிழ்ப் பாடல்கள் பல செய்து அருமை நூல்கள் பல சேர்த்தனர்.

பல நாட்கள் கழிந்தன. வங்கிய சேகர பாண்டியன் வயதிலும், அழகிலும், வீரத்திலும், அறிவிலும், ஆற்றலிலும் நன்கு விளங்கிய தனது மைந்தன் வங்கிய சூடாமணிக்குக் குடை, முடி, கோல் தந்து சிவலோகம் புகுந்தான். ★

## 52. தருமிக்குப் பொற்கிழி அருளியது.

வேந்தர் வேந்தனாகிய பாண்டிய வங்கிய சூடாமணி சோமசுந்தரப் பெருமானுக்கு சூட்டப் பல்வகை மலர்கள் தரும் திரு நந்த

வனம் அமைக்கும் திருப்பணியை மேற்கொண்டான். காலை நடுப் பகல் மாலை என மூன்று காலங்களிலும் பயன்படுமாறு மலர்களைத் தந்துதவியது நந்தவனம். பாண்டியன் மேற்கொண்டு தனியாக ஒரு சண்பக நந்தவனத்தையும் அமைத்தான்.

தான் அமைத்த சண்பக நந்தவனம் அழகு பெற்று நறுமணத் துடன் வளமுற்று வருவதைக் கண்டான் வங்கிய சூடாமணி பாண் டியன். இறைவன் திருவருளை எண்ணி எண்ணி மகிழ்ந்தான். சண்பக நன்மலர்களைக் கொய்து ஆய்ந்து இண்டை, தொடை, தொங்கல், தாமம், கண்ணி எனப் பலவகை மாலைகளைத் தொடுத்துச் சோமசுந் தரப் பெருமானின் திவ்ய மேனியிலே சாற்றி அணி செய்தான். பொன்னைப் போன்ற சண்பக மலர் மாலையணிந்த சோமசுந்தரப் பெருமானின் நற்கோலத்தைக் கண்டு ஆச்சரியமுற்று "சண்பக சுந்தரர் இவர்!" என்று மொழிந்து வணங்கினான். அன்றுதொட்டு திரு ஆலவாய்ச் சுந்தரப் பெருமானுக்குச் 'சண்பக சுந்தரர்' என்ற திருப் பெயரும் வழங்குவதாயிற்று. சண்பக மாலைகளைப் பெரு மானுக்குச் சாற்றிய காரணத்தாலே வங்கிய சூடாமணி பாண்டிய னும் 'சண்பக பாண்டியன்' என்ற பெயர் பெற்று விளங்கினான்.

இளவேனிற்காலம் வந்தது. வேனற்கால வெப்பம் தாங்கமுடி யாததாக இருந்தது. மாமரங்கள் செந்தளிர் காட்டிச் சிவந்து நின்றன. செருந்தி, முள்முருக்கு, கடம்பு முதலான மரங்களெல்லாம் பூத்துக் குலுங்கின. குங்கும மலர்கள் மகரந்தம் சிந்தின. அக்காலத் திலே வாடி இலையுதிர்ந்த மரங்களும் பல உண்டு. தென்றல் காற்று அங்கங்கே கலைகள் தேரும் அறிவனைப் போலத் தவழ்ந்து வந்தது. இத்தகைய இளவேனிற் காலத்திலே சண்பகமாறன் தனது தேவி யோடும் சென்று சண்பகவனத்திலே தங்கியிருந்தான். வெப்பம் தணிதலின் பொருட்டாக தனது தேவியும் தானுமாகத் தனியா யிருந்தபோது அவனுக்கு நேராகப் புதுமணம் தோன்றும்படித் தென்றல் வீசியது. சண்பகமாறன் அந்தப்புது நறுமணத்தைமோந்து மகிழ்ந்தான். "இது திவ்யமானதொரு நவகந்தம்; சோலையிலுள்ள மணம் அல்ல; காற்றுக்கு இயற்கையாக எந்த மணமும் கிடையாது; இந்த வாசனை எதிலிருந்து எவ்வாறு வீசுகிறதோ!" என்று வியந் தான். வியந்துகொண்டே தனது தேவியைத் திரும்பிப் பார்த்தான். அவளுடைய கூந்தலிலிருந்தே அப் புது மணம் வீசுகிறது என்பதைத் தேர்ந்தான். "ஆகா! பூ வண்டுகளுக்கும் தெரியாத மணம் அல்லவா இது!" என்று கருதி வியப்படைந்து "இத்தகைய வாசனை கூந்த லுக்கு இருப்பது இயற்கையாலா அல்லது செயற்கையாலா?" என்று சந்தேகம் கொண்டான்.

பாண்டியன் அரண்மனை வந்து சேர்ந்தான். "நான் சந்தேகப் பட்ட கருத்தை யாராவது அறிந்து செய்யுள் செய்வார்களானால் அவருக்கே ஆயிரம் பொன் அடங்கிய இந்த முடிப்பு உரியதாகும்." என்று சொல்லிப் பொற்கிழியொன்றை ஏவலர் கையிலே கொடுத்

தான். அவர்கள் பொற்கிழியைக் கொண்டுபோய் சங்க மண்டபத்தின் முன்னால் தொங்கவிட்டனர். சங்கப் புலவர்களெல்லாம் தத்தமக்குள்ளே பல்வேறுவிதமாக பாண்டியனது உள்ளத்திலிருந்த ஐயப்பாட்டைப் பற்றி நினைத்துக்கொண்டிருந்தனர். அவர்கள் அது பற்றி ஒன்று கூடி ஆராய்ந்தார்கள்; தனித்தனியே ஆராய்ந்தார்கள். ஆனால் மாறனது மனத்திருந்த சந்தேகத்தைப் புரிந்துகொள்ள மாட்டாமல் மனம் உளைந்தனர்.

அந்தச் சமயத்திலே ஆதிசைவக் குலத்தில் பிறந்தவனும், மாணவனும், பெற்றோரை இழந்தவனும், பிரம்மசாரியுமாகிய தருமி என்பவன் திருக்கோவில் சென்று சோமசுந்தரப் பெருமானைத் தரிசனம் செய்து வணங்கினான். "கடவுளே! அடியேன் பெற்றோர் இல்லாதவன், கதியில்லாதவன்; விவாகம் செய்துகொள்ள விரும்புகிறேன். ஆனால் அவ்வாறு செய்துகொள்ளப் பொருள் இல்லை. எவ்வளவுதான் வேதகர்மங்களையெல்லாம் ஓதியவனாக இருந்தாலும் இல்வாழ்க்கை இல்லாது போனால், பெருமானை அருச்சிக்க உரியவன் ஆவேனோ? ஆதலால் தேவரீர்! எல்லாம் உணர்ந்து எல்லாம்வல்ல தாம் பாண்டிய மன்னனது உள்ளாழ்ந்த கருத்தையமைத்து எளியேன் உய்க்கும்படிக்குச் செய்யுள் ஒன்று அருளவேண்டும்" என்று குறையிரந்தான்.

உடனே ஆலவாய்ச் சோமசுந்தரக் கடவுள்,

"கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலி
னறியவு முளவோ நீயறியும் பூவே."

என்ற சொன்னயம் மிகுந்த செந்தமிழ்ச் செய்யுளொன்றை பாடித் தருமியின் கையிலே ஈந்தருளினார். புதையல் கண்டவன் போலப் பெருமகிழ்வெய்திய தருமியும் பாடல் பெற்று சோமசு தரப் பெருமானை வணங்கினான்.

பின்னர் அந்தச் செய்யுளை எடுத்துக்கொண்டு கற்றுத் தேர்ந்த புலவர் இருக்கும் சங்க மண்டபத்தை அடைந்து அதனை அவர்கள் கையிலே கொடுத்தான். சங்கப் புலவர்கள் எல்லாரும் தருமி தந்த செய்யுளை விரைவாக வாங்கிப் படித்தனர். செய்யுளுடைய அமைப்பையும், போக்கையும் சொல்லழகையும், பொருளாழத்தையும் சீர்தூக்கிப் பார்த்து வியந்து பாராட்டினர். சண்பக மாறன் முன்னிலை சேர்ந்து அந்தப் பாடலைச் சொல்லிப் பொருள் விளக்கம் செய்தனர். தன்னுடைய மனக்கருத்தோடு அந்தச் செய்யுளின் கருத்தும் ஒத்திருந்ததால் பாண்டியன் மகிழ்ந்து வியந்தான். "இப் பாடல் கொணர்ந்த அந்தணன் இப்போதே இப்புலவர்களுடன் சென்று ஆயிரம் செம்பொன்னையும் பெற்றுக்கொள்வானாக" என்று பணித்தான்.

மாறன் மகிழ்ந்து கூறியபடியே தருமியும் புலவர்களுடன் சங்க மண்டபம் சென்றான். மண்டபத்தின் முன்னே தொங்கிக்கொண்டிருந்த பொற்பையை அறுக்கத் தொடங்கினான். உடனே, அங்கே விரைந்து வந்த நக்கீரன் அவனைத் தடுத்து நிறுத்தி, "இந்தச் செய்யுளிலே குற்றம் உள்ளது" என்றான்.

தருமியோ தமிழ்ப் புலமையில்லாதவன். கைக்கெட்டியது வாய்க்கெட்டாதவனைப் போல ஏமாந்து ஏங்கி வாடினான். செய்யுள் தீட்டிய திருவோலையை எடுத்துக்கொண்டு திருக்கோவில் சென்றான். சோமசுந்தரப் பெருமான் திருமுன் அதனை வைத்து, "ஆலவாய் அண்ணலே! குற்றமுள்ள பாடலை ஏன் தந்தீர்? வறுமையால் வாடுகின்ற நான் பெறுகின்ற பொன்னை இழந்தேன் என்று கூற வரவில்லை. இறைவா! தேவரீர் பாடியருளிய செய்யுளிலும் மனிதப் புலவர் குற்றம் காண்பது என்று வந்தால் தங்கள் மதிப்பு என்னவது? இகழ்ச்சியானது எம்பெருமானையல்லவா சார்கிறது" என்று கூறிக் கவலையால் வருந்தினான்.

தருமியின் இரங்கு சொல் கேட்ட இறையனார் புலவர் வடிவம் கொண்டு வெளியே வந்தார். புலவர் பெருமான் மகரகண்டிகை, பதக்கம், குண்டலம், மோதிரம் முதலிய ஆபரணங்களை அணிந்து விளங்கினார். விபூதிப் பூச்சு திருமேனியில் துலங்கியது. முத்தமிழ் வல்லோன் தான் என்பதை நன்கு எடுத்துக் காட்டும்படி அமைந்திருந்தது அவரது திருக்கோலம். திருவடிகளிலே பாதுகை திகழ்ந்தது. முத்துக்குடை நிழல்தர, வெண்சாமரை வீச, இளைஞர்கள் அடப்பை, காளாஞ்சி, பூத்தட்டு முதலியன ஏந்தி உடன்வர, கற்றுச் சொல்லிகள் பின்வரச் சங்க மண்டபம் சென்றார்.

சென்றவுடனே சோமசுந்தரப் புலவர் அங்கிருந்த புலவர்களைப் பார்த்து, "எமது கவிக்கும் குற்றம் சொன்னவர் யார்?" என்று வினவினார். உடனே நக்கீரன் சிறிதும் பயப்படாமல் முன் வந்து, "குற்றம் சொன்னது நானே" என்றான். புலவர், "என்ன குற்றமோ?" என்று கேட்க, நக்கீரன், "சொற்குற்றமில்லை; பொருட் குற்றம்" என்றான். புலவர், "அந்தப் பொருட் குற்றம்தான் என்ன?" என்று வினவினார். நக்கீரன் தனக்குக் குற்றம் ஏற்படுவதை உணரவில்லை. ஆதலால், "பூக்கள் வைத்துக்கொள்வதால் கூந்தலுக்கு மணம் ஏற்படுகிறதே அல்லாமல் கூந்தலுக்கு இயற்கையான மணம் எதுவும் கிடையாது" என்று கூறினான். "பத்மினி ஜாதிப் பெண்களுடைய கூந்தலோ?" என வினவினார் புலவர். "அதுவும் அத்தன்மையுடையதுதான்" என்றான் கீரன். "தேவமாதரின் கூந்தலோ?" என்று கேட்டார் புலவர். "மந்தாரமலர் சூடுவதால் அதுவும் செயற்கை மணமுடையதுவே" என்றான் கீரன். "நீ துதித்து வழிபடும் காளத்தி நாதருடைய சக்தியாகிய ஞானப் பூங்கோதையம்மையாரின் கூந்தலும் அப்படிப்பட்டதுதானோ?" என்று இறுதியாக வினவினார் தெய்வப் புலவர். "அதுவும் அத்தன்மையானதே" என்று உறுதியாகக் கூறினான் கீரன். கீரனது சலஞ்சாதிக்கும் தன்மையைக்

கண்ட சிவபெருமானுக்குக்கோபம் வந்தது. உடனே தனது நெற்றிக் கண்ணைச் சிறிது காட்டினார். நக்கீரன் அதற்கும் அஞ்சவில்லை. "இந்திரனைப் போல உடம்பு முழுதும் கண்களை நீர் உடையவரானாலும் உமது பாடலிலுள்ள குற்றம் குற்றமே!" என்று சாதித்து விட்டான் கீரன்.

சிவபெருமான் உக்கிர மூர்த்தியானார். அவரது நெற்றிக்கண்ணி லிருந்து செந்தழல் பாய்ந்தது. அதன் வெப்பத்தைப் பொறுக்க முடியாத கீரன் ஓடோடியும் சென்று பொற்றாமரைக் குளத்திலே விழுந்து மூழ்கினான்.

புலவர் உருவம் கொண்டு வந்தருளிய சோமசுந்தரக் கடவுளும் மறைந்தருளினார். ★

## 53. கீரனைக் கரை ஏற்றியது.

சோமசுந்தரப் பெருமானின் நெற்றிக் கண்ணின் நெருப்பாலே தாக்குண்ட நக்கீரன் பொற்றாமரைக் குளத்துள் விழுந்து பெரிதும் துன்பப்பட்டான். கபில பரணராகிய புலவர்களெல்லாம் அதைக் கண்டு பொறுக்கமாட்டாமல் நடுங்கினார்கள். "நக்கீரன் இல்லாது ஏனைய புலவர் சேர்ந்த இச்சங்கம் வேந்தன் இல்லாத குடியும், நடு நாயக மணியில்லாத மாலையும், ஞானம் இல்லாதார் கல்வியும் போன்றது. சொல்லுக்கும் பொருளுக்கும் சொரூபமாக விளங்கும் சோமநாதப்பெருமானுடன்வாது செய்த பிழை பெரும்பிழை; ஐயோ! இப்பிழை தீர்வது எப்படி? இனி நாம் உய்வது அரிது" என்று எண்ணிய புலவர் எல்லாரும் மனம் மருகினர்.

"சிவபெருமான் தமது திருக்கைலாச மலையைப் பெயர்த்த இராவணனும் தன் கையிலே வீணையேந்தி இனிய இசை பாட திருவுளம் கனிந்து அவன் இழைத்த பிழையை மன்னித்ததோடல்லாமல் அவனுக்குத் தேரும் வாளும் ஈந்தருளினாரல்லவா! ஆதலால் சிவபெருமான் இரங்கினால் நக்கீரன் செய்த பிழையும் நீங்குவது உறுதியே" என்று தங்களுக்குள் சொல்லி அமைதியுற்றனர். உடனே, சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளில் விழுந்து துதி செய்தனர். "சிவபெருமானே! மால்விடை யேறிய அருளாளனே! எவ்வுயிர்க்கும் அம்மையப்பனாய் விளங்கும் தண்ணியனே! நக்கீரன் வித்தியா கருவத்தினால் மதியிழந்து தேவரீரது திருப்பாடலைப் பிழை என்று கூறி விதண்டாவாதம் செய்தான். அதனால் தங்கள் திருக்கண் தீக்கு இலக்கானான்; வாவியுள் விழுந்து அல்லற்படுகிறான். இனி தேவரீரே பெருங்கருணை காட்டிக் கீரனது பிழையை மறந்து மன்னித்தருள் புரியவேண்டும்," என்று வெகுவாகக் கெஞ்சி முறையிடு செய்தனர்.

புலவர்களின் கூட்டு விண்ணப்பத்திற்குப் பெருமான் செவி சாய்த்தார். திருவருள் தண்ணளி காட்டத் திருவுளம் கொண்டார்.

தனது தேவி மீனாட்சியம்மையாருடன் எழுந்தருளி வந்தார். நக்கீரன் அழுந்திக் கிடந்த பொற்றாமரைத் தடாகத்தருகே சென்று புலவர் கூட்டத்துடன் சேர்ந்துகொண்டார். இப்போது தனது குளிர்மையான அருட்கண்ணால் நோக்கியருளினார். உடனே நீருக்குள் முழுகியிருந்த கீரன் தனது கருவி கரண இந்திரியங்களெல்லாம் சிவபெருமானுடையனவாக ஆனான். சிவபெருமானது பெருங்கருணைத் தடங்கலில் ஆழ்ந்து பக்திமயமானான். "ஜகன் மாதாவாகிய ஞானப் பூங்கோதையம்மையாரின் கூந்தலுக்கும் பழுது சாற்றிய எனது கொடிய குற்றத்தை அந்தக் கடவுளைத் தவிர வேறு யார் பொறுப்பார்கள்!" என்று கருதி வியந்தான்.

உடனே திருக்காளத்தியப்பர் மீது 'கைலைபாதி காளத்தி பாதி அந்தாதி' என்னும் பாமாலை தொடுத்துச் சூட்டினான் நீரிலிருந்த கீரன். அடியவர்க்கெல்லாம் திருவடிப்புணை தந்தருளும் தயாபரனை சிவபெருமான் அவ்வந்தாதி மாலையைத் திருச்செவி சாற்றி நேரே நெருங்கி வந்து நக்கீரனுடைய கையைப் பிடித்துக் கரையேற்றியருளினார்.

தனக்குக் கைதந்து கரையேற்றியருளிய கருணாநிதியான சோமசுந்தரப் பெருமானையும் மீனாக்ஷியம்மையாரையும் உளமார வணங்கினான் கீரன். தீமை செய்தவருக்குக் கோபத்தையும் நன்மை செய்தவருக்கு அருளும் காட்டுவது என்ற இறைவன் தன்மையைப் பொருளாக அமைத்து செய்யுள்மாலை கோர்த்தான். "ஐயோ! வருந்தினேன், எளியேனுக்கு அருள் புரிக." என்று வேண்டினான். இறைவனது கோபத்தையும் பிரசாதத்தையும் குறித்துக் 'கோபப் பிரசாதம்' என்றமைந்த மாலைசூட்டி, அம்மையப்பரைப் போற்றினான். பின்பு சிவ பரம்பொருளைப் புகழ்ந்து, 'பெருந்தேவபாணி', 'திருவெழு கூற்றிருக்கை' என்னும் செய்யுள் மாலைகளால் போற்றிப் பலமுறை விழுந்து வணங்கினான்.

சோமசுந்தரப் பெருமான் தம்மைத் துதித்த நக்கீரனுக்குத் திருவருள் புரிந்து, "முன்னைப் போலவே நீ உன்னை நன்கு மதித்த புலவர் கூட்டத்தில் இடம் பெறுவாயாக" என்று அருளிச் செய்து மீனாட்சியம்மையாரோடு மறைந்து திருக்கோவிலுள் அமைந்திருந்தார்.

நக்கீரனும் ஏனைய புலவர்களும் சங்க மண்டபம் சேர்ந்தனர். அங்கு தொங்கிக்கொண்டிருந்த செம்பொற்கிழியை அறுத்தெடுத்து தருமியான ஆதிசைவ அந்தணனுக்குக் கொடுத்தனர். மற்றும் மேற்கொண்டு பாண்டிய வேந்தனைக் கொண்டும் வரிசைகள் கொடுக்கச் செய்து அனுப்பினர். புலவர்கள் அனைவரும் பின்னர் கல்விச் செல்வர்களாகவே வாழ்ந்தனர்.

சண்பமாறன் சோமசுந்தரப் பெருமானையும் மீனாட்சியம்மையையும் அனுதினம் தரிசித்து வணங்கி வந்தான். 'சிவமே பொருள்'

என்று தெளிந்த நற்றுணர்வோடு பல திருப்பணிகள் செய்து சிறப்புற வாழ்ந்து வந்தான். ★

## 54. கீரனுக்கு இலக்கணம் உபதேசித்தது.

சோமசுந்தரப் பெருமானது ஆணையின் வண்ணம் சங்கப்புலவர் கூட்டத்தை அடைந்து அங்கு வாழ்ந்து வந்த நக்கீரன் குற்றமெல்லாம் நீங்கியவனாகத் திகழ்ந்தான். சிவபெருமானது திருவடிகளையே சிந்தித்த மனம் கொண்டவனாக விளங்கினான். 'சிவபெருமானது நெற்றிக்கண் தீயால் எரிந்த மன்மதனை விஷ்ணுவோ பிரம்மாவோ காக்க இயலவில்லை; ஆனால், அதே நெருப்புக்கண் என்னைச் சுட்ட போது அந்த வெப்பத்தைத் தணித்து என்னை பொற்றாமரைக்குளம் காத்தது. ஆகையால் இத்தீர்த்தமே எப்பிறப்பிலும் என்னைக் காப்பாற்றும்'' என்று நினைந்து ஒவ்வொரு நாளும் ஒருமையுடனே திரிகாலத்திலும் அதிலே ஸ்நானம் செய்து சோமசுந்தரப்பெருமானை வழிபாடு செய்கின்ற நியமத்தை மேற்கொண்டு ஒழுகி வந்தான்.

நக்கீரன் நியமம் தவறாமல் தம்மை வந்து வழிபாடு செய்வதை உணர்ந்து ஆலவாய் அண்ணல் திருவுளம் மகிழ்ந்தார். ''கீரனுக்கு இன்னும் இலக்கணம் விளங்கவில்லை. அதனாலே, இது வழாநிலைச் சொல், இது வழுஉச் சொல் என்பதை இவன் அறியவில்லை. இவனுக்கு இலக்கணம் போதிக்கச் செய்ய வேண்டும்; குற்றமற்ற நூற் கேள்வியிலே புலமை பொருந்திய ஒருவர் யார் இதனைச் செய்ய இருக்கின்றார்?'' என்று எண்ணமிடலானார்.

இறைவனின் நிலையுணர்ந்த அங்கயற்கண் அம்மையார் இறைவனைக் கைகூப்பி வணங்கி நின்று, ''பெருமானே! அங்கை நெல்லிக் கனிபோல அனைத்தும் உணர்ந்த வாலறிவனே! அடியாள் உள்ளத்தில் தோன்றியதைக் கூறுகின்றேன். செவி சாய்த்தருள வேண்டும். முன்பொருக்கால் மகாவிஷ்ணு, பிரம்மா, இந்திராதி தேவர்கள், சனகாதி முனிவர்கள் மற்றும் பிறரும் கைலாச மலையிலே வந்து கூடியிருந்தனர். அந்த பாரத்தை பூமி பொறுக்கவில்லை. அதனால், அதன் வடகிழக்கு எல்லை தாழ்ந்தது; தென்மேற்கு எல்லை உயர்ந்தது. அப்போது தேவரீரை அண்டிய தேவர்கள், பூமியைச் சமன் செய்தருளுமாறு தங்களைக் கேட்டுக்கொண்டனர். உடனே எம்பெருமானும், 'நம்மை நிகர்த்தவன் அகத்திய முனிவனே! நமது பார்வதியை நிகர்த்தவள் அவனது மனைவி லோபாமுத்திரையே!' என்றுகூறியருளி அம் மாமுனியைத் தெற்கே அனுப்பியருளினீர். செந்தமிழ் நாடு செல்லுங்கால் அகத்திய முனிவரும் தேவரீரிடத்திலே முதல் தமிழ் இலக்கணத்தை கற்றுத் தெளிந்தே புறப்பட்டான். அவன் சென்று ஆண்டுகள் பலவாகிவிட்டன. அவனும் தேவரீரைத் தரிசனம் செய்யும் துடிப்போடு இருக்கிறான். தங்கள் திருவுள்ளத்திற்குச் சம்மதமானால் அகத்தியனைக் கொண்டு நக்கீரனுக்குத் தமிழ் இலக்க

ணத்தை உணர்வித்தருளலாம் என்பது எளியவனது உள்ளக் கிடக்கை'' என்று விண்ணப்பித்துக்கொண்டார்.

உமையாரின் சொற்களைக் கேட்ட சிவபெருமான் மகிழ்ந்தார். ''அவ்வாறே செய்வோம்'' என்று திருவாய் மலர்ந்தருளி அகஸ்திய மகரிஷியை நினைந்தருளினார்.

எல்லாம் வல்லானின் திருவுள்ளக் குறிப்பை உணர்ந்து அகஸ்திய முனிவரும் தனது சிரத்தின் மீது கைகுவித்து, தவமெனும் விமானத்திலே தன் மனைவியுடன் ஏறிக்கொண்டு வானவழியே சென்று, ஆலவாய் க்ஷேத்திரத்தை அடைந்தார். திருக்கோவில் சென்று சோமசுந்தரக் கடவுளையும் மீனாக்ஷியம்மையையும் தரிசனம் செய்து சிவானந்தத்திலே திளைத்து நின்றார். அப்போது தான் பொற்றாமரைக் குளத்திலே ஸ்நானம் செய்து நக்கீரனும் நியமத்தோடு இறைவனைத் தரிசிக்க அங்கு வந்து சேர்ந்தான். காலம் கூடியது. திருவருள் கூட்டி வைத்தது. அந்த நிலையிலே சோமசுந்தரக் கடவுள் அகஸ்திய முனிவரைத் தமது திருமுன் வருமாறு கடைக்கணித்து, ''தவச்செல்வ! இந்த நக்கீரனுக்கு தமிழ் இலக்கண அறிவு இன்னும் நிரம்பப்பெறவில்லை. நீ எம்மிடத்தில் கேட்டுத் தெரிந்து கொண்டபடியே அவ்விலக்கணத்தைப் பழுதற இவனுக்குக் கற்பிக்கக் கடவாய்'' என்று ஆக்ஞாபித்தருளினார்.

சோமசுந்தரப் பெருமானின் திருவாணையைச் சிரத்திலும் உளத்திலும் தாங்கிய அகஸ்திய மகரிஷி தம்மை வணங்கி நின்ற நக்கீரனுக்கு நன்றாகத் தெரியும் வண்ணம் செந்தமிழ் நல்விலக்கணத்தைக் கற்றுக் கொடுத்தார். பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரம், உடன்படல் முதலிட்ட எழுவகை மதங்கள், நால்வகைப் பயன்கள், பத்துக் குற்றங்கள், பத்து அழகுகள், முப்பத்திரண்டு உத்திகள், காண்டிகை விருத்தியுரைகள் என்றமைந்த எல்லாவற்றையும் ஐயந்திரிபற உபதேசித்தருளினார் அகத்தியமா முனிவர்.

நக்கீரனுக்கு அகஸ்தியமுனிவர் தமிழ் இலக்கணம் போதித்த பாங்கினைக் கண்டு சோமசுந்தரப் பெருமானே பெரிதும் மகிழ்ந்தார். அகஸ்தியருக்கு வேண்டிய வரங்களெல்லாம் வழங்கி அவரது இருக்கை செல்லுமாறு விடுத்தருளினார்.

அகத்தியமா முனிவர் விடை பெற்றுச் சென்றபின் உமாதேவியார் சோமசுந்தரப் பெருமானைப் பார்த்து, ''நக்கீரனுக்குத் தாங்களே இலக்கணம் போதித்து அருளாது அகத்திய முனிவனைக் கொண்டு போதிக்கச் செய்த காரணம் என்ன?'' என்று வினவினார். ஆலவாய் அண்ணலும், ''நக்கீரன் நம்மிடத்தே பொறாமை கொண்டதாலே நாம் போதிக்காமல் அகத்தியனைக் கொண்டு போதிக்கச் செய்தோம்'' என்று விடைதந்து அம்மையாரின் ஐயம் போக்கியருளினார்.

அகஸ்திய மகரிஷியிடம் இலக்கணம் கற்றுக்கொண்ட பின்பு நக்கீரன் தான் முன்னே செய்த செய்யுட்கள் அனைத்தையும்

ஆராய்ந்து பிழைகளைத் திருத்திக்கொண்டான். தனது அறியாமை யின் காரணமாக இறைவன் அருளிய திருப்பாடலிலே குற்றங் கூறியதை நினைத்துப் பெரிதும் வருந்தினன். அன்று இறைவனது நெற்றிக் கண் நெருப்பு உடலைச் சுட்டது. தான் செய்த குற்றத்தின் நினைவு இன்று மனத்தைச் சுட்டது. "அடியேனைத் தண்டித்து அறிவுறுத்திய கருணையங் கடலனைய அண்ணலுக்கு ஏழையேன் என்ன கைம்மாறு செய்ய இயலும்?" என்று பலவாறு திருவருள் திறனை எண்ணிக் கரைகாணாத இன்பக் கடலுள் ஆழ்ந்தான்.

அதன் பின்னர் நக்கீரன் தான் அகஸ்திய மகரிஷியிடம் கற்றுத் தேர்ந்த செந்தமிழ் இலக்கணத்தை ஏனைய சங்கப் புலவர்களுக்கும் அன்புடன் போதித்தான். நக்கீரன் மூலமாகப் புலவோர் அனைவரும் தொல்லிலக்கணம் தெரிந்து கொண்டனர்.

சோமசுந்தரப் பெருமானின் சேவடிகளையே அல்லும் பகலும் அனவரதமும் தனது உள்ளத்திலே பதித்த நக்கீரன் சிவபக்திச் செல்வனாகத் திகழலானான். ★

## 55. சங்கத்தார் கலகம் தீர்த்தது.

தமிழ்ச் சங்கப் புலவர் நாற்பத்தெட்டுப் பேர்களும் அளப்பரிய புலமை பெற்றுவிட்டனர். புலமையின் காரணமாக பல்வேறு செந்தமிழ்ச் செய்யுட்கள் யாத்தனர். அதனால், ஒவ்வொருவரும் தம்மைத்தாமே பெரிதாக மதித்து, தமது புலமையிலேயே மகிழ்ச்சி யுற்று, கருவம் அடைந்தார்கள். ஒருவருக்கொருவர் மாறுபாடு கொண்டனர்.

பின்னர் தமது பெருமைகளையும், சிறுமைகளையும் அளந்தறிய வல்ல முதல் நூலாசிரியரான சோமசுந்தரப் பெருமானின் திருமுன் னர் சேர்ந்து வணங்கி, "ஆலவாய் அண்ணலே! அடியார்களாகிய நாங்கள் யாத்த இந்தச் செய்யுட்களிலே நல்லதும் அல்லதும் சீர் தூக்கி அவற்றின் பெருமை சிறுமைகளை எடுத்துக்காட்டி யருள வேண்டும். எமக்குள் தோன்றிய கர்வத்தைப் போக்கி ஐயத்தையும் நீக்கியருளவேண்டும்" என்று கூறி விண்ணப்பம் செய்துகொண் டனர்.

வேதத்தின் ஆதியும் அந்தமுமாகி விளங்கும் சோமசுந்தரப்பெரு மான் ஒரு புலவராய்த் தோன்றி வந்தருளினார். "சங்கப்புலவர்களே! இத் திருநகரிலே தனபதி என்னும் வணிகன் ஒருவன் இருக்கிறான். அவனுக்கு குணசாலினி என்னும் மனைவி உண்டு. அவர்கள் இருவ ரும் செய்த நற்றவத்தின் பயனாகச் சிறந்த மகன் தோன்றியுள்ளான். அவன் முருகக் கடவுளின் திருஅவதாரம். அழகிலே சிறந்தவன்; ஆனால், ஊமை. அவனிடம் சென்று நீங்கள் பாடிய கவிகளைச் சொல் லுங்கள். அவனது அறிவுக்குகந்த பாடல் எதுவோ அதுவே அனைவ ராலும் நன்கு மதிக்கப்படும் பாடல் ஆகும்" என்று மொழிந் தருளினார்.

"பெருமானே! ஊமையாக இருப்பதால் எங்களது செய்யுட்களை விரும்பிக்கேட்டு நல்லதும்அல்லதும் பகுத்தறிந்து தரம்குறையாமல் எவ்வாறு உரைப்பானே?" என்று தங்கள் ஐயப்பாட்டைக் கேட்டனர் புலவர்கள். "வணிக குமாரனாகிய ஊமையன் தனக்குகந்த சொல்லழகும் பொருளாழமும் கேட்டால் தனது தலையை அசைத்து, தோள் புளகாங்கிதம்கொள்ள மகிழ்ச்சிகொள்வான். உங்களிடையே எழுந்த கலகமும் தீர்ந்துவிடும்," என்று இயம்பி மறைந்தருளினார்.

சங்கப் புலவோர் அனைவரும் ஒன்று சேர்ந்து சென்று வணிகர் குல திலகமான உருத்திர சருமனை அன்போடு அழைத்து வந்தனர். தங்கள் சங்க மண்டபத்திலே அமர்த்தி வெண்மலர்களால் பூசித்து வணங்கினர். பின்னர் அவனது திருமுன்னர் கீழேயிருந்தவாறு தங்கள் செய்யுட்களைச் சொல்லிக் காட்டினர். உருத்திரசருமன் பாடல்கள் ஒவ்வொன்றையும் கேட்டான். சிலருடைய சொல்லழகு தெரிந்து மகிழ்ந்தான். சிலரது பொருளாளம் கண்டு மகிழ்ந்தான். சிலரது பாடல்களிலே குற்றம் கண்டு இகழ்ந்தான். அவ்வாறாகப் பலர் பாடல்கள் சென்றுவிட்டன. நக்கீரன், கபிலன், பரணன் என்னும் மூவருடைய பாடல்களைக் கேட்டபோது வணிக மணி உடல் பூரித்தான். உடல் மயிர் சிலிர்த்தான்; கண்ணீர் சொரிந்தான்; தலையசைத்துப் பேருவகை தெரிவித்தான்.

நவரத்தினங்களை எடை போடுபவன் போலவே அவ்வணிகச் சிறுவன் உருத்திரசருமன் சொல்லழகும் பொருளாழமும் தனது நுண்ணறிவென்னும் தராசினால் எடைபோட்டு அறிந்தான். அவன் சிறந்த பாடல்களைத் தேர்ந்தெடுத்த பின்னர் நன்னெறி தெரிந்த புலவர்கள் எல்லாரும் தம்முள் ஏற்பட்ட கலகத்தை ஒழித்து நட்புக் கொண்டனர்.

நக்கீரன், கபிலன், பரணன் என்ற முப்பெரும் புலவர்களின் பாடல்களும் நாட்டிலே நன்கு பரவிச் சிறந்தோங்கின.

பின்னர் தெய்வ அருள்பெற்ற செந்தமிழ் நாவலர்கள் குற்றமற்ற நூல்களை ஆராய்ந்து சிறப்போடு விளங்கினார்கள். ★

## 56. இடைக்காடன் பிணக்கு தீர்த்தது.

ஆலவாய்ச் சண்பக சுந்தரருக்குச் சண்பக மாலை சூட்டிமகிழ்ந்த சண்பகமாறன் சிவபதம் பெற்ற பின்பு பிரதாப சூரியன் தொடங்கி பூப சூடாமணி முடியப் பதினொன்கு பாண்டிய வேந்தர்கள் பாண்டி நன்னாட்டை ஆண்டு சென்றனர். பதினைந்தாவது பாண்டியனாகக் குலேசன் என்பான் பாண்டிய நாட்டை அரசு புரிந்து வந்தான்.

குலேச பாண்டியன் அரசியலிலே சிறந்து விளங்கினான். இலக்கண இலக்கியங்களிலே மிகுந்த தேர்ச்சி பெற்றவன். பெரு நூல்களையெல்லாம் நன்கு பயின்றவன். அதனாலே, முத்தமிழ்ப் புலவர் இருந்த சங்கப் பலகை அம்மன்னனுக்கும் இடம் அளித்தது.

குலேச வழுதி கல்வி கேள்விகளில் மிகச்சிறந்தவன் எனக் கேள்விப்பட்டுக் கபிலனது அன்பு நண்பனாகிய 'இடைக்காட்டுப் புலவன்' என்பான், ''தமிழிலே பிரபந்தம் ஒன்று இயற்றிக்கொண்டு பாண்டியனைக் காண்போம்'' என்று கருதினான். தான் எண்ணிய படியே நல்ல பிரபந்த நூல் ஒன்று செய்துகொண்டு சென்று பாண்டியனைக் கண்டான். தான் யாத்த அருமை நூலைப் பாண்டிய மன்னனுக்குப் படித்துக் காண்பித்தான். பனுவல் மிக நேர்த்தியாக அமைந்திருந்தது. சொற்சுவையும், பொருளழகும் கருத்தாழமும் காட்டி விளங்கியது அந்த நன்னூல். ஆனால் அவற்றையெல்லாம் பாகுபாடு செய்து அனுபவிக்கத் தெரிந்த குலேசபாண்டியனோ தனது உள்ளத்தில் எழுந்த பொறாமையின் காரணமாகத் தலையசைக்காமலும், அக மகிழ்ச்சியை முகமலர்ச்சியாகக் காட்டாமலும், எதுவும் சொல்லாமலும் வறிதே இருந்தான். மன்னனது அலட்சியமான போக்கை உணர்ந்த இடைக்காடன் மனம் நொந்தான். கற்றோரால் விரும்பப் படும் தன்மையுடையவன் ஆதலால் அவனுக்கு மான உணர்ச்சி மிகுந்தது. அரசன் முன்னிலையிலிருந்து உடனே எழுந்து சென்று விரைந்து திருக்கோவிலை அடைந்தான்.

சோமசுந்தரப் பெருமான் திருமுன் வீழ்ந்து வணங்கி எழுந்து, ''மதுரை நாயகமே! பாண்டியன் சொற்சுவை தெரிந்தவன் என்று அறிந்து அவனை நாடிச் சென்றேன். எனது சுவை மலிந்த பனுவலை அவனுக்குப் படித்துச் காட்டினேன். அவன் கொஞ்சமும் தலையசைக்காமல் என் நூலையும் என்னையும் ஒருங்கே அவமதித்தான். எந்தப் பயனும் தர இயலாத அஃறிணைப் பொருளைப் போல வறிதே இருந்தான். பாண்டிய மன்னன் இகழ்ந்தது எனது சொல்லையோ அல்லது என்னையோ அல்ல, சொல்வடிவமான உமாதேவியாரையும், சொல்லின் பொருளான தங்களையுமே இகழ்ந்தான். அதனால் எனக்கு வந்த குறை என்ன?'' என்று விண்ணப்பம் செய்தான். பின்னர் அடங்காத சினத்தோடு வடக்குத் திசையை நோக்கிச் சென்றான்.

இடைக்காட்டுப் புலவன் கூறிய சொற்கள் சிவபெருமான் திருச்செவியில் கூரியதாகப் பாய்ந்தன. கருணாமூர்த்தியான சோமசுந்தரப் பெருமான், வெளியேறிச் சென்ற இடைக்காடனுக்கும் அவனது உயிரனைய நண்பனுமான கபிலனுக்கும் மகிழ்வு ஏற்படும் பொருட்டு தமது ஞானமய லிங்கரூபத்தை மறைத்துவிட்டு உமாதேவியாரோடும் கிளம்பி வெளிவந்து திருக்கோவிலுக்கு நேர் வடக்கே வையையாற்றின் தென்பாங்கிலே திருக்கோவில் ஒன்றை அமைத்துக் கொண்டு அதிலே இனிதாக அமைந்தருளினார்.

மறுநாள், பொழுது புலர வரும் வைகறை யாமத்திலே, திருப்பள்ளி யெழுச்சி நேரத்திலே, இறைவனைத் தரிசிக்கப் பல சிவனடியார்கள் வந்தனர். அவர்கள், திருக்கோவிலிலே சிவலிங்கத் திருஉருவத்தைக் காணவில்லை அடியார்கள் பலரும் பெரிதும் திகைத்தனர். ''இதுஎன்ன மாயமோ? என்ன அதிசயமோ?'' என்று சந்தேக

மடைந்து வருத்தம் கொண்டனர். "இதை உடனே பாண்டிய மன்னனிடம் தெரிவிக்கவேண்டும்" என்று எண்ணி விரைந்து சென்றனர். மதுரைமா நகரமே பொலிவிழந்து நிற்பதையும் கண்டனர். பாண்டியனை அடைந்து, "மன்னவா! ஒரு செய்தி சொல்ல நாங்கள் மிகவும் பயப்படுகின்றோம். சோமசுந்தரப் பெருமானின் திருப்பள்ளியெழுச்சி தரிசனம் செய்வதற்காகத் திருக்கோவில் சென்றிருந்தோம். இன்று சிவலிங்க மூர்த்தியைக் கண்டோமில்லை" என்று நடுங்கியவாறு நாவுலரக் கூறினர்.

சிவனடியார்கள் கூறிய சொல் சுழல்வேல்போலப் பாண்டியனது செவியில் பாய்ந்தது. சிங்காதனத்திலிருந்து அப்படியே திடீரென்று விழுந்தான். உயிர் ஒடுங்கியது போலச் சிறிது நேரம் நிலத்திலே கிடந்தான். பின்னர் நினைவு வந்ததும் எழுந்து, தன் இரு கைகளையும் தலையின் மேல் கூப்பிய வண்ணம் கண்ணீர் வடித்தான். "ஆலவாய் அண்ணலே! எம்பெருமானே! எளியேன் என்ன பிழை புரிந்தேன்? எங்கேசென்றீர்? ஐயனே! எங்கு இருக்கின்றீர்? கடவுளே?" என்று சொல்லி இரங்கி ஏங்கினான். உடலிலும் உள்ளத்திலும் ஒருங்கே தளர்வெய்தினான். அச்சமயம் சிலர் பாண்டியனிடம் ஓடோடி வந்தனர், "வழுதியே! நாங்கள் அதிசயம் ஒன்று கண்டோம். வையையாற்றின் தென்கரையிலே இன்று வரையிலே எவரும் காணாத புதுக் காட்சியொன்று கண்டோம். சங்கப் புலவர்களோடும் மீனாட்சியம்மையாரோடும் சோமசுந்தரப் பெருமான் வந்து எழுந்தருளியிருக்கின்றார்" என்று கூறினார்கள். பாண்டியன் எழுந்தான்; பயத்துடன் வேகமாக நடந்து சென்றான். வையையின் தென்கரையிலே மீனாட்சியம்மையோடு வந்து எழுந்தருளியிருக்கும் சொக்கலிங்கப் பெருமானைக் கண்டான். பேரானந்தம்கொண்டான். இறைவன் திருமுன் கண்ணீர் சொரிந்தவாறு கிடந்தான், பின்னர் எழுந்து நின்று நாத்தடுமாற, "பெருமானே! தேவரீர் திருவடி நோவ, மாநகரம் பொலிவிழக்க தேவியாரோடும் இங்கு வந்து எழுந்தருளிய காரணம் என்னவோ? எளியேன் ஏதேனும் தவறு செய்து விட்டேனோ? என்ன குற்றம் நேர்ந்தது? என்ன பிழை ஏற்பட்டது? ஐயனே! என்ன நிகழ்ந்தது என்பது எளியேனுக்குத் தெரியவில்லையே!" என்று விண்ணப்பம் செய்தான். பின்னர் பலவாறாகப் போற்றிச் செய்து துதித்துப் பணிந்தான்.

அதுசமயம் சோமசுந்தரப் பெருமானும், "வையை வளநாட! உன்னுடைய துதிகேட்டு உவகை கொண்டோம். உன்னுடைய உளமார்ந்த புகழ்ச்சி எமக்கு மிகவும் இனிமையாக உள்ளது. நாம் சொல்வதைக் கேட்பாயாக. ஸ்தலங்கள் அனைத்திலும் திரு ஆலவாயே சிறந்தது. இத் திருத் தலத்திலே எண்ணமுடியாத சுயம்புலிங்கங்கள் உள்ளன; அவற்றுள்ளே அறுபத்து நான்கு லிங்கங்கள் உயர்வுடையன: ஏனெனில் அவற்றை அஷ்டதிக்கு பாலர்கள் பூசித்தனர். அந்த எட்டுக்குள்ளும் எமது நண்பனாகிய குபேரன் பூசனை புரிந்த லிங்கம் மிகவும் சிறந்ததாகும். இது எம்

நண்பன் வழிபட்ட லிங்கம் ஆனபடியால் நாமும் இங்கே வந்து எழுந்தருளியுள்ளோம். ஆதலால் இந்த தேவஸ்தானம் 'வட திரு ஆலவாய்' என்ற சிறப்பினை அடையும். கடம்பவனத்தை விட்டு யாம் ஒருபோதும் நீங்கியிருக்கமாட்டோம். வேறு குற்றம் எதுவும நீ செய்து விடவில்லை: இடைக்காட்டுப் புலவன் யாத்த செய்யுட்களை நீ இகழ்ந்தாய்; அப்போதே அவனிடம் யாம் வைத்த அன்பின் காரணமாக இங்கு வந்து இருந்தருளினோம்," என்று ஆகாசவாணியாக மொழிந்தருளினர்.

வானொலி கேட்டான் பாண்டியன் குலேசன். "புராதனனே! புண்ணியனே! சிறியேன் செய்த பிழையைப் பொறுத்தருள்வது தேவரீர் கடமை," என்று கூறி வணங்கினன். பெருமான் பாண்டியனுக்கு அருள்புரிந்தார். மீனாட்சிதேவியோடும் சங்கப் புலவர்களோடும் திருக்கோவில் சேர்ந்தருளினர்.

திருக்கோவிலுக்கு மிகுந்த பணிவுடன் நடந்து சென்ற பாண்டிய மன்னன் சோமசுந்தரப் பெருமானை வழிபட்டு விடைபெற்றான். பின்னர் சங்கப் புலவர்களுடன் சென்று இடைக்காட்டுப் புலவனைத் தக்க மரியாதையுடன் வரவேற்று அழைத்துக்கொண்டு வந்து தனது அரண்மனை வந்து சேர்ந்தான்.

பின்னர் முறைப்படி நன்கு அலங்கரிக்கப்பட்ட செல்வத் திருமாளிகை ஒன்றிலே இடைக்காடனைப் பொன்னாசனத்திலே அமர்த்தினன் பாண்டியன். புலவர்கள் சூடி வீற்றிருந்தது, பலவகைச் சிறப்புகளுக்கிடையே, இடைக்காடன் யாத்த செய்யுட்களைக் கேட்டு மகிழ்ந்தான். இடைக்காட்டுப் புலவனுக்கும் சங்கப் புலவர்களுக்கும் பட்டாடைகள், முத்துமாலைகள், யானைகள், குதிரைகள், நன்செய்கள் எல்லாம் பரிசாக நிரம்பக் கொடுத்தான். பின்னர் அவர்களை நோக்கி "புலவர் பெருமக்களே! இடைக்காடனுக்கு எளியேன் செய்த குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும்." என்று வேண்டி வணங்கினன். புலவர்களும். "சோமசுந்தரப் பெருமானின் திருவருளினலே உனக்கு அளவில்லாத திருவும் கீர்த்தியும் உண்டாவதாக", என்று ஆசி மொழி இயம்பிச் சென்றனர்.

பல ஆண்டுகள் நல்லாட்சி செய்தபின் குலேச பாண்டியன் தான் செய்த தவப்பயனாக வந்து தோன்றிய தன் அருமைத் திருக்குமாரன் அரிமர்த்தனனுக்கு உலகாட்சியைத் தந்துவிட்டுச் சிவபுரம் சேர்ந்தான். ★

## 57. வலை வீசினது.

சோமசுந்தரப் பெருமான் மீனாட்சியம்மையாருக்கு ஒருநாள் தனி பீடத்திலே இருந்து கொண்டு மிகவும் ரகசியமான முறையிலே வேதத்தின் உட்பொருளை உபதேசித்து அருள்வாராயினர். பெருமான்

அருள்கொண்டு இயம்பும் இனிய திருமொழிகளை யாது காரணத்தாலோ பயத்தோடும், கவலையோடும் விருப்பம் இல்லாமலே தேவியார் கேட்டுக் கொண்டிருந்தார். சோமசுந்தரப் பெருமான் தேவியாரின் அலட்சியப் போக்கைக் கண்டு, "மாதே! நீ எம்மிடத்தே பாராமுகம் காட்டி வேத விழுப்பொருளை விருப்பம் இல்லாமல் கேட்டாய்! நீ செய்தது பெருங்குற்றம் ஆதலால், எத்தகைய தருமமோ விரதமோ கொல்லாமல் மீன் பிடித்து வாழும் இழிந்தோராகிய வலைஞர் குலத்திலே மகளாகத் தோன்றுவாய்", என்று ஆணையிட்டருளினார். உடனே மீனாட்சியம்மையார் பயமடைந்து, "தேவாதி தேவா! அடியாள் தங்களைப் பிரிந்து வாழ முடியுமா?" என்று வணங்கி வினவினார்.

தேவியின் துன்பம் கண்ட பெருமானும், "கடற்கரைச் சோலையில் வதியும் வலைஞர் மன்னனுக்கு மகளாக நீ வளர்ந்து வருகின்ற நாளிலே யாம் வந்து உன்னை மணம் புரிவோம்" என்று திருவாய் மலர்ந்தருளினார். அம்மையும் விடைபெற்றுச் செல்லலானார்.

விநாயகக் கடவுள் இதை அறிந்தார். தனது தந்தையாராகிய சிவபெருமான் திருமுன்வந்து, "இதனால்தானே இப்படியெல்லாம் நடந்தது" என்று சொல்லிக்கொண்டே அங்கேயிருந்த தேவச்சுவடிகளைத் தனது துதிக்கையினால் வாரியெடுத்து கடலிலே வீசி யெறிந்தார். முருகக் கடவுளும் தனது தந்தையார் திருக்கரத்தில் விளங்கிய சிவஞான போதச் சுவடியைப் பிடுங்கிக் கடலிலே எறிந்து விட்டார்.

சிவபெருமான் நந்திகேசுவரரைச் சினந்து நோக்கி "நாம் இருக்கின்ற நேரமும் நிலையும் தெரியாது இவர்களை உள்ளே அனுமதித்துச் சும்மா இருந்துவிட்டாய்; அதனாலே பொல்லாங்கு விளைந்தது ஆதலால், குற்றத்துக்குக் காரணமான நீ சுறுமீனாகப் பிறந்து கடலிலே துன்பமடையக் கடவாய்", என்று சபித்தருளினார். விநாயகருக்குச் சாபம் இட்டால் அது தன்னையே சாரும் என்பதால் அவருக்குச் சாபம் இடவில்லை. முருகனை நோக்கி, "வணிகர் குலத்திலே நீ ஊமைப் பிள்ளையாகப் பிறக்கக் கடவாய்." என்று பணித்தருளினார்.

சிவபெருமானது ஆணையால் உமாதேவியார் பரதவர் மகளானாள். நந்தித்தேவர் சுறுமீனாகிக் கடலிலே புகுந்தார். முருகப் பெருமான் உருத்திர சருமனாகப் பிறந்தார்.

பாண்டிய நாட்டின் கிழக்குக் கடற்கரையிலே பாக்கம் என்ற ஊர் ஒன்றிருந்தது. அது ஆழமான உப்பழியென்ற அகழியாலும் உயர்ந்து வளர்ந்திருந்த தாழைகளினாலான மதிலாலும் சூழப்பட்டிருந்தது. மீன் பிடிப்போரின் குடிசைகள் பல அங்கேயிருந்தன. அத்தகைய வலைஞர் சேரியிலே ஒருவன், தான் முற்பிறப்பிலே தவம் செய்தவனாக இருந்தும் சற்றே பாவம் செய்துவிட்டதாலே, வந்து தோன்றினான். அவன் பரதவர்கள் அனைவருக்கும் அரசனாகத் திகழ்ந்தான். வலைஞர்கள் அவனிடம் மீன்களைத் திறமையாகக் கொண்டுவந்து நிறைத்தனர். பரதவர்கோனும் சிவபெருமானிடத்

திலே பக்தியுடையவனாக இருந்தான். அவன் பல ஆண்டுகளாக் பிள்ளைப்பேறு இல்லாமல் பெரிதும் வருந்திக்கொண்டிருந்தான்.

ஒரு தினம் அவ்வரசன் தனது உறவினர்களோடு சேர்ந்து கொண்டு மீன் பிடிப்பதற்காக்க் கடலை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். செல்லும் வழியிலே புன்னை மரமொன்றின் நிழலிலே சிவபெருமானது திருவாணையினால் வலைஞர்கோன் செய்த தவப் பயனாக, உமாதேவியார் தமது இச்சையினால் ஒரு பசுங்குழந்தையின் உருவமேற்று அழுதுகொண்டு கிடந்தருளினார். பரதவர் வேந்தன் செந்திருவாய் திறந்து அழுகின்ற இன்பத்திருக் குழந்தையைக் கண்டான்; பெருமகிழ்ச்சிகொண்டான். "இக்குழந்தை யார்பெற்ற செல்வமோ? கடல்மகளோ? நீர்மகளோ? கான்மகளோ? மகப் பேறில்லாத எனக்குச் சோமசுந்தரப் பெருமான் அருள்கனிந்து ஈந் தருளிய குழந்தையே இது!" என்று எண்ணித் தனது வலதுபுறம் துடிக்க மிகுந்த பரிவுடன் எடுத்துவந்து தன் மனைவி கையிற் கொடுத்தான். பிறவிக்குருடன் கண் பெற்றது போல மகிழ்ந்து அவனது மனைவியும் பேரன்புடன் குழந்தையை வாங்கியணைத்துக் கொண்டாள். பரதவர் அனைவரும் கடலைப் போல ஆரவாரம் செய்தனர். பரதவ மகளிர் அனைவரும் குதூகலித்துக் கைகொட் டிக் குரவை பாடினர். அருந்தனமாகக் கிடைத்த குழந்தையை மிகுந்த செல்வமாக வளர்த்தனர் வலைஞர் கோவும் கோமாட்டியும். அருட்குழந்தையும் பருவத்திற்கேற்ப அறிவும், அழகும், விளையாட் டும் காட்டி நன்றாக வளர்ந்து வந்தது.

சிவபெருமான் ஆணையிட்டருளியபடியே நந்திகேசுவரரும் சுறாமீன் உருவங்கொண்டு அலைகடலிலே சென்று மூழ்கி இனிதே யிருந்தார். நந்திச் சுறாமீன், விநாயகனும் முருகனும் முன்பு கடலிலே எறிந்த ஏடுகளையெல்லாம் தனது தலையின்மீது சுமந்து சென்றார்; தன் உள்ளத்தின் உள்ளே சிவபெருமான் திருவடியைச் சிந்தித்தார்.

குறுக்கும் நெடுக்குமாகக் கடலிலே அங்குமிங்கும் அலைந்து திரிந்த வலிய சுறாமீன் பெரிய துன்பம் விளைத்தது. கடல் நீரைக் கலக்கியது. தோணி, படகு, சோங்கு ஆகியவற்றையெல்லாம் அது நெருங்கி முட்டி மோதிக் கவிழ்க்கும். தன்னை எதிர்க்க வரும் சுறா மீன்களையெல்லாம் தனது கொம்பில் கோர்த்து வீசியெறியும். முரட்டுச் சுறாமீன் கடலிலே எப்போது தோன்றும், என்ன செய்யும் என்பது தெரியாதிருந்தது. நெய்தல் தலைவன் அப்போது மீன் செய்யும் இன்னலைக்கண்டு பொறுக்காமல் ஒரு முறை தனது கிளைஞருடன் கடலிலே சென்று அதன்மேலே பெரிய வலையை வீசினான். பல படகுகளையும் தோணிகளையும் உடைத்தெறிந்த அந்தப் பொல்லாச் சுறாமீன் வலையுள் அகப்படாமல் தாக்குப் பிடித் துப் போக்குக் காட்டியது. இங்குமங்கும் எங்குமாகத் தோன்றிய மீன் வலைப்படவில்லை. எப்பாடுபட்டும் அதனைப் பிடிக்க மாட்டாத வலைஞர்கோன் ஏமாந்தான்; நொந்தான்; அயர்ந்து விட்டான்,

"இனி இதனை யாரால் பிடிக்க முடியுமோ?" என்று எண்ணி ஏங்கி மனமுடைந்தான். உடன் சென்ற வலைஞரும் ஏவலரும் கவலையுடன் கலங்கி நின்றனர்.

பின்னர் பரதவர்கோமான், "இந்தக் கடலிலே கிடந்து கலக்கும் பெரும் சுறுமீனை இங்கு வந்து எவன் பிடிக்கிறானோ அவனே என்னுடைய மகளுக்கு மணமகன் ஆகும் தகுதி பெற்றவனாவான்" என்று உறுதி பூண்டான்.

உரிய பருவக் காலம் வந்துற்றது. வலைஞர்கோனின் உறுதி கைகூடும் நாள் நெருங்கியது. சிவபெருமான் அருள்புரியத் திருவுளம் கொண்டார். தனது இச்சாமாத்திரத்திலே ஒரு வலைஞன் உருவம் எடுத்தருளினார். தேவமீனவ்னின் உருவம் கருத்துக்காட்டியது. அரையிலே கச்சையை இறுகக் கட்டியிருந்தார். இடையிலே உடைவாள் செருகியிருந்தார். தோலில்மேலாடைதரித்திருந்தார். தேன்சொட்டும் நெய்தல் மலர்க் கண்ணியை தலையிலே சூட்டியிருந்தார். சிவகணத் தலைவன் ஒருவனும் வலைஞன் வேடம் புனைந்து தோளிலே வலை சுமந்து, மீன் கூட்டினை முதுகிலே தாங்கி உதவியாளாகப் பெருமான் பின்னே நடந்து வந்தான். சோலை சூழ்ந்த வலைச்சேரிப்பாக்கத்தை வந்தடைந்தார் வலைஞர் பெருமான்.

தனது பாக்கத்துக்குப் புதிதாக வந்திருந்த பரதவர் குலக்காளையைப் பார்த்துப் பெருமகிழ்வும் அதிசயமும் அடைந்தான் பரதவர்கோன். அவனைப் பார்த்து, "அழகிய நம்பியே! நீ யார்? சொல்", என்று கேட்டுக்கொண்டான். "நான் மதுரைப் பரதவரின் தந்தை போன்ற அரசனுடைய குமாரன். என்னால் படைக்கவும், காக்கவும், அழிக்கவும் முடியும். தவிர, பெரிய மீன்களெல்லாம் அகப்படுமாறு வலை வீசுவதிலே வல்லவன் யான்" என்று கம்பீரமாக மொழிந்தார். "இவன் முன்னுக்குப் பின் முரண்படாகப் பேசுகின்றானே. உண்மையாகவே இவன் பரதவர் மகன்தானோ?" என்று ஐயமுற்றான் தலைவன். பின்னர், "அப்பனே! இந்தத் துறையிலே சுறுமீன் ஒன்று கட்டுக்கடங்காது நாசம் புரிந்து துள்ளித் திரிகின்றது. அது வலிமையும் சீற்றமும் மிகவுடையது. அதனைக் குறிவைத்துப் பிடித்து விடுவாயானால் எனது குமாரியை உனக்கு மணம் செய்து கொடுப்பேன்" என்று கூறினான்.

வலைஞப்பெருமான் உடனே படகிலேறி விரைந்து கடலுள் சென்றார். தன்னுடன் வந்தவனது தோளின் மேல் கிடந்த வலையை வாங்கிப் பெரிதாக விரிய வீசினார். இறைவன் வீசிய தெய்வீகத் திருவலையிலே சுறுமீன் சிக்கிக்கொண்டுவிட்டது. வலிவடங்கிய சுறுமீனை இழுத்துக் கரையிலே போட்டார் பெருமான். வலைஞர்கள் எல்லாரும் நெருங்கிக் கூடிவந்து ஆரவாரம் செய்தனர். "நம் குலத்துக்குரிய தெய்வமகன் இவனே யாவான்" என்று பாராட்டி வியப்பெய்தினர்.

நெய்தல் தலைவன் பெருமகிழ்வு எய்தினன். பறைகள் ஒலி முழக்க, வலைய மாதர் குரவை செய்ய வலைஞப் பிரானுக்குத் தன் மகளைத் திருமணம் செய்து கொடுத்தான் வலைஞர் கோமான்.

மணக்கோலம் புனைந்த வலைஞரும், கோமகளும் மறைந்தருளினார்கள். உடனே சிவபெருமான் மீனாக்ஷியம்மையுடன் காட்சி தந்தருளினார். நந்திகேசுவரரும் தன்னுருவம் பெற்று விளங்கினார்.

ரிஷபாரூடரான சிவபெருமான் உமாதேவியார் இருவரது கருணைகடாக்ஷம் அடைந்ததால் வலைஞர் கோமான் தனது முன்னைய நல்லறிவைப் பெற்றான். இறைவனை மனமாரத் துதித்து வணங்கினான்.

தம்மைப் போற்றி நின்ற பரதவர் தலைவனைப் பார்த்துச் சிவபெருமான், "அன்ப! பலவாண்டுகள் குழந்தைப் பேறில்லாமல் வருந்தியது கண்டிரங்கி உமாதேவியாரையே உனது மகளாகத் தோன்றச் செய்தோம். முறையறிந்து வந்து மணந்து கொண்டோம். இவ்வுலகத்திலே நீ குபேர சம்பத்தினைப் பெற்று பல போகங்களை அனுபவித்துப் பின்பு எமது சிவலோகம்வந்துசேர்வாயாக," என்று திருவருள் புரிந்தருளினார்.

பின்னர் நந்திகேசுவரரோடும் அடியவர் திருக்கூட்டத்தோடும் உத்திரகோசமங்கை என்னும் க்ஷேத்திரத்தை அடைந்தருளினார் சிவபெருமான். அத் திருவுத்தரகோச மங்கையிலே எழுந்தருளியிருந்து உமாதேவியார் பயபக்தி சிரத்தையுடன் கேட்க, வேத ரகஸ்யப் பொருளையெல்லாம் அமிர்தமென உபதேசம் செய்தருளினார். தம்மிடம் பக்திகொண்ட சிவனடியார்களும் சிவயோகிகளுமான அறுபதினாயிரம் பேர்களுக்கும் வேத விழுப்பொருளை உபதேசித்தருளினார்.

பின்பு மீனாக்ஷியம்மையாரோடு மதுரை சேர்ந்தருளினார் சோமசுந்தரப் பெருமான். ★

## 58. வாதவூர் அடிகளுக்கு உபதேசித்தது.

வையை வளநதியின் கரையிலே திருவாதவூர் என்ற திருப்பதி இருந்தது. அவ்வூர் எல்லா விதமான வள நலங்கள் கொண்டு இலங்கியது. நகர் முழுவதும் திருவிழாக்கள், வீடுகள் தோறும் விருந்துகள், பாடசாலைகள் தோறும் வேதங்கள், வயல்கள் தோறும் உழவுத் தொழில்கள் ஓயாது மலிந்திருந்தன.

வளங்கொழிக்கும் அத்திருவூரிலே சிவபெருமான் திருவருளாலே ஒருவர் வந்தவதரித்தார். பெற்றோர்கள் அவருக்குத் திருவாதவூரர் என்று திருப்பெயர் சூட்டினார். வேதம் விதித்தபடி வயதுக்கேற்ற சடங்குகள் எல்லாம் செய்யப்பெற்றுச் செவ்வனே வளர்ந்துவந்தார்.

வேத வேதாகமங்கள், சாஸ்திரங்கள், புராணங்கள், கலைகள் எல்லாவற்றையும் பதினாறு வயதுக்குள்ளாகக் கற்றுத்தேர்ந்தார். இளம் பிராயத்திலே சகலகலா பண்டிதனாக, சகலகலா வல்லவனாகத் திகழ்ந்து நின்ற திருவாதவூரரது அறிவுத்திறமையை அறிந்தவர் சென்று அரிமர்த்தன பாண்டியனிடம் மொழிந்தனர். அது கேட்டு மகிழ்ந்தபெருவழுதிதிருவாதவூரரைத் தன்பால் அழைத்துக்கொண்டு பலவகைச் சிறப்பும் செய்து மந்திரி பதவியையும் அளித்தான். திருவாதவூரர் போர்க்கலைப் பயிற்சியும் மனுதர்ம சாஸ்திரப் பயிற்சியும் நன்கு பெற்றுணர்ந்தார். அத்தன்மையால் எல்லா மந்திரிகளிலும் சிறந்து முதல் மந்திரியானார். கடல் கடந்த பல்வேறு நாட்டிலிருந்த வேந்தரும் பாண்டியனுடன் நட்புறவு கொள்ளச் செய்தார் வாதவூரர். பாண்டியனது கண்ணும் கவசமுமென விளங்கித் தொழில் நடத்திச் சிறப்பெய்தினார் வாதவூரர்.

வாதவூரர் செவ்வனே முதன்மந்திரி வேலை பார்த்து வரும் நாளிலே, "உண்மைப் பொருள் இது, மெய்ம்மைப் பொருள் இது" என்று பகுத்தறியும் ஆற்றலை அதிவிசேஷமாகப் பெற்றார். இம்மை மறுமை என்ற இரண்டின் பயன்களிலேயும் வெறுப்புக் கொண்டவராகி உளத்தூய்மை பெற்று மோக்ஷம் பெறும் வழியை ஆராயத் தொடங்கினார்.

"புறச் சமயங்களும் வேதம் தழுவிய அகச்சமயங்களும் மனமாசு போக்கி இறைவன் திருவருளைத் தெளிவுறுத்த மாட்டா. ஆணவப் பிணிப்பு நீங்காது; அதனால் மோக்ஷம் சித்திக்காது. பக்தி செய்து இறைவன் திருவருளைப் பெற்ற அடியார்களுக்குத்தான் மோக்ஷம் கிடைக்கும் என்று வேதம் சொல்லும். வேதத்தின் உண்மையான பொருட் தெளிவை சக்திநிபாதம் பெற்ற பரிபக்குவருக்கே சிவாகமங்கள் உணர்த்துமாம். வேத முடிவோ ஆகம முடிவோ அவை அடையும் பொருள்களிலே வித்தியாசம் கிடையாது. அவற்றுள்ளும் வேற்றுமை காட்டும் தன்மையைப் போக்கி ஆன்மலக்கட்டுகளையெல்லாம் விலக்கி உடையவனாகிய தன்னையும் உடைமைப் பட்டவனாகிய என்னையும் அறிவித்திடுகின்ற ஞானரூபமான குருநாதன் எப்போது வருவானோ? ஞானாசிரியனாகிய பெருந்தகையின் அருளால் அன்றி பாசக் கடலைச் சாஸ்திர ஞானத்தாலும் கேள்வியினாலும் கடத்தல் அரிது," என்றிவ்வாறு பலப்பல எண்ணினார் திருவாதவூரர்.

மோக்ஷம் பெறவேண்டும் என்ற பேராசையினாலே வேதாகம சாஸ்திரங்களில் வல்லவர்கள் தம்மிடம் வரும்போதெல்லாம் அவர்களோடு சம்பாஷணை செய்து மெய்ப்பொருளை ஆராய்வார். ஆராய்ந்த பொருள் எதிலும் அவர் அமைதி காணவில்லை. சிவபெருமானிடத்திலே கொண்ட பெரும் பக்தி உள்ளே பதிந்து இடம் கொள்ள அரிமர்த்தன பாண்டியனுக்கும் பேருதவியாக இருந்து அரசியலைச் சிறப்பாக நடத்தி வந்தார்.

இவ்வாறாக ஒழுகிவரும் திருவாதவூரர் ஒருநாள் பாண்டியன் சபையிலே சென்று நின்றார். அந்தச் சமயம் பார்த்து குதிரைக் காவலர்கள் அரசன் முன் வந்து வணங்கி நின்று, "வெற்றிவேற் செழிய! நமது குதிரைகளிலே இறந்தன போக எஞ்சியவற்றுள் பல வியாதியுடையனவாயும் கிழடாகவும் உள்ளன. நல்ல குதிரையாக ஒன்றுகூட இல்லை", என்று விண்ணப்பித்தனர். அது கேட்ட அரிமர்த்தன பாண்டியன் தனது பிரதம மந்திரியான வாதவூரரை நோக்கி, "நீர் இன்று நமது பொக்கிஷ அறையைத் திறந்து வேண்டிய பொருள்களை எடுத்துக் கொண்டு செல்லுக. சென்று கடல் துறையில் வந்து இறங்கும் குதிரைகளில் சிறந்தவற்றைத் தேர்ந்தெடுத்து விலை கொடுத்து வாங்கி வருக" என்று பணிந்து அனுப்பினார்.

மனம் வேறுபட்டுப் பிரதம மந்திரி அலுவல் பார்க்கும் திருவாதவூரர் பொக்கிஷத்தைத் திறந்தார். குதிரைகள் வாங்குவதற்கான பெரும் பொருளை எடுத்துக்கொண்டு, அரசனிடம் விடைபெற்றுப் புறப்பட்டார்.

பின்னர் திருவாதவூரர் குதிரைகள் வாங்குவதற்காக ராஜாங்க பொக்கிஷத்திலிருந்து எடுத்து வந்த பொன் மூட்டைகளை ஒட்டகங்களின் மேல் ஏற்றி அவைகளை முன்னே அனுப்பி வைத்தார். தான் திருக்கோவில் சென்று பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடினார். தீர்த்தக்கரையிலிருக்கும் சித்தி விநாயகரைப் பணிந்தார். பின்னர் மீனாட்சியம்மையையும் சோமசுந்தரப் பெருமானையும் வணங்கினார். சிவபெருமான் திருமுன் நின்று, "ஆலவாய் அண்ணலே! அடியேனுக்கு ஒரு வரம் ஈந்தருளல் வேண்டும்; நான் கொண்டு செல்லும் பொருள் எல்லாம் தேவரீருக்கும் தேவரீரது அடியார்க்கும் பயனாக வேண்டும்." என்று வேண்டித் துதித்து நின்றார். அது சமயம் ஆதிசைவ அர்ச்சகர் ஒருவர் எதிர் வந்து விபூதி தந்தார். அதனைச் சோமசுந்தரப் பெருமானது திருவருட் பிரசாதமாகக் கருதிய திருவாதவூரர் இருகரங்களாலும் மரியாதையுடன் வாங்கி நெற்றியிலே பூசிக்கொண்டார். பின்னர் சிவபெருமானிடம் விடைபெற்றுச் சென்றார்.

இன்னிசை வாத்தியங்கள் இயம்ப வாதவூரர் பொற்சிவிகையில் அமர்ந்து புறப்பட்டார்.

சோமசுந்தரப் பெருமான் திருவாதவூரருடைய இருவினையொப்பையும் மலபரிபாகத்தையும் உணர்ந்தார். குருவாகிச் சென்று அவரை வலிய ஆட்கொண்டு தமது திருப்பணியிலே நிறுத்தியருளத் திருவுளம் கொண்டார். உடனே, தனது அருட்திறத்தால் வேதியர் குலத்தைச் சேர்ந்த குருவாகத் திருமேனி கொண்டருளினார். தன்னை விட்டுப் பிரியாத மாணவர்கள் பலருடன் வந்து திருப்பெருந் துறையிலே திருக்கோவிலின் உள்ளே குருந்த மரமொன்றின் அடியிலே இனிது எழுந்தருளியிருந்தார்.

திருவாதவூரரும் தனது கடல் போன்ற பெருஞ்சேனையோடு திருப்பெருந்துறையை நெருங்கி வந்து கொண்டிருந்தார். அத்திரு வூரின் எல்லையை நெருங்க நெருங்க வாதவூரரின் உள்ளத்திலே மகிழ்ச்சி நிரம்பியது. கூப்பிய கரங்கள் சிரமேல் சென்றன. கண்களி லிருந்து ஆனந்த நீர் பெருகியது. இறைவன் திருப்பணிக்கே தம்மை உய்த்திடும் மனத்திடையே திருவருள் விளைந்தது. "இவர் ஒரு பித்தர்" என்று பலர் கூறும்படித் தன்னை மறந்த பெரும் பக்தராகி நடந்து சென்றார். அவருக்கு சக்தி நிபாதநிலை கூடியது. "எளியேனை ஆட்கொண்டருளும் கருணைக்கடல் அமர்ந்திருக்கும் திருப்பதி இது தான் போலும்," என்று எண்ணியபடியே ஊருக்குள் புகுந்தார். திருக்கோவில் சேர்ந்து அங்குள்ள சிவதீர்த்தத்திலே நீராடியெழுந்து இறைவனைத் தரிசனம் செய்தார். தோத்திரம் செய்துகொண்டே திருக்கோவிலை வலம் வந்தார். அப்போது தட்சிணாமூர்த்தியின் திருக் கோலம் எழுந்தருளப்பெற்ற குருந்த மரத்தினை எதிரே கண்டார்.

வேதங்கள், சிவாகமங்கள், புராணங்கள், இசைநூல்கள், சமய சாஸ்திரங்கள் எல்லாம் ஒலித்துக்கொண்டிருந்தன. வேதசாரத்தை யும், மோக்ஷசாதனத்தையும், ஆகம பாதங்களையும் சிக்கலற உணர்ந்த பெரிய மாணவர் குழாம் அங்கே அமர்ந்திருந்தது. நால் வகை மார்க்கத்தினரும் அங்கேயிருந்தனர். ஞானிகளும், யோகியர் களும், சன்னியாசிகளும் அங்கே அமர்ந்திருந்தனர். பெருந் தகுதி யுடைய தொண்டர்கள் கூட்டத்துக்கு நடு நாயகமாகி அமர்ந்திருக் கும் அருள்வடிவத்தை வாதவூரர் கண்டார். யோகாசனத்தில் வீற்றிருந்த குருநாதனின் திருக்கரத்திலே சிவஞானபோதச்சுவடி இலங்குவதையும் கண்டார். சிவபெருமானுடைய திருக்குறிப்பு உள்ளேயிருந்து உணர்த்தியருளியது. உடனே குருமகா சன்னி தானத்திலே வணங்கிக் கைகளைச் சிரமேற்கூப்பி உள்ளம் உருகி நின்றார். வாதவூரர் சிவபெருமானது அன்பு பின்னிய அருள்வலை யிலே அகப்பட்டுக் கொண்டார்.

ஞானமார்க்கம் பற்றிய மாணவர்களது பக்குவத்தை நன்றாக அறியவல்ல ஞானாசிரியன் சிவபெருமானே வாதவூரருக்குத் திரு வடியைக் காட்டினார். அவரது ஞானபரமான ஒழுக்கத்தையும் பக்தியையும் கண்டு அவர் தத்தம் செய்த உடல் பொருள் ஆவி மூன்றையும் ஏற்றுக்கொண்டார். தமது ஞானக் கண்ணால் மும் மலங்களையும் போக்கியருளினார். தமது திருவடித் தாமரையைச் சூட்டினார். பின்னர் தமது திருக்கரத்தினை வாதவூரரின் சிரசில் வைத்து சூக்ஷ்ம பஞ்சாசரத்தை உபதேசம் செய்து அவரது பாசபந் தத்தைப் போக்கி பேரின்பம் விளைத்துச் சிவவடிவாகுமாறு திரு வருள் புரிந்தார்.

பரமாசாரியன் தனது சட்சு தீட்சையினாலே வாதவூரரைத் தன் மயமாக்கிக் கொண்டார். அதனால் தன்னையும் மறந்த மெய்ஞ் ஞான வடிவினராகி எதையும் மறந்தவரானார் வாதவூரர். பரமா னந்தத்தேன் உள்ளே அமுத மயமாகத் தித்தித்தது. பரமானந்தப்

பெருஞ்சுடர் உள்ளே ஒளிவிட்டது. உள்ளத்திலே உண்மையொளி உண்டானதாலே அவரது வாக்கிலே ஒளியுண்டாயிற்று. திருவாதவூரரின் நாவினிலே ஞானக்கலைகள் தானே வந்து களிநடம் புரியலானுள். கூப்பிய கரங்களோடு ஆனந்த பாஷ்பம் பெருக. நாத் தழுதழுக்க, உடல் சிலிர்க்கப் பரமகுருவை போற்றிப் பணிந்து தோத்திரம் செய்யலானுர். அற்புதமான தெய்வத் தமிழ்ப் பாடல்கள் உள்ளத்தின் உள்ளிருந்து எழுந்தன. சிறந்த பழுத்த சொற்களாகிய மாணிக்கங்களைக் கோவைப் படுத்தி பக்தி என்னும் சூத்திரத்தால் தொடுத்துத் தனது ஞானசாரியனுக்கு அணிவித்தார் வாதவூரடிகள். சிவஞானகுருபரன் தமது மெய்யன்பரின் திவ்யமான பாடல்களைக் கேட்டு மகிழ்ந்து அவருக்கு 'மாணிக்கவாசகன்' என்னும் திருப்பெயரைப் புனைந்தருளினுர்.

ஞான பூசை புரிந்து வந்த மாணிக்கவாசகரும் அவ்விடமே தங்கி மாணவர்கள் ஓதுகின்ற ஆகம உபநிஷதப் பொருள்களை எல்லாம் கேட்டு மகிழ்வாராயினர். சிவபெருமான் தமது மெய்யன்பரான மாணிக்கவாசகரின் அமுதமயமான பாடல்களைச் சிலகாலம் கேட்டு மகிழ்ந்தருள விரும்பினுர் போலும். தவிரத் தனது பக்தி வலைப்பட்ட அன்பரிடமிருந்து பொன்னையெல்லாம் கொள்ளை கொள்ள விரும்பினுர் போலும். ஆதலால் மாணிக்கவாசகரை நோக்கி, "நீ இங்கே செய்யவேண்டிய செயல் சிறிது உண்டு. ஆகையால் இங்கு நீ சில நாட்கள் இருப்பாயாக" என்று இயம்பி விட்டுத் தன் அடியார்களோடு மறைந்தருளினுர்.

கருணைமூர்த்தியான சிவபெருமான் தனது திருவுருவம் காட்டி மறைந்தருளியதும் மாணிக்கவாசகர் துயரக்கடலுள் ஆழ்ந்தார். பிரிவாற்ருமையால் பெரிதும் துன்பப்பட்டுப் பித்தர்போல உழன்ருர். "எந்தையே! எளியேனை இங்கு தனியே ஏங்கவிட்டு எங்கு சென்றருளினீரோ?" என்று புலம்பிக் கதறி அழுது முறையிட்டார். இளம் கன்றினை விட்டுப் பிரிந்த தாய்ப் பசுவைப் போல மனம் உருகினுர். பின்னர் கோபுர வாசலுக்கு வெளியே சென்ருர். அங்கே தமது வரவை எதிர்நோக்கிக் காத்திருந்த பாண்டிய பரிவாரங்களைப் பார்த்து "நீங்கள் அனைவரும் திரும்பிச் செல்லலாம். குதிரைக் கூட்டங்கள் எல்லாம் ஆடி மாதத்திலே கடல் துறையிலே வந்து இறங்கும் என்னும் விவரத்தை முன்னதாகவே சென்று பாண்டிய வேந்தனுக்குச் சொல்லுங்கள்" என்று பணித்தனுப்பினுர். பரிவாரங்களும் முன்னே சென்று பாண்டியர் பெருமானுக்கு விவரம் சொல்லினர்.

வாதவூரடிகளும் பாண்டியன் பொருட்டுக் குதிரைகள் வாங்கக் கொணர்ந்த பொற்காசுகளைப் பயன்படுத்தி சிவபெருமானுக்கு பூசைகள், திருவிழாக்கள், திருக்கோயில் திருப்பணிகள் ஆகியவற்றுக்கு நிரம்பச் செலவு செய்தார். சிவனடியார்கள் விஷயத்திலும் ஏராளமாகச் செலவு செய்தார். அவாவறுத்த நிலையிலே நின்று திருப்பெருந்துறையிலே இருந்து வரலானுர். நாட்கள் கடந்தன.

ஆடி மாதமும் வந்தது. ஆனால், குதிரைகளைப்பற்றிய ஒருசெய்தியும் கிடைக்கவில்லை மதுரைப் பாண்டியனுக்கு. ஆதலால் "குதிரைகள் இன்னும் வந்தபாடில்லை! விவரம் என்ன?" என்று ஓலை எழுதித் தனது முதலமைச்சர் வாதவூரருக்கு விடுத்தான். பாண்டியன் அனுப்பிய ஓலையை வாங்கிப் படித்தார் மாணிக்கவாசகர். "இனி என்ன செய்வது? வேறு என்ன வழி உள்ளது?" என்று எண்ணி வருந்தினார். பிறகு மனத்தை அமைதிப்படுத்திக்கொண்டு குருபரனாகிய சிவபெருமானது திருக்கோவிலை அடைந்தார். பெருமான் சன்னிதானத்திலே நின்றுகொண்டு, "ஐயனே சுந்தரபாண்டியனே! திருப்பெருந்துறைச் செல்வமே! பாண்டியன் என் வசம் ஒப்புவித்த செல்வத்தையெல்லாம் நினது திருக்கோவில் திருப்பணிகளிலும் அடியார்க்கு அமுதளித்தலிலும் செலவிடுமாறு செய்தருளினீர். இனி அடியேன் செய்யக்கூடியது யாது? பாண்டிய மன்னனுக்கு எவ்வாறு குதிரைகள் வாங்கிக்கொடுப்பது?" என்று வேண்டித் துதித்தார்.

அது கேட்ட சிவபெருமானும் ஆகாசவாணியாக, "குதிரைகள் எல்லாம் வரும் என்று ஓலை எழுதிப் பாண்டியனுக்கு அனுப்புக" என்று மொழிந்தருளினார். மாணிக்கவாசகரும் தெய்வத் திருவொலி கேட்டு மிகவும் அகமகிழ்ந்து அரிமர்த்தன பாண்டிய மன்னனுக்கு ஓலையொன்று விடுத்தார். வாதவூரரது திருமுகம் கண்ட வழுதியும் மிகவும் மகிழ்ந்தான். குதிரைகளின் வரவை மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்திருந்தான்.

அன்றிரவு மாணிக்கவாசகர் இன்பக் கனவொன்று கண்டார். அதிலே சிவபெருமான் ஞானாசிரியவடிவம்கொண்டு எழுந்தருளினார். "மன்னன் மனத்தைக் கவரத்தக்க, வெற்றி விளைக்கத்தக்க சிறந்த குதிரைகளை வாங்கிக் கொண்டு வருவோம்; இன்றே புறப்பட்டு முன்னால் போவாயாக" என்று கூறியருளினார். உடனே மாணிக்கவாசகர் துயில் நீங்கி எழுந்து இறைவன் மொழிந்தருளியது பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தார்.

மறுநாள் பொழுது விடிந்தது. மாணிக்கவாசகர் எழுந்தார். சிவ தீர்த்தம் ஆடிய பெருமானைத் தரிசித்து வணங்கிவிடைபெற்றுப் புறப்பட்டார். மதுரைமா நகரத்தை நோக்கி நடக்கலானார். பல காதவழி கடந்து சென்று மதுரை சேர்ந்தார். பின்னர் அரண்மனை சென்று அரிமர்த்தன பாண்டியனைக் கண்டு வணங்கி முன் நின்றார். பாண்டியனும் அவரை வரவேற்று, "செம்பொன் எவ்வளவு கொண்டு சென்றீர்? எத்தனை குதிரைகள் வாங்கினீர்?" என்றெல்லாம் வினவினான். விடையாக மாணிக்கவாசகரும், "மன்னர் பெருமானே! யான் எடுத்துச் சென்ற பொன்னுக்கோர் அளவில்லை! வாங்கிய குதிரைகளுக்கும் அளவில்லை. குதிரைகள் எல்லாம் பின்னால் வந்து கொண்டிருக்கின்றன, காணலாம். இதன் காரணமாகத் தாங்கள், 'துரகபதி' என்னும் பெயர் பெற்று விளங்குவீர்," என்று பகன்றார். பாண்டியன் மகிழ்ந்தான். வளமான நற்பரிசுகள் பலவற்றை வழங்கியபின் வாதவூரரை மனைக்கு அனுப்பி வைத்தான்.

மாணிக்கவாசகர் பொற்றாமரைத் திருக்குளத்திலே ஸ்நானம் செய்து சித்திவிநாயகரின் திருவடி பணிந்து சென்று சோமசுந்தரப் பெருமானை தரிசித்து வணங்கினார். "எம்பெருமானே! முழுமுதலே! பாண்டியன் பொன்னையும் எளியேன் பணியையும் ஒருங்கே ஆட்கொண்டருளினீர். பாண்டியன் கோபம் கொள்ளாது மிகவும் மகிழும் படி குதிரைகள் வரக்கூடுவது எப்படி?" என்று விண்ணப்பித்து நின்றார். அப்போது சிவபெருமான், "உண்மை பக்தனே! பயப்பட வேண்டாம். மிகவும் சிறந்த குதிரைகளைக் கொண்டு வருவோம்." என்று ஆகாசவாணியாக இயம்பியருளினார். வானொலி கேட்டு மகிழ்ச்சி பெற்ற வாதவூராரும் சிவபெருமான் அருள் திறத்தை வியந்தவாறு தமது மனை சேர்ந்தார்.

வாதவூரர் தம்மனை சேர்ந்ததும் அவரது உறவினரும், நண்பாளரும், அன்புடைய பணியாளரும், பரிவு கொண்ட அயலாரும். ஏனையோரும் வந்து நெருங்கி இடித்துரைத்தனர். "அரசியலும் அமைச்சும் நன்குணர்ந்த நீர் செய்யும் செயல் எதுவும் நன்றாக இல்லை. குதிரைகள் இன்று வராவிட்டால் பாண்டியன் நாளை என்ன செய்வானோ?" என்று சொல்லினர்.

திருவாதவூரர் எல்லாவற்றையும் கேட்டார். சமநோக்குக் கொண்ட அவர் பாசம், பந்தம், சொந்தம், அன்னியம், விருப்பு, வெறுப்பு எல்லாம் கடந்த மிக உயர்ந்த நிலையிலே இருந்தார். "நன்றோ தீதோ எது வந்தாலும் சரி, எல்லாம் அவன் செயல், நான் சிவனை மறவேன்." என்று கூறித் தம் மாளிகையிலே அமைந்தார்.★

## 59. நரியைப் பரி ஆக்கியது

சுற்றம் எனும் பாசபந்தம் நீங்கி ஆணவம் அறுத்துச் சிவயோகம் நின்ற வாதவூரடிகளை அரிமர்த்தன பாண்டியன் மறுதினம் தன்னிடம் வரவழைத்து "குதிரைகள் இன்னமும் வரக்காணோமே, ஏன்?" என்று வினவினான். திருவாதவூரரும் மறுமொழியாக "இன்றுதொடங்கி மூன்று நாட்களுக்குள்ளாகக் குதிரைகளெல்லாம் வந்து விடும்; குதிரைக் கூடத்தைப் பெரிதாக அமைக்கச் செய்ய; பல குளங்களைத் தோண்டச் செய்க. ஊர் முழுவதும் அலங்காரம் செய்விக்க" என்று வேண்டிக்கொண்டார். வாதவூரர் சொன்னபடியே பாண்டிய வேந்தனும் செய்வித்தான்.

மூன்று நாட்களும் போய்விட்டன. குதிரைகள் தாம் வரக்காணோம். நான்காம் நாளும் வந்தது. பாண்டியன் சிந்திக்கலானான். "இன்னும் குதிரைகள் வந்தபாடில்லை! வாதவூரன் குதிரைகள் வாங்கிய முறைதான் என்ன? குதிரைகள் எப்போதுதான் வருமோ?" என்று கருதிச் சினமடைந்தான். தன்னெதிரே நின்ற தண்டலாளரை விளித்து, "எம்மிடம் பொன் கவர்ந்துசென்ற வாதவூர்க் கள்வனைக் கொண்டு சென்று தண்டியுங்கள்; எமது பொன் முழுவதையும் அவனிடமிருந்து திரும்ப வாங்குங்கள்" என்று ஆணையிட்டான்.

அரிமர்த்தனனது கடும்கோபம் கண்ட தண்டலாளர் அஞ்சினர். உடனடியாக வாதவூரரிடம் சென்று, "பொன் கொடுப்பதற்கு இனி வகை என்ன? கூறும்," என்று சீறி விழுந்தனர். எதுவும் விடை சொல்லாது நின்ற அடிகள் மீது பாரமான கற்களைச் சுமத்தினர். கனம் பொருந்திய அடிகள் சிவபெருமான் திருவடியைச் சிந்தை செய்திருந்தார். பாரம் அனைத்தையும் பரமன் பொறுத்தான். அடிகள் துன்பம் நீங்கி நின்றார். வாதவூரடிகளின் நிலையைத் தண்டலாளர் கண்டனர். "அது மாயம்", என்று நினைத்து மிகுந்த கோபம் கொண்டு அவரது கைகளிலும் கால்களிலும் கிட்டிபோட்டு நெறித்தனர். அந்தக் கடுமைக்கும் அஞ்சாத அடிகளார் சிவபெருமான் சேவடியே சிந்தித்திருந்தார்.

அன்றிரவு வாதவூரடிகளை இருண்ட சிறைக்கூடத்திலே தள்ளி விலங்குகள் பூட்டித் துன்புறுத்தினர் தண்டலாளர்கள். பரமேசன் திருவடிகளையே தியானித்திருந்தார் இரவு முழுதும் வாதவூரர்.

விடிகின்ற நேரத்திலே சிவபக்தர்களின் திருப்பள்ளியெழுச்சிப் பாடலின் ஒலியையும், சங்கு முழக்கத்தையும், வேத நாதத்தையும் தன் செவிகளாரக் கேட்டிருந்தார் வாதவூரர். சோமசுந்தரப்பெருமானது விமானமிருந்த திசை நோக்கிக் கைகூப்பித் தொழுதார். சிவபெருமானை நோக்கி, "எந்தாய்! அனைத்துலகும் ஈன்றாய்! சிறியேற்கு இரங்காயோ? இன்றென்னைக் கைவிட்டாய்! அரசன் தமர் இழைக்கும் வன்கண்ணோய் பாராய், உன் தன்மை இதுவா? பரமேட்டி!" என்று மனங்குழைந்து முறையிட்டு அழுதார்.

மாணிக்கவாசகரது முறையீடு சிவபெருமானது திருச்செவியில் புகுந்தது. உடனே சிவபெருமான் வாதவூரரைச் சிறையிலிருந்து விடுவிக்கத் திருவுள்ளம் கொண்டார். நந்திகேசுவரர் முதலான கணநாதர்களை அழைத்தருளினார். அவர்கள் அனைவரும் வந்து பணிந்து நின்றனர். இறைவரும், "ஆவணி மாத மூல நாள் மூற்பட்டு வந்துவிட்டது. ஆதலால் இன்றைக்கு நான் முற்பட்டு, பாண்டியன் கோபம் கொள்வதற்கு முன்னரே சென்று குதிரைகளைக் கொடுத்துவிடவேண்டும். நீங்கள் எல்லாரும் காட்டில் திரியும் நரிகளையெல்லாம் கொண்டு வந்து அவைகளைக் குதிரைகளாக்கி, அவற்றின் மீது குதிரைச் சேவகர்களாக ஏறிக்கொண்டு முன்னே செல்லுங்கள், நாமும் குதிரைச் சேவகர்போல வருகின்றோம்" என்று இயம்பியருளினார்.

இறைவன் திருவாணைப்படியே சிவகணநாதர்கள் தாங்கள் பிடித்து வந்த நரிகள் எல்லாவற்றையும் ஓரிடத்தில் கொணர்ந்து சேர்த்தனர். பின்னர் அவற்றையெல்லாம் நல்ல உயர்சாதிக் குதிரைகளாக்கி அவற்றின் மேலேறிச் சேவகம் செய்தனர்.

கணநாதர்களான குதிரை வீரர்கள் பல்வகை உடையுடுத்தி, பல்வகை அணி பூண்டு, பல் வகை ஆயுதங்கள் தாங்கி தங்கள் தங்கள் பரிகளின் மேல் ஏறி அமர்ந்தனர்.

சோமசுந்தரப்பெருமான் மந்திரியாகிய மாணிக்கவாசகர் பொருட்டல்லாமல் பாண்டியன் அரிமர்த்தனனது பிறவிநோயைத் தீர்க்கும் பொருட்டுத் தாமும் ஒரு குதிரைச் சேவகனாக எழுந்தருளுவதானார். தமது திருவடியில் வீரக்கழலை அணிந்தார். திருக்கரத்திலே ஞானவாளை ஏந்தினார். அலங்காரமான உடைகளும் நவமணிகள் பதித்த ஆபரணங்களையும் அணிந்தார். நெற்றியிலே திருநீறு துலங்கப் பூசினார். திருக்கோலம் காட்டி வேதக் குதிரையின் மீது எழுந்தருளினார். வேதக் குதிரையின் லட்சணம் எத்தகையது! அறம் பொருள் இன்பம் வீடு என்பனவே அதன் கால்கள்; ஞான காண்டம் கரும காண்டம் என்பனவே செவிகள்; பரம் அபரம் என்ற ஞான மிரண்டும் கண்கள்; விதியேமுகம்; விலக்கே வால்; ஆகமங்கள் புற அணிகள்; பிரணவமே கடிவாளம்: உபநிஷதமே அணை; பிரம்மாவின் முகங்களே அது தங்கும் லாயம். குதிரையின் காற்சிலம்புகள் ஒலித்தன. பதினெட்டு வகை வாத்தியங்கள் முழங்கின.

மாயப்பரிக் கூட்டம் மேற்குத் திசையை நோக்கிக் கோலாகலமாக ஆரவாரம் செய்துபுறப்பட்டது. சிவபெருமான் ஆரோகணித்த வேதப்பரி நடுநாயகமாகச் சென்றது. அசுவ சாஸ்திர லக்ஷணங்கள் நிரம்பிய உத்தமக் குதிரைகள் செல்வதைக் கண்ட மக்களனைவரும் வியப்பெய்திப் பாராட்டினர். தமது இச்சா சக்தியாலே திருவுருவம் எடுத்த சிவபெருமான் இந்திரஜால மகேந்திரஜாலம் புரிபவனாக யாவரையும் மயக்கி நடந்தருளினார்.

தாவிச் சென்ற பரிகள் ஐம்புலன்களையும் நிகர்த்தன. பரிகளை அடக்கியாண்ட சேவகர்கள் மனத்தை நிகர்த்தனர். மனங்களிலே பொருந்தி நின்ற உயிரை நிகர்த்தது வேதக் குதிரை நடத்திய இறை!

வாத்தியங்களின் பெரு முழக்கமும், குதிரைகளின் கனைப்பும், சேவகரின் ஆரவாரமும் ஒன்று கூடி ஒலிக்க வேதக் குதிரைப்பாகச் சிவனார் மதுரை மூதூருக்கு அரைக்காத தூரத்தில் வந்தருளினார்.

குதிரைகளின் வரவைத் தெரிந்தனர் மதுரை மாந்தர் பலர். சிலர் சிறைக்கூடத்துக்கு விரைந்து சென்று திருவாதவூரர் முன்பு நின்று, "அமைச்சு நெறி வழுவாத பெரியவரே! பல நிறம்கொண்ட ஏழுகடல்களும் எழுந்து வருவதைப்போலக் குதிரைப்பெருங்கூட்டம் வருகின்றது. இந்தச் சேதியை பாண்டிய மன்னனிடம் சொல்வீராக," என்றனர். வாதவூரரும், இறைவன் திருவருளைச் சிந்தித்தபடியே பாண்டிய மன்னனிடம் சென்று தெரிவித்தார். அதுகேட்ட மன்னன் அரிமர்த்தனன் உடல் பூரித்தான். வாதவூரருக்குப் பரிசாக விலையுயர்ந்த முத்துமாலைகளையும் பட்டாடைகளையும் தந்தான். மந்திரியர் முதலானோர் புடைசூழச் சென்று தலைவாசலை அடைந்தான். அருகிலிருந்த ஒரு மாடத்தில் தங்கி குதிரைகளின் வரவை மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்து வீற்றிருந்தான்.

சோமசுந்தரப் பெருமான் தமது திருவிளையாடலைக் காட்டும் பொருட்டு சற்றே காலந்தாழ்த்தினார். குதிரைகள் காணாத வேந்தன்

சினந்து, "இது பொய்" என எண்ணி, "திருவாதவூரரைத் தண்டிக்க வேண்டும்" என்ற குறிப்போடு தண்டலாளரைப் பார்த்தான். அவர்களும் பாண்டியன் நினைத்தபடியே, பழிபாவங்களுக்குப் பயப்படாத தன்மையராய் வாதவூரருக்குக் கடும் தண்டனை கொடுத்தனர்.

சிவஞானியாராகிய வாதவூரரும் சோமசுந்தரப் பெருமானை நினைந்து அவர் தம் சேவடிகளையே போற்றிக் கொண்டிருந்தார். "தேவா! தேவர்க்கரசே! சிறியேன் துன்பம் பொறுக்கவில்லை; அஞ்சேல் என்று அருளினீர்! ஆவியோடு உடலும் உம்முடையதே. என்னை உடையவரே!" என்று ஏங்கி யிரந்து புலம்பி நின்றார். தண்டனை பெற்றுத் துடித்துப் புலம்பும் வாதவூரன் செவிகளிலே எக்காள ஒலிகள் கேட்டன. குதிரைகளின் குழம்படித்துகள் எங்கும் பரவியது. அரிமர்த்தனன் குதிரைகளின் வரவைத் தெரிந்தான். வாதவூரரை அழைத்துவரச் செய்தான். எல்லையற்ற பரிவு காட்டினான். "எமது ராஜாங்கக் காரியங்களை உம்மைப்போல ஏற்று முடிப்பவர்கள் யார்?" என்று கூறிப் பெருமகிழ்வுடன் அளவளாவினான்; அதே சமயத்தில் குதிரைகள் எல்லாம் சிறந்த தோற்றம் காட்டிய சேவகர்களோடு வந்து சேர்ந்தன.

கம்பீரமும் எழிலும் சிறந்த தோற்றமும் காட்டிவந்து நின்ற எண்ணற்ற குதிரைகளைப் பார்த்துப் பிரமித்துப் போனான், பாண்டியன். அவற்றின் பொலிவிலே சொக்கிப்போனான். உவகை அவனை முழுக்காட்டியது. குதிரைச் சேவகரை வியப்போடு நோக்கினான். வாதவூரரைப் பார்த்து, "இவர்களுள் தலைவர் யார்?" என்று வினவினான். எல்லாம் தெரிந்த அமைச்சரோ, "வேந்தே! நான் அறியேன்" என்றார். அப்போது குதிரைத் தலைவராக விளங்கிய சிவபெருமான் தமது வேதப்புரவியை நடாத்திய வண்ணம் பாண்டியன் எதிரே சென்று நின்றார். "மன்னவா! எங்கள் குதிரையின் சிறப்பினை சற்றே காண்பாய்", என்று கூறியருளினார். தமது குதிரையினை மல்ல, மயூர, வானர, வல்லிய, சரகதிகளும், பதினெட்டுவகை விசித்திர நடை விகற்பங்களும் தோன்ற நடத்திக் காட்டியருளினார். பரம்பொருள் செய்து காட்டுவதைக் கண்ட சிவகணத் தலைவர்களும் தத்தம் குதிரைகளை நடத்திக் காட்டினர். அதனையெல்லாம் கண்ட பாண்டியன் அவர்களை நோக்கி, "உங்கள் தலைவன் யார்?" என்று கேட்டான். குதிரைச் சேவகர்கள் சோமசுந்தரப்பெருமானைச் சுட்டிக்காட்டி "இவர்தாம்" என்றனர்.

அவரைக் கண்ட பாண்டியன் அரிமர்த்தனன் அருட்பார்வைக்கு இலக்கானான். தனது ஆசனத்தை விட்டு எழுந்தான். கைகளைத் தலைமேல் கூப்பிக்கொண்டு நின்றான். தன் நினைவு வந்ததும் தனது மிலைமையை நினைத்து வெட்கப்பட்டான். அவ்வாறு வெட்கமடைந்து நிற்கும் பாண்டியனைப் பார்த்தார் பரம்பொருள். "மன்னவனே! உனது சொல் தவறாத வாதவூரர் உன் பொருளையெல்லாம் கொணர்ந்து தாமாகவே எனக்கும் எனது ஆட்களுக்கும் ஏராளமாக

வழங்கினர். அதன் காரணமாகத்தான் தேவர்களுக்கல்லாமல் மனிதருக்குக் கிடைப்பதற்கரியனவும், விலை குறிப்பதற்கரியனவும், அசுவசாஸ்திர லட்சணத்திற்கு இயைந்தனவுமான நல்ல குதிரைகள் உனக்காக வந்தன. இன்று நீ என்னிடமிருந்து கயிற்றை மாற்றிக் கொண்டு விட்டால் இக் குதிரைகளெல்லாம் உன்னுடையனவாகி விடும். இதுவே முறை. நாளைக்கு எது நேர்ந்தாலும் எனக்கும் உனக்கும் அது குறித்து யாதொரு வழக்கும் கிடையாது. இதுவே குதிரை வாணிகத்துப் பழக்கம்'', என்று மொழிந்தருளினர். பாண்டியன் மிக மகிழ்ந்து உடன்பாடு கொண்டான். வாதவூரரைப் பெரிதும் பாராட்டினன்.

குதிரைச் சேவகனுகிய கடவுள் கயிறு மாற்றிக் கொடுப்பதற்கு முன்பு புரவியிலக்கணங்களைப் பற்றிப் பொதுப்படையாகக் கூறினர். ஓரிக் கடும்பரிகள் ஒப்பற்ற வேகமுடையன என்றும், போர் புரியும் காலம் வந்தால் மதிலையும் தாண்டிச் செல்லும் என்றும், பலகணி வாயிலும் நுழைந்து செல்லும் என்றும், கொடிய பசி வந்தபோது வைக்கோல் முதலியவற்றையும் தின்னும் என்று சொல்லி வைத்தார். பின்னர் பாடலம், கோடகம், இவுளி, வன்னி, குதிரை, பரி, கந்துகம் ஆகிய துரக வகைகளையும், அவற்றின் இலக்கணங்களையும், இயல்புகளையும், போர் புரியும் தன்மைகளையும், கதிகளையும் மிகவும் விளக்கமாகப் புகன்றருளினர். இவ்வளவும் கூறிச் சிவபெருமான் தமது கணத்தாரின் முகத்தைப் பார்த்தார். சேவகர்கள் அனைவரும் தத்தம் குதிரைகளை வேகமாக நடத்திக் காட்டினர்கள். பாண்டிய வேந்தன் கண்டு வியந்தான். தன்னைச் சூழ்ந்தோரையும் அமைச்சரையும் பார்த்துப் பெருமகிழ்வு தெரிவித்துக் கொண்டான்.

சிவபெருமானும் தமது குதிரையை வேதப்பரியை இடதுசாரி வலதுசாரியாகவும், வட்டமிட்டும் வேகமாக நடத்திக்காட்டினர். எல்லாம் முடிந்ததும் பாண்டியனின் முன் தமது சேவகர்களுடன் வந்து நின்றார். பின்னர் வேதப் பரிவீரர் வழுதிக்குக் குதிரைகளின் நாடுகளைப்பற்றி விவரமாகக் கூறினர். பல்வேறு இருபத்தைந்து நாடுகளிலிருந்து வந்தவை என்றும் விளக்கமாக மொழிந்தார். ஒவ்வொரு இனத்தையும் சுட்டிக்காட்டி அவற்றின் நாட்டினையும் குறிப்பிட்டுச் சொன்னர். மேற்கொண்டு குதிரைகளின் நிறங்கள் பற்றியும் அவற்றுள் அஷ்டமங்கல பஞ்சகல்யாணி வகை பற்றியும் எடுத்துரைத்ததோடு அவற்றின் சுழிகளையும் பயனையும் பற்றி விள்க்கம் செய்தார். இறுதியாக உத்தமக் குதிரையின் இலக்கணத்தையும் கூறியருளினர்.

பாண்டியன் அக்குதிரைகட்கெல்லாம் அழகான கிண்கிணி மாலை, சதங்கை, சிலம்பு முதலியன அணிவித்தான். மலர்மாலை சூட்டிச் சந்தனம் இட்டான். தூபதீபம் காட்டி வழிபட்டான். வேதப்பரிவீரர் சோமசுந்தரப் பெருமானை நோக்கிக் கைகூப்பி, "வழுதி வாழ்க!" என வாழ்த்தி தாம் அமர்ந்து வந்த வேதப்புரவி தவிர ஏனைய மாயக்குதிரைகள் அனைத்தையும் கயிறு மாற்றிப்

பாண்டியன் கையில் கொடுத்தருளினார். பாண்டியன் குதிரைகளை ஏற்றுக்கொண்டு தனது சேவகர்கள் கையில் கொடுத்தான். அவர்களும் குதிரைகளை இட்டுச்சென்று அரண்மனையைச் சார்ந்த பெரிய புதிய குதிரைப் பந்தியிலே சேர்த்தார்கள்.

குதிரை வணிகராக வந்த இறையவருக்குப் பாண்டியன் வெண் பட்டாடை யொன்றைப் பரிசாகக் கொடுத்தான். பெருமானும் குதிரையிலிருந்து இறங்கியருளி அப்பட்டினை ஏற்றுத் தமது திருமுடியிலே சூட்டிக்கொண்டார். சிவபெருமானது எழுந்தருளி வந்த தன்மையைக் கண்ட கணத்தார்கள் தமக்குள்ளே வெகுண்டு பேசிக்கொண்டார்கள்.

அரிமர்த்தன பாண்டியன் ஏனைய குதிரை வீரர்களுக்கும் பல்வேறு நிறங்கள் காட்டும் பட்டாடைகளைப் பரிசாக அளித்தான். ஆடைகளை அவர்கள் ஏற்றுக்கொண்ட பின்னர் சோமசுந்தரப் பெருமான் தனது வேதக்குதிரையுடன் மறைந்தருளினார். கணநாதச் சேவகர்களும் உடன் மறைந்தனர்.

தனது இருமைக்கும் துணைசெய்து நின்ற திருவாதவூரருக்குப் பாண்டிய மன்னன் அருஞ்சிறப்புகள் பல செய்தான்; அவருக்கு விடைகொடுத்து அனுப்பிய பின்னர் மத்தியான்ன நேரத்தில் அரண்மனை சேர்ந்தான்.

மந்திரிமார்களும் குதிரைகளைக் காணவந்த ஊர் ஜனங்களும் தங்கள் தங்கள் இடம் சென்றனர்.

சோமசுந்தரப் பெருமான் தமது திருக்கோவிலை அடைந்தார். தமது திருவிளையாடல் எல்லாவற்றையும் மீனாட்சியம்மையாருக்குக் கூறியருளினார். ★

## 60. பரியை நரி ஆக்கியது.

மங்கல வாத்தியங்கள் பல இயம்பின. சேனைகள் ஆரவாரித்தன. மகளிர் அஷ்டமங்கலப் பொருள் தாங்கி எதிர் வந்தனர். அரிமர்த்தன பாண்டியன் கொடுத்த பலவகைச் சிறப்புகளுடனே தனது திருமனை சேர்ந்தார் வாதவூரர். அதுசமயம் தன்னை வந்து வினவியர்கட்கெல்லாம் வன்மொழி புகன்றார்.

அனைவரையும் அவரவர் வீட்டிற்குச் செல்ல விடுத்த பின் தான் ஒரு தனியிடத்தே அமர்ந்து சிந்திக்கலானார். "சோமசுந்தரப் பெருமான் நாம் வேண்டிக் கொண்டபடியே குதிரை வாங்கும் பொருட்டு நாம் கொண்டு சென்ற பொருளனைத்தையும் தமது அடியார்களும் தாமுமாகக் கைக்கொண்டார்; எளியேனையும் பணி கொண்டு பிறவிப் பிணியைப் போக்கி அருள் செய்தார். மேற்கொண்டு பாண்டியனது உளத்திற்கிசைந்த நல்ல குதிரைகளையும் கொணர்ந்து இனிக் கவலையே இல்லை என்று ஆகுமாறு செய்தருளி

ஞர். இனி யான் சிவானந்தானுபவத்திலே எப்போதும் நிலை நிற்குமாறு நம்மைத் தவ வழியில் செலுத்துதல் வேண்டும்" என்ற பேரவாக்கொண்டார். இருமை இன்பங்களிலும் பற்று சிறிதேனும் இன்றிச் சோமசுந்தரப் பெருமானின் திருவடிகளையே தமது உள்ளத்தில் பதித்திருந்தார்.

பிற்பகல் சாய்ந்தது; மாலை வந்தது; மாலை மயங்கியது; இரவு வந்தது. நள்ளிரவு நேரம். அரிமர்த்தன பாண்டியனது அரண்மனைக் குதிரைப் பந்தியிலிருந்த குதிரைகள் எல்லாம் சிவபெருமான் திருவிளையாடலால் தமது சுயமான நரி உருவத்தை எடுத்துக் கொண்டன.

நரிக் கூட்டங்கள் தப்பியோட ஆரம்பித்தன. அவை பெருத்த ஊளையிட்டுத் திரிந்தன. லாயத்திலே கட்டப்பட்டிருந்த உண்மையான குதிரைகளைக் கடித்துக் குதறி ரத்தம் குடித்தன. கடிபட்டு இன்னலுற்ற குதிரைகள் ஓலமிட்டன. நரிகளின் ஊளையும் குதிரைகளின் பயங்கரக் கனைப்பும் சேர காவலர் திடுக்கிட்டு எழுந்தனர். முன்தினம் உத்தமக் குதிரைகளாக வந்தவை எல்லாம் அப்போது நரிகளாகி மற்றக் குதிரைகளின் குடலைப் பிடுங்கித் தின்று கொண்டிருப்பதைப் பார்த்தனர். காவலர்கள் எழுந்து வருவது கண்ட நரிகள் மதில்களைத் தாண்டி யோடின; சாளரத்தின் வழியே பாய்ந்தோடின; நுழை வாசல்வழியாகவும் தமக்குச் சந்து கிடைத்த இடங்கள் மூலமாகவும் ஓடிச்சென்றன. லாயத்திலே எஞ்சிக்கிடந்தவை நொண்டிநரிகளும், நோய்கண்ட நரிகளும், குருட்டு நரிகளும் கிழட்டு நரிகளும் தான். குதிரைப் பந்தியிலிருந்து வெளிப்பட்ட நரிகள் எல்லாம் குளங்கள், தோட்டங்கள், தரும சாலைகள், தெருக்கள், ஆலயங்கள், சந்திகள் எல்லாவற்றிலும் பரவி ஊளையிட்டுத் திரிந்தன. இன்னிசைக் கருவிகளின் ஒலியும், இன்பத் தமிழோசையும், வேத நாதமும் மண்டிக்கிடக்கும் மதுரையம்பதியிலே நரிகள் ஊளையிடுகின்ற அவல ஒலியே அன்றிரவு மலிந்தது. மக்கள் அனைவரும் துயில்! நீங்கி எழுந்துவிட்டனர். நரிகள் செய்த இன்னலுக்கு ஓர் அளவே கிடையாது. பல தெருக்களிலுள்ள பல வீடுகளில் புகுந்து பெருந்துன்பம் விளைத்தன. பல பொருள்களை நாசம் செய்தன. புறா, கிளி, கோழி ஆகிய பறவைகள், ஆட்டுக் குட்டி, பன்றிக்குட்டி ஆகிய மிருக வகைகள் ஆனவற்றைக் கொன்று தின்றன. நள்ளிரவு நேரத்திலே எங்கும் ஒரே அமளி நிலவியது. கோட்டை வாசல்கள் திறக்கப்பட்டதும் நரிகள் எல்லாம் ஊரை விட்டோடி காட்டுக்குள் சென்று மறைந்தன.

ஒருவாறாக விடிந்தது. குதிரை லாயக் காவற்காரர்கள் மிகுந்த பயமடைந்து பாண்டியனது சபையை அடைந்தனர். மன்னனை வணங்கி நடுக்கத்துடன் பதுங்கி நின்று "வேந்தே! நேற்று அழகான தோற்றம் கொண்டு நல்ல குதிரைகளாக வந்தனவெல்லாம் நரிகளாக மாறி ஏற்கனவே லாயத்திலுள்ள குதிரைகளுக்கு யமனாக ஆயின. ஊர் முழுவதும் பெருந் தீங்கு இழைத்து விட்டுக் காட்டுக்கு

ஓடிப்போய் விட்டன", என்று கூறினார்கள். பந்திக்காவலர் சொன்ன அவலச்சேதி மன்னனுக்கு கடுங்கோபத்தை உண்டாக்கியது. அவனது கண்கள் சிவந்தன; சீறினான். அதுகண்ட மந்திரிமார்களும் அச்சம் கொண்டனர். முதல் நாளிலே குதிரைகளைக் கண்டு பேரானந்தம் எய்திய அரசன் அதே குதிரைகள் திரும்ப நரிகளாகி ஓடிவிட்டன என்பது கேட்டு துக்கசாகரத்துள் மூழ்கினான். பின்னர் பக்கத்திலிருந்த மற்ற அமைச்சர்களைப் பார்த்து, "அமைச்சர்களே! வாதவூரன் இருள்மனம் கொண்ட கள்வன் என்பது தெளிவாகி விட்டது. நமது பொருள் எல்லாவற்றையும் கவர்ந்துகொண்டு விட்டான். நரிகளை யெல்லாம் பரிகளாக மாற்றி நம்மிடம் வரச்செய்தான். என்ன மாயம் செய்துவிட்டான் பார்த்தீர்களா? வாதவூரனை என்ன செய்யலாம்?" என்று கேட்டான். மந்திரிமார்களோ, "வாதவூரன் செய்தது பெரும்பாவம், கடுங்குற்றம். அவன் செய்நன்றி கொன்ற தீயவன். நாங்கள் சொல்வதற்கு என்ன இருக்கிறது" எனக் கூறி தலைகவிழ்ந்து நின்றனர்.

மாணிக்கவாசகரோ அப்போது ஞானப் பேரின்பக் கடலுள் மூழ்கியிருந்தார். "மன்னன் மனத்திற்குகந்த உத்தம ஜாதிக் குதிரைகளை அளித்துக் கவலையை ஒழித்தோம்", என்றெண்ணிக் களிப்புமிகுந்த உள்ளத்தோடு இருந்தார். நிகழ்ந்த வினை எதுவும் தெரியாதவராகி வேந்தனிடத்தே சென்று நின்றார். அரிமர்த்தனன் வாதவூரரைச் சினத்துடன் பார்த்து, "அமைச்சரே! நன்று செய்தீர்! அளவிடமுடியாதபடி எனது பொருளைக்கொண்டு சென்று, சிறந்த குதிரைகளாகக் கொணர்ந்து நேர்த்தியாகக் கொடுத்தீர்! உம்மைப் போன்று ராஜகாரியம் செய்து முடிப்பவர் யார்?" என்று சீறினான். "ஏன்? குதிரைகளுக்கு என்ன குற்றமோ?" என்று வினவினார் வாதவூரர். "குற்றமா? குற்றம் ஏதும் உண்டோ? நடுராத்திரியிலே அவையெல்லாம் நரிகளாக மாறியது போதாதா? குதிரைகளின் குடலைப் பிடுங்கித் தின்றது போதாதா? ஊரெங்கும் ஊறு விளைத்து ஊளையிட்டுத் திரிந்து அவல செய்தது போதாதா? இவ்வளவு நாட்கள் நல்லவனைப்போல நடந்து காட்டிப் பாசாங்கு செய்ததெல்லாம் என் பொருளைக் கவர்ந்து கொள்வதற்காகத்தானா? உனது மந்திரி வேலை மிக நன்றாக இருக்கிறது! புனிதமான பிராமண குலத்தில் தோன்றிய பெருமை வேறு உனக்கு", என்று கடிந்து தண்டலாளர்களைப் பார்த்து, "இவனைக் கொண்டு செல்லுங்கள்; எங்கும் போகவிடாதீர்கள்; என்ன உபாயம் செய்தேனும் நமது பொருள் அனைத்தையும் வாங்குங்கள்", என்று உத்தரவிட்டான். காலதூதரை நிகர்த்த தண்டலாளர் உடனே தருமமூர்த்தியான திருவாதவூரரைப் பிடித்திழுத்துச் சென்றனர். உச்சி வெயிலிலே சூரியனைக் காணும்படி அசையாமல் நிற்கச்செய்தனர். அவரது நெற்றியிலும் கைகளிலும் கல்லை ஏற்றித் துன்பம் செய்தனர்.

துன்பம் பொறுக்க முடியாத வாதவூரடிகள் கீழே விழுந்தார். ஞாயிறு, திங்கள், நெருப்பு என்ற மூன்று சுடர்க் கண்களையுடைய

சிவபெருமானை விளித்துத் துதிக்கலானார். "நாதனே! தேவனே! காவலனைக் காய்ந்தவனே! வேதப் பரியேறும் சேவகனே! என்னைக் காவாயோ? என்றெல்லாம் முறையிடு செய்தார். சோமசுந்தரப் பெருமான் திருச்செவி சாய்த்தருளினார். அவரது மனம் நெகிழ்ந் தருளியது. பரமபக்த சிகாமணியான மாணிக்கவாசகரைக் காக்கத் திருவுளம் கொண்டார்.

வையையாறு பெருவெள்ளம் கொண்டு பெருக்கெடுத்துப் பரவி வரல் வேண்டுமெனத் திருவுளம் கொண்டார் சிவபெருமான். இறைவனது திருவுளக் குறிப்பை உணர்ந்த வையையும் பெருவெள்ளம் புரட்டிப் பேரோசையுடன் வந்தது. நதி, கரைகளை யுடைத்துக்கொண்டு பாய்ந்தது. மரங்களை வேரோடு தூரோடு பறித்து அடித்துச் சென்றது. கரும்பு, வாழை, நெல் ஆகிய பயிர்களை யெல்லாம் வாரி விழுங்கிச் சென்றது. இரைச்சல் செய்து பொங்கிப் பெருகி நுரைத்துக் கலங்கி வந்த வையையாற்று வெள்ளம் மதுரைமா நகரத்தின் மதிலுக்குப் பக்கத்திலே வந்து பல வீடுகளையும் குடிசைகளையும் புறட்டித் தள்ளிச் சென்றது. மதிற் சுவரையும் தாண்டி ஊருக்குள்ளே புகுந்துவிட்டது. வெள்ளம் பல தெருக்களையும் சூழ்ந்துகொண்டது.

வையையின் செய்கை கண்ட நகரத்து மாந்தர் எல்லாரும் பயந்து நடுங்கினர். செய்வது இன்னதென்பது தெரியாமல் ஏங்கித் தவித்தனர். "இவ்வூர் இன்னல் கடலுள் மூழ்கக் காரணம் என்ன? நேற்றிரவுதான் நரிகள் கடும் துன்பம் இழைத்தன; என்றும் இவ்வளவு பெருகாத நதி ஏன் இப்போது பெருகித் துன்பம் செய்கிறதோ? பாண்டிய மன்னவன் செங்கோல் நெறி தவறிவிட்டானோ? சோமசுந்தரப் பெருமானின் திருவிளையாடலா?" என்றெல்லாம் பலபடியாகத் தமக்குள் ஐய வினாக்களை எழுப்பிக்கொண்டு அவதிப்பட்டனர். "சிவபெருமான் அருள்புரிந்தாலல்லாமல் இவ்வையையாறு அடங்கப்போவதில்லை", என்றே பலர் கூறினர்.

வெள்ளம் புகுந்து பெருகி வருவதைக் கண்ட தண்டலாளர்களும் தத்தம் உடைமைகளைப் பாதுகாக்க எண்ணி வாதவூரரை விட்டுச் சென்றனர். விடுதலை பெற்ற திருவாதவூரர் திருக்கோவில் சென்றார். சோமசுந்தரப் பெருமானைத் தரிசனம் செய்தார். பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டத் தமிழிசையால் பெருமானைத் தோத்திரம் செய்து வணங்கினார். பேரின்பக் கடலுள் மூழ்கி இருந்தார். ★

## 61. மண் சுமந்தது.

வையையாற்றின் வெள்ளப் பெரும் பரப்பிலே அகப்பட்டு மதுரை மூதூர் பெரிதும் துன்பம் அடைவதைக் கண்டான் பாண்டியன் அரிமர்த்தனன். உடனே, தனது மந்திரிகளை அழைத்தான். "நீங்கள் சென்று வையையாற்றங்கரையைக் கட்டி வெள்ளத்தின்

வேகத்தையும் மட்டுப்படுத்தி வாருங்கள்", என்று ஆணையிட்டான். அமைச்சரும், "அப்படியே நன்று", என்று சொல்லித் தொழுது சென்றனர். பலவகைப்பட்ட குடிகளைக் குறிப்பிட்டு, பெயர்களை எழுதிக்கொண்டனர். எல்லை கோலிய பின்னர் அடைக்கவேண்டிய பங்குகளைக் குறிப்பிட்டு, "அவரவர் பங்குகளை அடையுங்கள்", என்று பறைசாற்றி யழைத்தனர். வீட்டுக்கொரு கூலியாளாக வந்தவர்களை யெல்லாம் ஓரிடத்திலே கூட்டி, "அவரவர் எல்லைக்குட்பட்ட பகுதிகளை விரைவாக அடைத்து விடுங்கள்" என்று ஆணையிட்டு அவரவர்களிடத்திற்கு அவரவர்களைப் போகச் சொல்லினர்.

அதுசமயம் வையையாற்றின் கரையிலே மண்வெட்டியாளரும், கூடைக்காரரும், மரங்கள் சுமந்து வருபவர்களும், தழைகள் வைக்கோல் எடுத்து வருவோரும் வந்து மண்டினர். உடைபட்ட கரையோரங்களிலே மரங்களைக் கொண்டு நிறுத்தினர். வைக்கோல் பிரியைக் கொண்டு மரத்தடியில் கிடத்தினர்; தழைகளிட்டு நிரப்பினர். மண்ணை வெட்டியெடுத்துச் சென்று விரைவாகக் கொட்டி நிரப்பினர். வையை அன்னையை வேண்டிக்கொண்டு மண்ணைக் கொட்டினர். சிலர் பறையடித்தனர்; சிலர் குரவையிட்டு ஆடினர்; சிலர் வேலை செய்வோரை அதட்டித் துரிதப்படுத்தினர். இப்படியாக நகர மாந்தர் சார்பாக பல திறப்பட்ட கூலியாட்கள் வந்து அவரவருக்கு உற்ற அளவு முறைப்படி தொழில் புரிந்தனர்.

மதுரையம்பதியின் தென்கிழக்கு திசையிலே வந்தி என்ற பெயருடைய கிழவி இருந்தாள். அவள் ஆயிரம் பிறை கண்டவள்; கூனுடையவள்: நரைதிரை மூப்புக்கொண்ட பெரியவள். சிவனடியார்களைக் காட்டிலும் சிறந்த தவமுடையவள். அவள் சுவையான பிட்டு ஆக்கி விற்றுப் பிழைக்கும் பாங்கினள். உற்றோரோ உறவினரோ எவருமற்ற தனியாள். ஒவ்வொரு நாளும் தான் அவித்த பிட்டை ஆலவாய்ச் சொக்கநாதருக்கு நிவேதனம் செய்து பின்பே விற்பனை செய்வாள். தனக்கென்று விடப்பட்ட பகுதியை அடைப்பதற்குக் கூலியாள் கிடைக்காமல் பெரிதும் வருந்திக்கொண்டிருந்தாள் வந்தி. "மன்னன் தண்டனை தந்தால் நான் என்ன செய்வது?" என்று உளம் கலங்கி சோமசுந்தரப் பெருமானை நினைத்து, "ஆலவாய் அண்ணலே! பிட்டு விற்றுப் பிழைக்கும் ஏழை நான்; மன்னவன் ஆணை எனக்குத் துன்பம் தருகிறது. நானோ யாருமற்ற அனாதை. எனக்குத் துணையோ, உறவோ எதுவும் இடையாது. நான் என்ன செய்வேன்? எனக்கொரு கூலியாள் கிடைக்கமாட்டானோ?" என்று ஏங்கி அழுது வருந்தினள்.

வந்தியின் சோகக்குரலுக்குச் செவிசாய்த்த சோமசுந்தரப் பெருமானும் ஒரு கூலியாளாகித் தம் திருக்கோவிலை விட்டு வெளி வந்தார். அழுக்குப் பிடித்த பழைய துணியை இடுப்பிலே அணிந்திருந்தார். சும்மாடு வைத்து அதற்குமேல் ஒரு கூடையைக் கவிழ்த்திருந்தார். தோளின் மீது மண்வெட்டியைச் சுமந்திருந்தார். வேதாந்தத் திருவடிகள் தரைதோய நடந்து வந்தார். "கூலி தந்து

என்னை வேலைக்கு வைத்துக்கொள்பவர் உண்டோ?'' என்று கூவிக் கொண்டே வந்தி வாழ்ந்த வீதியிலே வந்து தோன்றினர்.

யாருமற்ற அனாதையான வந்தி கூலிக்காரன் குரலைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ச்சிகொண்டாள். தன்னருகே வந்து நின்ற தாயினும் பெரிய தயாபரனை தெய்வக்கூலியைப் பார்த்து, ''எனது பங்குக்கு விடப்பட்ட கரையை அடைத்துத் தருவாயா?'' என்று வினவினள். ''அம்மையே! அடைத்துத் தருவேன்; எனக்கு என்ன கூலி தருவாய்?'' என்று இறைவர் எதிர் விளம்பினர். ''நான் விற்பனை செய்யும் பிட்டையே உனக்குக் கூலியாகத் தருவேன்'' என்றாள் வந்திக்கிழவி. ''நிரம்ப நல்லது, அம்மா! எனக்கு இப்போது மிகவும் பசியாக இருக்கிறது. உதிர்ந்த பிட்டையெல்லாம் எனக்குத் தந்துவிடு; அதை உண்டு நான் சற்று இளைப்பாறிவிட்டு உனது பங்கை அடைத்துத் தீர்ப்பேன்'', என்றார் கடவுட் கூலியாள். வந்தியும் உதிர்ந்த பிட்டை அள்ளிக் கொடுத்தாள். பெருமானும் ''பிட்டு நிரம்ப நன்றாக இருக்கிறது. இது சோமசுந்தரப் பெருமானுக்கே உகந்த தாகும்'', என்று சொல்லி அம்மூதாட்டியினது பக்தியுடன் கலந்து அதனை உண்டார். ''அப்பனும் அம்மையும் இல்லாத எனக்குப் பரிவுடன் பிட்டுண்பித்த அன்னையே! இனி நான் வேலை செய்யப் போகிறேன்'' என்று சொல்லிச் சென்றார்.

ஆற்றுக்கரையை அடைந்த திருக்கூலியாள், ''நான் வந்திக் கிழவியின் கூலி'', என்று தம்மைக் குறித்துக்கொள்ளுமாறு செய்து கரையை அடைக்கத் தொடங்கினர். மண்ணை வெட்டுவார்; கூடையில் போட்டுத் தலைமேலே வைத்துக் கொள்வார்; கனம் என்று நினைத்து கீழே கொட்டி மறுபடியும் குறைத்து எடுத்துக்கொள்வார். சும்மாட்டை விழச் செய்வார்; அதனைத் தலையிலே இறுக்கிக் கட்டிக் கொள்வார்; பிறகு விரைந்து சென்று மண்ணைக் கரையிலே கொட்டு வார். இப்படி இரண்டு முறை செய்ததும் களைப்பு மேலிட்டுவிடும். உடனே, அருகேயிருந்த மர நிழலை யடைந்து படுத்து விடுவார். திடீரென்று தூக்கத்திலிருந்து விழித்தெழுந்தார்; எழுந்ததும் கூத் தாடினர்; பாட்டுப் பாடினர்; மணலைக் குவியல் செய்து இங்குமங் கும் தாண்டினர். பித்துப் பிடித்தவர் போலச் சும்மா இருந்தார். மீண்டும் மீண்டும் பசி கொண்டவராகப் பிட்டு வாணியச்சியிடம் சென்று பிட்டு வாங்கி உண்டார். இடையிடையே கரையை அடைப்பதிலே அளவற்ற அக்கறை காட்டுபவர் போல நடித்தார். மண்ணைத் தொடுவதும், எடுப்பதும், கூடையில் போடுவதும், நடப்ப தும், இடறுவதும், மண்ணைக் கூடையோடு தண்ணீரில் போடுவதும், கூடையை நீந்தி எடுத்து வருவதுமாக என்னவெல்லாமோ கூலிக்குப் பொருந்தாச் செய்கைகளாகச் செய்துகொண்டிருந்தார். தண்ணீ ரிலே நீந்துவதை ஒரு பெருவிளையாட்டாகக் கொண்டார். பெரு மூச்சு விடுவார்; தள்ளாடி நின்று கலங்குவார். மடியிலுள்ள பிட் டைத் தானும் தின்று பிறருக்கும் ஈவார். அனைத்தையும் கடந்த பரம்பொருள் மிகவும் எளிமையாகி வந்த தன்மையிலே உலகத்துச்

சாதாரண மக்களோடு இயைந்து பழகும் கூலியாளாகத் திருவிளையாடல் செய்தருளினார்.

வேலை வாங்குவோர் பிரம்பும் கையுமாக அடைபட்ட கரைப் பகுதிகளைப் பார்த்துச் சென்றனர். கரையினைச் சரிபார்த்துக் கொண்டு வந்த ஏவலாளர்கள் வந்தியின் பங்கு இன்னமும் அடைபடாதிருப்பதைக் கண்டு கொண்டனர். மிகவும் கோபம் கொண்டு, "வந்தியின் கூலியாள் யார்?" என்று வினவினார். பின்னர் தெய்வக் கூலியாளைப் பார்த்து, "தம்பி! எல்லாப் பங்குகளும் அடைபட்டிருக்கின்றன. உன் பங்கு மட்டும் ஏன் இன்னும் அடைபடவில்லை? காரணம் என்ன?" என்று கேட்டனர். அதற்கு விடையாக ஆலவாய் அண்ணல் கருவத்துடன் ஏதும் பேசாமல் நின்றார். வெள்ளம் அடுத்த கரையை இடித்துத் தள்ளிச் சென்றது. அதைப் பார்த்தும் கூலியாள் ஏதும் செய்யவில்லை. ,கூலியாளின் கட்டழகிலே மயங்கிய பிரம்பாளர்கள் அடிக்கப் பயந்தனர். "இவன் என்ன பித்தனோ? எத்தனோ? சித்தனோ? இந்தப் பேரழகன் ஏன் கூலியாளாக வந்தான்? இவனது உடலைப் பார்க்கும்போது கூலிக்குழைப்பவன் அல்ல என்றே தெரிகிறது. வேலைக்கு முன்பே கூலி வேறு வாங்கி விட்டான்; வேலையும் செய்யக் காணோம். நம்மையும் மதிக்காமல் இருக்கிறான். இவனைப்பற்றி மன்னவரிடம் விண்ணப்பம் செய்வதே முறை", என்று எண்ணிப் போயினர். பாண்டியன் முன் சென்று பணிந்து நின்று, "வேந்தே! எல்லாரும் அவரவர் பங்குக் கரையுடைப்பை அடைத்து விட்டனர். வந்தியின் கூலியாள் மட்டும் இன்னமும் அடைக்கவில்லை. அழகிற் சிறந்த மேனியனான அந்தக் கூலியாள் ஒரு ராஜகுமாரனைப்போல் ஆடியும் பாடியும் ஓடியும் சாடியும் பொழுது போக்கிக் கொண்டிருக்கிறான். வேலையைப் பற்றிக் கொஞ்சமும் கவலை கொள்ளவில்லை, ஐயனே! சொக்கழகு கொண்ட அவனைக் கோலால் அடிக்க மனம் வரவில்லை", என்று செப்பினர்.

பாண்டியன் விரைந்து எழுந்தான். மந்திரிமார்கள் உடன்வர வையையின் கரையினை அடைந்தான். கரை சரியாக அடைபட்டு உயர்ந்திருக்கிறதா என்று பார்த்துக் கொண்டே வந்து மகிழ்ந்தான். பார்த்து வரும்போது இடையே வந்தியின் பங்கு அடைபடாமலிருப்பதையும் அடுத்த கரையையும் வெள்ளம் கரைத்து இடித்துச் செல்வதையும் கண்டான். கடுங்கோபம் கொண்டான் பாண்டியன். "இக் கரை யடைப்பவன் எங்கே?" என்று சீறினான். மன்னன் சினம் கண்டு பயந்த கோலாளர் பரம்பொருட் கூலியாளின் கைகளைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்தனர். "இவனே வந்தியின் கூலியாள்", என்று கூறி மன்னவன் முன்பு நிறுத்தினர். அரிமர்த்தன பாண்டியன் கூலியாளைக் கண்டு கோபித்தான். தனது பொற்பிரம்பைக் கையிலெடுத்து, அண்டபிண்ட சராசரங்களையும் சமஸ்த லோகங்களையும், ஸஜீவ நிர்ஜீவ வஸ்துக்களையும் தனது பெருந் திருமேனியாகக் கொண்ட இறைவனது முதுகிலே ஓங்கி அடித்தான். உடனே அனைத்துள்ளும் நிறைந்த சோமசுந்தரப் பெருமான் கூடை

யுடன் மண்ணைக் கரையுடைப்பிலே கொட்டிவிட்டு மறைந்தருளி ஞர்.

இறைவன் முதுகிலே பட்ட அடி எங்கும் பட்டது. பாண்டியன் முதுகிலே, மந்திரிமார் முதுகிலே, வீரர் முதுகிலே, ஏவலர் முதுகிலே, அரசியர் முதுகிலே, ராஜகுமாரர் முதுகிலேயெல்லாம் பட்டது. ஐம்பெரும் பூதங்கள் மேலும், ஈரேழு பதினலு வனங்கள் மீதும், பிரம்ம விஷ்ணு இந்திராதி தேவர்கள் மேலும் பட்டது. அடிபட்ட அனைத்தும் கலங்கின, மயங்கின, கூடற்பெருமானின் திருவிளை யாடல் நன்கு விளங்கியது.

திருமேனியிலே பிரம்படிபட்டதும் ஒரு கூடை மண்ணைக் கொட்டி, உடைப்பை நிரப்பிக் கரையைக் கட்டி உயர்த்திய பின் மறைந்தருளிய இறைவனது அரும்பான்மையைக் கண்ட மன்னனது கோலாளர் வந்திக் கிழவியிடம் சென்று, "வேந்தரிடம் வருக" என்று செப்பினர். அரசனது ஆணையாளர் சொல் கேட்ட கிழவி பயந்தாள். "பாண்டியனல் என்ன துன்பம் விளையுமோ?" என்று கவன்று சோமசுந்தரப் பெருமானை வேண்டித் துதித்தாள். அதே சமயத்தில் வானத்திலிருந்து சிவகனத்தவர் ஒரு விமானத்துடன் இறங்கி வந்தனர். "அம்மையீர்! வருக" என்று வந்தியாரை விமானத்தில் அமர்த்திக்கொண்டு சிவலோகம் சென்றனர். அப்போது தேவர் பூ மழை பொழிந்தனர், இன்னிசை முழங்கியது; வேத நாதம் ஒலித்தது.

நடந்தேறிய நிகழ்ச்சிகளை யெல்லாம் கண்டு வியந்து ஓர்ந்த அரிமர்த்தன பாண்டியன், மனத்திலே சந்தேகம் கொண்டு நின்ருன். அதுசமயம் 'மண் சுமந்த பொன்மேனி'ப் பிரான் வானத்திலே நின்று அனைவரும் கேட்கும் வண்ணம், "செங்கோற் பாண்டிய! உன் பொருள்களனைத்தும் அற வழியிலே தொகுக்கப்பட்டுத் தூய்மை யாக விளங்கியவை. அவையனைத்தும் நமக்கும் நம்முடைய மெய்யன் படியார்களுக்கும் திருவாதவூரன் பக்தியுடன் கொடுத்தான். அத் தன்மையை உணரமாட்டாத நீ அவனை மிகவும் துன்பப்படுத்திஞய். அதுகண்டு பொருத நாம் நரிகளைப் பரிகளாக்கிஞேம்; பரிகளை மீண்டும் நரிகளாக்கிஞேம். மறுதினம் வாதவூரனைக் கொடுமைப் படுத்திஞய். அது பொறுக்காத நாம் வையையிலே வெள்ளம் பெருகச் செய்தோம். வந்தியின் கூலிக்காரஞக வந்தோம்; பிட்டுண் டோம்; பிரம்படிபட்டோம். இவ்வளவும் நாம் செய்தது திருவாத ஊரன் பொருட்டாகத்தான். வாதவூர் வேதியன் தன்மையை நீ சற்றேனும் அறிந்து கொள்வதில்லை. அவன் எம்மிடம் பக்தி வைத்துச் செயல் புரிந்ததாலே உனக்கு இருமையின்பத்தையும் ஒருங்கே தேடிவைத்த பெருந்தகையாவான். அவன் எல்லாவகைப் பற்றையும் விட்டொழித்தவன். வாதவூரனை அவனது விருப்பத் தின்படிக்கே நடக்குமாறு விட்டு விடுக. நீயும் 'கனமதுர நீள் சௌக்ய சகல செல்வ யோகமிக்க பெருவாழ்வு' வாழ்ந்திருப்பாயாக", என்று இயம்பி யருளிஞர்.

விண்ணிலிருந்து வந்த தெய்வத் திருமொழி கேட்ட பாண்டியன் அரிமர்த்தனன் பயமும், ஆச்சரியமும், ஆனந்தமும் கொண்டான். "சோமசுந்தரப் பெருமானது மெய்யன்பரான வாதவூரர் எங்கே சென்றார்?" என்று பல இடங்களிலும் தானே தேடிச் சென்றான். இறுதியாக மதுரேசர் சன்னதியிலே சிவயோகத்திலே ஆழ்ந்திருந்த மாணிக்கவாசகப் பெருமானைக் கண்டான். அவரது அடிகளில் விழுந்து வணங்கினான். "பரம சிவ பக்தரே! எனது தாழ்ந்த அறிவின் காரணமாகத் தங்கள் திருமேனிக்குத் தீங்குகள் பல இழைத்தேன். தங்கள் பெருந் தகுதியையும் மிகவுயர்ந்த நிலையையும் அறியாது நான் செய்த பொல்லாங்குகளை யெல்லாம் பொறுத்தருள வேண்டும் புண்ணியனே!" என்று கூறி இரங்கி வேண்டி நின்றான்.

மாணிக்கவாசகப் பெருமானது மண்டபத்திலே அருட்சோதி தோன்றியது. புன்னகை பூத்தவாறு சிவ லீலா விபூதியை விளக்கி யருளினார் சிவானுபூதிச் செல்வராம் மணிவாசகர். பின்னர் சிவ பெருமானது மகாதேவ சதாசிவத் தன்மையை விளக்கிவிட்டு, "அவரது ஞானாகாசமாக விளங்கி நிற்கும் பொன்னம்பலமான தில்லையம்பதிக்கு வருமாறு அடியேனுக்கு ஆணையிட்டருளியுள்ளார். ஆதலால் அடியேன் அங்கே போகவேண்டும்; என்னை விடுவிப்பீராக", என்று அரிமர்த்தன பாண்டியனிடம் கூறிவிட்டுச் சோம சுந்தரப் பெருமானை வணங்கி விடைபெற்றுக் கொண்டு தில்லைத் திருப்பதி நோக்கிப் புறப்படலானார். பாண்டியனும் சிறிது தூரம் அவரைப் பின்தொடர்ந்து சென்றான். பின்னர் அவரது திருவடி தொழுது விடை பெற்றுத் திரும்பினான்.

அரிமர்த்தன பாண்டியன் திருக்கோவிலுக்குச் சென்று சோம சுந்தரப் பெருமானைத் தரிசித்து வணங்கி, தானும் அடிக்குமாறு முதுகு காட்டியருளி எழுந்தருளி வந்த தன்மையைப் போற்றிப் பரவினான். அன்று தொடங்கி பல வகைத் திருப்பணிகளையும், பூஜை, திருவிழாக்கள் ஆகியவற்றை மிகுந்த சிறப்புடன் செய்வித்து அன்பும் அருளும் இன்பமும் நிரம்பிய நல்லாட்சி புரிந்து வந்தான்.

அரிமர்த்தன பாண்டியன் அறநெறி பற்றிச் செங்கோல் ஓச்சு கின்ற நாளிலே அவனது தவப் பயனே போன்று சுகநாதன் என்ற நற்புதல்வனைப் பெற்று மகிழ்ந்தான். பின்னர் உரிய காலத்திலே தன் அருமருந்தன்ன திருக்குமாரனுக்கு பட்டாபிஷேகம் செய்து விட்டுச் சிவலோகம் சேர்ந்தான். ★

## 62. பாண்டியன் சுரம் தீர்த்தது.

அரிமர்த்தன பாண்டியனது குமாரன் சுகநாத பாண்டியனுக்குப் பின்னர் வீரபாகு தொடங்கி ஒன்பது பாண்டியர்கள் ஆலவாயை ஆண்டு சென்றனர். அவர்கள் வழி வந்த கூன் பாண்டியன் நாட்டை ஆண்டுவந்தான்.

நெடுமாறனான கூன்பாண்டியன் புஜபலபராக்கிரமத்தால் மிகவும் புகழ் பெற்று விளங்கினான். சேர சோழ வேந்தர்களைப் போரிலே வென்று முத்தமிழ் நாடுகளையும் ஒரு குடையின் கீழ் ஆண்டு வந்தான். சேரவேந்தன் பொன்மணிக் குவியல்களையும் அழகான பெண்டிர் குழாத்தையும் கொடுத்துத் தனது நாட்டை மீட்டுச் சென்றான். சோழவேந்தன் தனது எழில் மகளாகிய மங்கையர்க்கரசியைப் பாண்டிய வேந்தனுக்குத் திருமணம் செய்து கொடுத்துத் தன் வளநாட்டைத் திரும்பப் பெற்றான். மங்கையர்க்கரசிக்கு சீதனமாக ஏராளமான செல்வங்களையும், ஆடையாபரணங்களையும், நன்செய்களையும், சேடியர்களையும் வழுதி மகிழும் வண்ணம் கொடுத்தான். சிறந்த குணமுடையவரும் சாஸ்திர ஞானத்திலே சிறந்து விளங்கியவருமான குலச்சிறையார் என்பவரையும் உடன் அனுப்பித்தந்தான்.

கூன்பாண்டியன் குலச்சிறையாரைத் தனது பிரதம மந்திரியாக அமைத்துக்கொண்டு நாட்டைப் பரிபாலித்து வந்தான். முன் செய்த தீவினைப் பயன்போலும், பாண்டியனது உடலிலே கூன் இருந்ததுபோல உள்ளத்திலேயும் கூன் உண்டாயிற்று. வைதிக சைவ மார்க்கத்தைக் கைவிட்ட நெடுமாறன் சமணனாகிவிட்டான். 'மன்னன் எவ்வழி அவ்வழி மக்கள்' என்பது மெய்யாக பாண்டியன் ஆருகத மதம் சார்ந்ததும் பாண்டியநாடு முழுவதும் சமண இருளிலே மூழ்கியது. விபூதி சாதன மார்க்கமாகிய சைவ மதமும், மோட்சத்தை அடைவிக்கும் தவநெறியும் வேதவொழுக்கமும் குன்றி மறைந்து பட்டன. நாடு முழுவதும் பறிதலையும், பாயுடையும், பாசிப் பல்லும், உறிக் கமண்டலமும், மயிற்பீலியும் 'அத்தி நாத்தி' மந்திரமும் மலிந்தன. மூதேவியை நிகர்த்த சமணம் எங்கும் பரவித் தங்கியது.

கூன் பாண்டியனது மனைவியான, கற்பிற்சிறந்த மங்கையர்க்கரசியும், குணம் சிறந்த மந்திரி குலச்சிறையாரும் மனம் புழுங்கினர். சிவபெருமானது திருவடிகளையே தியானம் செய்து வந்தனர்.

மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் பெருங் கவலை கொண்டு, திருக்கோவில் சேர்ந்து, சோமசுந்தரப் பெருமான் திருமுன் வணங்கி நின்று, "எம்பெருமானே! பாண்டி நன்னாட்டிலே சமணக் களை மண்டிக் காடாகிவிட்டது. மீண்டும் வேதமார்க்கம் தழைக்கச் செய்ய அருள்புரிபவர் யாரோ? கடவுளே! கொடிய சமண வலையிலே அகப்பட்டுழலும் அறிவிழந்த மன்னனுக்கு நல்லறிவு ஈந்து நன்னெறியில் திருப்பியருள வேண்டும்", என்று முறை செய்து வேண்டினர்.

அதுசமயம் தில்லைப் பகுதியிலிருந்து க்ஷேத்திராடனம் செய்து கொண்டு வந்த அந்தணன் ஒருவன் சோமசுந்தரப் பெருமானைத் தரிசிக்கும் பொருட்டு அங்கே வந்து சேர்ந்தான். பாண்டியன் தேவியும் மந்திரியாரும் அவ்வந்தணனைக் கண்டு, "மறையவரே! எங்

இருந்து வருகிறீர்?'' என்று வினவினர். ''சோழவேந்தன் அரசோச்சும் காவிரி நாட்டிலிருந்து வருகிறேன்'', என்றான். ''ஏதேனும் விசேஷம் உண்டோ?'' என்று வினவினர் இருவரும். சிவநேசனை அவ்வேதியன், ''விசேஷம் உண்டு! உண்டு! சீகாழிப் பதியிலே அந்தணர் குலத் தோன்றலான சிவ பாதஹிருதயருக்கும் அவர் தம் இல்லாள் பகவதியம்மையாருக்கும் தவப்பயனாக ஒரு புதல்வர் அவதாரம் செய்தார். மூன்றாம் வயதிலே ரிஷபாரூடரான சிவபெருமானைத் தரிசித்து உமையம்மையாரின் கையாலே ஞானப்பால் வாங்கியுண்டார். ஆதலால், இளம் வயதிலேயே சிவஞானம் கைவரப் பெற்றார். சிவஞானத்துடன் சம்பந்தம் கொண்டதாலே திருஞானசம்பந்தர் என்ற திருநாமம் பெற்று விளங்குகிறார். சத்தியசொரூபரான ஞான சரஸ்வதியருளால் அருமறைகளை யெல்லாம் அவர் அருந்தமிழ்ப் பாடலாக இசைத்தருளுகிறார். வேத விழுப்பொருளை வடித்தெடுத்து சிவமணம் கமழும் தெய்வத் தமிழ்ப் பாடல்களாக சிவக்ஷேத்திரங்கள் தோறும் சென்று சென்று பாடிப் பாடிப் பெருமானுக்கு பதிக மாலைசூட்டி விளங்குகிறார். மேலும் அவர் சிவபெருமான் திருவருளால் பொற்றாளம், முத்துச் சிவிகை, திருச்சின்னம், முத்துப்பந்தல் முதலானவை பெற்றுள்ளார். திருவீழிமிழலைப் பதியில் படிக்காசு பெற்றார். திருமறைக் காட்டிலே வேதங்கள் வழிபாடு செய்த திருக்கோவில் கதவு அடைபடுமாறு பாடியருளினார். பற்பல அற்புதங்கள் நிகழ்த்திச் சிவப்பதிகளிலே சென்று திருப்பதிகங்கள் பாடி வரும் ஆளுடைப் பிள்ளை சோமசுந்தரப் பெருமானைத் தரிசிக்கும் பொருட்டு உங்கள் பாண்டிய நாட்டுக்கும் வருவார்'', என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினான்.

அந்தணன் மொழிந்தவற்றைக்கேட்ட பாண்டிமாதேவியாரும் மந்திரியாரும் அப்போதே சிவானந்தத்திலே மூழ்கினர். உடனே சீகாழிப்பதிவாழ் திருஞான சம்பந்தருக்கு விண்ணப்ப ஓலையொன்று எழுதி அவ்வந்தணன் கையிலேயே கொடுத்தனுப்பினார்கள். பின்னர் அரசியாரும் அமைச்சரும் சிவபெருமானை வணங்கி அரண்மனை சென்றனர்.

விரைந்து சென்ற அந்தணன் திருஞானசம்பந்தரை வேதாரண்ய க்ஷேத்திரத்திலே கண்டு வணங்கி. ஆலவாய்ப்பதியிலிருந்து தான் பெற்றுவந்த ஓலையைக் காட்டினான். சீகாழிப் பிள்ளையார் ஆலவாய்க்கு எழுந்தருளி சமண இருள் போக்கி பாண்டியமன்னவனுக்கு விபூதி தந்து நாட்டினையே திருநீற்றொளியில் விளங்கச் செய்யவேண்டுமென அதிலே கண்டிருந்தது.

திருஞானசம்பந்தர் பாண்டிய நாட்டிற்குப் புறப்பட எழுந்தருளினார். அது சமயம் அருகேயிருந்த திருநாவுக்கரசர் அவரைப் பார்த்து, ''ஆஹா! இது முறையில்லை. நீர் குழந்தை. சமணர்கள் பழிபாவத்துக்குப் பயப்படாதவர்கள். அங்கே போகவேண்டாம்,

"உமக்கு இப்போது நாளும் கோளும் சரியாயில்லை" என்று கூறித் தடுத்தார். அதனைக் கேட்ட திருஞானசம்பந்தர் "இறைவன் திருவருளால் சமணர் தந்த கொடுந்துன்பங்களனைத்தையும் தப்பி வந்த அன்பார்ந்த அப்பரே! நாளும் கோளும் சிவபெருமானின் ஆணைவழி நடப்பன. எம்பெருமான் திருவருள் காக்கும்" என்று மொழிந்து "கோளாறு திருப்பதிகம்" பாடிப் புறப்பட்டார்.

முத்துப் பந்தலின் கீழ் முத்துச்சிவிகையின் மேலே ஏறிச் சென்ருர். செல்லும் வழிகளிலுள்ள சிவஸ்தலங்களையெல்லாம் தரிசித்துத் தேவாரத் திருப்பதிகங்கள் பாடிய வண்ணம் சோழநாடு தாண்டிப் பாண்டி நாட்டினை அடைந்தார். ஆலவாயம்பதியை நெருங்கி வந்துகொண்டிருந்தார். திருஞானசம்பந்தரின் முன்னே செல்லும் பரிவாரங்களில் திருச்சின்னம் ஓதுவோர், "பரசமய கோளரி வந்தான்; சமணவிருள் கெட உதித்த ஞான பானு வந்தான்" என்று பன்முறை கூறிச் சென்றனர். அந்த ஆரவாரத்தைக் கேட்ட சமணர்கள் நேரிலே வந்தார்கள். "உங்கள் கடவுளைக் கும்பிட வந்தால் வெற்றிச் சின்னம் எதற்கு?" வீண் கர்வம் எதற்கு? நீங்கள் எந்தச் சமயத்தார்களை வெற்றிகொண்டீர்?" என்று சொல்லிச் சிவனடியார்களைத் தடுத்தனர். சீகாழிப் பிள்ளையார் அந்தச் சிறு தடையை எளிதிலே விலக்கிவிட்டு ஆலவாய்த் திருநகரை அடைந்து சோமசுந்தரப் பெருமானின் திருக்கோவில் புகுந்தார். அம்மையப்பரைத் தரிசித்து உடல் குளிர உளம் குளிரப் பன்முறை வலம் வந்தார். சிவானந்தலகரியிலே அழுந்தியவராகி, "மமனைக் காய்ந்துதைந்த தேவனே! அடியேன் சமணர்களோடு வாது செய்ய வலிமை பெறுமாறு திருவருள் பாலிக்க வேண்டும்" என்று திருப்பதிகம் பாடி வேண்டிக் கொண்டார்.

திருவருள் பெற்றுத் திருக்கோவிலிலிருந்து வெளிவந்த திருஞானசம்பந்தப் பிள்ளையாரை வாசிக முனிவர் என்ற தவப்பெரியார் எதிர்கொண்டு தமது திருமடத்திலே எழுந்தருளுமாறு வேண்டிக்கொண்டார் ஞானசம்பந்தரும் அதற்கு உடன்பாடு தெரிவித்து அம் மடத்திலே தங்கினுர். பகற்பொழுதிலே திருவமுது செய்தருளினுர். அன்றிரவு சைவ சமயத்திடம் பகைமை பூண்ட சமணர்கள் தீய காரியம் செய்தனர். அபிசார ஹோமம் செய்து அக்னிதேவனை அழைத்து, "எங்கள் பகைவன் தங்கியிருக்குமிடத்தை உண்டு வருக", என்று ஏவினர். ஆனுல், அக்னிதேவன் அஞ்சி நின்ருன்! ஆகவே, சமணர்களே தங்கள் கையில் தீ எடுத்துச் சென்று வாகீச மடத்திலே வைத்தனர். நெருப்பு பற்றியது. புகைந்து எழுந்தது. அதுகண்ட சிவனடியார்கள் திருஞானசம்பந்தரிடம் சென்று தெரிவித்தனர். பிள்ளையார் வெந்தீயை நோக்கினுர். "அக்கினியே! சமணர்களது பொய் மொழியை ஏற்றுக்கொண்டு சத்தியவேத மார்க்கத்தைக் கைவிட்ட கூன்பாண்டியனைச் சென்று பற்றுக", என்று பணித்தருளிச் சோமசுந்தரப் பெருமான் மீது பதிகம் பாடி விடுத்தார்.

தீ உடனே மடத்தை விட்டகன்றது. கூன் பாண்டியனைச் சேர்ந்து சுர நோயாகப் பற்றியது. சுர நோயின் வெப்பத்தால் பாண்டியன் அணிந்த கலன்கள் பொரிந்து துகள் பட்டன, மாலை தீய்ந்தது, படுக்கை சருகாகி விட்டது, பாண்டியன் பதைபதைத்துப் போனான். தலைவன் நிலைகண்ட பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறையாரும் பெரிதும் மனம் தளர்ந்தனர். மருத்துவ நூல் வல்லவரை அழைத்துச் சிறந்த மருந்துகளாகக் கொடுக்கச் செய்தனர். மணிமந்திரம், ஔஷதம் எதிலுமே கட்டுப் படவில்லை. கடுஞ்சுரம் வரவர வளர்ந்து கொண்டேயிருந்தது. பிறகு சமணர்களை அழைத்துக் கொண்டு வந்தனர். அவர்களும் தங்கள் தபோபலத்தைக் கொண்டும், மருந்துகளைக் கொண்டும் சிகிச்சை செய்து பார்த்தனர். பாண்டியனது வெப்ப நோய் கொஞ்சமும் தணிந்தபாடில்லை. அன்றிரவு கழிந்தது. மறுநாள் விடிந்தது.

மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் பாண்டியனை நோக்கி, "காலபாசம் போன்ற இச் சுடுநோய் திருஞான சம்பந்தரால் தீருமேயல்லாது வேறு எவராலும் தீராது", என்றனர். சமணச் சார்புடைய வேந்தனோ, "நீங்கள் சொல்லும் சைவர் திருநீறணிந்து என்னைக் காணல் அடுக்குமா?" என்று வினவினான். "தலைவரே! எப்படியாவது நோய் தீர்ந்து தாங்கள் உய்யவேண்டுமல்லவா?" என்று அவர்கள் சொன்னதும், "நல்லது. அவரை இங்கே வரவழையுங்கள்" என்று சம்மதம் தெரிவித்தான்.

பாண்டியன் சம்மதம் தெரிந்த அமைச்சர் குலச்சிறையார் எல்லையற்ற உவகை கொண்டார். ஆலவாய் நகரைத் திருவிழா நகரமெனத் தோன்றச் செய்தார். மங்கலச் செயல்கள் மாநகரெங்கும் மலிந்தன. பிறகு குலச்சிறையார் பிள்ளையார் எழுந்தருளியிருந்து விளங்கிய திருமடம் சேர்ந்து ஞானமிர்தத்தைக் கண்டு மகிழ்ந்தார். பாண்டிமாதேவியாரும் வணங்கி ஒருபுறம் நின்றிருந்தார். குசலப் பிரச்னங்கள் முறையே ஆனபின்பு அமைச்சரும் அரசியாரும் சேர்ந்து, "இன்றைய தினம் உங்களது திருவருளினால் சமணர்கள் அழியுமாறும், பாண்டியநாடு திருநீற்றால் உய்யுமாறும் மன்னவன் உடலிலே கொடிய சுரம் கண்டுள்ளது. அந்த வெப்பு நோயை நீர் தாம் தீர்த்தருளவேண்டும்", என்று திருவடி பணிந்து வேண்டினர். திருஞான சம்பந்தரும் அங்ஙனமே செய்ய வாக்குத் தந்தார். தமது முத்துச் சிவிகையின் மேல் ஆரோகணித்து மாறனின் திருமாளிகைக்குச் செல்வாரானார். வாசல்கள் தோறும் தூபம், மங்கல விளக்கு, பூரணகும்பங்கள் முதலியன வைக்கப்பட்டிருந்தன. இன்னிசை முழங்கக் காழிப் பிள்ளையார் பாண்டியன் முன்பு சென்று ஒரு ரத்தினாசனத்தின் மேல் அமர்ந்தார். கூன்பாண்டியன் திருஞான சம்பந்தரைப் பார்த்தான். காழிப்பிள்ளையாரது திருப்பார்வை பட்டதாலே பாண்டியமன்னன் சற்றே தெளிவு பெற்றான். "இந்தப் பாவியினுடைய பிணிபோக்கி ஆட்கொண்டருள்க", என்று வேண்டிக் கொண்டான்.

பிள்ளையைப் பார்த்துப் பாண்டியன் மொழிந்ததைக் கேட்ட அருகிருந்த சமணர்கள், "கலை வல்லோனே! தங்களது வலப்பக்கத்து நோயை இவரும், இடப்பக்கத்து நோயை நாங்களும் தீர்க்கும்படியாக ஆணையிடுவாயாக", என்று சொல்லினர். வேந்தன் சம்மதம் தருவதற்கு முன்னதாகவே தங்கள் மயிற்பீலிகளைக் கையிலெடுத்துக்கொண்டு அருக மந்திரம் சொல்லி இடப்புறத்தைத் தடவத் தொடங்கினர். கமண்டல நீரைத் தெளித்தனர். ஆனால், நோய் பல மடங்கு பெருகியது. சமணர்கள் கருவம் ஒடுங்கியது. வெட்கமடைந்து வறிதே இருந்தனர். திருஞான சம்பந்தர் மாறனது வெங்நோய் தீர்க்கும் பொருட்டாகத் தமது பையிலிருந்த திருநீற்றைக் கையில் எடுத்தார். அவர் எடுக்கும்போதே சமணர்கள், "மாய நீறு இது" என்று கூறி மறுத்தனர். உடனே காழிப் பிள்ளையும் அதைப் போட்டுவிட்டு, "ஆலவாய் அண்ணலின் திருமடைப் பள்ளியில் உள்ள சாம்பலை அள்ளி எடுத்துக் கொண்டு வாருங்கள்" என்று மொழிந்தார். வேந்தனது ஏவலர் உடனே சென்று அள்ளிக் கொண்டு வந்தனர். அதனைத் தன் கையிலே பெற்று, "மந்திரமாவது நீறு, வானவர் மேலது நீறு" என்று தொடங்கும் திருநீற்றுத் திருப்பதிகம் இயம்பி கூன் பாண்டியனது வலப்பக்கத்திலே திருவாலவாயன் திருநீறென அதனைத் தடவினார். வலப்பக்கத்து வெங்நோய் ஓடி மறைந்தது. பனி நீர் குழைத்த சந்தனம் பூசியது போன்ற குளிர்ச்சி கண்டது.

ஒருபுறம் தன்மை கண்ட பாண்டியன் மிக மகிழ்ந்தான். காழியர் பிள்ளையைப் பார்த்து, "பெரியோனே! இந்தச் சுரம் பொறுக்க முடியாதது! பொறுக்கமுடியாதது! சமணர் சார்பான குற்றத்திலிருந்து நீங்கி எளியேன் உய்தி பெற வேண்டுமானால் இடப்பக்கத்து நோயையும் தாங்களே நீக்கியருள வேண்டும்", என்று மிகவும் இரங்கி வேண்டிக்கொண்டான்.

திருஞான சம்பந்தரும் சோமசுந்தரப் பெருமானை உளத்திருத்தி விபூதியை எடுத்துத் தமது திருக்கையால் இடப்பாகத்திலேயும் பரிவுடன் தடவிக்கொடுத்தார். உடனே பாண்டியனது நோய் தீர்ந்ததோடு கூனும் நிமிர்ந்தது. கொடுமை நீங்கிய உடல் பெற்ற பாண்டியன் புதுமெருகு பெற்றவனாகத் துலங்கினான். அதனால், முன்பு கூன்பாண்டியனாக அவலமெய்தியவன், சௌந்தர்ய பாண்டியன் எனும் பெயர் பெற்றான்.

திருஞான சம்பந்தருடைய கடாட்சத்தாலும், ஸ்பர்சத்தாலும் திரு மொழிகளாலும் நன்கு தெளிவு பெற்ற பாண்டிய மன்னன் அவரது தளிரடிகளிலே வீழ்ந்தான். அவரிடமிருந்து பஞ்சாக்ஷர மகா மந்திரத்தை உபதேசமாகப் பெற்றான். திருவிளக்கம் பெற்றதாலே சமண நெறியை விடுத்தான். பழைய வைதிகச் சைவ நெறியைப் பற்றிப் புண்ணியசீலனானான். ☆

# 63. சமணரைக் கழு ஏற்றியது

சௌந்தர்ய பாண்டிமாதேவியான மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச்சிறையாரும் திருஞான சம்பந்தரின் சேவடி வணங்கினர். "எமது வேந்தனது கடுஞ்சுரத்தையும் கூனையும் ஒருங்கே போக்கியருளினீர்! மற்றுமொரு பெருங்குறை உள்ளது. அதையும் போக்கி யருளவேண்டும். பாண்டியநாடு முழுவதும் சமணக்காடு மண்டி வளர்ந்துள்ளது. அதனையும் வெட்டிக் களைந்தருளவேண்டும்" என்று பணிந்து வேண்டினர்.

"திருவாலவாயுடையாரது திருவுள்ளக்குறிப்பை அறிந்துகொள்வோம்" என்று மொழிந்து பாண்டிமாதேவியாரோடும் குலச்சிறையாரோடும் திருக்கோவிலை அடைந்தார். பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடிவிட்டுச் சோமசுந்தரப் பெருமானைத் தரிசித்துத் தாழ்ந்து வணங்கினர். "ஆலவாய்ச் சொக்கநாதா! உடலை வருத்திக்கொண்டு, வஞ்சகம் பெருகத் தவம் புரிந்துகொண்டு திரிகின்றார்கள் சமணர்கள். இம்மை மறுமைப் பயன்களையும், சதுர் வேதங்களையும், வேள்விகளையும் நிந்தனை செய்துழலுகின்றனர் சமணர்கள். அவர்களைத் தண்டிக்க எம்பெருமான் திருவுளம் புரிதல் வேண்டும்" என்று பரிவுடன் வேண்டிக்கொண்டார். உடனே சோமசுந்தரப்பெருமானும் ஆகாசவாணியாக, "அன்புடையீர்! உங்கள் கருத்துக்கு யாம் உடன்பாடு கொண்டுள்ளோம். நீங்களே வெற்றி பெறுவீர்கள். சமணர்கள் தோல்விபெறத் தகுந்தவர். ஆகையால், நீங்கள் பாண்டியன் சபையை அடைந்து சமணர்களை அழைத்து வாதம் புரியுங்கள். அவர்கள் தோல்வியடைவார்கள்; அதன் விளைவாக கழுவில் ஏறி இறந்து விடுவார்கள்" என்று மொழிந்தருளினார். அதனைக் கேட்ட திருஞான சம்பந்தர் தமது திருமடத்திற்கு எழுந்தருளினார். மங்கையர்க்கரசியாரும் மந்திரியாரும் தங்கள் தங்கள் மனை சேர்ந்தனர்.

மறுதினம் விடிந்ததும் பாண்டிமாதேவியாரும் பேரமைச்சரும் திருமடம் சேர்ந்து சமணரை வெல்வதற்கான வழிதுறைகளை ஆராய்வாராயினர். பின்பு திருஞான சம்பந்தரை வணங்கி அவரைப் பாண்டியன் சபைக்கு அழைத்துச் சென்றனர். பின்னர் வேந்தனை நோக்கிப் பணிந்து, "செங்கோல் வேந்தே! நமது பாண்டியநாடு முழுவதும் கறுத்த சமணக்காடு மண்டி வளர்ந்துள்ளது; அந்தக் காட்டு மரங்களை வேரோடு தூரோடு களைந்தெறிந்து திருத்த வேண்டும். அப்போதுதான் சைவப் பயிர் தழைத்தோங்கி வளரும்" என்று கூறினர். அதைக் கேட்ட அரசனும் அனுமதி வழங்கினான். "பாண்டிய நாடு உய்யவேண்டிய உரிய காலம் இதுவே" என்று சோமசுந்தரப் பெருமான் திருவருளைச் சிந்தித்தவாறு ஆங்கே இருந்தருளினார் சம்பந்தர்.

சமணர்கள் தங்கள் இல்லத்திலே இடியுண்டனர். அவர்களுடைய மனைவியரும் மக்களும் கோபத்துடனே நோக்கி, "பாண்டியனது சுரத்தைப் போக்க ஆற்றமாட்டாது ஒரு சிறு பிள்ளையிடம்

தோற்றுப்போனீர்களே! அதனாலே அருகக் கடவுளடியார் அனைவருக்குமே பழியை உண்டாக்கிவிட்டீர்களே! பாண்டியனும் சாம்பற் பூச்சுச் சமயத்திலே சேர்ந்துகொண்டு பாம்பணிக் கடவுளைப் பணியத் தொடங்கிவிட்டான். சமண சமயத்தை அவமதித்து கைவிட்டான்'' என்று இடித்துரைத்தனர். அவர்கள் சொல்லியதையும் கேட்டுக் கொண்டு சமணர்கள் சீகாழிப் பிள்ளையுடன் வாதம் செய்யக் கிளம்பினர். அவர்களது மனைவிமார்களோ ''நீங்கள் ஏற்கனவே பெற்ற வெற்றி போதும், போகவேண்டாம்'' என்று தடுத்துப்பார்த்தனர். தாங்கள் கண்ட தீக்கனவைப் பற்றிச் சொன்னார்கள். என்னவெல்லாமோ சொல்லித் தடுத்து நிறுத்தப் பார்த்தனர். மீறிச் சென்ற கணவன்மார்களைச் சபித்தும் பார்த்தனர். அழிவுக் காலத்தை நெருங்கிய சமணர்கள் எதையுமே பொருட்படுத்தாது துணிந்து சென்றனர். இடையிலே எத்தனையோ பொல்லாச் சகுனங்கள் தோன்றி மறைந்தன. எதையும் அலட்சியம் செய்த சமணர்கள் நகர்ப்புறத்திலே சென்று ஓரிடத்தில் கூடினர். வெல்லும் வழி பற்றிச் சிந்தித்தனர். ''பாண்டிய மன்னனைக் கண்டு சொல்லி அவனது உத்தரவு பெற்றுப் பகைவனை வாதினால் வெல்வோம்'' என்று தமக்குள் முடிவுசெய்து கொண்டனர். பின்னர் ராஜசபையை நோக்கிச் செல்வராயினர். அதுசமயம் திருஞானசம்பந்தரும் சோமசுந்தரப்பெருமானைத் தரிசித்து வணங்கிவிட்டுத் திருமடம் வந்து கொண்டிருந்தார். சமணர்கள் அவரை இடைமறித்து நிறுத்தித் திருப்பினர். சமணர்கள் பின்தொடர சீகாழிப் பிள்ளையார் பாண்டிய சபையை அடைந்தார்.

பாண்டியன் காட்டிய அரியணை மீதேறி பாலசூரியனைப் போல் அருளொளி வீசிய வண்ணம் அமர்ந்தார்.

சிறந்த ராஜ மரியாதை பெற்ற திருஞான சம்பந்தரைக் கண்ட சமணர்களுக்குப் பொறுக்கமுடியவில்லை. ஆதலால் பிள்ளையாரை நோக்கி, அவரையும் ஒரு சிறு பிள்ளையாகவே மதித்து, ''மழலை மொழி மாறாப் பாலகனே! காக்கையேறப் பனம் பழம் விழுந்தது போலத்தான் உன் கதை. நீ அவ்வளவுக்கு மந்திரசக்தி படைத்தவனா? நீ கர்வம் கொள்ளவேண்டாம். நீ சிந்திய சாம்பலும் சொன்ன சிறு சொற்களும் மருந்தும் மந்திரமுமாக ஆகுமோ? என்னவோ பாண்டியன் நோய் தீர்ந்துவிட்டது. ஆதலால் உங்களது மந்திரத்தை ஒரு பனை ஓலையிலே எழுதுங்கள். மற்றொரு பனை ஓலையிலே எமது மந்திரத்தை எழுதுகிறோம். இந்த இரண்டு ஏடுகளையும் நெருப்பிலே போடுவோம். வெந்த ஏடு தோல்வியுற்றது. என்றும் வேகாத ஏடு வெற்றியுற்றது என்றும் முடிவு கொள்வோம். இந்த வாதத்தை சிவபதிகளில் செய்யலாகாது; ஏனெனில், அவனும் நடுநிலை தவறி எமக்குக் கேடு செய்யலாம்; ஆதலால், ஊர்ப்புறத்தே சென்று வாதம் செய்வோம்'' என்று சொல்லி வாதுக்கு அழைத்தார்கள். திருஞான சம்பந்தரும் சௌந்தர்ய பாண்டியனும் ஒப்புக் கொண்டனர்.

சமணர்கள் முன்னே சென்றனர். மதுரைக்குக் கிழக்கே சென்று ஒரு பெரிய குழி வெட்டித் தீ மூட்டினர். தீ மூட்டிக்கொண்டே திருஞானசம்பந்தரை இழித்துப் பேசிக்கொண்டிருந்தனர். அப்போது சிவனடியார் பதினாறாயிரம் பேர்கள் சூழ்ந்து வர சிவஞானமுண்ட பிள்ளையும் அங்கே வந்து எழுந்தருளினார். மாறனும், பாண்டிமா தேவியும் பிரதம மந்திரியும் அவர் பின்னே சென்றனர்.

தாங்கள் முயன்று பயின்ற பல்வேறு மந்திரங்களையெல்லாம் பச்சையேடுகளிலே எழுதி ஒருங்கே சென்று அவற்றையெல்லாம் தீயில் இட்டார்கள் சமணர்கள் எட்டாயிரம் பேர்களும். அந்த ஏடுகள் எல்லாம் தீப்பற்றி எரிந்து சாம்பலாகி ஒழிந்தன. அதுகண்ட சமணர்கள் மனம் புழுங்கினர். சுற்றியிருந்தோர் சிரித்தனர்.

திருஞான சம்பந்தர் தாம் பாடியருளிய தமிழ் மறைத் திருமுறைச் சுவடியை எடுத்துக் கயிறு இட்டுப் பார்த்தார். தாம் அன்று அருந்துமாறு சிவஞானப்பால் அருளிய உமையம்மையின் திருநாமம் உடைய "போகமார்ந்த பூண் முலையாள்" என்ற பாடல் ஏடு கிடைத்தது. அதனையே எடுத்துத் தீயில் இட்டார். அத் திருத்தேவார ஏடு தீயினிடையிலே பசுமையாகவே இருந்தது. மாறனும், தேவியாரும், மந்திரியாரும் அங்கு கூடியிருந்த ஏனையோரும் வியந்து மகிழ்ந்தனர். திருஞான சம்பந்தரைப் புகழ்ந்து பாராட்டி அளவிலாத இன்பமடைந்தனர். பின்னர் பிள்ளையாரும் தாம் நெருப்பில் விட்ட ஏட்டினைத் திரும்ப எடுத்துத் தமது சுவடியிலே வைத்துக் கட்டியவாறே பாண்டியனைப் பார்த்தார்.

சமணர்கள் சத்தியத்தையும் நாணத்தையும் ஒருங்கே கைவிட்டனர். அங்கு குழுமியிருந்தோர் சிரித்ததனால் அவர்களுக்குப் பொறுமை இழந்து பட்டது. பேராரவாரம் செய்துகொண்டு மறுபடியும் காழிப் பிள்ளையாரைப் பார்த்து, "எங்கள் மந்திரம் எழுதப் பட்ட எட்டாயிரம் பச்சை ஏடுகளும் எரிந்து சாம்பலாகியிருக்கும் போது உமது ஏடு மட்டும் எரிந்து விடாமல் அப்படியே இருந்தது. நீர் அக்கினியைக் கட்டி ஏதோ மாயம் செய்துவிட்டீர். ஆதலால் உமது ஏட்டையும் எங்கள் ஏடுகளையும் வையை நதியின் நீரிலே இடுவோம். எவர் ஏடு எதிர்த்துச் செல்கிறதோ அவர் வெற்றி பெற்றவராவார். வெற்றி பெற்றவருக்கு தோல்வி கண்டவர் என்றென்றும் குற்றேவல் புரிந்துகொண்டிருக்கவேண்டும்" என்று கூறினார்கள். அதைக் கேட்ட திருஞானசம்பந்தர், "குற்றேவல் செய்யும் அடியார்கள் நமக்குப் பதினாயிரம் பேர்கள் உள்ளனர்; அவர்களே போதுமானவர். சிவபெருமானை இகழ்ந்த கொடியவர்களாகையால் உங்களுக்குத் தகுந்த தண்டனை இதுவல்ல. சிவபெருமான் திருவருளால் யாம் வெற்றியடைந்தோமானால் உங்களையெல்லாம் கழுவில் ஏற்றுவோம்" என்று கூறினார். சமணர்கள் அதற்கு ஒப்புக் கொண்டனர்.

அதனையறிந்த அமைச்சர் குலச்சிறையார் பல தச்சர்களை வரவழைத்து நீண்ட மரங்களில் சூல வடிவமான கழுக்களைச் செய்து

அவற்றையெல்லாம் கொணர்ந்து மன்னவன் முன் வைத்தார். சீகாழிப் பெருமான் சமணர்களைப் பார்த்து, "இப்பொழுதாயினும் நீங்கள் வாதம் புரிவதை விட்டுவிடுங்கள். விபூதி ருத்ராக்ஷம் அணிந்து பஞ்சாக்ஷரத்தை ஓதி பாசம் ஒழிந்து உய்யுமாறு காணுங்கள்" என்று நன்னெறி நவின்றருளினார்.

அதைக் கேட்ட சமணர்கள் எரிகின்ற நெருப்பைப் போலப் பொங்கி எழுந்தனர். "அனல் வாதத்திலே ஏதோ நீர் வெற்றியடைந்ததாலே புனல் வாதத்திலேயும் வென்றுவிட முடியும் என்ற எண்ணமோ? இந்த வாதத்திலிருந்து தப்பிச் செல்ல விரும்பி இவ்வாறு எம்மிடம் பரிவு காட்டுபவர் போல இணங்கிப் பேசுகிறீர் போலும்! எங்களோடு வாதம் செய்யத் துணிவில்லையே? வாதம் புரிய வாரும்" என்று கடுமொழி கூறினார்கள்.

வேகவதியாகச் செல்லும் வையையாற்று நீர்ப்பெருக்கைத் தமது மந்திர சக்தியால் மட்டுப்படுத்தினர் சமணர்கள். தங்கள் தங்கள் ஏடுகளை முன்போலவே மந்திரங்கள் எழுதி ஆற்று நீரிலே போட்டனர். திருஞானசம்பந்தரும், "வேதங்கள் மொழிவது சத்தியவாணியானால், வேதங்கள் துணிந்து இயம்பும் சத்தியவஸ்து சிவபெருமானே என்பது உண்மையானால், இந்த ஏடு ஆற்று நீர்ப்பெருக்கை எதிர்த்துச் செல்க" என்று இயம்பி "வாழ்க அந்தணர்" என்ற திருப்பாடலை ஏட்டிலே எழுதி நீரில் இட்டார். சோமசுந்தரப் பெருமானது திருவருளாலே இழுக்கப்பெற்ற திருஞானசம்பந்த ஏடு ஆற்று நீரை எதிர்த்துச் சென்றது! சமணர் எண்ணாயிரவர் விடுத்த ஏடுகள் எல்லாம் ஆற்று நீரோடு போயின. பரசமய கோளரி திருஞானசம்பந்தர் விடுத்த ஏடு ஆற்றுப் போக்கை எதிர்த்து ஏறக் கண்ட தேவர்கள் பூமழை பொழிந்தனர். சிவனடியார்கள் ஆரவாரம் செய்து மகிழ்ச்சி தெரிவித்தனர். தோல்வியே கண்ட சமணர்கள் உடல் வியர்த்து நடுநடுங்கி வெட்கமடைந்து நின்றனர்.

'சிவபெருமானே தேவர்கள் அனைவருக்கும் போகத்தையும் மோக்ஷத்தையும் தந்தருளவல்ல முழுமுதல்' என்ற நித்தியமான சத்தியத்தை அனல்வாத மூலமாகவும், புனல்வாத மூலமாகவும் குருமுக உபதேசம் நிகர்த்து மிகத் தெளிவாகப் பாண்டியன் உணர்ந்தான். சௌந்தர்ய பாண்டியனும், மாதேவி மங்கையர்க்கரசியாரும், மந்திரி குலச்சிறையார் மற்றுமுள்ள சிவனடியார்களும் திருஞான சம்பந்தரை வணங்கித் துதித்தனர்.

சமணர்களில் சிலர் தங்கள் மானத்தை இழந்தவர்களாகி காழிப் பிள்ளையார் திருமுன் வந்து "யாம் தோற்றோம், நீர் ஜயம் பெற்றீர்!" என்று ஒப்புத் தெரிவித்தன . உடனே திருஞான சம்பந்தர் அங்கு தோல்வி கண்டு நின்ற அத்தனை சமணர்களையும் விளித்து, "சிவபெருமான் ஜீவராசிகளுக்கெல்லாம் தாய் போன்றவன்; அவனுக்கு ஆளாகி உய்யுங்கள்! ஏன் வீணே சாகின்றீர்கள்" என்று மொழிந்

தருளினார். மானம் பொறுக்கமாட்டாத சில சமணர்கள் சினந்து, "சிறுவனே! நீ கூறுவது தகாத மொழி." என்று சொல்லிவிட்டுத் தாங்களாகவே கழுவிலே ஏறத் தொடங்கினார்கள். சமயப்பற்றுக் கொண்ட சமணர்கள் தாமே வலுவில் வந்து கழுமரம் ஏறினர். ஏறாத சமணர்களைச் சைவக்கோலம் புனைந்தவர் துன்புறுத்தி ஏற்றி வைத்தனர். சாவுக்கு அஞ்சியவர் விபூதி பூசிக்கொண்டனர்.

பாண்டிய வேந்தன் திருஞானசம்பந்தரை வணங்கி நின்றான். "தேவரீர்! ஆற்றிலே விடுத்த ஏடு நீர்ப்போக்கை எதிர்த்துச் சென்றதே! அது எங்கு சென்றதோ?" என்று பரிவுடன் வினவினான். "ஆலவாய் எம்பிரானருளால் அதனை இப்போதே வரவழைப்போம்" என்று மொழிந்தருளி ஆற்றங்கரை வழியே மேற்கு நோக்கிச் சென்றார். ஏனையோரும் பிள்ளையாரைத் தொடர்ந்து சென்றனர். ஏடு ஒரு காத தூரம் எதிர்த்துச் சென்று பின்னர் திடீரென மறைந்து விட்டது. ஏடு மாயமாக மறைந்தது கண்ட அனைவரும் ஆச்சரியமடைந்தனர். ஆயர் சிறுவரைக் கண்டு அவ்விடத்து விசேஷம் பற்றிக் கேட்டனர். அவர்கட்கு ஏதும் தெரியவில்லை. ஆனால் விசேஷம் இருக்கவேண்டுமென்ற சம்பந்தப்பெருமான் சிவபெருமானை நினைந்து 'வன்னியும் மத்தமும்' என்று தொடங்கும் திருப்பதிகம் பாடினார். அப்போது ஆங்கொரு பெரிய வில்வ மரத்தினடியிலே சிவபெருமான் சுயம்புலிங்கமாக தோன்றிக் காட்சி தந்தருளினார். காழிப் பிள்ளையார் சிவலிங்கத்தை தரிசனம் செய்து பணிந்து வலம் வந்து நின்றார். அதுசமயம் லிங்கத்திலிருந்து வயது முதிர்ந்த அந்தணர் ஒருவர் வெளிப்பட்டு நின்றார். பிள்ளையாரைப் பார்த்து, "நீ எனது இளைய குமாரனைப்போல இருக்கிறாய்" என்று மகிழ்ந்து கூறி திருநீறு இட்டார். சிவஞானத்தைத் தமக்கருளிய இறையவரே அவர் என்று கருதிய ஞானசம்பந்தர் அவரை வணங்கி, "பெரியவரே! எளியேனது ஏட்டைத் தந்தருளவேண்டும்" என்று வேண்டினார். முதிய பெருமானும், "குமாரா! எம்மைத் தலங்கள் தோறும் சென்று பாடுவாய்; இழி நெறிபற்றி ஒழுகுபவரைத் தெருட்டி வெற்றி கொள்வாய்; பின்பு எம்முடைய சுத்தமான மோக்ஷத்தைப் பெறுவாயாக" என்று மொழிந்தருளி ஏட்டைத் தந்து மின்னலை நிகர்த்து மறைந்தருளினார். திருஞானசம்பந்தரின் பெருமையை நன்குணர்ந்த பாண்டியன் அவரை வணங்கினான். பாண்டியன் பின்பு அங்கே எழுந்தருளிய சிவபெருமானுக்குப் பொற்கோவிலும், திருமண்டபமும், திருக்கோபுரமும், திருமதிலும், திருவீதியும் கண்டோர் களிக்குமாறு அமைத்தான். அன்று முதல் அத்திருப்பதி திருவேடகம் என்னும் திருப்பெயர் கொண்டு விளங்குவதாயிற்று. சமணரோடு இணங்கிய தனது பாவமெல்லாம் போகுமாறு அப்பதியிலுள்ள சிவபெருமானைப் பூசித்து மும்மல நீக்கம் பெற்றான். பின்பு பாண்டியன் அங்கேயே திருநகரம் ஒன்று அமைத்து ஒரு வருஷ காலம் திருஞானசம்பந்தருடன் அங்கேயே தங்கியிருந்தான்.

பின்னர் பாண்டியன் திருஞான சம்பந்தரோடு மதுரை சேர்ந்தான். சிவஞான குமாரர் பாண்டி நாடெங்கும் சென்று விபூதிச் செல்வம் விளக்கமுறச் செய்தார். சில நாட்கள் மதுரையிலே தங்கியிருந்த பின்பு வடநாட்டிலுள்ள க்ஷேத்திரங்களைத் தரிசிக்க விரும்பினர் காழிப்பிள்ளையார். திருக்கோவில் சென்று சோமசுந்தரப் பெருமானையும் மீனாட்சியம்மையாரையும் தரிசனம் செய்து பலவரங்கள் பெற்றுப் புறப்பட்டார். சௌந்தர்ய மாறனும் மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் பிரியா விடை தந்தனுப்பினர்.

பல பாண்டிய நாட்டு சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டே சோழ நாடு சென்றார் திருஞானசம்பந்தப் பிள்ளையார். ★

# 64. வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்தது.

காவிரிப்பூம்பட்டினத்திலே வணிக குலத்தைச் சேர்ந்த ஒருவன் வாழ்ந்து வந்தான். பலவகைச் செல்வங்களிலே சிறந்தவன் அவன். வெகுநாட்களாகக் குழந்தைப் பேறின்றி வருந்தினான். அவன் தனது இல்லாளுடன் சேர்ந்து பலவகை தருமங்களைச் செய்ததால் பெண் குழந்தை பிறந்தது. அவளைச் செல்வமாக போற்றி வளர்த்து வந்தான். அவளுக்கு மணப்பருவமும் வந்தது. வணிகனது தங்கை மகன் ஒருவன் மதுரையிலே வாழ்ந்து வந்தான். மருமகனுக்கு ஏற்கனவே மணமாகியிருந்தது. இருந்தாலும் முறையை விட்டுக் கொடுக்க விரும்பாத வணிகன் அவனுக்கே தன் அருமை மகளைக் கொடுப்பதாகச் சொல்லிக்கொண்டிருந்தான். அதையே தன் உறவினர்களிடமும் அடிக்கடி தெரிவித்துக்கொண்டிருந்தான்.

சில நாட்கள் சென்றன. வணிகன் இறந்துபோனான். அவனது கற்பிற் சிறந்த மனைவியும் உடன் இறந்தாள். உறவினர்கள் இறந்தவருக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களைச் செய்து முடித்தனர். அந்தச் சேதியை மதுரை மருமகனுக்கு ஓர் ஓலை மூலம் தெரிவித்தனர் உறவினர். அந்த ஓலையிலே, "உனது மாமன் இறந்துபோனான்; உடன் மாமியும் இறந்துபோனாள். அவனுக்கு ஏராளமான செல்வம் உண்டு. அவனுக்கு ஒரு குமாரியும் உண்டு. அவளை உனக்கே மணம் செய்து கொடுப்பதாக சொல்லிக்கொண்டிருந்தான். ஆகையால் நீ வந்து உன் மாமன் மகளை மணம் செய்து கொள்வாயாக" என்று எழுதி இருந்தனர். மாமனும் மாமியும் ஒருங்கே இறந்த சேதி கேட்டு மிகவும் வருந்தினான் மதுரை மருமகன். பிற்பாடு ஒருவாறாக மனம் தேறி தன் உறவினர் சிலருடன் மதுரையை விட்டு நீங்கிப் பட்டினம் சேர்ந்தான். அங்கு தன் மாமன் இல்லம் சென்றிருந்தான்.

சில நாட்கள் போயின. "மாமன் மகளை அழைத்துச் சென்று மதுரையிலே உறவினர் முன்னிலையிலே மணப்பேன்" என்று கூறி மாமன் தேடிய செல்வங்களையும் பிறவற்றையும் எடுத்துக்கொண்டு

கிளம்பினான். தன்னுடன் வந்த உறவினர்களையெல்லாம் முன்னே செல்லுமாறு செய்தான். தனது ஏவலாளர்களோடு நாள் ஒன்றுக்கு ஒன்றரைக் காத தூரம் வழிநடந்து சென்றுகொண்டிருந்தான். வருகின்ற வழியிலே திருப்புறம்பயம் என்ற க்ஷேத்திரத்தை யடைந்தான். அன்று இரவு அங்கே தங்கிச் செல்ல விரும்பினான். அந்தத் தலத்தின் திருக்கோவிலுக்கு அருகேயிருந்த கிணற்றிலே நீராடிவிட்டு வன்னி மரத்தடியிலே உணவாக்கி உண்டான். திருக்கோவிலருகே படியொன்றின் மீது தலைவைத்துத் தூங்கினான். அதுசமயம் கொடிய நச்சு நாகம் ஒன்று வந்து அவனைக் கொத்தியது. விஷம் வேகமாகத் தலைக்கேறியதால் வணிக மகன் இறந்தான். ஏவலாளர்களும் தோழியர்களும் புலம்பி அழுதனர். அவனது மாமன்மகள் செய்வதுஇன்னது என்று தெரியாமல் திகைத்தாள். மணமாகாத மகள் ஆனபடியால் மதுரை மகனது உடலைத் தீண்டாமல் சோகப் பதுமையாக ஒரு புறத்தே உளங்கலங்கி நின்றாள். சாவு, அழுகை, அயர்வு முதலிய வற்றைக் கண்ட அப்பெண்மணி அம்புபட்ட பைங்கிளிபோலத் துடித்தாள். கீழே சோர்ந்து விழுந்து மயங்கினாள். சேடியர் சேர்ந்து அறிவு தெளிவித்தனர். அக்குலமகள் அழுத அழுகைக்கும் புலம்பிய புலம்பலுக்கும் எல்லை கிடையாது. பல பல சொல்லி உரக்கக் கூறிக் கதறினாள். ஆணை இழந்த அன்றில்பெடைபோல தன்னந் தனியளாக இருந்து அரற்றினாள்.

வணிக மகளின் அழுகையையும் புலம்பலையும் கேட்ட அக்கம் பக்கத்தவர் உறக்கம் விட்டு எழுந்தனர். அவளது துன்பம் கண்டு உள்ளம் நடுங்கினர்; மனம் உளைந்தனர். பல சிவத்திருப்பதிகள் தோறும் சென்று வணங்கிய திருஞானசம்பந்தர் அப்போது அவ் ஊர்த் திருமடத்திலே எழுந்தருளியிருந்தார். அவரும் அவ்வழுகை யொலியைக் கேட்டார். விவரம் அறிந்ததும் திருக்கோவிலின் பக்கம் விரைந்து போனார். "கன்னிப் பெண்ணே! நீ யார்?" என்று வணிகப் பெண்ணைப் பார்த்துப் பரிவுடனே வினவினார். அந்தப் பெண்ணும் அவரை வணங்கி நடந்த எல்லாவற்றையும் அவரிடம் சொல்லித் தனக்கும் மதுரை வணிகனுக்கும் ஏற்படவிருந்த மணத்தினையும் தெரிவித்தாள். தனித்த பெண்ணின் துயர் போக்கக் கருதினார் காழிப்பிள்ளையார். உயிர் நீத்த வணிகனின் உடலருகே சென்று, அவனது உடல் அமிர்த மயமாகும்படி அருள் நோக்கம் பாலித்தருளினார். கொடிய நஞ்சு உடலிலிருந்து இறங்கிச் சென்றது. செத்துக் கிடந்த வணிக மகன் புத்துயிர் பெற்றவனாகி உறங்கிக் கிடந்தவன்போல எழுந்து உட்கார்ந்தான். அந்த அதிசயத்தைக் கண்டு அங்கிருந்தோர் அனைவரும் திருஞானசம்பந்தரைப் போற்றித் தொழுதனர். கன்னிப்பெண்ணும் களியன்னம்போல் ஒரு பக்கம் ஒதுங்கியிருந்தாள்.

வணிகக் கன்னி மாமன் மகளாக இருந்தாலும் தலைவன் இறந்த காலத்தும் உயிர் பெற்ற காலத்தும் அவனைத் தொடாதிருந்த பெற்றியையும் அன்பையும் கண்டு ஆச்சரியமடைந்த திருஞான

சம்பந்தர் மதுரை வணிகனைப் பார்த்து, "வணிகர் மணியே! உனது அம்மான் மகளான இக்கன்னி திருமகளை ஒத்தவள். எக்காலும் உன் உடல் தீண்டத் தகுதி பெற்றவள். இவளை இவ்விடத்திலே விவாகம் செய்துகொண்டு செல்க" என்று நன்று பகன்றார். பிள்ளையாரின் திருவாக்கைப் போற்றிய அவ்வணிகனும், "எம் குலத்தோரும் தக்க சான்றுகளும் இல்லாமல் எவ்வாறு மணம் முடித்துக்கொள்வேன்?" என்றான்.

திருஞானசம்பந்தர் மதுரை வணிகனை நோக்கி, "மகனே! இப் பெண் பிறந்தபோதே உனது மாமன் உனக்காகவே இவளைப் பேசி யதை உறவுக்காரர்கள் பலர் அறிவார்கள். அதுமட்டுமல்லாமல் இந்த வன்னியும், கிணறும், இலிங்கமும் சாட்சிகளாகும். எனது சொல்லைத் தட்டாமல் இங்கேயே மணம் புரிந்து செல்வாயாக" என்று அருளிச் செய்தார். திருஞானசம்பந்தரையே ஆசிரியரும் நண்பரும் தெய்வமும் சுற்றமும் எனக் கொண்ட அவ்வணிகன் அவ்விடத்திலேயே முறைப்படி மணம் முடித்து விடைபெற்றுப் புறப்பட்டான்.

பணியாட்களும் மகளிர் கூட்டமும் உடன் வர மதுராபுரியை அடைந்தான். மாமன் மகளை அவன் மணந்த சேதி கேட்ட சுற்றத்தார் பெரிதும் மகிழ்ந்தனர். பின்பு அவன் தான் தேடிய பொருள்களையும் மாமன் தேடித் தந்த பொருள்களையும் ஒரேயிடத்தில் தொகுத்து வைத்து வாணிபத்தால் குபேர சம்பத்தைப் பெற்றான். காலாகாலத்திலே இரு மனைவியரும் புதல்வர்களைப் பெற்றுக் கொடுத்தனர். வணிகன் மிக்க நலமுடன் வாழ்ந்து வந்தான்.

ஆண்டுகள் சென்றன. மூத்த மனைவியின் குமாரர்கள் மிகவும் கொடியவர்களாக இருந்தார்கள். இளையவளுக்கு ஒரே ஒரு நல்ல புதல்வன் இருந்தான். இருவருடைய புதல்வர்களும் ஒருநாள் வீதியிலே விளையாடிக்கொண்டிருந்தபோது திடீரெனச் சண்டை மூண்டது. மூத்தாள் மக்கள் இளையாள் மகனைச் சினந்து அடித்தனர். இதன் காரணமாக, இளையவளுக்கும் மூத்தவளுக்குமிடையே பேச்சு வார்த்தை தடித்தது. மூத்தவள் இளையவளை இழிவாகப் பேசியதோடு, "நீ எந்த ஊர்? எந்தக் குலம்? என் கணவனைக் கண்டு ஆசைப்பட்டு வந்த காமக் கிழத்தியாகிய நீ கருவம் கொள்வது தகாது. நீ என் கணவனை அக்னிசாட்சியாக மணந்துகொண்டவள் என்பதற்கு என்ன சாட்சி இருக்கிறது? இருந்தால் காட்டுக" என்று கடுமொழி பகன்றாள்.

கற்பிலே சிறந்த அக்காரிகை மிகவும் மனம் வாடினாள். "என் கணவன் பாம்பு தீண்டி மாண்டபோது உயிர் அளித்த திருஞான சம்பந்தரின் ஆணையால் எனது கணவன் என்னைத் திருப்புறம்பயத்திலே எழுந்தருளியிருக்கும் சிவலிங்கப்பெருமானும், வன்னி மரமும், கிணறும் காணத் திருமணம் முடித்தான்; அந்த மூன்றும் சாட்சி

களாக உள்ளன" என்று கூறினாள். அது கேட்ட மூத்தாள் கை கொட்டிச் சிரித்தாள். "நன்று! வெகு நேர்த்தி! நல்ல சாட்சிகளாகத் தான் சொன்னாய்! அச்சாட்சிகள் மூன்றும் இவ்விடத்திற்கு வருமானால் அதுவும் உண்மையாகத்தான் இருக்கும்" என்றாள்.

இளையவள் துன்பத்தில் ஆழ்ந்தாள். பெருமூச்சு விட்டாள். "ஐயோ தெய்வமே!" என்று வருந்தினாள். "கடவுளே! தந்தை தாயிழந்த பேதையான எனக்கு வேறு துணை யார்? மாமனாக வந்து வழக்குரைத்து உரிமை வாங்கித் தந்த பெருமானே! நீரே கதி" என்று சோமசுந்தரப் பெருமானை நினைந்தவளாகி அன்றிரவு முழுவதும் உணவின்றி வருந்திக் கிடந்தாள். மறுநாள் விடிந்ததும் திருக்கோவில் சென்று பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடிச் சோமசுந்தரப் பெருமானை வழிபட்டு நின்றாள். "அன்று நாங்கள் மணம் புரிந்த காலத்திலே சாட்சியாக நின்ற வன்னி மரமும், கிணறும், சிவலிங்கமாகிய தேவரீரும் இன்று இங்கும் வந்து தோன்றி எனது மாற்றாளின் ஏச்சைப் போக்கி அடியவளைப் பாதுகாக்கா விட்டால் இறந்து போவேன்" என்று முறையிட்டாள்.

அக்கணமே சோமசுந்தரப் பெருமானது திருவருளால் அனைவரும் கண்டு வியப்படையும் வண்ணம் மணம் ஆனகாலத்திலே திருப்புறம்பயத் தலத்தில் இருந்தபடியே மூன்று சாட்சிகளும் திருக்கோவிலின் வடகிழக்கு திசையிலே விரைவாக வந்து தோன்றின. உடனே இளையவள் மூத்தவளை அழைத்து வந்து, சொக்கநாதப் பெருமானை வணங்கி விட்டு, "வன்னிமரம் இது! கிணறு இது! சிவலிங்கம் இது! இந்த மூன்றுமே எனது விவாகத்திற்குச் சாட்சியாகி நின்றன" என்று காட்டிக் கூறினாள்.

இளையவளாகிய வணிகமாதின் கற்பின் சிறப்பையும் சிவபக்தியையும், சோமசுந்தரப் பெருமான் அவளுக்காக அருள் புரிந்ததையும் மதுரை மக்கள் அனைவரும் தெரிந்து பேராச்சரியம் அடைந்தனர்; பேருவகை கொண்டனர்.

மூத்தாள் துன்பத்துள் ஆழ்ந்தாள். ஊர்க்காரர் மூத்தாளைப் பழித்துப் பேசினர். இவளது கணவனும் அவளை குலக்கேடி எனக் கருதி பழித்துப் பேசினான்; அவளை வெறுத்துத் தள்ளினான். ஆனால் இளையவளோ கணவன் அடிபணிந்து, "அன்பரே! எனது கற்பின் திறத்தை உலகறியச் செய்து காட்டியவள் இவளே! இவள் எனது மாற்றாள் அல்ல; தாயற்ற எனக்குத் தாய்; நாங்கள் இனிமேல் ஒற்றுமையாக வாழ்வோம்" என்று மொழிந்து மூத்தாளைத் தழுவிக் கொண்டாள்.

வணிகனின் இல்லற வாழ்வு தூய்மை பெற்றது. இரு மனைவியரும் பொறாமையின்றி ஒன்றி வாழ்ந்தனர். புதல்வர்களும் நல்லவர்களாக மாறிவிட்டனர். தனது இளைய மனைவியின் கற்பின் சிறப்

பால் ஆயுள், ஆரோக்யம், ஐசுவரியம் எல்லாம் பெருக தருமமும் கீர்த்தியும் ஓங்க ஒழுக்கத்திலே சிறந்து விளங்கினன் மதுரை வணிகன்.

இளையவளும் இலக்குமியைப் போல வாழ்ந்திருந்தாள்.

(திருவாலவாய்க் காண்டம் முற்றிற்று)

  

# திரு அவதாரங்கள்

1. மச்சம்
2. கூர்மம்
3. வராகம்
4. நரசிம்மம்
5. வாமனன்
6. பரசுராமன்
7. ராமன்
8. பலராமன்
9. கிருஷ்ணன்
10. கல்கி

# தசாவதாரம்

## 1. மச்சாவதாரம்

ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் நாபிகமலத்திலே தோன்றிய பிரம்மாவின் வாழ்நாட்களிலே பகல் பொழுது மாறும் போதெல்லாம் பிரளயம் தோன்றும். அக்காலத்திலே சிருஷ்டியான பொருள்கள் அனைத்தும் அழிந்துவிடும். கருணையங் கடலான ஸ்ரீ விஷ்ணு அப்போதெல்லாம் மீனவதாரம் எடுத்து எல்லாப் பொருள்களையும் பாலிக்கத் திருவுளம் கொள்வார். முன்னொரு காலத்திலே ஒரு பிரளயம் ஏற்பட்டது. அதன் விளைவாக பிரம்மா சதுர்வேதங்களையும் பறிகொடுத்துப் பதைத்தார். அதுசமயம் விஷ்ணுபகவான் மச்சாவதாரம் எடுத்தார்.

அந்தக் காலத்திலே பூவுலகைத் தமிழ்வேந்தனான சத்தியவிரதன் என்றொரு ராஜரிஷி ஆண்டு வந்தான். அவன் சிராத்த தேவன் என்ற பெயருடையவன். அவன் புஜபல பராக்கிரமம் உடையவன். நல்ல தருமவான்; அறம் திறம்பாத செங்கோல் ஓச்சி வந்தான். தன்னுயிர்போல மன்னுயிர் காத்தான். அல்லும் பகலும் அனவரதமும் ஸ்ரீமந்நாராயணனைத் தியானம் செய்துகொண்டேயிருந்தவன். ஒருநாள் சந்தியாவந்தனம் செய்வதற்காக கிருதமாலா நதிக்குச் சென்றான். நீர் வார்த்து அர்க்கியங் கொடுப்பதற்காகத் தன்னிருகைகளிலும் ஆற்று நீரை அள்ளியெடுத்தான். கையக நீரிலே மீன்குட்டியொன்று இருப்பதைக் கண்டான். சந்தேகம் கொண்ட மன்னன் அந்த நீரைக் கொட்டிவிட்டு வேறு நீரை ஆற்றிலிருந்து முகந்தெடுத்தான். மறுபடியும் மீன் இருந்தது. அந்த நீரையும் கொட்டிவிட்டு இறைவனை நினைந்த வண்ணம் வேறு நீரை மூன்றும் முறையாக எடுத்தான். அந்த ஜலத்திலும் அதே சிறு மீன் இருந்தது. எடுத்த போதெல்லாம் அக் கைநீரிலே மீனும் உடன் தோன்றியது கண்ட சத்தியவிரதன் கவலைகொண்டான். அதுசமயம் அந்தக் குஞ்சு மீன் "தருமபூபதியே! நீ சத்திய சந்தனாதலால் அண்டியவரை ஆதரிக்காமல் இருக்கமாட்டாய் என்று கருதியே உன்னை அடைக்கலமுற்றேன். என்னைக் கைவிடல் முறையா? தருமமா? அழகா? ஜலஜந்துக்கள் பல என்னை வருத்துகின்றன. என்மேல் இரக்கம் காட்டி உனது நேர்ப் பார்வையிலே என்னை வளர்த்துவர வேண்டுகிறேன்" என்று சொல்லி வேண்டிக்கொண்டது. மீன் குஞ்சாகத் தோன்றியது மஹாவிஷ்ணுவே.

மனிதப் பேச்சுப் பேசிய மீன்குஞ்சைக் கண்டு வேந்தன் பெருவியப்புக்கொண்டான். ஆதலால் அதனைத் தெய்வீக மீன் என்று மதித்து அதனைத் தன் கமண்டலத்துக்குள் விட்டான். அதனை எடுத்துக்கொண்டு மனை சென்றான். அங்கு சென்று பார்த்தபோது மீன் கமண்டலம் முழுவதும் பெருகி வளர்ந்திருந்தது. பெருத்த

மீனைப் பெருங் கலத்திலே மாற்றிவிட்டான் வேந்தன். மீனும் பெருங் கலத்தளவு பெருகிவிட்டது. தென்னக மன்னன் திகைத்தான். ஆதலால் அந்த விசித்திர மீனை குட்டை, குளம், ஏரியென்று முறையே பெரிய பெரிய நீர் நிலைகளிலே விடுத்தான். பின்னும் பெருகி வளர்ந்து வந்த அம்மீனைச் சத்தியவிரதன் முடிவாகக் கிழக்கு சமுத்திரத்திலே கொண்டுபோய் விட்டான். சமுத்திரத்திலே பாய்ந்த மீன் மிகவும் மகிழ்ந்தது. தென்னவனைப் பார்த்து "மன்னவா! என்னைக் கடலில் விட்டுவிட்டாயே! இதிலுள்ள மீன்களெல்லாம் என்னைத் துன்புறுத்துமே" என்றது. அரசன் வியந்தான். "மச்சேந்திர நாதரே! நீர் எளிய மீனல்ல என்பதை உணர்ந்து கொண்டேன். ஸ்ரீநாராயணப் பெருமானே நீர் என்பதையும் தெளிவாகத் தெரிந்துகொண்டேன். ஆனால், தேவரீரது திருவுள்ளம் அறியலாமோ? அருள்வீர்" என்று வினயத்துடன் வேண்டி நின்றான்.

மன்னனுடைய வேண்டுகோளைக் கேட்டுக்கொண்ட மகாமச்சமும், "புண்ணிய ராஜனே! இன்னும் ஏழு நாட்களில் பிரளயம் ஒன்று உண்டாகும். ஜலம் பொங்கிப் பெருகி உலகத்தையே அழித்துவிடும். ஆதலால் இப்போதே உன் நகரத்துக்குப் போவாயாக. எல்லா வகையான விதைகளையும் சேகரம் செய்துகொள். ரிஷிகணங்களையும் உடன் அழைத்துக்கொள். பின்னர் இங்கே வந்துவிடுவாயாக. அதுசமயம் இங்கே ஒரு படகு தோன்றும். அந்தப் படகு எனது கொம்பிலே கட்டப்பட்டிருக்கும். அதனுள் ஓமஹ்ரிதிகளுடன் நீயும் ரிஷிகணங்களும் ஏறியிருப்பீர்களாக. அதன் பின் நிகழ்வன நீயே நேரிலே தெரிவாய்" என்று மொழிந்து சமுத்திரத்திற்குள் சென்று மறைந்துவிட்டது.

மீனப்பெருமான் பணித்த வண்ணமே சத்தியவிரதன் செய்தான். வித்துக்களுடனும் ரிஷிகளுடனும் பாண்டிக் கடற்கரையிலே ஆயத்தமாக வந்து நின்றான். ஒற்றைக் கொம்பு மீன் படகைக் கட்டிக்கொண்டு வந்து சேர்ந்தது. வேந்தனும் முனிவரும் அதிலே ஏறி யமர்ந்தனர். அந்தக் கணமே கடல் கொந்தளிப்பு காட்டியது. ஊழிப்பெருவெள்ளம் எங்கும் பொங்கிப் பாய்ந்தது. மூன்று உலகங்களையும் விழுங்கியது. பதற்றமடைந்த தேவர்கள் தங்கள் கதியாதெனக் கலங்கிக் கதறியபோது மீனவதாரன் தான் அபயந்தருள்வதாக மொழிந்தான். பிரளய காலவிசித்திர நிகழ்ச்சிகளையெல்லாம் ஸ்ரீஹரியின் திருவருளால் கண்ணாரக் கண்டு பிரமித்தான் தென்னவன் சத்தியவிரதன்.

பிரளயகாலம் என்பது பிரம்மாவின் இரவுப் பொழுதாகையால் நன்றாக உறங்கிக்கொண்டிருந்தார். பிரம்மா அயர்ந்து நித்திரை புரிவதையும் ஊழிப்பெருவெள்ளம் நெருங்கிக் கொந்தளிப்பதையும் கண்டான், குதிரை முகம் கொண்ட சோமுகாசுரன். அதுவே தனக்கேற்ற தருணம் என்று கொண்டான். சோமுகாசுரன் கடிய அரிய பல தவங்கள் செய்தவன். தேவராகிய யாவராலும் வெல்வதற்கரிய

வல்லமை பெற்றவன். சாதுக்களுக்குச் சங்கடம் விளைவித்தவன். அப்பொல்லா அரக்கன் பிரளய காலமே தனக்கேற்ற கால்மெனத் தேர்ந்தான். "இதுவே எனக்கு மிகவும் அனுகூலமான காலம். இந்தப் பிரளயத்தால் என் குலவிரோதிகளான தேவர்களும் ரிஷிகளும் மடிவார்கள். மறுபடியும் பிரம்மா அவர்களை சிருஷ்டி செய்யாதவாறு பார்த்துக்கொள்ளவேண்டும். அப்படிச் செய்துவிட்டால் நமது அசுரர் குலமே அமைதியாக ஆண்டு வர முடியும்" என்று கருதினன். பிரம்மாவிடம் சேர்ந்தான். "இந்த பிரம்மன் எனது பாட்டனுர் தான்; இருந்தாலும் என்ன? இவன் வேதங்களை ஆதாரமாகக்கொண்டுதானே சிருஷ்டித் தொழில் செய்கிறுன். வேதமில்லாவிட்டால் சிருஷ்டித் தொழிலேது? ஆதலால், வேதங்களைக் கைப்பற்றிச் செல்வதே உடனடியாக ஏற்படும் பலன். அதற்கான தருணமும் இஃதே" என்று உளத்துள் உறுதி பூண்டு சத்திய லோகத்திலேயிருந்த சதுர்வேதங்களையும் தந்திரமாகக் கவர்ந்துகொண்டு கடலின் கீழே போய் ஒளிந்துகொள்ள விரைந்தான்.

அந்த சமயத்திலே பிரளயப் பரப்பிலே விசித்திரப் பருமீனுகி நீந்திய மகாவிஷ்ணு அது தெரிந்தார். பொல்லாவரக்கனை சோமுகனைத் தேடிப்பிடித்து, சிறிதுநேரம் அவனேடு விளையாட்டாகச் சண்டை செய்தார். பின்னர் அவன் களவாடிச் சென்ற சதுர்வேதங்களையும் மீட்டுக்கொண்டு அவ்வசுரனையும் சங்காரம் செய்தருளினுர்.

அதற்குப் பின்னர் ஸ்ரீ நாராயணப் பெருமான் தாம் மேற்கொண்டருளிய மீன் உருவத்தோடு சத்தியவிரதனும், ரிஷிகளும், ஓஷதிகளும் தம்மைச் சார்ந்து நிற்க, பிரம்மா விழித்தெழுகின்றவரையும் ஊழிப்பெருவெள்ளத்தின் மீதே உலவி வந்தருளினுர். உரிய காலம் வந்ததும் பிரளய நீரெல்லாம் அம்மீன மூர்த்தியின் செதிற்புரைக்குள் புகத் தொடங்கியது. பிரளயம் மறைந்து பட்டதை அறியாத வகையால் அனைவரும் பகவானைப் பிரார்த்தித்திருந்தனர். அதே சமயத்தில் பிரம்மாவும் துயில் நீத்து எழுந்தார். வேதங்களைக் காணுமல் பதைத்தார். "சிருஷ்டித் தொழிலை எவ்வாறு செய்வோம்?" என்று திகைத்தார். பத்மநாபப் பெருமானைச் சிந்தை செய்தார்.

பிரம்மாவின் உள்ளமறிந்த நாராயணப் பெருமான் அன்ன உருவம் எடுத்துக்கொண்டு முன் தோன்றினுர். வேதங்களை யெல்லாம் உபதேசம் செய்தார். பின்னர் அவற்றை யெல்லாம் கவனத்துடன் காக்குமாறு அருள் புரிந்தார். சத்திய விரதனுக்கும் மகரிஷிகளுக்கும் தத்துவ உபதேசம் செய்தருளினுர். தென்னுட்டு வேந்தன் சத்தியவிரதனை வைவஸ்வத மனுவாக ஆக்கி மறைந்தருளினுர்.

சிருஷ்டித் தொழிலானது மச்சாவதாரத்தால் நன்கு நடந்தேறியது.

★

# 2. கூர்மாவதாரம்

ஒரு சமயம் துர்வாஸ மகரிஷி ஸ்ரீ மகாலெக்ஷ்மி தேவியை வணங்கும் பொருட்டு வைகுண்டத்திற்குச் சென்று கொண்டிருந்தார். போகும் வழியிலே எதிரே வந்துகொண்டிருந்த கந்தர்வமாது ஒருத்தியைச் சந்தித்தார். அவளை நோக்கி, "எங்கேயிருந்து நீ வருகிறாய்?" என்று வினவினார். "மகரிஷியே! அடியவள் வைகுண்டம் போயிருந்தேன். அங்கே ஸ்ரீ லக்ஷ்மிதேவியை தரிசனம் செய்தேன். பிராட்டியார் பரிவுடன் அருளிய திருமாலையைப் பிரஸாதமாகப் பெற்றுக்கொண்டு திரும்புகிறேன். இத்தகைய அருமையான பிரஸாதம் தங்களைப் போன்ற பெரியோர்க்கே உரியது. தேவரீர் இதனை ஏற்றருளல் வேண்டும்" என்று பரிவுடன் மொழிந்து மாலையை துர்வாஸரிடம் கொடுத்து வணங்கினாள். கந்தர்வ குலநங்கை கொடுத்த ஸ்ரீபிரஸாத மாலையைப் பெற்றுக்கொண்ட மகரிஷி பெரிதும் மகிழ்ந்து அவளுக்குத் தன் உளமார்ந்த ஆசியருளினார். நாடிச்சென்ற பொருள் நடு வழியில் கிடைத்ததை எண்ணி உளம் பூரித்தவாறே சுவர்க்லோகம் சென்றார்.

துர்வாஸ மகாமுனிவர் சுவர்க்கலோகம் சேர்ந்த சமயத்திலே தேவேந்திரன், ரிஷிகளும், தேவர்களும், தேவமாதரும் சூழ்ந்துவரக் கோலாகலமாகத் தனது பட்டத்து வெள்ளையானையான ஐராவதத்தின் மீது ஆரோகணித்து வந்து கொண்டிருந்தான். இந்தக் காட்சியை நோக்கிய துர்வாஸர் தேவர்கோனைக் கூப்பிட்டு ஸ்ரீபிரஸாதனமான திருமாலையை அவனுக்கு வழங்கி ஆசி கூறினார். மாமுனிவர் வாழ்த்தியளித்த திருமாலையைத் தன் கையிலிருந்த செங்கோலால் ஏற்று அதனைத் தன் யானையின் கழுத்திலே வைத்தான் இந்திரன். வெள்ளையானை தனது கழுத்தின் மீதிருந்த திவ்ய மாலையைத் தனது துதிக்கையால் எடுத்துக் கீழே போட்டுக் காலால் தேய்த்துவிட்டது. அந்த அநீதமான செயலைக் கண்ட துர்வாஸர் மட்டுக்கடங்காப் பெருங்கோபம் கொண்டார். சினத்தால் சிவந்த விழிகளுடன் தேவர்கோனைப்பார்த்து, "இந்திரனே! நீ பெற்ற அருஞ்செல்வத்தின் திருமூலத்தை முற்றிலும் மறந்துவிட்டாய் போலும்? சர்வலோகமாதாவான ஸ்ரீ மகாலக்ஷ்மி தேவியின் பிரஸாத மாலையை அலட்சியம் செய்தாய்; எம்மையும் அவமதித்தாய். கருவம் பிடித்தவனே! பலனை இப்போதே அனுபவிப்பாய்" என்று சொல்லியதோடு அவனது ஐசுவரியமெல்லாம் முழுவதும் தொலைந்து போகும்படி சாபமிட்டார். துர்வாஸமகரிஷி இட்ட சாபத்தின் பலனாக கற்பகத் தரு, காமதேனு, சிந்தாமணி முதலான தேவபோக்கியச் செல்வங்கள் எல்லாம் தேவலோகத்தை விட்டு நீங்கி திருப்பாற் கடலுக்குச் சென்று மூழ்கிவிட்டன. அதுதான் அமைந்த சமயம் என்று கருதிய அசுரர்களும் தேவர்களைத் துன்புறுத்த ஆரம்பித்தனர்.

செல்வங்களத்தனையையும் பறிகொடுத்துப் பரிதவித்த தேவேந்திரன் பகையரக்கர்களால் வேறு தாக்குண்டு இன்னலுக்குள்ளானான். தான் துர்வாஸ மகரிஷியையும், திருமகள் அருள் மாலையையும் ஒருங்கே அலட்சியம் செய்ததை நினைத்து மனம் புழுங்கினான். தான் இழந்துபட்ட செல்வங்களையெல்லாம் எவ்வாறு திரும்பப் பெறுவது என்று கருதி கவலைக் கடலுள் மூழ்கினான். பின்னர் தனது தேவர்களையெல்லாமழைத்து தனக்கு நேர்ந்த ஆபத்தைச் சொன்னான். பிறகு அனைவரும் ஒருங்கு கூடி பிரம்மதேவனை அடைக்கலம் புகுதலே சாலச் சிறந்தது என்று உறுதிகொண்டு அன்னார் வாழும் சத்தியலோகம் சேர்ந்தனர்.

நான்முகப் பெருமானைக் கண்டு முறைப்படி வணங்கி தங்கள் குறை சொல்லிக் காத்தருளுமாறு வேண்டி நின்றனர். அதுசமயம் பிரம்மா அவர்களைப் பார்த்து, "தேவர்களே! நீங்கள் பெரும் குற்றம் செய்துவிட்டீர்கள். பரிகாரம் என்னாலும் சொல்ல முடியாது. ஆனால், ஒன்று தெரிவிப்பேன். முக்கரணத் தூய்மையோடு நாம் அனைவரும் திருப்பாற் கடலுக்குச் செல்வோம். ஆங்கே ஆதிசேஷ சயனத்தின் மேலே அறிதுயில் செய்யும் அனந்தனும் திருமாலை அடைக்கலம் புகுவோம். நம்மைக் காக்க அவர் ஒருவராலேதான் முடியும். அவர் சரணாகத ரட்சகர்; ஆபத் பாந்தவர்; பெருங் கருணைத் தடங்கடலவர்" என்று மொழிந்தார்.

பின்னர் அயனார் இட்டுச் செல்ல தேவர்களனைவரும் திருப்பாற் கடலை அடைந்தனர். அனைவரும் ஒருமனப்பட்டு ஸ்ரீமந் நாராயணப் பெருமானைப் போற்றி வணங்கி, "தேவதேவா! அபயம், உமது சரண் புகுந்தோம்; எம்மையெல்லாம் காப்பது தேவரீர் கடமை. அருந்தவப் பெரியாரான துர்வாஸ மகரிஷிக்கு அபசாரம் செய்ததாலே செல்வ முற்றும் இழந்தோம். அசுரர்களால் பெருந் துன்பத்துக்கு உட்பட்டோம். எம்முடைய அறிவீனத்தைக் கண்டு தேவரீர் இரக்கம் காட்டி அருள்பாலிக்க வேண்டும். இழந்துபட்ட ஐசுவரியங்களையெல்லாம் அடியேங்கள் மறுபடியும் அடைந்து மகிழ்வுடன் வாழ்ந்திருக்கச் செய்தருளவேண்டும். பரிவுடன் அருள்வீர் பரந்தாமனே!" என்று பலவாறு பணிந்து போற்றி நின்றனர்.

தேவர்களது விண்ணப்பத்தைச் செவிமடுத்த மகாவிஷ்ணு அவர்களுக்குக் காட்சியருளிக் கனிவுடன் பார்த்தார். "தேவர்களே! விண்ணப்பம் கேட்டேன்; மிகவும் மகிழ்ந்தேன். உங்களுடைய ஐசுவரியங்கள் அனைத்தும் இந்தப் பாற்கடலுக்குள்ளேதான் படிந்திருக்கின்றன. ஆதலால், நீங்கள் அமிர்தம் வெளிப்படும்படி இதனைக் கடைதல் வேண்டும். இப்பெருந் திருப்பாற்கடலைக் கடைவதற்கான மத்து மந்தரகிரியேயாகும். அப் பெரு மலையைக் கொணர்ந்து இக்கடலிலே நிறுத்தவேண்டும். நீங்கள் ஒரு பக்கமும் அசுரர்கள் ஒரு பக்கமுமாக இருந்துகொண்டு கடையவேண்டும். அவ்வாறு செய்தால் நீங்கள் கருதுவது கைகூடும். அசுரர் துணையின்றி இச்செயல் நடைபெறுவது சிரமமானபடியால் அவர்களோடு

நீங்கள் சிநேகம் பாராட்டவேண்டும். விரைவாக நான் கூறியபடி செயல் புரிந்து சுகிப்பீர்களாக" என்று திருமொழி பகர்ந்தருளினார். தேவர்கள் வணங்கி விடைபெற்றுச் சென்றனர்.

திருமாலவரது திருவாணைப்படியே தேவர்கள் அசுரர்களுடைய நேசம் பெற்றனர். பாற்கடல் கடைய முற்பட்டனர். நூறாயிரம் யோசனைத் தொலைவு அகலமுள்ளதும் அதே அளவு உயரமுள்ளதுமான மந்தரகிரி மலையை அடியோடு பிடுங்கிக்கொண்டு வந்தார்கள். அதனைப் பொறுக்கும் ஆற்றல் இழந்தவர்களாகி நெஞ்சும் தோளும் நெரிந்துபோக வருத்தமடைந்தனர். அதனைக் கண்ணுற்ற நாராயணப் பெருமான் அம் மந்தரகிரியை தம்முடைய விரல் ஒன்றாலே ஏந்திச் சரியாக நிறுத்தி, வாசுகிப் பாம்பை அதிலே சுற்றிப் பூட்டினார். அதன் தலையைத் திருமாலே பிடித்துக் கொண்டார். அந்தப் பக்கத்தைத் தேவர்கள் பற்றிக்கொண்டனர். வாசுகியின் வால் பகுதியைப் பிடித்துக்கொள்ளுமாறு அசுரர்களைப் பணித்தார் பெருமான். அதுகேட்ட அசுரர்கள் கோபமடைந்தனர். "நாங்கள் தேவர்களுக்கு எவ்வகையிலும் தாழ்ந்தவர்களல்ல; ஆதலால், எம்மை வால் பிடிக்கச் செய்வது நேர்மையல்ல" என்று கூறினர். அவர்கள் கோரியபடியே மகாவிஷ்ணுவும் தலைப்புறத்தை அவர்கட்கு விடுத்து வால்புறத்தைத் தேவர்களுக்கு விட்டார். தேவாசுரர்கள் மும்முரமாகக் கடல் கடையத் தொடங்கினர். மலை சுழன்றது. கடல் கலங்கியது. வலுத்த கைகள் கயிறை இழுத்தன; அதுசமயம் இழுப்பைப் பொறுக்கமாட்டாத வாசுகிப் பாம்பு மிகவும் துன்பமடைந்து கொடிய விஷத்தைக் கக்கியது. விஷவேகத்தைத் தாங்கமாட்டாத தலைப்புறமிருந்த அசுரர்கள் மிகவும் சோர்வுற்றுச் சுரர்களது எள்ளி நகையாடலுக்கு இலக்காகினர். ஒருபுறம் வலுவிழந்ததாலே கடைமத்தான மந்திரமலை நிலை தடுமாறி இடம் பெயரத் தொடங்கியது. அந்நிலை கண்ட தேவர்கள் குலைந்தனர். "ஐயோ! என் செய்வோம்? பட்ட பாடெல்லாம் வீணாகி விடுமோ? இதற்கு என்ன செய்வது? மச்சேந்திர நாதரே! எங்களைக் காப்பாற்றுங்கள்; கைவிட்டு விடாதீர்கள்" என்று ஸ்ரீமந் நாராயணப் பெருமானை நோக்கி முறையிட்டனர்.

தேவர்களது உளம்பொருந்திய முறையீட்டைக் கேட்டார் பெருமான் மகாவிஷ்ணு. உடனே மிகப் பெரியதான ஆமையின் உருவத்தை ஏற்றுக்கொண்டார். கடல் புகுந்து நிலை குலைந்து நின்ற மந்தர மலைக்குக் கீழே சென்று அதனைத் தன் திரு முதுகிலே ஏற்றுத் தாங்கிக்கொண்டார். மலைமத்து நேர்பட்டுச் சீராக நின்றது. பாற்கடல் நன்கு கடையப்பட்டது. காமதேனு, கற்பகத்தரு, சிந்தாமணி, ஐராவதம், உச்சைச்சிரவஸ் ஆகிய அரிய ஐசுவரியங்களெல்லாம் தேவர்களுக்குத் திரும்பக் கிடைத்தன. முடிவாக அமிர்தமும் கிடைத்தது.

இவ்வாறாகத் திருமாலானவர் கூர்மாவதாரம் செய்து தேவர் குறை தீர்த்தருளினார்.



# 3. வராகாவதாரம்

முன்னொரு காலத்தில் காசியபர் என்றொரு கீர்த்திபெற்ற மகரிஷி யிருந்தார். அவருக்குத் திதி என்பவள் மனைவியாக இருந்தாள். காசியபர் மூலமாகத் திதிக்கு ஹிரண்யன், ஹிரண்யாக்ஷன் என்ற இரு புதல்வர்கள் பிறந்தனர். இரண்டாமவனான ஹிரண்யாக்ஷன் இளம் வயதிலிருந்தே பல தீச் செயல்கள் பயமில்லாமல் செய்வதில் ஈடுபட்டான். அவனது கண்கள் பொன் போன்ற நிறம் கொண்டிருந்ததால் ஹிரண்யாக்ஷன் என்ற பெயர் உடையவனாகஇருந்தான்.(ஹிரண்யம்-பொன்; அக்ஷன் -கண்ணையுடையவன்) முந்தைய பிறப்பிலே தான் செய்த புண்ணிய வசத்தாலும் தபோ மகிமையாலும் அளவற்ற ஆற்றல் கொண்டிருந்தான். நல்லோர்களையும் விண்ணோர்களையும் அவன் சிறிதும் மதித்ததில்லை. அதனால் அவன் சாது ஜனங்களுக்கும் சுரர்களுக்கும் துன்பம் புரிந்துகொண்டிருப்பதைப் பொழுதுபோக்காகக் கொண்டான். பூர்வ ஜன்மத்திலே மகா விஷ்ணுவின் துவார பாலகனாக இருந்தவன். முனிவர்கள் இட்ட சாபத்தால் அசுரனாகப் பிறந்திருந்தான்.

வைகுண்டத்திலே ஸ்ரீ நாராயண மூர்த்தி தமது தேவியார் மஹாலக்ஷ்மியுடன் ஏகாந்தமாக இருந்தவொரு சமயம், பெருமானது திருவாசலிலே வாயில் காப்பாளர்களாக ஜயன் விஜயன் என்ற இருவர் கவனத்துடன் பாலித்து நின்றனர். அந்தச் சந்தர்ப்பத்திலே சனகாதி முனிவர் நால்வர் மகாவிஷ்ணுவைத் தரிசிக்க வந்தனர். துவார பாலகர்கள் இருவரும் அம்மகரிஷிகளைத் தடுத்து நிறுத்தினர். ரிஷிகளோ பலவந்தமாக உள்ளே செல்ல முற்பட்டனர். அதனால் காவலர்கள் முனிவர்களை இகழ்ச்சியாகப் பேசினர். இழிச்சொல்லைப் பொறுக்காத முனிவர்கள், "ஏ, துவார பாலகர்களே! எம்மை இனம் புரியாமல் பெரிய அவமானம் செய்துவிட்டீர்கள். குரோதமும் உலோபமும் மிகுந்த அசுரர்களாக நீங்கள் இருவரும் பிறக்கக் கடவீர்கள்" என்று சாபமிட்டனர். சாபம் பெற்ற காவலாளர்கள் தங்களை மன்னித்துச் சாபத்தை மாற்றியருளவேண்டும் என முனிவோர்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டனர். ரிஷிகள் தங்களது இயலாமையைத் தெரிவித்துவிட்டனர். அப்போது அங்கே எழுந்தருளிய மகாவிஷ்ணு நடந்தவற்றையெல்லாம் தெரிந்துகொண்டார். பெருமான் துவார பாலகர்களை நோக்கி, "நீங்கள் இரண்டு பேரும் அசுரர்களாகப் பிறப்பீர்கள்; நமக்குப் பகைவர்களாக இருந்து வாழ்க்கை நடத்துவீர்கள், நாம் அவதாரம் செய்து உங்களை மாய்ப்போம்" என்று கூறினர். சனகாதி முனிவர்களிடம் சாபம் அடைந்த துவார பாலகர்களே ஹிரண்யகசிபு என்றும் ஹிரண்யாக்ஷன் என்றும் அசுர சகோதரர்களாகப் பிறந்திருந்தனர்.

ஹிரண்யாக்ஷன் புரிந்துவந்த அதர்மமான, அநியாயமான, அநீதியான, அயோக்யமான கடுந்தீமைகளைப் பொறுக்கமுடியாத

தபஸ்விகளும், தேவர்களும் விஷ்ணு பகவானிடம் சென்று விண்ணப்பித்து வந்தனர். விஷ்ணு பகவானும் தக்க பக்குவமான தருணத்தை எதிர்பார்த்து அமைந்திருந்தார்.

காலம் தன் கோலம் காட்டியது. ஹிரண்யாக்ஷனுக்குத் திடீரென்று ஒருசமயம் கெட்ட எண்ணம் ஒன்று தோன்றியது. ''இந்தப் பெரிய உலகத்தையே பாயாகச் சுருட்டி எடுத்துக்கொண்டு சென்று சமுத்திரத்திற்கு அடியில் ஒளித்துவைத்து விடுகிறேன். அப்போது எனது அபாரசக்தியையும் பராக்கிரமத்தையும் ஒருங்கே தேவர்கள் உணர்ந்துகொள்வார்கள். பிரம்மாவின் முழுப் படைப்பையும் குறைசெய்து விடுகிறேன்'' என்று கருதித் துணிந்தான். தான் எண்ணித் துணிந்த செயலை அப்படியே செய்து முடிப்பதானான். ஹிரண்யாக்ஷன் பூலோகம் முழுவதையும் ஒரு பாயைச் சுருட்டுவது போலச் சுருட்டி யெடுத்தான். அப்புவிப் பாயை எடுத்துக்கொண்டு சென்று யாரும் தெரியாதவண்ணம் பனிக்கடலின் கீழே ஒளித்து வைத்துவிட்டான்.

பூ மண்டலம் திடீரெனக் காணுமற் போய்விட்டது. அதை யறிந்த பிரம்மேந்திராதி தேவர்கள் வியப்பும் அச்சமும் மிகவும் கொண்டனர். பொல்லா அரக்கனை ஹிரண்யாக்ஷன் புரிந்த பொல்லாங்கே என்று தேர்ந்தனர். ''மோசம் போனோம், நாசமடைந்தோம். நமது கொற்றமும் ஆணையும் அருமையும் பெருமையும் பாழ்பட்டன. பூவுலகமானது திரிலோகப் பேற்றையும் சுலபமாக அடைவிக்கவல்ல சாதனங்களை உடைய கர்மபூமியாகும்! பூமி மறைந்தபோதே நமக்கே உரிய மகிமையும் மரியாதையும் நீங்கிவிட்டனவாம். காட்சியிழந்த நாம் இனி எவ்வாறு உய்வது? ஐயோ! இனி நாம் செய்யக்கூடியது என்ன?'' என்று பலவாறாக எண்ணி எண்ணிக் கலங்கி ஏங்கி நெஞ்சம் புண்ணுகினர். யாதொன்றும் செய்வதறியாதவராய் சர்வலோக சரண்யனும் ஆபத்பாந்தவனுமாகிய மகாவிஷ்ணு பகவானிடமே சேர்ந்து குறையிரந்து அடைக்கலம் புகுந்தார்கள். ''எங்கும் நிறைந்தோனே! எல்லாம் வல்லோனே! எங்களது ஆபத்தைப் போக்கிக் காத்தருள் புரிதல் வேண்டும், பிரபோ! எங்களுக்கு வேறு கதியில்லை!'' என்று விண்ணப்பித்துக்கொண்டு பலவாறாக துதி செய்தார்கள்.

''அஞ்சேல்'' என்று அபயம் கொடுத்த நாராயணப் பெருமானும் உலகைக் காக்கும் பொருட்டுப் பேருருவமும் பேராற்றலும் கொண்ட தெய்விகப் பன்றியாகத் தோன்றியருளினுர். மகாவிஷ்ணு பன்றி உருவம் ஏற்றருளிய திருத்தோற்றம்தான் வராகாவதாரம் என்று புகழப்பட்டது. திண்மை கொண்ட தேவப் பன்றி இரண்டு நீண்டு வளைந்த கொடும் பற்களை வெளியே கொண்டதாகி விளங்கியது. தனது வெண்மருப்பினுல் பூமியைப் பெயர்த்தெடுத்து வந்து நிலை நாட்ட விரும்பியது. அது தெரிந்த அசுரன் ஹிரண்யாக்ஷன் கடுங்கோபங் கொண்டான். வராகவதாரப் பெருமானுடன் போர் புரியலானுன். விளையாட்டுப் போக்காக அரக்கனோடு சமர் செய்த பெரு

மானும் முடிவில் அவனைச் சங்காரம் செய்தருளினார். ஹிரண்யாக்ஷாசுரன் முடிந்ததும் அவனால் கடலடியுள் ஒளித்து வைக்கப்பட்டிருந்த பூலோகத்தை முன்னைப்போலவே அதன் மெய்ந்நிலைக்குக் கொணருவதற்காகச் சமுத்திரத்திற்குள் மூழ்கியருளினார்.

வராகாவதாரமாகத் தன்னையெடுத்துத் தாங்கிச் சுயநிலையளிக்க வந்த மகாவிஷ்ணுவைக் கண்டு பூமாதேவி பெரிதும் மகிழ்ந்தாள். "பரந்தாமா! என்னை உயர்நிலைக்கு ஏற்றியருள வேண்டும் எம்பெருமானே! தங்களையே நம்பியிருக்கும் அடியாள் நான்; தங்கள் உடலோடு ஒட்டியவள் அல்லவா? அனைத்துக்கும் ஆதாரமானவரே! வாசுதேவரே! அடியாள் உம்மிடமிருந்து தோன்றி, உம்மையே அண்டியிருப்பவள். ஆதலால் மாதவனுக்குரிய மாதவியாகவே என்றும் நிலைத்திருக்குமாறு அடியாளை ஆசீர்வதித்தருளவேண்டும்" என்று பலவாறாகத் தோத்திரம் செய்தாள். பூமாதேவியாரின் போற்றுதல் மொழி கேட்டு மகிழ்ந்த வராகாவதாரப் பெருமான் தமது கொடிய வெண்மருப்புகளின் நுனியால் மிகுந்த பரிவுடன் பூமியை ஏந்திக்கொண்டு உயர்ந்து மேலே வந்தார். புவிதாங்கு புண்ணியனின் மூச்சுக்காற்று எங்கணும் பரவிப் பக்தர்களைத் தூய்மைப் படுத்திப் புனிதராக்கியது. பின்னர் பெருமான் பூமியை முன்பிருந்த நிலையிலே சீராக்கி நிறுத்தினார்.

அப்போது பூலோகக் கர்மபூமியின் புனருத்தாரணமும் சீரிய நிலையும கண்டு மகிழ்ந்த பிரம்மாவும், தேவேந்திராதியரும், மகரிஷிகளும் எல்லையற்ற பேரானந்தம் அடைந்தனர். பூவராகமூர்த்தியின் மீது பூ மழை பெய்து பாடித் துதித்தனர்.

மச்சாகி, கூர்மமாகி, வராகமுமாகி ஆவதரணம் செய்து தனது எளிவந்த தன்மையை அனைவருக்கும் நிரூபித்துக்காட்டிய மகாவிஷ்ணுவைப் பலவாறாகப் போற்றி வழிபட்டார்கள் எல்லாரும். ★

## 4. நரசிம்மாவதாரம்

வராகாவதார மூர்த்தியின் அருள் திறத்தால் மாண்ட ஹிரண்யாக்ஷனது அண்ணனே ஹிரண்யகசிபு. அவனது உடல் முழுவதும் பொன்வண்ணமாக இருந்ததால் அவன் ஹிரண்யன் என்று அழைக்கப்பட்டான். அன்று வைகுண்டத்திலே துவாரபாலகனாக இருந்து சனகாதி முனிவரிடம் சாபம் பெற்ற ஜயனே, இன்று ஹிரண்யனாக இருந்தான். மிகுந்த வலிமையும் பேராற்றலும் கொண்ட தனது அருமைத் தம்பி ஹிரண்யாக்ஷன் ஒரு 'பன்றி'யால் இறந்தான் என்று தெரிந்ததும் வராகாவதாரம் செய்த ஸ்ரீ நாராயணப் பெருமானிடமே தீராப் பகைமை கொண்டான். பழிவாங்கிப் பகைமை தீர்த்துக் கொள்ளும் பொருட்டுப் பல வரங்கள் பெற விரும்பினான். அதனால் பிரம்மாவை நோக்கிக் கடுந்தவம் புரிந்தான்.

ஹிரண்யனது கோரமான பெருந் தவத்தைக் கண்டு மனம் மிக மகிழ்ந்தார் பிரம்மா. அவன் முன் நேரிலே தோன்றினார். "பக்தனே! உனது அருந்தவத்தால் உளம் மகிழ்ந்தேன். நீ கோரும் வரங்கள் என்ன? கேள்; தருகிறேன்" என்றார். ஹிரண்யன் சதுர்முக தேவனைப் பார்த்து, "தேவனே! விதியே! தேவர்களாலும் மனிதர்களாலும் வேறு யாராலும் நான் இறத்தல் கூடாது. எவ்விதப் படைகளாலும், நீராலும், நெருப்பாலும், மண்ணாலும், விண்ணாலும், வளியாலும் நான் சாதல் கூடாது. விலங்குகள் ஆகிய எந்த ஜீவ ஜந்துவாலும் நான் மரித்தல் கூடாது. இரவிலோ பகலிலோ எனக்கு மரணம் நேரக்கூடாது. மூவுலகங்களிலேயும் என்னிலும் மிஞ்சிய ஆற்றல் படைத்த யாரும் இருத்தல் கூடாது. அவற்றுக்கெல்லாம் நான் ஒருவனே அதிபதியாக அமைதல் வேண்டும். அருள் புரிய வேண்டும். ஐயனே!" என்று கூறி நெடுவரம் கோரினன்.

பிரம்மாவும் ஹிரண்யன் கோரிய படிக்கே எல்லா வரங்களையும் அருளி ஆசிதந்து அந்தர்த்தானமானார்.

தவ வலிமையாலே தான் பெற்ற வரங்களின் சக்தியால் மிகவும் கருவமடைந்தான் ஹிரண்யன். அந்தர மத்திய பாதாள மென்ற திரிலோகங்களையும், தன்வசப்படுத்திக்கொண்டான். இந்திரன், யமன், வாயு, அக்னி, வருணன், சூரியன், சந்திரனை தேவர்களின் ஆணையைத் தானே கவர்ந்துகொண்டு செய்து வந்தான். கந்தருவர் கானல் பாடினர்; கின்னரர் வாத்தியம் முழங்கினர்; வித்தியர் 'ஜய விஜயீபவ!' என மொழிந்து வெற்றி வாழ்த்து முழக்கினர். தேவ மங்கையர் நடனம் ஆடினர். படிகம் மாணிக்கமாகிய பலவகை அருங்கற்களைக்கொண்டு அதியற்புதமான முறையிலே மகோன்னதமான பாணியிலே கட்டப்பட்ட மாளிகையிலே வாழ்ந்து எல்லா வகையான சுகபோகங்களையும் மனம்போன போக்குப்படி அனுபவித்து வந்தான். ஏகாதிபதியாகவும் சர்வாதிகாரியாகவும் விளங்கி ஆணை செலுத்திய ஹிரண்யகசிபு விசித்திரமானதொரு உத்தரவிட்டான். நெடுங்காலமாக எங்கும் நடைபெற்றுவந்த வேதமோதல், யாகம் செய்தல், ஜபதப தியான மந்திரமானவற்றில் திவ்யமான ஹரி நாமத்திற்குப் பதிலாகத் தனது பெயரையே சகல லோகங்களிலும் சகல விஷயங்களிலேயும் சொல்லி வரவேண்டும் என்று ஆக்ஞாபித்தான். அப்படித் தன் பெயரைச் சொல்லத் தவறுவோர்கள் கடுமையான தண்டனைக்கு ஆளாவார்கள் என்று அறிவித்தான். தன்னையன்றித் தனிப் பரம்பொருள் என்ற கடவுள் வேறு யாருமில்லை என்ற விஷயத்தை எல்லாரும் உணர்ந்தொழுகுமாறு பறையறைவித்தான். எல்லாவற்றுக்கும் மேலாகத் தனது அமைச்சர்களையும் பிரதானமானவர்களையும் விளித்து "இப்போதே செல்லுங்கள்; எனக்கு அஞ்சித் தலைமறைவாகப் பதுங்கி ஒளிந்துள்ள பொல்லாத ஹரியைக் கண்டுபிடித்து அவனை இறுகக் கட்டிக்கொண்டு வாருங்கள். ஹரிதாஸர்களையெல்லாம் பெருந் துன்பத்துக்குள்ளாக்குங்கள்; போங்கள்" என்று கூறி விடுத்தான்.

சர்வாதிகாரியிடம் அதிகாரம் பெற்ற சேவகர்கள் உடனே புறப் பட்டனர். சுரர்களையும் மகரிஷிகளையும் சாது ஜனங்களையும் கொடுமைப்படுத்தினர். நல்ல எளிய மனிதர்கள் பட்ட வேதனைக்கு ஒரெல்லை கிடையாது. ஹிரண்ய தாசர்களும் அவ்வளவு படாதபாடு படுத்தினர். வேதனை தாளாது சாது ஜனங்கள் அனைவரும் ஒன்று கூடினர். பாற்கடலிலே பாம்பணைமீது அறிதுயில் புரியும் நாரா யணப் பெருமானைச் சரணடைந்தனர். தாங்கள் படும் துன்பங் களையும் ஹிரண்யன் படுத்துகின்ற பாட்டையும் முறையீடு செய்து மிகுந்த பக்தியுடன் திருவடி பணிந்தனர்.

கருணாநிதியான சேஷசாயி தன்னை வந்தடைந்த நல்லோர்களைக் கண்டு, "பரமபாகவதர்களே! நீங்கள் இனி எதற்கும் பயப்பட வேண்டாம். கூடிய விரைவிலே ஹிரண்யகசிபுவுக்கு சத்புத்திரன் ஒருவன் பிறப்பான். அந்த நன்மகன் மூலமாக உங்களது துன்பங் கள் அனைத்தும் நீங்கிவிடும்; நீங்கள் சுகம் பெறுவீர்கள்" என்று திருவாய் மலர்ந்தருளினார். நன்மக்கள் அனைவரும் வணங்கி விடை பெற்றுச் சென்றனர்.

இதற்கிடையிலே ஹிரண்யகசிபுவின் மனைவி லீலாவதி கர்ப்ப வதியானாள். அசுரன் மனைவியாக இருந்தாலும் கற்பிற் சிறந்த குணவதி. அறவுணர்ச்சி மிகுந்தவள். முதலிடை கடையில்லா மூலம் பழம் பொருளை உளத்திலே கண்டவள். அத்தகைய சிறப்பு மிக்கவளை ஹிரண்யன் இல்லாத சந்தர்ப்பத்திலே ஒரு தினம் தேவேந் திரன் கவர்ந்து சென்றுகொண்டிருந்தான். அப்படிச் சென்றுகொண் டிருக்கையில் நாரதமகரிஷி எதிரே வந்து தோன்றினார். அவர் தேவேந்திரனைப் பார்த்து, "இந்திரனே! நீ அடாத காரியம் செய் கிறாய்; கற்பிற்சிறந்த உத்தமப் பெண்மணியை அவமதிக்காதே. அவள் கர்ப்பிணியாகவும் இருக்கிறாள். ஆதலால் அவளை என்னிடம் விட்டுவிட்டு நீ சென்றுவிடு" என்று கூறிப் பல நல்லுபதேசங்கள் செய்தார். இந்திரனும் இணங்கி லீலாவதியை நாரதமுனிவரிடம் விட்டுச் சென்றான். அந்த சந்தர்ப்பத்தை மிகவும் நல்ல முறையிலே பயன் படுத்திக்கொண்ட நாரதரும் லீலாவதிக்கு நாராயணப் பெருமானின் கீர்த்திக் கதைகளை எடுத்துச் சொல்லி விளக்கி உபதேசித்தார். நாரதர் இயம்பிய உபதேச மொழிகளையெல்லாம் நன்கு செவிசாய்த்துக் கேட்டது லீலாவதியின் கர்ப்பத்திற்குள் உருவாயிருந்த குழந்தை. அத்திருக் குழந்தை கருவறைக்குள் இருக்கும்போதே நாரத முனிசிரேஷ்டரின் மூலமாக நாராயண மகா மந்திரோபதேசம் பெற்றுவிட்டது.

தன் மனைவியைத் தேடிக்கொண்டு அங்கே வந்த ஹிரண்யகசிபு விடம் இந்திரன் வந்து செய்தவற்றைச் சொல்லி லீலாவதியை ஒப்படைத்துவிட்டுப் போனார் நாரதர். பின்னர் ஹிரண்யன் தேவேந்திரனைப் பிடித்துக்கொண்டு வந்து வேதனைப் படுத்தி சிறையில் வைத்தான்.

சில நாட்கள் கழிந்ததும் நன்னிமித்தத்திலே நல்லவோர் ஆண் மகவைப் பெற்றெடுத்தாள் உத்தமி லீலாவதி. அந்த சுபமுகூர்த்தத்திலே மலர்மாரி பொழிந்தது; கனக மாரி பொழிந்தது; முத்து மாரி பொழிந்தது; ஆண் குழந்தை பிறந்த நற்சேதி கேட்ட ஹிரண்யகசிபு பெரு மகிழ்ச்சி கொண்டான். எங்கும் குதூகலம்; எங்கும் கோலாகலம்; எங்கும் திருவிழா எனக் கனகனது ஆணை செல்லுமிடமெல்லாம் நிரம்பியிருந்தது. பசுக்கள், நன்செய்கள், பொன், அன்னம் ஆனவற்றைத் தானங்களாகச் சிறப்பாகச் செய்தான். பலவிதமான தருமங்களையும் வழங்கினான். தனது அருமைச் செல்வனுக்குச் செய்யவேண்டிய ஜாதகர்மா முதலிய விசேஷங்களைச் செய்து பிரகலாதன் என்று நாமகரணம் செய்தான்.

பிரகலாதனுக்கு வித்தியாப்பியாசம் தொடக்கிவைக்கவேண்டிய வயது வந்தது. ஹிரண்யன் தனது அசுரகுல குருவான சுக்கிராசாரியரை அழைத்துத் தன் அருமை மகனை அவரிடம் ஒப்படைத்து கற்பிக்க வேண்டியதனைத்தையும் நிறைவாகக் கற்பிக்குமாறு ஏற்பாடு செய்தான். பிரகலாதனைப் பரிவுடன் ஏற்றுக்கொண்ட சுக்கிராசாரியரும் அவனை உடனழைத்துச் சென்றார். ஏகாதிபதியின் குமாரனைக் கூட்டிச் சென்றதிலே ஆசிரியருக்கு அளவற்ற உவகையேற்பட்டது. பிரகலாதனுக்குச் சகல வித்தைகளையும் நன்றாகப் புகட்டி விட்டால் தனக்கு மகோன்னத நிலை கிடைத்து விடும் என்று எண்ணினார்.

சுபமுகூர்த்தம் பார்த்துக் குலகுரு அக்ஷராப்பியாசம் தொடங்கி வைக்கலானார். எல்லாவற்றுக்கும் முதலாவதாக, "ஹிரண்யாயநம" சொல்லும்படி கூறினார். அதற்கு உடன்படாத குழந்தை பிரகலாதன் விரைவாக, "ஹரி ஓம் நமோ நாராயண சித்தம்" என்று தெளிவாக மொழிந்தான். குழந்தை மொழி கேட்ட ஆசார்யன் வியந்தார், ஆனால் பெரிதும் பயந்தார். "குழந்தாய்! புதிதாக ஒரு பெயரைச் சொல்கிறாயே! இந்தப் பெயர் நீ மனத்தால் நினைப்பதும் கூடாது. உனக்கு இதைக் கற்றுக் கொடுத்தது யார்? இந்தக் கெட்ட பெயரை இனிமேல் நீ சொல்லாதே. நான் சொல்லுகின்ற படியே உனது தந்தையின் பெயரைச் சொன்னால் நீயும் மேன்மை பெறலாம். நானும் உய்யலாம். எங்கே 'ஹிரண்யாய நம' சொல்" என்று கனிவுடன் கெஞ்சினார்.

சுக்கிராசாரியர் சொன்னபடி கேட்கவேயில்லை பிரகலாதன். சிறிதுகூட இசைந்து வரவில்லை. ஆசிரியர், நயந்து பார்த்தார். பயமுறுத்தியும் பார்த்தார். குழந்தை பிரகலாதன் தான் சொன்ன 'ஓம் நமோ நாராயணாய' என்பதையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தான். குழந்தையைத் திருத்தத் தன்னாலாகாது என்பதை நன்குணர்ந்த சுக்கிராசாரியர் பள்ளியிலே அவனை விட்டுவிட்டு நேராக ஹிரண்யனது ராஜசபைக்குச் சென்றார். "திரிபுவன சக்கரவர்த்தியே! குழந்தை பிரகலாதனுக்கு என்னால் முடிந்தவரை நன்கு

போதனை செய்தேன். எனது போதனை பயன்தரவில்லை. தன் உளத்திற்பட்ட ஏதோ ஒன்றையே விடாப்பிடியாகத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருக்கிறான். அவன் சொல்வதைக் கேட்கும் பிள்ளைகள் பிறரும் கெட்டுக்கொண்டிருக்கிறார்கள்" என்று குறையிரந்தார்.

அசுரகுரு அவ்வாறு சொன்னதைக்கேட்ட ஹிரண்யகசிபு வியந்தான். "குருவே! சிறுபிள்ளையை உங்களால் திருத்த முடியவில்லையா? அச்சிறுவன் விளம்பிய தகாத சொல் எதுவோ?" என்று வினவினான். ஆசிரியர் "ஐயோ! இறைவனே! அந்தச் சொல்லை நானும் சொல்வதா? அந்தக் கடுமொழியை நான் கூறமாட்டேன்" என்று பின்வாங்கினார். அது கேட்ட ஹிரண்யன் ஏவலாளை அனுப்பிப் பள்ளியிலிருந்து பிரகலாதனை வரவழைத்தான். வந்த குழந்தையும் தந்தையைப் பணிந்தான். ஹிரண்யன் தன் அருமைக் குமாரனை அன்புடன் எடுத்துத் தன் மடிமீது அமர்த்திக்கொண்டு, "குலகுரு சொல்வதை மறுத்து நீ சொன்னசொல் யாது குழந்தாய்?" என்று வினவினான். தந்தையின் வினவைக் கேட்ட தனயன் மகிழ்ந்தான். மிகுந்த பணிவுடன், "சச்சிதானந்தப் பொருளும் நித்தியானந்த வஸ்துவுமான பரம்பொருளின் திவ்யநாமத்தை விடுத்து அநித்ய அசத்துவப் பொருளைச் சொன்னார் குலகுரு. குலநாசமான அப்பெயரைச் சொல்லாமல் நான் நற்பெயரைச் சொன்னேன்" என்றான். "மைந்த! கூறிய நற்பெயருக்காளானது நான்தானே? வேறு யாரும் உண்டோ? ஆசிரியர் போதித்ததும் அது தானே?" என்று வினவினான் ஹிரண்யன். உடனே பிரகலாதன், "எந்தையே! நாம் அந்தப் பரம்பொருள் ஆவோமோ! அது எப்படி?" என்று எதிர் வினா விடுத்தான். "அப்படியானால் அந்தப் பரம்பொருள் வேறு யாரோ? எங்கே நீ சொல்; பார்க்கலாம்" என்றான் தந்தை. "அந்தப் பரம்பொருள் அங்குமிங்கு மெங்குமாய் நிறைந்து பரவியுள்ள ஏகவஸ்துவான நாராயணனே" என்று உறுதியுடன் விடையிறுத்தான் தனயன்.

தன் மடியிலிருந்த அருமைக் குழந்தை அவ்வாறு கூறியதைக் கேட்ட ஹிரண்யகசிபுவுக்குக் கண்கள் சிவந்தன; உதடுகள் துடித்தன; அச்சமூட்டும் கோபமும் கொண்டவனாகத் தன் குமாரனைக் கீழே இறக்கிவிட்டான். சீற்றத்துடன், "அடே! சிறுவா! இப்படிப்பட்ட சொல்லை உனக்குப் போதித்தது யாரென்று சீக்கிரம் சொல்" என்று மருட்டினான். சிறுவன் பிரகலாதன் கலக்கம் கொள்ளாத அமைதியான உள்ளத்தோடு, "எல்லாப் பொருட்களுக்குள்ளும் எவன் சர்வாந்தர்யாமியாக இருந்து விளங்குகின்றானோ அந்த நாராயணனே இவ்வாறு போதித்தவன்" என்று விடைதந்தான். "சீ! மடையா! கெடுமதி கொண்டவனே! சர்வேஸ்வரனான எனக்கு முன்னாலேயே கொஞ்சமும் அஞ்சாமல் எவனையோபற்றிப் பலபடியாகப் போற்றுகிறாயே, வெகு நன்றாயிருக்கிறதே உன் கூற்று! அந்த நாராயணன் யாரடா?" என்று சீறினான் ஹிரண்யகசிபு. தந்தையின் பொங்கு சீற்றம் கண்டும் சிறுவன், "சமஸ்த லோகங்களும், அண்ட

சராசரங்களும், சஜீவ நிர்ஜீவ வஸ்துக்களும் எவனுடைய ஆணையின் வண்ணம் தோன்றினவோ அந்த சர்வேஸ்வரன்தான் நாராயணன்'' என்று சாற்றினான். ஹிரண்யகசிபு சிரித்தான். ''அடே? அறிவிலி! சர்வேஸ்வரனாக நான் துலங்கும்போது அப்படி வேறொருத்தன் யாரடா இருக்க முடியும்? சிறுபிள்ளைத்தனமாக என்னவெல்லாமோ வீண் வார்த்தைகள் பேசி நாசமாகாதே'' என்று வெருட்டினான். ''தந்தையீர்! நாராயணனே பரப்பிரம்மம். என்னையும் தங்களையும் மற்றுமுள்ள எப்பொருளையும் படைத்தளிக்கும் ஆதிகர்த்தா அவரே என்பது உறுதி'' என்று மொழிந்தான் சிறு பிள்ளை. தன் குமாரன் கூறியவற்றையெல்லாம் கேட்ட ஹிரண்யகசிபு பக்கத்திலிருந்த ஏவலர்களைப் பார்த்து, ''குழந்தையின் உள்ளத்திலே எவனோ ஒருவன் புகுந்துகொண்டு அறிவைக் கலக்கியுள்ளான். மறுபடியும் இவனை ஆச்சாரியாரிடம் இட்டுச் சென்று மனத்தை மாற்றச் செய்யுங்கள்'' என்று ஆணையிட்டான்.

சுக்ராசாரியரை அடைந்து குருகுலவாசம் செய்து வந்த பிரகலாதனோ தனது திடமான அபிப்பிராயத்தையே சாதித்து வந்தான். அசுரகுரு பயந்தார். ஏனைய மாணவர்களும் கெட்டுவிடுவார்களோ என்று அஞ்சினார். ஹிரண்யகசிபுவிடம் சென்று முறையிட்டார். உடனே தன் மைந்தனை அழைத்துவரச் செய்து, ''என்ன? உள்ளதை அறிந்துகொண்டாயா?'' என்று வினவினான் ஹிரண்யன். மறுமொழியாகப் பிரகலாதன் தத்துவபோதம் செய்து வியாக்கியானம் தரத் தொடங்கினான். ஹிரண்யன் அடங்காப்பெருஞ்சினம் கொண்டான். தனது அருமைச் சிறு குழந்தையையே தனது பரம விரோதியாகப் பாவித்தான். தனது வீரர்களை வரவழைத்து, ''இவனை என் மகன் என்று கருதவேண்டாம்; குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பு இவன்; எனது அருமைத் தம்பி ஹிரண்யாசுரனைக் கொன்ற எனது பரம விரோதியான ஒரு அயோக்கியன் பெயரைத் திரும்பத் திரும்பப் பயமில்லாமல் சொல்லிக்கொண்டிருக்கிறான். ஆதலால் சித்ரவதைக்கு உட்படுத்திக் கொலை செய்து விடுங்கள்'' என்று கடுமையான ஆணையிட்டான். சர்வாதிகாரியின் ஆணையை அப்படியே எழுத்துக்கெழுத்து பின்பற்றி நடந்து வந்த ஹிரண்யதாசர்களும் குழந்தை பிரகலாதனைக் கொண்டு சென்று விதவிதமான சித்திரவதைக்கு ஆளாக்கினர்.

பலவகையான ஆயுதங்களைக்கொண்டு பிரகலாதனைக்குத்தினர், வெட்டினர், சீவினர், சிதைத்தனர்; கொதிக்கின்ற எண்ணைக் கொப்பரையில் போட்டனர். விஷப்பாம்புகளைக் கொண்டு கொத்தச் செய்தனர். யானையைக் கொண்டு இடரச் செய்தனர். பாறையுடன் கட்டி மலையிலிருந்து உருட்டிவிட்டனர். சமுத்திரத்திலே தூக்கி எறிந்தனர். கொடிய நஞ்சைப் புகட்டினர். மேற்கொண்டு எவ்வளவெல்லாமோ செய்து பார்த்தனர் அசுரக்கொடியோர்கள். அத்தனை சித்திரவதைகளுக்கு மிடையே பிரகலாதன் நாராயணப் பெருமானது திவ்யப் பெரும் பெயரையே இடைவிடாது உள்ளத்தின்

உள்ளே கொண்டமைந்தான். நலம் தரும் சொல்லான 'நாராயண' மகா மந்திரம் பிரகலாதக் குழந்தையின் தோலை வலிவுடையதாக்கி, உடற் சோர்வு பிணி பலவும் போக்கி, அரிவாளைக் கொண்டு பிளந்தாலும் கட்டுமாறு உடலுறுதி தந்து, காத்துக்கொண்டு வலுத்த கவசமாகச் சூழ்ந்திருந்தது. தண்டனைகள் பல தந்து பிரகலாதனைச் சித்திரவதை செய்ய முயன்ற அசுர வீரர்கள் சோர்ந்து போயினர்.

பிரகலாதனுடைய அன்னை லீலாவதியும் தன் அருமைச் சிறு பாலகனுக்கு எவ்வளவோ புத்திமதிகள் போதித்துப் பார்த்தாள். எதுவும் பலித்திடவில்லை. அன்னையை விளித்துப் பிரகலாதன், "தாங்கள் எதற்கும் வருந்த வேண்டாம். யாதொரு தீமையும் எனக்கு ஏற்படாது. நாரத மகரிஷி அருளிய நற்போதத்தை மறந்து விட்டீர்களா, அம்மா? நமக்கினி பயமேது. நாராயணன் அருள் இருக்கும்போது?" என்று தேற்றினான்.

எல்லா விவரங்களையும் அறிந்துணர்ந்த ஹிரண்யகசிபுவும் ஏதும் செய்ய இயலாதவனாகி பிரகலாதனைத் தன் போக்கிலே விட்டு விட்டான். பள்ளிக்குச் சென்ற பிரகலாதன் அங்கிருந்த மாணவர்களையெல்லாம் அழைத்து நாராயண மந்திரத்தை சொல்லும்படி செய்தான். அச்சமடைந்த அவர்கட்குத் தனது அனுபவங்களைச் சொல்லித் தெளிவு தந்தான். பிரகலாதன் வழிபட்ட மாணவர்கள் அனைவரும், "அச்சுதா! அனந்தா! கோவிந்தா! நாராயணா! மாதவா! வாசுதேவா!" என்றெல்லாம் ஸ்ரீ ஹரியைப் பலபடியாக விளித்து நாமாவளி சொல்லினர். சிறுகச் சிறுக எங்கிலும் "ஓம் நமோ நாராயணாய" பரவி ஒலிக்க ஆரம்பித்துவிட்டது.

இஃதுணர்ந்த ஹிரண்யகசிபு ஆற்ற இயலாத மனக் கவலை கொண்டான். "அந்தப் பொல்லாப் பிள்ளையைக் கொண்டு வாருங்கள்; என் கையாலேயே அவனைக் கொன்று விடுகிறேன்" என்று உத்திரவிட்டுக் கொடுவாளைத் தன் கைக்கொண்டு நின்றான். பிரகலாதனை ஏவலாளர் அழைத்து வந்தனர். வாளேந்தி நின்ற பேரசுரத் தந்தை, கைகட்டி முன் நின்ற பேரமைதிக் குழந்தையை விளித்து, "நீ குழந்தையல்ல, பெரும் பேய்! நீயே என்னுடைய பரம விரோதியாக இருக்கவேண்டு மென்பதற்காகவா உன்னைத் தவம் செய்து பெற்றேன்? நானே உன்னைச் சிதைக்கப் போகிறேன்; என்ன சொல்கிறாய்?" என்று கூறினான். "என்னைச் சிதைப்பதாகச் சொல்வதெல்லாம் வீண் பேச்சு, ஐயனே! சர்வஜீவரக்ஷகனான நாராயணன் நினைத்தால்தான் எனக்கு முடிவு நேரும்; இது உறுதி" என்று திடமாகக் கூறினான் குழந்தை.

பேராவேசம் கொண்ட ஹிரண்யாசுரன் அளவு கடந்த கடுங் கோபமடைந்தான். அட்டகாசம் செய்தான். கண்களிலிருந்து சினத்தீ தெறித்தது. பிரகலாதனை மேலும் கீழும் பார்த்து, "அடே

பயலே! நீ குறிப்பிட்ட பரம்பொருள் யாரடா?" என்று கடுமையாக வினவினன். "எங்கும் நிறைந்துள்ள ஹரிநாராயணனே நான் குறித்துச் சொல்லும் பரம்பொருள்" என்றான் நன்மகன். "எங்குமுள்ள உன் பரம்பொருள் எனக்கேன் புலனுகவில்லை?" என்று வினவினன் ஹிரண்யகசிபு. "பரம்பொருள் எங்குமே எதிலுமே என் கண்களுக்குக் காட்சி தந்தருள்கிறான். சத்தியம் இது! தங்களிடம் கொண்ட பேரன்பினலேதான் இந்த பரமரகசியத்தைத் தங்களுக்கு வெளிப்படுத்துகிறேன்; தங்கட்கு நம்பிக்கையில்லாததால் புலப்படவில்லை" என்றான் பிரகலாதன். "பயலே! உன் பேச்சு வெகு அழகாயிருக்கிறதே! வேறுபடும் பல பொருள்களிடையே அவன் பரவிக் கலந்திருப்பது சத்தியமென்றல்லவா சாதிக்கிறாய்! நன்று! நன்று! அத்தன்மையை நான் பரிசோதனை செய்து பார்த்துவிட்டு உன்னை கவனித்துக் கொள்கிறேன். வஞ்சகக் கள்வா! இதோ இங்கு முன் நிற்கின்ற தூணிலும் நீ குறிப்பிட்ட ஹரிப்பொருள் இருக்கிறதோ? நிரூபித்தல் இயலுமா?" என்றான் ஹிரண்யகசிபு.

"எந்தையே! அவன் எங்குமிருப்பான். அவன் இல்லாத இடமென்று வேறு ஒன்றுமில்லை. சாணிலும் உளன். அணுவினைச் சத கூறிட்ட கோணிலும் உளன்; மாமேருக் குன்றிலும் உளன்; இந் நின்ற தூணிலும் உளன்; நீர் சொன்ன சொல்லிலும் உளன்; இத் தன்மை காணுவீர் விரைவில்" என்றான் பிரகலாதன். மைந்தன் உறுதியைக் கண்டான் தந்தை. "நன்று. இத்தூணிலே உனது நாராயணப் பரம்பொருளைக் காட்டுவாய். காட்டத்தவறினல் உன்னைக் கொல்வேன்; உனது குடரைப் பிடுங்கி எடுத்து மாலையாக அணிவேன்; உனது குருதியை உறிஞ்சிக் குடிப்பேன்" என்று வஞ்சினம் கூறினன். "தந்தையீர் 'கொல்வேன், கொல்வேன்' என்று ஏன் திரும்பத் திரும்பப் பயமுறுத்திக்கொண்டிருக்கிறீர்கள். நான் குறித்த ஹரி இந்தத் தூணிலிருந்து தோன்றுவிட்டால் நானே என்னை முடித்துக்கொள்வேன்; இது சத்தியம்" என்றான் பிரகலாதன். உடனே பெருஞ்சினம் கொண்டு இடிநகை செய்த ஹிரண்யகசிபு எதிரேயிருந்த தூணிலே தன்பலங்கொண்ட மட்டும் கையால் அறைந்தான். எதிர்பாராதவிதமாகத் தூண் 'படீர்' என்று வெடித்துப் பிளந்தது. அதனுள்ளிருந்து பெருஞ்சிரிப்புடன் நரசிம்மம் கிளம்பியது. ஹரிநாராயணப் பெருமான் உடல் முழுவதும் மனித உருவத்தோடும் முகம் மட்டும் சிங்க உருவத்தோடும் தோன்றியருளினர். ஆதலால் அத் திருத்தோற்றம் நரசிம்மாவதாரம் என்று புகழப்பட்டது. நரசிங்கப் பெருமானைக் கண்டு பிரகலாதன் ஆடினன், பாடினன், பெருங்களி கொண்டான்.

அதைக் கண்டு அடங்கிப் பொறுக்காத ஹிரண்யகசிபு நரசிம்மத்தைத் தன்னுடன் போர் செய்ய வலுவிலே அழைத்தான். உடனே சினங்தெழுந்த பரம்பொருள் விசுவரூபமெடுத்து ஹிரண்யன் படையினராகிய அசுரக் கூட்டத்தை அடியோடு அழித்தார்.

பின்னர் ஹிரண்யனோடு சமர் செய்ய ஆயத்தமானார். பிரகலாதன் தன் தந்தையைப் பணிந்து வேண்டினான்; "நரசிம்மப்பெருமானுடன் சண்டையிட வேண்டாம்" என்று கெஞ்சினான். "பெருமானைக் கும்பிடுவதே உய்யும் வழி" என்றான். ஹிரண்யன் அதையெல்லாம் சிறிதும் லட்சியம் செய்யவில்லை. "நன்று! வெகு அழகாகச் சொன்னாய். இன்னும் கொஞ்ச நேரத்துக்குள்ளே உங்கள் இருவரையுமே கொன்றுவிட்டு என் வாளாயுதத்தை வணங்குவேன்" என்று கூறிய ஹிரண்யன் நரசிம்மாவதாரப் பெருமானோடு போர் தொடுத்தான். கடும்போர் விளைந்தது. பெருமானும் ஹிரண்யகசிபுவை மாய்ப்பதற்கான உரிய நேரம் வரும் வரை சமர் புரிவது போலப் போக்குக் காட்டி விளையாடினார்.

ஹிரண்யனைக் கொல்வதற்காகவே விசேஷமான முறையில் மனிதனோ விலங்கோ என்றில்லாத தன்மையில் மானுடமடங்கலாகத் தோன்றிய பெருமான், வீடோ வெளியோ என்றில்லாத வாசற்படியிலே, பகலோ இரவோ என்றில்லாத சந்திப்போதிலே தம் மடி மீது கிடத்தி அவனுடலைத் தன் கை நகங்களால் கிழித்துக் கொன்றார். நரசிம்மாவதாரம் ஹிரண்யகசிபுவை சங்காரம் செய்தருளியது கண்ட தேவர்களும், மகரிஷிகளும் தங்கள் துன்பம் நீங்கியவர்களாகி ஆனந்தமடைந்தனர்.

பிரம்மா, ருத்திரர், இந்திராதி தேவர்கள் எல்லோரும் ஹரியின் பயங்கரமான சொரூபத்தைக் கண்டு பயந்து மலர் மழை பொழிந்து பலவிதமாகச் சோபனம் பாடித் துதித்தனர். நரசிங்கப்பெருமானது உக்கிரத்தை சாந்தப்படுத்துவதற்காகப் பிரம்மா லக்ஷ்மிதேவியை நன்கு அலங்காரம் செய்து அவரிடம் அனுப்பி வைத்தார். நரசிம்மப் பெருமான் தன் அருமைப் பக்தனைக் கனிவுடன் நோக்கினார். "பிரகலாதா! உன் தந்தையை நான் கொன்ற போதுங்கூட நீ சிறிதும் வருந்தாதிருந்தாய்; என்னையே பக்தி செய்துகொண்டிருந்தாய். ஆதலால் உன் குலத்தோன்றல்களாகும் எவர்க்கும், அவர்கள் என்ன பிழை செய்தாலும் நான் கொல்லமாட்டேன்; இதுசத்தியம். நீ நல்ல முறையில் ஆட்சி புரிந்து வரக்கடவாய். உரிய காலத்திலே நாம் உனக்கு மோக்ஷம் தருவோம்" என்று வரம் தந்து மறைந்தருளினார்.

மச்ச கூர்ம வராக நரசிம்மாவதாரப் பெருமானைத் தோத்திரம் செய்தவாறு எல்லோரும் தம்மிடம் சென்றனர். ★

## 5. வாமனாவதாரம்

நாராயணப்பெருமானின் பெருங்கருணைக்குப் பாத்திரனான பிரகலாதனுக்குப் புத்திரன் ஒருவன் தோன்றினான். விரோசனன் என்ற நாமம் சூட்டி மிகவும் செல்வமாக வளர்த்து வந்தான் பிரகலாதன். விரோசனன் எல்லாக் கலைகளிலும் நல்ல தேர்ச்சி பெற்றிருந்

தான். மேன்மையான நடவடிக்கை கொண்டவனாக விளங்கினான். தருமை நீண்ட தயாளனாகத் துலங்கினான். பார்ப்பனக் கோலம் கொண்டு தன்னிடம் வந்து யாசகமாகக் கேட்ட தேவர்களுக்குத் தனது ஆயுள் முழுவதையுமே ஈந்த பெருவள்ளல் இவன். ரிஷி சிரேஷ்டர்கள் நால்வருள் ஒருவரான சனத்குமாரனிடம் உபதேசம் பெற்றவன். தவமியற்றுவதைக் கைக்கொண்ட புண்ணியசீலன். இத்தகைய உத்தமனுக்குத் தேவி என்ற பெயருடைய மனைவியிருந்தாள். விரோசன தேவியாருக்கு குமாரன் ஒருவன் பிறந்தான். அந்தத் தனயனும் தந்தையைப் போலவே ஆண்மையும் அறிவும் அழகும் ஆற்றலும் அருளும் உருவும் பிறவும் உடையவனாகித் திகழ்ந்தான். அல்லும் பகலும் அனவரதமும் ஹரிஸ்மரணை செய்து வந்தான். பெற்றோர் தம் அருமைப் புதல்வனுக்கு பலி என்ற பெயர் சூட்டி மிகவும் சிறப்புடன் பாலித்து வந்தனர்.

முன்பொரு ஜன்மத்திலே சிவன் கோவில் ஒன்றிலே எலியொன்று வாழ்ந்து வந்தபோது திருக்கோவில் தீபத்திலேயுள்ள திரியைத் தூண்டிக்கொண்டே எரியச் செய்து வந்த காரணத்தால் சிவபெருமானது திருவருள் நோக்கத்துக்குப் பாத்திரமாகியது. சிவனார் மனம் குளிர்ந்து, "எலியே! பின்பொரு ஜன்மத்திலே நீ மூவுலகங்களுக்கும் ஏகசக்கராதிபதியாய்ச் சிறந்து மிகுந்த செல்வத்துடன் விளங்குவாய்" என்று அருள் புரிந்து ஆசி கூறினார். சிவானுக்கிரகம் பெற்ற எலியே பலியாகத் தோன்றியது.

வர பலத்தாலே பலியின் ஆற்றல் மிகுந்தது. திரிபுவனங்களையும் வெற்றி கொண்டு தன்னாட்சிக்குள் அடக்கவேண்டுமென்று கருத்து வைத்ததாலே பலதரப்பட்ட யாக யஞ்ஞங்களைச் செய்தான். அதன் பலனாக அசுவம், ரதம், சிம்மத்துவஜம், வில், அம்புப்புட்டில்கள் இரண்டு, கவசம் எல்லாம் அடைந்தான். அந்த அரும் பெரும் பொருள்களை எடுத்துக்கொண்டு தனது பாட்டனார் பிரகலாதரிடமும் அசுரகுரு சுக்கிராசாரியரிடமும் சென்று வணங்கினான். அவர்கள் பலிக்குத் தங்கள் உளமார்ந்த ஆசி மொழிந்தனர். பாட்டனார் அவனுக்குக் கவசமொன்றைத் தந்தார். குரு சங்கு ஒன்றைத் தந்தார்.

பெறற்கரிய சிறந்த பொருட்களை யாகப் பலனாகவும் பெரியோர் ஆசிப் பலமாகவும் பெற்ற மகாபலி திக்கு விஜயம் செய்வதற்கு ஆயத்தமானான். இசைக்கருவிகள் பல முழங்கின. மறையவர் வாழ்த்தினர். சிறந்த ஆடையாபரணங்களை தரித்துக்கொண்டான் பலி. பிரகலாதப் பாட்டனாரின் திருவடிகளைப் பணிந்து ஆசிபெற்றுக் கொண்டான். பிரகாசமான நவரத்தினங்கள் பதித்த கிரீடத்தைச் சூடிக்கொண்டான். பொன் விளங்கும் ரதத்திலே ஏறிக்கொண்டு சதுரங்க சேனைகளுடன் திக்குவிஜயம் கருதிக் கிளம்பினான்.

முதன் முதலாக சுவர்க்கலோகம் சென்றான். தேவர்களைச் சமர் செய்ய அழைத்தான். தங்கள் உலகார் திடீரென்று அசுரர்களது

முற்றுகைக்கு உள்ளானதை உணர்ந்த சுரர்கள் கலக்கமடைந்தனர். தங்கள் தலைவன் இந்திரனைக் கூட்டிக்கொண்டு சுரகுருவான வியாழ பகவானிடம் விரைந்து சென்றனர். "தேவ குருநாதரே! முன்பு எங்களிடம் தோல்வியடைந்து ஓடிச்சென்ற அதே அரக்கர்கள் இத் தருணம் தேவலோகத்தையே சூழ்ந்து கொண்டு விட்டார்கள். அசுரர்களை வெல்வது எப்படி என்பது எங்களுக்குத் தெரியவில்லை. தாங்கள்தான் அருள்கூர்ந்து உபாயம் தெரிவிக்கவேண்டும்" என்று வேண்டினர்.

வேண்டுதல் கேட்ட வியாழபகவான், "சுரர்களே! உங்களிடம் அவமானமடைந்த அசுரர்கள் தங்கள் குருநாதராகிய சுக்கிராச்சாரியரிடம் அடைக்கலம் புகுந்தனர். அவரது தயவினாலே யாக யக்ஞம் பல இயற்றினர். யாவராலும் வெற்றி கொள்வதற்கரிய சுவர்ண கவசத்தையும் சுவர்ண ரதத்தையும் மற்றும் வாள் வில் வேல் வாளி ஆகிய ஆயுதங்களையும் பெற்றனர். எல்லாவற்றுக்கும் மேலாகத் தங்கள் குல குருவின் உளமார்ந்த ஆசியைப் பெற்றனர். அவ்வளவு பலம் பெருகியதால்தான் தைரியமாக உங்களை எதிர்த்து வந்து தாக்கியுள்ளனர். உங்களுக்கோ குரு விசுவாசம் என்பது எப்போதும் நிலைத்திருக்கக்கூடிய பண்பல்ல. ஆதலால் இப்போது நீங்கள் அரக்கர்களை வெல்ல முடியாது. சிறிது காலம் உங்கள் ரூபத்தை மாற்றிக்கொண்டு எங்கேனும் ஒளிந்து வாழவேண்டும். உரிய காலத்தில் மகாவிஷ்ணு அம்மகாபலியுடைய கொற்றத்தை ஒடுக்கி உங்கள் ஐசுவரியத்தை மீட்டுத் தந்தருள்வார்; வேறு வழியில்லை" என்று கூறினார். குருநாதன் பணித்தபடியே தேவர்கள் அனைவரும் மறைந்து போயினர்.

திடீரென்று தேவர்கள் அனைவரும் ஒருசேர அந்தர்த்தானமானதைத் தெரிந்த மகாபலி தேவலோகத்தையும் மத்தியலோகத்தையும் பாதாளலோகத்தையும் எளிதிலே வசப்படுத்திக்கொண்டான். பின்னர் ஏக சக்ராதிபதியாகத் திரிபுவனங்களையும் ஆண்டு வந்தான், மகாபலிச்சக்கரவர்த்தி. பின்னர் நூறு அசுவமேத யாகங்கள் புரிந்து கொண்டு தனது பெரும் புகழ் எங்கணும் பரவ வழி செய்தான்.

திதி புத்திரர்களான அசுரர்கள் வெற்றி பெற்றதாலே பெருங் கலக்கமடைந்தாள் சுரமாதாவான அதிதி. தேவர்களது தோல்வி அதிதிக்கு மிகுந்த மனவருத்தத்தைத் தந்தது. முகம்வாடியிருந்தாள். காசியப முனிவர் தம் அருமை மனைவியின் முக மாற்றத்தைக் கண்டார். அவளைப் பரிவுடன் சமாதானம் செய்தார். "பகவானது திவ்விய மேனியைப் பொன்னால் செய்து பூஜை செய்யவேண்டும். பசும்பால் மட்டுமே உணவாகக்கொண்டு பயோவிரதம் மேற்கொள்ள வேண்டும். வழிபாடும் விரதமும் சேர்ந்தால் பகவானே உனக்கு நேரே தோன்றியருள்வான். நீ கோருவதை நிறைவேற்றியருள்

வான்'' என்று கனிவுடன் மொழிந்தார். காசியப மகரிஷி கூறிய படியே அதிதியும் நோன்பிருந்து வழிபட்டாள். நோன்பின் இறுதி நாளிலே ஏராளமான தான தருமங்களைச் செய்தாள். அதிதியின் பூசனைக்கும் விரதத்திற்கும் மனங்கனிந்த பகவான் அவள் முன்னே பிரத்யட்சமானார். ''அதிதிமாதாவே! நாமே உனது மகனாக வந்து கவலை போக்குவோம்.'' என்று திருமொழி பகன்று மறைந்தருளினார்.

நாட்கள் சில சென்றன.

காலநுனித் துணர் காசியபனுக்கும்
வாலதி திக்குமோர் மாமக வாகி
நீல நிறத்து நெடுந்தகை வந்தோர்
ஆலமர் வித்தி னருங்குற ளானான்''

மகாவிஷ்ணு தனது திவ்ய ரூபத்தை மறைத்துக் கொண்டு மிகவும் குள்ளமான ஓர் உருவம் எடுத்துக்கொண்டு அதிதியின் மகனாகத் தோன்றினார். பகவானது குறள்வடிவமான தோற்றம் தான் 'வாமனாவதாரம்' என்று போற்றப்படுவது.

தனது வாமன குமாரருக்கு வயது வளர்ச்சிக்கேற்றபடி விசேஷங்களைச் செய்தும் கலை பயிற்றுவித்தும் சிறிய முறையிலே வளர்த்து வந்தார் காசியபர். பிரம்மாவும், தேவருள் சிறந்தோரும் மகரிஷிகளும் வாமனருக்கு பூணூல், தருப்பை, கமண்டலம், மான்தோல், குடை, யோகதண்டம், சுவர்ண பாத்திரம் எனப் பல்வகைப் பொருள்களை அன்புடன் கொடுத்தனர். தாய் கோவணம் தந்தாள்; தந்தை அரைநாண் தந்தார். சூரியனே மந்திரோபதேசம் செய்தார். அவ்வளவு சிறப்புடனே உபநயன மகோத்சவம் நடந்தேறியது வாமனருக்கு.

சிறந்த முறையில் பிரம்மச்சாரியாகி விட்ட வாமன மூர்த்தி தகுதி பெற்ற தன்மையாலே யாசகத்திற்குக் கிளம்பிவிட்டார். நர்மதா நதி தீரத்திற்குச் சென்றார். அங்கே மேன்மையான முறையிலே அமைந்த யாகசாலையிலே சென்று அசுவமேதயாகம் செய்து கொண்டிருந்த மகாபலிச் சக்ரவர்த்தியைக் கண்டார். பிராமணச் சிறுவரான வாமன பிரம்மச்சாரி பலியைக் கனிவுடன் நோக்கி ''சக்கரவர்த்தி! நீர் சாதாரணமானவர் அல்ல, நாராயண பக்தரான பிரகலாதரின் அன்பான பேரர்; புருஷோத்தமரான விரோசனரின் புத்திரர். உங்கள் உயர் குலமே கொடையளிப்பதில் நற்பெயர் வாங்குவது. உங்கள் குலத்துதித்தார் யாரும் சத்தியம் தவறாதவர்கள். குருசிரேஷ்டர் சுக்கிராசாரியாரின் உதவிகொண்டு பல மகத்தான யாகங்கள் செய்து வருகின்றீர் நீர். எனது மனோபீஷ்டத்தை நீர் பூர்த்தி செய்ய வேண்டும். இதனால் உமக்குப் பெரிய புண்ணியம் சித்தியாகும்'' என்று கூறினார். பிரம்மச்சாரி இயம்பிய இனிய வாசகங்களைச் செவிமடுத்த மகாபலி மன்னன், ''ஐயனே! தங்களுக்கு எது இஷ்டமோ அதைக் கேட்கலாமே! யாகம் புரிந்துகொண்

டிருக்கும் நான் தங்களைப் போன்றவருக்கு வழங்கித் திருப்திப்படுத்துவதுதானே முறை. கேளுங்கள்; தரக் காத்திருக்கிறேன்'', என்று பணிவுடன் கூறினான். அத்தருணம் நோக்கியிருந்த வாமனவதாரப் பெருமானும் உடனே, ''எனக்கு மூன்றடி மண்தான் வேண்டும்; அதையும் என் காலால் அளந்தெடுத்துக் கொள்வேன்'', என்றார்.

வாமனரின் விநோதமான யாசகத்தைக் கேட்டு வியந்தான் மகாபலி. அவர் கேட்ட மூன்றடி மண்ணை வழங்குவதற்கான கிரியைகளில் ஈடுபடலானான். மகாபலியின் துணிவைக் கண்ட அசுரகுரு சுக்கிராசாரியர் எதிர் வந்து தடைசெய்தார். ''வேந்தே! உன்னிடம் யாசித்து நிற்கும் சிறு பிரம்மச்சாரியை யாரென்று கருதினீர்? கபட நாடக சூத்திரதாரியான சாக்ஷாத் மகாவிஷ்ணுவேயாம்! தேவர்களைக் காத்து அசுரர்களைத் தண்டிக்க எண்ணிய குறவனாக வந்து வஞ்சகமான வகையிலே மூன்றடிமண் வேண்டினார். நீர் தத்தம் செய்து கொடுத்த உடனே விசுவரூபம் எடுப்பார். மேலுலகத்தை ஓரடியாகவும், நடுவுலகத்தைக் கொண்டே கீழுலகத்தை ஓரடியாலும் அளந்து முடித்து மூன்றுவது அடிக்கு இடம் கோரி உம்மையே அதற்கு இலக்காகக் குறிப்பார்; இந்த வஞ்சனையை நீர் புரிந்துகொள்ள மாட்டாமல் வாக்குத் தத்தம் செய்துவிட்டீர். இப்படிச் செய்வதால் நீர் மட்டுமல்ல, உமது இனமே அழிவெய்தும். ஆதலால் நான் சொல்வதைக்கேட்பீரானால் நலமுண்டாகும். உள்ளத்திலே ஒன்று கருதி நாவாலே ஒன்று உரைக்கும் வஞ்சக யாசகருக்குத் தர ஒப்புக்கொண்டதை மறுத்துவிடலாம். அது நிதானமான செயலேயாம். ஆபத்துக்குத் தோஷமில்லை என்பதால் நீர் உம்மைக் காத்துக்கொள்ள வாக்கு மீறலாம்'', என்று ஆலோசனை கூறினார்.

குரு கூறியதைக் கேட்டான் மகாபலி. அவரைப் பார்த்து, ''ஆசாரியாரே! சத்தியத்தை மீறுபவன், நரகம் புகுவான் என்று உபதேசித்ததும் தாங்கள்தான், இப்பொழுதோ தாங்கள் என்னவெல்லாமோ சொல்கின்றீர். தருமமும் நீதியும் சத்தியமும் சமயோசிதம்போல மாறக்கூடியனவா? கொள்வது தீது, கொடுப்பது நன்று என்பதும் தாங்கள் அறியாததல்லவே? யாசகம் கேட்டு வந்தவருக்கு இல்லை யென்பது எவ்வளவு இழிவான தன்மை! மேலும் என்னிடம் வந்து யாசிப்பவர் லக்ஷ்மீபதி என்று சொல்லிவிட்டீர். நிரம்ப சந்தோஷம். கொடுப்பவனாகிய என் கை மேலேயிருக்கும்; கொள்பவராகிய மகாவிஷ்ணுவின் கை கீழேயிருக்கும்! இதைக் காட்டிலும் எனக்கு என்ன மேன்மை வேண்டும்?'' என்று மொழிந்து விட்டு சுக்கிராசாரியாரை ஒதுக்கிவிட்டான். பின்னர் தனது சகதர்மிணியான விந்தியாவலியை அழைத்து எள்ளும் நீரும் கொணரச் செய்தான். வாமனரின் கையிலே தாரை வார்த்து மூன்றடி மண் தத்தம் செய்து கொடுத்தான்.

தன் கையிலே நீரும் அதனால் நீருக்குரிய நிலனும் பெற்றதாலே குறவனாக இருந்த வாமனர் திருவிக்கிரமாவதாரம் எடுத்தார். தன்

பரந்த திருவடியொன்றால் வானுலகம் முழுவதையும் அளந்தார். மற்றுமோர் திருவடியால் பூலோகத்தையும் பாதாள லோகத்தையும் அளந்தார். மூன்றாவது அடியளக்க இடமே இல்லை. "மூன்றாவது அடிக்கு இடம் எங்கே?" என்று வினவியபோது மகாபலிச்சக்கர வர்த்தி தனது சிரசைக் காண்பித்தான். அவன் தலையிலே கால் கொண்ட மகாவிஷ்ணு அவனை அழுத்திக் கீழேழுலகத்துள் ஒன்றான சுதலலோகத்திலே செலுத்திவிட்டார். அச்சுதல லோகத்திலேயே மகாபலியை மங்களமாக வாழும்படிச்செய்தார். அவனுக்குவேண்டிய நல்வரங்களை யெல்லாம் வழங்கினார். தானே துவாரபாலகனாக இருந்து அவன் வாழும் இடத்திலேயே காவல் புரிந்தார்.

பின் பெருமான் மகாபலி தொடங்கிவைத்த யாகங்களைப் பிருகு முனிவரின் துணைகொண்டு முடித்து வைத்தார். அவ்வாறாகத் தேவர்களுக்கும்அதிதியம்மையாருக்கும் பேரானந்தத்தை விளைத்துத் தேவலோகத்திலே உபேந்திரனாக இருந்தருளினார்.

மச்ச, கூர்ம, வராக, நரசிம்ம, வாமனாவதாரப் பெருமானை அனைவரும் போற்றித் துதித்தனர். ★

## 6. பரசுராமாவதாரம்.

பிருகு மகரிஷியின் வம்ச வழியிலே தோன்றிய ஜமதக்னி என்ற முனி சிரேஷ்டர் ஒருவர் இருந்தார். அவருக்கு ரேணுகா தேவி என்ற பெயர் பூண்ட தர்மபத்தினி இருந்தாள். அவர்கள் இருவருக்கும் மைந்தர்களாக ஐந்து பேர்கள் தோன்றினர். ஐந்து குமாரர்களும் நன்கு வளர்ந்து கல்வி கேள்விகளிலும் ஒழுக்கத்திலும் சிறந்து விளங்கினர். அந்த ஐவருள்ளும் மிகவும் சிறந்து விளங்கியவர் ஐந்தாவது குமாரராகிய பரசுராமரே. பரசுராமர் மகாவிஷ்ணுவின் அவதாரமாவார். அவர் ஹிமயமலைச் சாரலையடைந்து சிவபெருமானைக் குறித்து கடுந்தவம் புரிந்தார். அவரது தவத்தையுணர்ந்து மகிழ்ந்த ருத்திர மூர்த்தியும் கோடரி யொன்றை ஆசியுடன் தந்தருளினார். சிவபெருமானிடமிருந்து நேரடியாகப் 'பரசு' என்னும் கோடரி ஆயுதத்தைப் பெற்றுக்கொண்டதாலே 'பரசுராமன்' என்ற சிறப்புப் பெயர் பெற்றார்.

அக்காலத்திலே கார்த்தவீரியன் என்னும் அதிபராக்கிரமசாலியான பேரரசன் ஒருவன் புவியை ஆண்டுவந்தான். அவன் ஆயிரம் தடக் கைகளைக்கொண்டு விளங்கினான். லங்காதிபதியான ராவணேஸ்வரனே கார்த்தவீரியனது ஆற்றலுக்குப் பயந்துகொண்டிருந்தான். ஒருநாள் அம்மன்னன் தனது பரிவாரங்களுடன் ஒரு காட்டுக்குச் சென்று வேட்டையாடிவிட்டுத் திரும்பி வந்துகொண்டிருந்தான். வரும் வழியிலே ஜமதக்னி முனிபுங்கவரது ஆசிரமத்தை அடைந்தான். தன்னை அண்டிவந்த அரசனுக்கும் அவனது பரிவார மக்களுக்கும், உரிய முறைப்படி வரவேற்று உபசாரம் செய்து,

ஐவகை உண்டியை அறுசுவை பொருந்த அளித்தார். அத்தகைய அரிய உணவு காட்டிலேயிருந்து ஆசிரம வாழ்க்கை நடத்துகின்ற முனிவருக்கு எவ்வாறு கிடைத்திருக்கும் எனச் சிந்தித்தான் கார்த்த வீரியன். யாகப் பசுவான காமதேனுவாலேயே வழங்கப்பட்டது என்பதைத் தெரிந்தான். அக் காமதேனு தனக்கு வேண்டும் என்று விரும்பினான். உலகிற் சிறந்த பொருள்கள் அனைத்தும் மன்னருக்கே உரியனவாம் என்ற தன்மையால் தனது சேனைகளின் உதவி கொண்டு பசுவைக் கவர்ந்து சென்றுவிட்டான் பலாத்காரமாக.

கார்த்தவீரியனது முறையற்ற செயலைக் கண்ட பரசுராமர் அடங்காத சினங்கொண்டார். "இந்த அரசனுக்குப் புத்தியே கிடையாதா! முனிவனுக்கு உதவவேண்டிய யாகப் பசுவை இவன் எப்படிக் கொண்டுபோகலாம்? அதுவும் உடமைக்காரரின் அனுமதி பெறாமல் பலவந்தமாக எப்படி இழுத்துச் செல்லலாம்? ஆகட்டும், கார்த்த வீரியனை ஒரு கை பார்க்கிறேன்", என்று எண்ணித் தனது கோடரிப் படையும் வில்லம்புகளையும் எடுத்துக்கொண்டு தனியராகச் சென்று கார்த்தவீரியனையும் அவனதுஆட்களையும் எதிர்த்தார். தனதுபரசுப் படையால் கார்த்தவீரியனை வெட்டி வீழ்த்தினார். அவனது புதல் வர்களை விரட்டியடித்தார். போரிலே வெற்றிபெற்றுத் திரும்பிய பரசுராமர் யாகப் பசுவையும் மீட்டுக்கொண்டு வந்து விட்டார்.

நடந்த விவரங்களைக் கேட்டறிந்த தந்தை ஜமதக்னி மிகவும் மனம் உழைந்தார். பரசுராமரைப் பார்த்து, "மகனே! ஆசிரமவாசி களான நாம் பிராமணர்கள், 'அஹிம்ஸா பரமோதர்ம' என்று கருதி யிருப்பவர்கள். நீ கொலை பாதகம் செய்யலாமா? இந்தக் கொலைப் பழி தீரப் புனித நீராடி வா", என்று கூறினார். தந்தை பணித்த படியே பரசுராமரும் புண்ணிய தீர்த்தங்களாடித் திரும்பினார்.

ஒருமுறை ஜமதக்னி மகரிஷி புனிதப் பெருவேள்வியொன்று புரியத் தொடங்கினார். அதன் பொருட்டுத் தூய நீர் கொணருமாறு தன் சகசாரிணியான ரேணுகாதேவியைப் பணித்தார். அவளும் சுத்த ஜலம் எடுத்துவர கங்கை நதிக்குச் சென்றாள். அங்கே ஜலக் கிரீடை செய்துகொண்டிருந்த இரு காதலரைப் பார்த்து சற்றே மனந்திரிந்ததால் காலம் தாழ்த்திவிட்டாள். அதனால் ஜமதக்னி முனிவர் கணித்துவைத்திருந்த நன்னிமித்தம் தவறிவிட்டது. காலம் கடந்து வந்து நீருடன் நின்ற மனைவியைக் கண்டதும் கோபம் வந்தது. உடனே தனது புதல்வர்களைக் கூப்பிட்டு ரேணுகாதேவியின் தலையை வெட்டித் தள்ளுமாறு உத்தரவிட்டார். முதல் நான்கு பேர் களும் தாயைக் கொல்லத் துணியவில்லை. ஆதலால் அவர்கள் நால்வரையும் சண்டாளராகும்படி சபித்தார். ஐந்தாவது குமார ரான பரசுராமர் மட்டும் தந்தை சொற்படியே கேட்டுத் தனது தாயின் தலையை வெட்டி வீழ்த்தினார். தனயன் செய்கையைக் கண்ட தந்தையார் பெரிதும் மகிழ்ந்தார். "உனக்கு வேண்டும் வரங்

கனைக் கேள்; வழங்குகிறேன்'', என்று கூறினர். பரசுராமரும் மிகுந்த பணிவுடன், ''எனக்கு இரண்டு வரங்கள் தந்தருள வேண்டும், தந்தையே!'' என்று வேண்டினர். ''நல்லது, கேள்'' என்ருர் ஜமதக்னி. சற்றும் தாமதியாமல் பரசுராமர், ''ஐயனே! எனது தாய் உயிர் பெற்று எழ வேண்டும்; என் சகோதரர்கள் நால்வரும் சண்டாளத் தன்மை நீங்கிச் சுயநிலை பெறவேண்டும். நான் கோரும் வரங்கள் இரண்டும் இவையே'', என்று சொன்னர். தந்தையும் அவ்வாறே ஆகுமாறு தன் தபோ மகிமையால் அருளினர். ரேணுகாதேவி புத்துயிர் பெற்றெழுந்தாள்! புதல்வர்கள் நால்வரும் பூர்வநிலையுற்று ரிஷிகுமாரர்களாகினர்.

ஒரு முறை கார்த்தவீரியனது மக்கள் பழிக்குப் பழி வாங்கும் பொருட்டு ஜமதக்னி முனிவரின் ஆசிரமத்திற்கு வந்திருந்தனர். அப்போது பரசுராமரும் அங்கேயில்லை. ஜமதக்னி மகரிஷியும், சமாதி நிலையிலே லயித்திருந்தார். அம் மாமுனிவரை அந் நிலையிலேயே வைத்துக் கொன்று சென்று விட்டார்கள் கொடிய ராஜகுமாரர்கள். சிறிது நேரம் தாழ்த்தி வந்த பரசுராமர் தந்தை இறந்துகிடந்த அலங்கோலத்தையும், தந்தையின் சடலத்தின் மீது அழுதுகிடந்த அன்னையின் அவல நிலையையும் கண்டார். தனது தாய் இருபத்தோருமுறை தன் மார்பிலேயும் வயிற்றிலேயும் அலறி அடித்துக் கொண்டதையும் எண்ணினர். பரசுராமரது கோபம் எல்லை மீறியது. உடனே பயங்கரமான சபதம் செய்தார். ''என் அருமைத் தந்தையைக் கொன்றவர்கள் அரசகுமாரர்கள். ஆதலால் அரசகுலத்தைச் சேர்ந்தவர்களையெல்லாம் என் பரசுப் படையால் கொல்வேன். எனது அருமை அன்னை இருபத்தோரு முறை அடித்துக் கொண்டதால், நான் என் தந்தையைக் கொன்றவர்களைக் கொல்வதோடல்லாமல், க்ஷத்திரிய குலத்தையே இருபத்தோரு தலைமுறைக்கு வேரறுப்பேன்,'' என்று வஞ்சினம் கூறினர்.

அன்றிலிருந்து பரசுராமர் அரசகுல காலராக மாறிவிட்டார். பரசுராமர் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே மன்னர்கள் நடுநடுங்கி நிலைகுலைவாராயினர். பரசுராமரும் சாக்ஷாத் மகாவிஷ்ணுவின் அம்சாவதாரம் ஆகையாலே தன் கோரமான பிரதிக்ஞையை நிறைவேற்றியே தீர்த்தார்.

பரசுராமர் தேசசஞ்சாரம் செய்து வருகின்ற நாளிலே அயோத்தி மாமன்னர் தசரதர் தன் மைந்தன் ராமனுக்கு மணம் முடித்துக் கொண்டு மிதிலையிலிருந்து திரும்பிவந்து கொண்டிருந்தார். கல்யாண ராமனுடன் வந்து கொண்டிருந்த தசரதர் எதிரே பரசுராமர் வருவதைப் பார்த்து நடுங்கிப் போனர். வருவது யார் என்பதைத் தந்தை மூலமாக அறிந்து கொண்டார், ராமனும். பரசுராமரும் நெருங்கி வந்து, ''ராமா! உன் பராக்கிரமத்தைச் சோதிக்கவே வந்தேன். நீ சிவதனுசை முறித்துவிட்டாய் என்று கேள்விப்பட்டேன். அந்தக் கார்முகம் மிகவும் பழமையானது. இதோ என்

கையில்லை வாங்கி வளைக்க முடியுமா என்று பார்" என்று கூறினார். ராமனும் அதற்கு இணங்கினார். பரசுராமனது வில்லை வாங்கி நன்கு வளைத்து அதற்கு நாண் பூட்டினார். அதிலே அம்பையும் கோத்தார். "பரசுராமரே! நீர் கொடுத்த வலிய வில்லை வளைத்து நாணேற்றி அம்பு தொடுத்து விட்டேன்; இந்த அம்புக்கு இலக்கு எது? உடனே சொல்லுங்கள். பிரம்ம ரிஷியாகிய உங்களை நான் கொல்லக்கூடாது" என்றார் ராமன்.

ராமனது பேராற்றலைக் கண்டு வியந்த பரசுராமர் தான் அது நாள் வரை புரிந்து சேமித்து வைத்திருந்த தபோ பலத்தை இலக்காக வைத்துவிட்டார். அம்பு காட்டிய ராமன் பரசுராமரது தபோ மகிமையை தனக்குள் ஏற்றுக்கொண்டு அவரைப் போக விடுத்தார்.

தான் அவதாரம் செய்ததன் நோக்கம் நிறைவேறியதென்று கண்ட பரசுராமரும் விடைபெற்றுச் சென்றார். ★

## 7. ராமாவதாரம்

புனிதமான சரயூ நதி பாய்ந்து வளப்படுத்தும் சிறந்த கோசல நாட்டினை அயோத்திமா நகரத்தைத் தனது ராஜதானியாகக் கொண்டு தசரதன் என்பவன் ஆண்டு வந்தான். புகழ்பெற்ற பல அரசர்களைக் கொண்டு சிறந்த சூரிய வம்சமான ரகு வம்சத்திலே தோன்றிய பெருந்தகை தசரதன். வசிஷ்ட மகரிஷியை குல குருவாகவும் சுமந்திரன் என்னும் மகாமேதாவியைத் தனது பிரதம மந்திரியாகவும் அடைந்த பாக்கியசாலி. நல்ல தர்மாத்மா. கொடை வள்ளல். ஆகையால் 'தருகை நீண்ட தயரதன்' என்ற புகழ் பெற்றவன். அவனுக்கு மிகவும் பிரியமான மனைவியர் மூவர் இருந்தனர். அவர்களுள் பட்டமகிஷி கௌசல்யாதேவி. மற்ற இருவரும் கைகேயி, சுமித்திரை என்பவர்கள். சகலவிதமான சௌபாக்கியங்களையும் அனுபவித்து வந்த தசரதனுக்குச் சந்தான பாக்கியம் மட்டும் ஏற்படவில்லை. பல ஆண்டுகளாகப் புத்திரப் பேறு இல்லாததால் பெரிதும் மனம் வருந்திய தசரதன் தனது ரகுவம்சமே தன்னோடு நசித்துவிடுமோ என்று பயந்தான். ஆசார்யரான வசிஷ்ட மகரிஷியிடம் தன் குறையைத் தெரிவித்து புத்திரப் பேற்றுக்கான உபாயம் சொல்லுமாறு வேண்டிக்கொண்டான்.

மன்னனின் வேண்டுகோளைச் செவிமடுத்த திரிகால ஞானியான வசிஷ்டர் தேவரகசியம் ஒன்றைத் தசரதனுக்குத் தெரியப்படுத்தலானார். "மகாராஜா! புலஸ்தியமாமுனிவரின் குலத்தில் தோன்றிய வைச்சிரவணன் எனபவனுக்கு அவனது இளைய மனைவி கைகேசியின் மூலமாக ராவணன், கும்பகர்ணன், சூர்ப்பணகை, விபீஷணன் என்ற நான்கு மக்கள் உண்டாயினர். எல்லார்க்கும் இளையவனான விபீஷணனே நன்மகன், அறவோன். முந்தைய மூவரும் மிகவும் பொல்லாதவர்கள். ராவணனும் கும்பகர்ணனும் கடுந்தவம் புரிந்து

ஆற்றல் பெற்றவர்கள். அதிலும் ராவணன் இயற்றிய தவம் மிகவும் கோரமானது. அதன் பயனாக அவன் அளப்பரிய சக்தியைப் பெற்று விட்டான். திக்குவிஜயம் செய்து அஷ்டதிக்கு பாலகர்களையும் தோற்கடித்து அவர்களது செல்வங்களையெல்லாம் கவர்ந்து அவர் களையெல்லாம் அடிமை கொண்டவன். சுவர்க்கலோகம், மத்திய லோகம், பாதாளலோகம் என்ற மூன்றையும் தன் வசமாக்கித் திரிபுவன சக்கரவர்த்தியாகிவிட்டான். அவன் மிகுந்த துஷ்டனான படியால் தேவர்களையும், ரிஷிகணங்களையும், சாது ஜனங்களையும் பலவாறாகத் துன்புறுத்திக் கொடுமைப்படுத்தினான். திருமூர்த்தி களும் ராவேணஸ்வரனது பெருஞ் சக்திக்கு ஒடுங்கினர். ராவணன் இழைத்த கொடுமை தாங்கமாட்டாத தேவர்களும், முனிவர்களும், நல்லோர்களும் பாற்கடலில் பாம்பணைமேல் பள்ளிகொண்ட பத்ம நாபப் பெருமானை அண்டித் தங்கள் குறையிரந்து வேண்டினர். மகாவிஷ்ணு அவர்கள் முன்பு பிரத்தியட்சமாகி, "பக்தர்களே! நீங்கள் இனி எதற்கும் அஞ்சவேண்டாம். அசுரர்கள் அழியும் காலம் அருகிவிட்டது. நாம் தசரதச் சக்கரவர்த்தியின் குமாரனாக அவதாரம் செய்வோம். தேவர்கள் அனைவரும் பூலோகம் சேர்ந்து வானரர் களாகத் தோன்றுவார்கள். ராவணாதியர்களை நாம் அடியோடு நாசம் செய்து விடுவோம். உங்களுக்கு எல்லா நலங்களையும் உண்டாக்கு வோம்" என்று திருவாய் மலர்ந்தருளினார். எம்பெருமான் அவதாரம் செய்வதற்குத் தக்க பருவம் நெருங்கிவிட்டதாலே நீர் ரிஷ்யசிருங்க மகரிஷியைத் தலைமையாகக் கொண்டு புத்திர காமேஷ்டி யாகம் செய்யும்; உம்முடைய குறைவு நீங்கி நிறைவுபெறும்" என்று மொழிந்தார்.

குலகுருவின் ஆசியுடன் கலைக்கோட்டு மாமுனிவரைப் பிரதான மாகக் கொண்டு புத்திரகாமேஷ்டி யாகத்தைப் பெருஞ் சிறப்புடன் செய்தார் தசரதச் சக்கரவர்த்தி. யாகத்தின் நற்பயனாக மூத்த மனைவியான கௌசல்யாதேவியிடம் மகாவிஷ்ணுவே ஸ்ரீ ராமனாக அவதாரம் செய்தார். அந்தத் திருத்தோற்றமே ராமாவதாரம் எனப்படுவது. கைகேயியிடம் பரதனும், சுமத்திரையிடம் லக்ஷ்மண னும் சத்துருக்கனும் தோன்றினர். மிகவும் அருமை பெருமையுடன் செல்வமாக வளர்ந்து வந்த தசரதர் திருக்குழந்தைகள் நால்வரும் கல்வி கேள்விகளிலும் பல கலைகளிலும் மேம்பட்டு விளங்கினர். அன்பு, அருள், அழகு, அறிவு, ஆற்றல் கொண்ட இளங் காளைகளாக வளர்ந்து விளங்கினர்.

அதுசமயம் விசுவாமித்திர மகரிஷி தசரதச் சக்கரவர்த்தியின் முன்பு தோன்றினார். தான் செய்யவிருக்கும் யாகத்தை ரட்சிக்கும் பொருட்டு ஸ்ரீ ராமலெக்ஷ்மணர்களை தம்முடன் அழைத்துச் சென்றார். தான் பெற்றிருந்த அஸ்திர சாஸ்திர வித்தைகளை யெல்லாம் தனது பரிபூரண ஆசியுடன் ராமனுக்குக் கற்றுக்கொடுத் தார். செல்கின்ற வழியிலே தாடகை என்ற பொல்லா அரக்கியைக் கொன்றார் ராமன். விசுவாமித்திரர் செய்த மாயாகம் ராமலக்ஷ்மணர்

புரிந்த காவலால் இடையூறின்றி முடிந்தது. பின்னர் விசுவாமித்திரர் அவர்களை அழைத்துக்கொண்டு விதேக நாட்டின் தலைநகரமான மிதிலை நோக்கிச் சென்றார். மிதிலைக்கு மன்னனாக விளங்கியவன் பரம வேதாந்தியாக விளங்கிய ராஜரிஷியான ஜனகன். மிதிலைக்குப் போகின்ற வழியிலே ராமனது கால்தூசு பட்டுப் பாறையொன்று அணங்காக மாறியது. அவள் கௌதம மகரிஷியின் மனைவி அகல்யா என்றும் அவரது சாபத்தால் கல்லாகிக் கிடந்தாள் என்றும் விசுவாமித்திரர் வாயிலாகத் தெரிந்தார் ராமன். ராம லக்ஷ்மணர் விசுவாமித்திரருடன் மிதிலை சேர்ந்தனர்.

ஜனக மகாராஜா அவர்களைப் பரிவுடன் வரவேற்று நன்கு உபசரித்தார். விசுவாமித்திரருடன் வந்திருந்த குமாரர்களைப் பார்த்து விவரம் கோரினார். விசுவாமித்திரரும், "ஜனக பூபதியே! இவர்கள் இருவரும் புகழ்பெற்ற இக்ஷ்வாகு குலத் தோன்றல்கள். கோசலச் சக்கரவர்த்தி தசரதனது புத்திரர்கள். மூத்தவனாக விளங்கும் ராமன் உன்னிடமிருக்கும் சிவதனுசின் வல்லமையைப் பரிசோதிப்பான்" என்று சொன்னார். மாமுனிவர் மொழிந்தது மன்னனுக்கு அமுதம் வார்த்தது போலிருந்தது. ஏனெனில் சிவதனுசு ஜனககுமாரியினது திருமணத்திற்கு இடையூறாக இருந்தது. அந்தக் கார்முகம் மிகவும் வலிமை கொண்டது. அதனை எடுப்பதோ வளைப்பதோ இயலாத காரியம். "எந்த வீரமகன் சிவ வில்லைத் தூக்கி வளைக்கிறானோ, அவனுக்கே எனது குமாரி சீதையை மணம் செய்து கொடுப்பேன்" என்று அறிவித்திருந்தான் ஜனகன். அத்தகைய ஆண்மை மிக்க வீர குமாரன் அன்று வரை வராததால் சீதைக்குக் கல்யாணமே ஆகாதோ என்று ஏங்கிக் கவலை கொண்டிருந்தான். அவ்வாறு நைந்திருந்ததாலேதான் விசுவாமித்திரரது மொழிகள் பேருவகை தந்தன ஜனகனுக்கு. ஜனகன் ஆணையிட்டான். சிவதனுசைப் பல பேர் கூடி இழுத்து வந்தனர். விசுவாமித்திரரது உத்தரவையும் ஆசியையும் பெற்ற ராமன் வில்லை எளிதாகத் தூக்கி நிறுத்தினார். நாண் பூட்ட வளைக்கும்போது வில்லே முறிந்துவிட்டது. சீதாராம கல்யாணத்தைப் பெருஞ் சிறப்புடன் செய்யப் பலத்த ஏற்பாடுகள் செய்தான் ஜனகன். அயோத்தியிலிருந்து தசரதச் சக்கரவர்த்தியும், தனது மனைவியர், மக்கள், மந்திரி, பிரதானியர் சகிதம் மிதிலைக்கு வந்து சேர்ந்தார். சீதாராம திருக்கல்யாண மகோத்சவம் கோலாகலமாக நடந்தேறியது. விண்ணவர் மண்ணவர் எல்லாரும் மகிழ்ந்தனர். சீதையும் ராமனும் திருமணத்தவிசில் ஒன்றியிருந்த திருக்காட்சி போகமும் யோகமும் இணைந்திருப்பது போன்றிருந்தது. திருமணம் முடித்து வைத்த விசுவாமித்திர மகரிஷி எல்லாரிடமும் விடை பெற்றுக்கொண்டு, தன் காரியம் முடிந்ததென்று கருதி, தவம் செய்யச் சென்றுவிட்டார்.

சில நாட்கள் மிதிலையிலே தங்கியிருந்த பின் தசரத மகாராஜா தனது மணமான குமாரர்களையும் பரிவாரங்களையும் பந்து ஜனங்களையும் அழைத்துக் கொண்டு அயோத்திக்குத் திரும்பலானான்.

திரும்பும் வழியிலே கல்யாண ராமனை எதிர்த்து நின்றார் பரசுராமர்: "ராமா! நீ மிதிலையிலே முறித்தது ஏற்கனவே பழுதுபட்ட சிவ வில்லைத்தான்; என்னிடமுள்ள வலிய விஷ்ணு தனுசை எங்கே முறித்துவிடு, பார்க்கலாம்!" என்றார். பரசுராமரது மாவில்லை வாங்கி வளைத்த ராமன் கர்வபங்கம் செய்து அவரது தபோ பலத்தை யெல்லாம் பெற்றுக்கொண்டு விடுத்தான். பரசுராமர் தன்வழி போனார். ஏனையோர் அயோத்தி திரும்பினர்.

சின்னாட்கள் சென்ற பின் தசரத சக்கரவர்த்தி தன் மூத்த குமாரனை ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யத் தீர்மானித்தான். மந்திரி பிரதானியர்களைக் கலந்து ஆலோசித்தான். அனைவரும் முழு மனத்துடன் சம்மதம் தெரிவித்தனர். குல குருவான வசிஷ்ட மகரிஷி மறுதினமே நாளொன்று குறிப்பிட்டார். அதைக் கேட்டாள் கைகேயினது உற்ற தாதியான மந்தரை என்ற கூனி, உடனே கைகேயியிடம் ஓடோடியும் சென்றாள். "அம்மா! ராமனுக்கு நாளைய தினம் மகுடாபிஷேகம்; தெரியுமா உனக்கு?" என்று வினவினாள். அது கேட்டு மகிழ்ந்த கைகேயி, நன் முத்துமாலை யொன்றைப் பரிசாக அளித்தாள். 'துன்னரும் கொடுமனக் கூனி', அதனை ஏற்காது வீசியெறிந்தாள். "என்னம்மா, இது? வருந்துவதை விட்டு மகிழ்கிறீர்களே! எல்லோரையும் உங்கள் குமாரர் என்றே நினைத்திருக்கிறீர். அது தவறு. உங்கள் குமாரன் பரதன் அல்லவா முடிபுனையவேண்டும்? ராமன் முடி சூடினால் நீங்கள் கௌசல்யைக்கு அடிமையாகிவிடுவீர்கள் என்பது நினைவிருக்கட்டும். தசரதச் சக்கரவர்த்தி உம்மிடம் மிகுந்த பரிவு காட்டியதெல்லாம் பாசாங்குதானோ? ஆதலால் உடனே நீர் சக்கரவர்த்தியிடம் அவர் உமக்கு ஏற்கனவே வாக்களித்திருந்த இரண்டு வரங்களைக் கோருங்கள். ஒரு வரத்தால் ராமனைக் காட்டுக்கு விரட்டுங்கள்; மற்றொரு வரத்தால் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வையுங்கள்" என்று பலவாறு துர்போதனை சொல்லி கைகேயியின் மனத்தைப் பேதிக்க வைத்துவிட்டாள்.

மனம் கெட்ட கைகேயி மிகவும் பிடிவாதமாகச் சாதித்து தசரத மன்னனிடமிருந்து தான் விரும்பிய இரண்டு வரங்களையும் பலவந்தமாகப் பெற்றுவிட்டாள். அதன் விளைவாக ராமன் பதினான்கு ஆண்டுகள் வனவாசம் செய்வதற்காகப் புறப்பட ஆயத்தமானார். ராமனுடன் அவரது மனைவி சீதையும் தம்பி லக்ஷ்மணனும் கிளம்பினர். தனது அருமருந்தன்ன தலை மைந்தன் வனவாசம் புரியச் சென்றதறிந்த தசரதன் உயிர் நீத்தான்.

ராமர் தன்னுடன் பிடிவாதமாக வந்துகொண்டிருந்த நகர மாந்தர்களையெல்லாம் ஒரு வகையாக நந்திக் கிராமத்தினருகே விட்டு விட்டு மேற்கொண்டு சென்றார். கிராதர் வேந்தனாகிய குகனைக் கங்கை நதிக் கரையிலே சந்தித்து அவனுதவியால் அப்புண்ணிய நதியைக் கடந்தனர். அவனது பரிவான வேண்டுகோளை மறுத்து மேற்கொண்டு சென்று சித்திரகூட பர்வதத்தையடைந்து அங்கே சில நாட்கள் தங்கியிருந்தார் ராமன்.

இதற்கிடையிலே தன் மாமன் வீட்டிலிருந்து அயோத்தி நகரம் வந்தடைந்து எல்லா விவரங்களையும் அறிந்துகொண்ட பரதன் தன் அன்னையின் பால் பெருங்கோபம் கொண்டான். உடனே தனது தமையன் ராகவனை அழைத்து வந்து சிம்மாசனத்தில் அமர்த்த விரும்பினன். படைகள் புடைசூழச் சித்திரகூடப் பருவதத்தையடைந்து தன் தமையன் காலடியில் வீழ்ந்து மன்றாடி வேண்டிக்கொண்டான். "பதினன்கு வருஷங்கள் காட்டிலே வாழ்வேன்" என்ற தனது வாக்குறுதி குலைவது தருமமல்ல என்று துணிந்த ராமன் அயோத்தி செல்ல மறுத்துவிட்டார். ஆனால், வெகுவாகப் பரதன் வேண்டிக் கொண்டதின் பேரில் தனது பாதுகைகளை அவனிடம் அளித்து விட்டுத் தனது பிரதிநிதியாக அரசாளும்படி சொல்லி விடை தந்தனுப்பினர். பரதனும் தான் சன்யாசிக்கோலம் பூண்டு நந்திக் கிராமத்திலேயே ராமன் வரும்வரை அவனது அடிமையாக இருந்து ஆட்சிபுரியப் போவதாக உறுதி கூறிச் சென்றான்.

ராமனும் இனித் தான் அங்கிருப்பது தகாது என்று எண்ணி தண்டகாரண்யம் போய்ச் சேர்ந்தார்.

தண்டகாரண்யம் சென்றதும் அத்திரி மகரிஷியால் நன்கு உபசாரம் பெற்றார். அங்கே தன்னைச் சரணடைந்த முனிவர்களுக்கெல்லாம் அபாயம் பிரதானம் செய்து அப்பால் மேற்கொண்டு சென்றார் ராமன். செல்லும் வழியிலே சீதாதேவியைத் தூக்கிச் சென்ற விராதன் என்னும் அசுரனைக் கொன்றார். பின்பு ராம சீதா லக்ஷ்மணர் மூவரும் அகஸ்திய மகரிஷியின் ஆசிரமத்தை அடைந்தனர். அங்கே அகஸ்தியர் ராமபிரானுக்குப் பலவகை அஸ்திர சாஸ்திரங்களையும் ஆற்றல் மிகுந்த மகாமந்திரோபதேசத்தையும் தந்தருளினர். அகஸ்திய முனிவர் பணித்தபடியே பஞ்சவடி என்ற புனிதமான இடத்தை நோக்கிப் புறப்பட்டனர், போகும் வழியிலே ஜடாயு என்ற கழுகுவேந்தனைக் கண்டு பணிந்தனர்.

ராமபிரான் பஞ்சவடியிலே தனது மனைவியுடனும் தம்பியுடனும் ஆனந்தமாக அமைதியாக வாழ்ந்து வந்தார். ஒருநாள் ராவணனது தங்கையான சூர்ப்பணகை என்ற அரக்கி சஞ்சாரம் செய்து கொண்டு பஞ்சவடிப் பக்கம் வந்துசேர்ந்தாள். ராமன் வசித்த ஆசிரமத்தினருகே சென்றாள். ராமபிரானது அழகையும் உடலமைப்பையும், கவர்ச்சியான தோற்றத்தையும் கண்டாள். அரக்கி, சொக்கிப் போனாள். ராமனோடு உறவாட நினைந்தாள். மோகம் தலைக்கேறியது. உடனே மந்திர சக்தியால் தன்னை 'காமவல்லி' என்ற மிக அழகிய மங்கையாக மாற்றிக்கொண்டாள். ராமனை நெருங்கினாள். மாயம் செய்து பார்த்தாள். வந்தவள் அரக்கியென்று உணர்ந்த ராமனும் விளையாட்டுப்போக்காக இருந்துவிட்டார். அந்தச் சமயம் பார்த்து சீதை குடிசைக் கதவைத் திறந்துகொண்டு வந்து நின்றாள். சீதாபிராட்டியின் திவ்ய சௌந்திரியத்தையும் நங்கையாள் தன்மையையும் கண்டு பிரமித்துவிட்டாள் சூர்ப்பனகை. ராமன் சொக்கன் என்றால் சீதை அவனுக்கேற்ற சொக்கியாக இருந்தாள். அந்தச்

சொக்கழகார்ந்த இருவரையும்கண்ட சூர்ப்பனகையின் உள்ளத்திலே பொறுமை கொழுந்துவிட்டெறிந்தது. அழகின் சிகரமாக விளங்கிய சீதாதேவியிருக்குமட்டும் ராமன் எந்த ஆரணங்கையும் ஏறிட்டுப் பார்க்கமாட்டார் என்றுணர்ந்ததால் அவளைத் தூக்கிச் செல்ல விரைந்தாள். உடனே சுயரூபம் வெளிப்பட்டது. அதனைக் கண்ட லக்ஷ்மணன் வேகமாகவந்து சூர்ப்பனகையரக்கியைத் தாக்கி அவளது மூக்கையும் மார்பையும் அறுத்துத் தண்டித்து விரட்டினான். அடாதது செய்து படாததுபட்ட சூர்ப்பனகை அலறிக்கொண்டு ஓடினாள். பழிவாங்கும் பொருட்டுத் தன்னுடன் கரதூஷணாதி ராட்சசர்களை அழைத்து வந்து ராமன் மீது போர் தொடுக்கச் செய்தாள். வீரனான ராமன் தன்னை எதிர்த்து வந்த அத்தனை அரக்கர்களையும் கொன்றொழித்தான்.

அங்கபங்கமுற்று கரதூஷணாதியர்களையும் முடித்து வைத்த பொல்லா அரக்கி சூர்ப்பனகை லங்கை சென்று தனது அண்ணன் ராவணனிடம் முறையிட்டு அலறி அழுதாள். அவளது முறையீட்டுக்கிடையே சீதாதேவியின் தெய்வீக சௌந்தர்ய வருணனை வந்தது. தனது தங்கையின் அவல ஓலத்துக்குள்ளே கிடந்து மிளிர்ந்த நங்கை சீதையின் பேரழகை எண்ணி வியந்தான். மற்றெதையும் மறந்தான். சீதையைப் பஞ்சவடியிலிருந்து கவர்ந்து வந்து விடுவது என்று உறுதிகொண்டுவிட்டான். உடனே தனது மாமன் மாரீசனையும் அழைத்துக் கொண்டு பஞ்சவடி சேர்ந்தான். மூவர் இனிதே வாழ்ந்த குடிசையின் முன்பு மாரீசனைப் பொன்மானாகப் போகச் செய்தான். அந்த மாயப் பொன்மானைத் தனக்குப் பிடித்துத்தருமாறு பிடிவாதம் செய்தாள் சீதாதேவி. தம்பி லக்ஷ்மணனைக் காவல் வைத்துவிட்டு மாரீச மானைப் பிடித்துவரச் சென்றார் ராமன். மாயங்காட்டிய அரக்க மான் ராமனது பிடியுள் அகப்படாது போக்குக் காட்டி வெகு தூரம் இழுத்துச் சென்று விட்டது. அலுப்படைந்த ராமன் மானை அம்பெய்து கொன்றார். மடிந்து கொண்டிருந்த மாயமான் மாரீசனாக மாறி "ஹா, சீதா! ஹா லக்ஷ்மணா!" என்று ராமன் குரலிலே சொல்லி மடிந்தான்.

அம் மாயவொலி பஞ்சவடிப் பர்ணசாலையிலே கேட்டது. சீதை பதை பதைத்துப் போனாள். எவ்வளவோ சொல்லியும் கேளாதவளாய் லக்ஷ்மணனை உதவிக்குச் செல்லுமாறு பிடிவாதமாக அனுப்பி வைத்தாள். கொடிய விதி வலிமையாக வேலை செய்தது. ராமன் எங்கோ இருந்தார்; அவரைத்தேடி லக்ஷ்மணன் சென்றுவிட்டான். சுயகாரியத்துக்காகத் தன் மாமனையே பலியிட்ட ராவணன் குடிசையிலே சீதை தனித்திருந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டான். சன்னியாசி போல வேஷம் தரித்து குடிசை முன் நின்று யாசித்தான். பிச்சையிட வந்த சீதாதேவியை கவர்ந்து கொண்டு சென்றான். இடைமறித்த ஜடாயுவை வெட்டி வீழ்த்தினான்; இலங்கைக்கு கொண்டு போய் அசோக வனத்திலே சீதாதேவியைச் சிறை வைத்துவிட்டான்.

ராமலக்ஷ்மணர் சோர்வடைந்து நிலைகலங்கிய தன்மையிலே ஆசிரமம் திரும்பினர். சீதையைக் காணாத ராமன் பெருந்துயரமடைந்தார். சோகமயமாக ராமன் அழுது அழுது புலம்பியதைக் கேட்டு வனவிலங்குகளும், புள்ளினங்களும் வருந்தின. பின்னர் சீதையைத் தேடிக்கொண்டு தென் திசை நோக்கிச் சென்றனர். செல்லும் வழியிலே ஜடாயு வெட்டுண்டு கிடந்ததைக் கண்டனர். சீதையை ராவணன் களவாடிச் சென்றதையும் தான் அவனை வழி மறித்து எதிர்த்துப் போர் செய்ததையும் அதன் விளைவாகத் தான் மரண காயப்பட்டுக் கிடப்பதையும் சொன்னது ஜடாயு. விவரம் சொல்லிய ஜடாயு உயிர் நீத்தது. ஜடாயுக்குரிய அந்திமக் கிரியைகளைச் செய்து முடித்து ராமலக்ஷ்மணர் சீதையைத்தேடி மேலும் சென்றனர்.

விசித்திரமான அதிபயங்கர உருவங்கொண்ட கபந்தாசுரனைக் கொன்று முடித்துவிட்டு மதங்க மகரிஷியின் ஆசிரமத்திலே சில நாட்கள் இருந்தனர். பின்னர் தேடிச் செல்லுங்கால் ஹனுமான் என்னும் வானர சிரேஷ்டனின் உதவியால் சுக்ரீவன் என்ற பதவியிழந்த வானரர் கோனைக் கண்டனர். சுக்ரீவன், வாலி என்ற அதிபலசாலியான வானரனின் தம்பி. ராமன் சுக்ரீவன் இருவருக்குமிடையே நல்லுறவு ஏற்பட்டது. வாலியினால் விரட்டியடிக்கப்பட்டு அவமானப்பட்ட சுக்ரீவன் தன் அண்ணன் மேல் பழி தீர்த்துக்கொள்ள ராமனது உதவியை நாடினான். சீதையைத் தேடுவதிலே தான் ராமனுக்கு உதவுவதாகவும் தெரிவித்தான். வாலியைக் கொன்று சுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைப்பதாக வாக்களித்தார் ராமன்.

ராமனது துணை வலியால் சுக்ரீவன் வாலியைப் போருக்கு அழைத்தான். கண்டவர் பலத்திலே பாதி கொள்ளும் தன்மையாலே வாலியை மறைந்து நின்று தாக்க நேரிட்டது ராமனுக்கு. வானர சகோதரர்கள் போர்புரிந்து கொண்டிருந்தபோது மரத்தின் பின்னால் மறைந்திருந்த ராமன் வாலியை அம்பெய்து கொன்றுவிட்டார். தான் வாக்குக்கொடுத்திருந்தபடியே சுக்ரீவனுக்கு மகுடாபிஷேகம் செய்து வைத்தார் ராமபிரான். வாலியின் மைந்தன் அங்கதனும் ராமனுடன் நல்லுறவு கொண்டான்.

ராமன் தனக்குச் செய்த பேருபகாரத்தின் பிரதியாகத் தானும் செய்ய விரும்பினான் சுக்ரீவன். ஆதலால் தனது வானரப் படையினை அழைத்து அவர்களுக்குச் செல்லும் திசை வகுத்துக் கொடுக்கத்தக்க தலைமையின் கீழ் அனுப்பி வைத்தான், சீதாதேவியின் இருப்பிடத்தைத்தேடி தனது படைப் பகுதியை தெற்குத் திசையை நோக்கி அனுப்பி வைத்தான்.

ஹனுமானது தலைமையைப் பின்பற்றிச் சென்ற வானரவீரர்கள் பலவகையிலே பெருங் கஷ்டங்கள் அனுபவித்துத் தெற்கு சமுத்திரத்தின் கரையின் சிறிது தொலைவிலே வந்து நின்றனர். ஜடாயுவின்

மூத்த சகோதரப் பறவையான சம்பாதியானது சீதாபிராட்டியை அசோக வனத்திலே ராவணன் சிறை வைத்திருப்பதைக் கண்டு சொல்லியது. ஜாம்பவான் என்ற முதியகரடி ஹனுமானது பூர்வ விருத்தாந்தங்களை யெல்லாம் சொல்லி விளக்கியதும் தன் உண்மை யான பேராற்றல் தெரிந்தது ஹனுமானுக்கு. உடனே விசுவ ரூப மெடுத்து ராம நாமத்தை ஜபித்தவாறே பெருங்கடலைத் தாண்டி இலங்கையிலே குதித்தான்.

லங்கை சேர்ந்த ஹனுமான் பலவிதமான உருவங்களை எடுத்துக் கொண்டு சீதையைத் தேடி எல்லா இடங்களும் சென்றான். கடைசி யில் அசோக வனத்திலே கற்பினுக் கணியை, தவம் செய்த தவமாம் தையலை சோகத்தாளாய நங்கையை அரக்கியருக்கு நடுவிலே சிறை யிருப்பதைக் கண்டான். கரித் துண்டுகளுக்கிடையே இலங்கும் கங்குபோலப் பொழிந்தாள் சீதை. அசோக மரத்தின் மேலே சிறு குரங்கின் வடிவமெடுத்துக் கொண்டு ஆஞ்சநேயன் அமர்ந்திருந் தான். தன் நாயகனை இனி அடையவே போவதில்லை என்ற முடிவுக்கு வந்த சீதை பிராணத் தியாகம் செய்யத் துணிந்தாள். அந்த சமயத் திலே சஞ்சீவி போலத் தோன்றிய ஹனுமான் ராம நாமத்தை இயம் பியவண்ணம் தேவியார் முன்னால் தோன்றினான். ராமன் தனது அடையாளப் பொருளாகத் தந்திருந்த கணையாழியைக் கொடுத்தான்; சீதை பெரும் மகிழ்ச்சி கொண்டாள். கணையாழியைப் பெற்றதிலே ராமனையே நேரில் கண்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. ஆஞ்ச நேயனை மனமார ஆசிர்வதித்தாள். நினைவுப் பொருளாக ராமனிடம் கொடுக்கும்படி தனது சூடாமணியைத் தந்தாள். ஒருமாத காலத் திற்குள்ளாக தன் நாயகன் தன்னை அழைத்துச் செல்ல வேண்டு மென்றும், தவறினால் தான் உயிர் தரிப்பது துர்லபமென்றும் தெரி விக்க வேண்டுமென்று ஹனுமானை வேண்டிக்கொண்டாள்.

ஜானகியைப் பணிந்து விடைபெற்றுச் சென்ற ஆஞ்சநேயன் அசோக வனத்தையே அழித்துப் பெரு நஷ்டம் விளைவித்தான். தன் னைப் பிடிக்க வந்த அசுரர்களையும் சேனைத் தலைவர்களையும் கொன் றான். இறுதியில் குரங்கின் பெருந் தீங்கை நினைத்த ராவண குமார னான இந்திரஜித் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகம் செய்து ஹனு மானைக் கட்டி இழுத்துக்கொண்டு ராவணசபை சென்றான். ராவ ணன் முன்பு நின்ற ஹனுமான் மிகவும் கம்பீரமான முறையிலே ராமாவதாரச் சிறப்பையும், ராமனது தெய்வீகத்தையும் வீரத் தையும் ஆற்றலையும் விளக்கிக் கூறினான். "சீதைக்கு விடுதலை வழங்கி ராமனிடம் மரியாதையுடன் கொண்டு சேர்ப்பது உத்தமம்", என்று புத்திமதி கூறினான். அற்பக் குரங்கொன்று தனக்குப் புத்திமதி கூறுவதா என்று கருதிச் சினந்த ராவணன் ஹனுமான் வாலுக்குத் தீயிடுமாறு பணித்தான். வாலிலே தீப்பந்தம் எரிந்து சுழல லங்கை நகரத்திற்கே தீ வைத்துவிட்டான் ஆஞ்சநேயன். பின்னர் கடலைத் தாண்டி தன் நேயர்கள் இருப்பிடம் வந்து சேர்ந்தான். தனது வானர வீரர்களுடன் விரைந்து சென்று ராமனைக் கண்டு, "கண்டேன்

சீதையை'' என்று அமுதமொழி இயம்பிப் பணிந்து நின்றான். சூடா மணி தந்து ரகுராமனை ஆனந்த சாகரத்துள் ஆழ்த்தினான்.

ஹனுமான் மூலமாகத் தன் தேவி லங்காபுரியிலே அசோகவனத் திலே சிறையிருப்பதைக் கேள்வியுற்ற ராமன் சுக்ரீவன் உதவியுடன் வானரப் படைகளைக் கூட்டிக்கொண்டு தென் சமுத்திரக் கரையை அடைந்தார்.

லங்காபுரி எரியுண்டதும் ராவணன் சிந்திக்கத் தொடங்கினான். சபை கூட்டினான். சில பேர்கள் புத்திமதி கூறத் துணிந்தனர், பலர் அஞ்சினர். ராவணன் தம்பியாகிய விபீஷணன் எழுந்து அண்ணனை விளித்து, ''ராமன் சாதாரண மனிதனல்லன்; சாக்ஷாத் சர்வேஸ் வரன். முன்பு ஹிரண்யகசிபுவை நரசிம்மாவதாரம் எடுத்துக் கொன்ற பரம்பொருளே இப்பொழுது ராமனாக வந்திருக்கிறார். ராமனது பகையைப் பெறுதல் நம் குலத்தையே நிர்மூலம் செய்து விடும். சீதையை விடுத்து ராமனிடம் சேர்ப்பித்தல் நலம்தரும்'' என்று நயவுரை மொழிந்தான். தம்பியின் அறிவுரையைக் கேட்க மறுத்துவிட்டான் தமையன். உடனே ராவணனை வெறுத்தொதுக் கிய விபீஷண தர்மாத்மாவும் ராமனிடம் சரண் புகுந்தான். சரணாகதி செய்த விபீஷணனை ராமர் தனது சகோதரருள் ஒருவனாக ஏற்றார்.

சேதுபந்தனம் செய்த பின்னர் ராமன் தனது வானர வீர சைனியத்துடன் தாண்டி இலங்கைத் தீவை அடைந்தார். அங்கதன் தூது சென்றதும் பயனடையாததால் ராமன் தீவிரமான போர் தொடுத்தார். ராமனுதியருக்கும் ராவணாதியருக்குமிடையே கடும் போர் விளைந்தது. முதலிலே இராவணனை எச்சரித்து விடுத்தார், 'கோசல நாடுடைய வள்ளலாகிய', ராமன். கும்பகர்ணன், அதிகாயன், இந்திரஜித் ஆகிய பல வலிய அசுர வீரர்களைக் கொன்றார். ராவணனது மூல பல சைனியத்தைச் சின்னபின்னப் படுத்திச் சிதைத்தார். உற்றார், உறவினர், மக்கள் என்று அனை வரையும் இழந்த ராவணனுக்கும் ராமனுக்குமிடையே இறுதியாக வெம்போர் விளைந்தது. ஆற்றல் முழுவதையும் வெளிப்படுத்தி அருஞ்சமர் புரிந்தான் லங்கேசுவரன். ராமனை வெல்லுதல் இயலுமா? ராவணனை மாய்ப்பதற்கென்றே மகாவிஷ்ணு எடுத்த திருத்தோற்ற மல்லவா ராமாவதாரம்! இறுதியில் ராமன் ராவணனை மாய்த்து தேவர்கள் துயர் தீர்த்தார்.

சீதைக்குச் சிறை மீட்சி தந்த ராமபிரான் அயோத்தியை நோக்கிப் புஷ்பக விமானமேறித் திரும்பலானார். சீதையும் லக்ஷ்மணனும், விபீஷணனும், சுக்ரீவனும், ஹனுமானும், மற்றும் பல வானர சிரேஷ்டர்களும் உடன்வர பரதன் தங்கியிருந்த நந்திக் கிராமம் சேர்ந்தார். பதினான்கு ஆண்டுகள் முடியவும் ராமபிரான் திரும்பவும் சரியாக இருந்தது.

அண்ணன் ராமனும், அண்ணி சீதையும், அம்பி லக்ஷ்மணனும் வந்து கண்ட பரதன் மட்டுக்கடங்காத பேரானந்தம் கொண்டான்.

ஸ்ரீ ராமபட்டாபிஷேகம் மிகுந்த கோலாகலத்துடனும் குதூகலத்துடனும் அதிவிமரிசையுடனும் விண்ணும் மண்ணும் ஒருங்கே மகிழ இனிது நடந்தேறியது. விண்ணவர் மலர் மாரியும், பொன் மழையும் பொழிந்தனர்.

அறச் செங்கோல் ஒச்சி அருளாட்சி புரிந்த ராமன் 'ராமராஜ்யம்' என்று புகழ் பெறுமாறு தன் நாட்டைப் பாலித்து வந்தான். ★

## 8. பலராமாவதாரம்

வசுதேவர் யாதவ குலத்துதித்த செம்மல். எல்லா குண நலன்களும் வாய்க்கப்பெற்றவர். சூரசேன மன்னனது குமாரர். உக்கிரசேன மன்னனது அமைச்சராக இருந்தவர். கொடிய கம்ஸனால் சிறையிலிடப்பட்டு மனைவி தேவகியுடன் சிறைக்கூடத்திலேயே வாசம் செய்தவர். அத்தகையவரின் ஏழாவது மைந்தனாகத் தோன்றியவரே பலராமர். ஸ்ரீ கிருஷ்ணரின் அண்ணனாகத் தோன்றினார் பலராமர். அன்னையின் கருவில் உருவாகியிருக்கும் போதே மகாவிஷ்ணுவின் திருவருளால், மாயாதேவியின் மகாசக்தியால், நந்தர் கூட்டத்திலே வாழ்ந்து வந்த வசுதேவரின் இளைய மனைவியான ரோகிணியின் திருவயிற்றுக்கு மாற்றப்பட்ட சிறப்புடையவர். மகாவிஷ்ணுவின் இணைபிரியாது அவரோடு சென்றால் குடையாகவும், அமர்ந்தால் அரியணையாகவும், நின்றால் மரமாகவும், கடலிலே புணையாகவும், பெருமானுக்கு மணிவிளக்காகவும், பூம்பட்டாகவும், சயனித்துக்கொள்ளப் பாயாக விளங்கிய ஆதிசேஷனே, பலராமராக வந்தவர். ராமாவதாரத்திலே தம்பி லக்ஷ்மணனாகத் தோன்றியவரே கிருஷ்ணாவதார காலத்திலே அண்ணன் பலராமராகத் தோன்றினார். தனது அனந்தனை பலராமராகத் தோன்றச் செய்த நாராயணமூர்த்தியே பலராமருக்குள்ளேயிருந்து இயங்கினபடியால் அவரும் 'பலராமாவதாரம்' என்று புகழப்படுகிறார்.

பலராமர் அழகான உடற்கட்டும், அபரிமிதமான பலமும், பேராற்றலும் உடையவர். கிருஷ்ணாவதாரப் பெருமானது தமையனாகத் தோன்றியதாலே அவரிடமிருந்து உபசரணையும், வீரமும், பரிவும் பெற்று விளங்கினார். கண்ணப் பெருமானது திருவிளையாடல்களுக்கெல்லாம் உறுதுணையாக இருந்து பலராமரும் அரும்பெரும் செயல்களைச் செய்தார். கிருஷ்ண லீலைகளிலே பலராம லீலைகளும் சேர்ந்தனவே.

கம்ஸனால் ஏவப்பட்டுத் தன்னுடன் மல்யுத்தம் செய்யவந்த முஷ்டிகன் என்பவனையும் அவனது சகா கூடன் என்பவனையும்

இளம்பிராயமாயிருந்தபோதே கொன்றூர். கிருஷ்ணபிரான் கம்ஸ ஊைக் கொன்றெழித்தபோதே அவனது தம்பியர் எட்டுப் பேர்கள் அவருடன் போர் புரிய வந்தனர். அந்த எண்மரையும் சமர்செய்து கொன்றுவிட்டார். பராக்கிரமசாலியான பலராமர்.

பலராமர் ஒரு காதிலே மட்டும் ஒற்றைக் குண்டலம் அணிந்திருந்தார். உழவுத் தொழிலுக்குப் பேருதவி புரிகின்ற கலப்பையைத் தனது ஆயுதமாகக் கொண்டு விளங்கினூர். அவர் பனம் பூவாலாகிய மாலையை மார்பிலே அணிந்திலங்கினூர். யமுனூதேவியால் வழங்கப் பட்ட ஆடைகளையும் பொன்னணிகளையும் அலங்காரமாகத் தரித்துக்கொண்டார். பனைக்கொடியைத் தனது சின்னமாகக் கொண்டார். ரேவதி என்ற பெண்மணியை மனையாளாகக்கொண்டவர். வாருணி என்ற மற்றோர் மனைவியும் இவருக்குண்டு. பலராமருக்கு சங்கர்ஷணர், நீலாம்பரர், பலதேவர், பலபத்திரர், ஹலாயுதர் என்ற பெயர்கள் உண்டு. மதுபானம் செய்வதிலே விருப்பம் காட்டியவர்.

ஒருமுறை சங்கசூடான் என்பானது சிரோமணியின் விஷயமாக தன் தம்பி கிருஷ்ணனைக் கோபித்துக்கொண்டார். பின்னர் கிருஷ்ணன் அதை விதர்ப்ப நாட்டிவிருந்து கொணர்ந்து கொடுக்கவும் உவகை கொண்டார்.

ருக்மிணி கல்யாண காலத்திலே தம்மோடு சொக்கட்டான் ஆடியதிலே தோல்வியடைந்த ருக்மி என்பான் 'நானே ஜயித்தேன்' என்று பொய் புகன்று சாதித்தபோது அவனைத் தனது கலப்பைப் படையால் சம்ஹாரம் செய்தருளினூர்.

கிருஷ்ணபெருமானுல் ஒருமுறை கோபிமார்களோடு விளையாடுவதற்காக பிருந்தாவனம் அனுப்பப்பட்டுச் சென்றூர். அப்போது தான் அழைத்தும் வராத யமுனு நதியைச் சினம்கொண்டு தமது ஹலாயுதத்தால் இழுத்துவிட்டு வருமாறு செய்தார்.

துரியோதனனது குமாரியான லக்ஷமணையின் பொருட்டு கௌரவ மக்களுடன் ஹஸ்தினுபுரத்தையே தனது கலப்பைப்படையால் இழுத்து கங்கா நதியிலே தள்ளக் கருதினூர். பின்பு துரியோதனன் வெகுவாக வேண்டிக்கொண்டு துதித்தபின் கருணைகூர்ந்து அவ்வாறு செய்யாமல் விடுத்தார். ஜராசந்தனுடன் கோபமடைந்து அவனைத் தனது கலப்பைப்படையால் மோதிக் காயப்படுத்தினூர். இல்வலன் வெந்துவிதன் என்ற பெயர் கொண்ட நிசாசரனையும் வானர வீரனையும் முறையே கொன்றருளினூர்.

மகாபாரத யுத்தம் நடைபெறப் போவதைத் தமது விசேஷ ஞானத்தால் உணர்ந்து தீர்த்த யாத்திரை சென்றூர். செல்லும் வழியிலே வல்லாசுரன் என்பவனேடு சமர் புரிந்து வென்றூர். அவர் தமது யாத்திரையையும் தவத்தையும் முடித்துவந்த தருணத்திலே யுத்த

களத்திலே பீமசேனனும் துரியோதனனும் சண்டையிட்டுக்கொண்டிருந்தனர். பீமசேனன் தனது கதாயுதத்தால் துரியோதனன் இடுப்பிற்குக் கீழே அடித்துக்கொன்று தள்ளி அவன் மகுடத்தையும் தன் காலால் எற்றித் தள்ளினன். அச் செய்கைகளைக் கண்டு பொருத பலராமர் பீமசேனன் மீது கடுங் கோபங்கொண்டு அவனோடு போர் செய்ய ஆயத்தமானர். ஆனல், கிருஷ்ண பெருமான் வெகுவாக வேண்டிக்கொண்டு சமாதானம் செய்ததும், மனம் தணிந்தார் பலராமர்.

மகரிஷியொருவரிடம் சாபம் பெற்று கோரைப் பற்களைப் பிடுங்கித் தமக்குள் அடித்துக்கொண்டு யாதவ மக்கள் மடிந்த காலத்திலே இவர் கடலாடச்சென்ருர். நீராடிவிட்டு ஒரு மரத்தடியில் தனியே அமர்ந்து தியானத்திலமர்ந்திருந்தார். கிருஷ்ணபெருமான் தன்னருகே வந்து நின்றதையுணர்ந்த பலராமர், சமயம் நேர்ந்ததென்பதைத் தெரிந்துகொண்டதால் தன்னுணர்வு பெற்ருர். உடனே ஆதிசேஷனகத் தனது தொல்லையுருவம் கொண்டு கடலுள் சென்று மறைந்தருளினர்.

கிருஷ்ண லீலாவிலே பெரும் பங்குகொண்ட பலராமருக்கும் எல்லாப் பெருமைகளும் பொருந்தும்.

ஒரே காலத்தில் பலராமராகவும், கிருஷ்ணராகவும் அவதாரம் செய்தருளிய நாராயணமூர்த்தியின் பெருமையே பெருமை! ★

## 9. கிருஷ்ணுவதாரம்

அரக்கர் பலர் அசுரர்களாகத் தோன்றி அக்கிரமமான அதர்மமான செயல்களைப் புரிந்து அநீதியான ஆட்சி செய்து வந்ததாலே பெரும் பாரத்தால் அவதிப்பட்ட பூமாதேவி பிரம்மாவின் உதவியுடன் வைகுண்டம் சேர்ந்து மகாவிஷ்ணுவிடம் முறையிட்டுக்கொண்டாள். போதத்துயில் கொள்ளும் நாயகனும் ஆதிப் பரம்பொருள் நாராயணன் பூமாதேவியின் கவலை போக்கவும், தேவர்கள் மகரிஷிகள் சாதுஜனங்கள் எல்லாரையும் மகிழ்விக்கவும் வாசுதேவ தேவகி நந்தகோப யசோதையரின் மனம் நிறைவுகொள்ளவும், கிருஷ்ணுவதாரம் செய்தருளினர். 'கிருஷ்ணுவதாரம்' பரிபூரணமான திருத்தோற்றம் ஆனதாலே 'பூர்ணுவதாரம்' என்று புகழப்படுவதாம்.

கீர்த்தி பெற்ற யாதவகுல வேந்தனை சூரசேனனது மைந்தரே வசுதேவர். மாமன்னன் உக்ரசேனன் மதுராபுரியில் நல்லாட்சி செய்து வந்த காலத்திலே அவனது நல் அமைச்சராக விளங்கினர் வசுதேவர். உக்ரசேன மகாராஜாவுக்கு கம்ஸன் என்ற புதல்வனும் தேவகி என்ற புதல்வியும் இருந்தனர். வசுதேவரது அறிவையும் திறமையையும் தகுதியையும் கண்ட உக்ரசேனன் தனது குமாரி தேவகியை அவருக்கு மணம் செய்து கொடுத்தான்.

மணம் முடிந்ததும் அத் திருக்கோலத்துடனேயே வசுதேவ தேவகியர் ஊர்வலம் செல்லலாயினர். அவர்கள் ஏறிச் சென்ற ரதத்தை கம்ஸனே சாரத்தியம் செய்தான். ஊர்வலம் சென்று கொண்டிருந்தபோது திடீரென்று ஆகாச வாணியானது. "மூடக் கம்ஸனே! நீ பிரியமாக ரதத்திலே வைத்து ஊர்வலம் செய்து வைக்கிறாயே, அந்த சகோதரி தேவகியின் கர்ப்பத்திலே எட்டாவது குழந்தையாகத் தோன்றும் குமாரனால்தான் உன் உயிருக்கு ஆபத்து ஏற்படப்போகிறது; ஜாக்கிரதை" என்று முழக்கியது. கம்ஸன் திடுக்கிட்டான்; கலங்கினான்; கடுங்கோபம் கொண்டான். உடனே தேரிலிருந்து கீழே குதித்தான். வாளை உருவித் தன் தங்கை தேவகியைக் கொல்லத் துணிந்தான். அதுகண்ட வாசுதேவர் கம்ஸனை மிகவும் கெஞ்சி வேண்டிக்கொண்டார். "பெண் கொலை பெரும் பாவம் உண்டாக்கும். தவிர, உன்னைப் போன்ற மாவீரன் பெண் பழி பெறுவானேன்? தேவகி உனக்கு என்ன கெடுதல் செய்யப் போகிறாள்? அவளது எட்டாவது குழந்தையாலல்லவா உனக்கு ஹானி ஏற்படும். அந்தக் குழந்தைப் பிறந்ததும் நானே அதை உன்னிடம் ஒப்படைத்துவிடுகிறேன். தேவகியை ஒன்றும் செய்ய வேண்டாம்" என்று மன்றாடிக் கெஞ்சினார். ஒருவாறாகச் சமாதானமடைந்து தேரைச் செலுத்திக்கொண்டு மனை திரும்பினான். ஆனால், சிந்தித்துப் பார்த்ததிலே கம்ஸனுக்கு கவலையே பெருகி வந்தது. குழந்தைகள் பிறந்த உடனேயே அவைகளைக் கொன்றுத் தீர்க்காவிட்டால் அவையும் வளர்ந்து பெரிதாகி எட்டாவது குழந்தையைக் காக்கலாமல்லவா? அந்தக் கருத்தைத் தனது பிரதானியர்கள் மூலமாகவும் நாரத மகரிஷியின் மூலமாகவும் வலுப்படுத்திக்கொண்ட கம்ஸன் நேரடியாக நடவடிக்கை எடுத்து வசுதேவரையும் தேவகியையும் சிறையில் போட்டு கடுங்காவலிட்டுவிட்டான். அடுத்தடுத்து அவ்வப்போது தேவகி பெற்றெடுத்த அருமைச் செல்வங்கள் ஆறு பேர்களைக் கொன்றுவிட்டான். அப்படிக் கொடுமை செய்த கம்ஸனது தன்மையைக் கண்ட மகாவிஷ்ணு தேவகியின் ஏழாவது கர்ப்பத்தில் தோன்றிய கருவை வசுதேவரின் இரண்டாவது மனைவியின் வயிற்றுக்கு மாற்றிவிட்டு பலராமாவதாரம் செய்யப் புகுந்தார். ஏழாங் குழந்தை வெளிப்படாது மறையவும் கம்ஸனால் ஏதும் செய்யமுடியவில்லை. பின்னர் தேவகியின் வயிற்றிலே எட்டாவது குழந்தையாக மகாவிஷ்ணுவே அவதரணம் செய்யலானார்.

கிருஷ்ணாவதார நற்காலத்தை நுணித்துணர்ந்த நல்லோர்கள் மங்களகரமான முறையிலே திருச் சோபனம் கொண்டாடினர்.

ஆவணி மாதம், கிருஷ்ண பக்ஷம், அஷ்டமி, ரோகிணி நக்ஷத்திரமும் கூடிய சுபயோக சுபதினத்தில் நள்ளிரவு நேரத்திலே வைகுண்டப் பரமபதி கிருஷ்ணனாக அவதாரம் செய்தருளினார்.

குழந்தையான தன்னைக்கொண்டு சென்று ஆயர்பாடியிலுள்ள யசோதையின் அருகிலே விடுத்து அதே காலத்திலே அங்கு பிறந்த பெண்குழந்தை மாயையைத் தேவகியிடத்து கொணர்ந்து விடுமாறு

பணித்தார் எம்பெருமான். வசுதேவரும் நாராயணப் பெருமானது திருவருளால் பல்வகை இன்னல்கள் தாண்டி தெய்வக் குழந்தை சொன்னபடியே செய்து மகிழ்ந்திருந்தார். தேவகிக்கு எட்டாவது சிசு தோன்றிவிட்டது என்பதறிந்த கம்ஸன் சிறைச்சாலைக்கு விரைந்து வந்தான். அக்குழந்தை பெண்ணாகப் பிறந்திருப்பதைக் கூடச் சிறிதும் யோசிக்காமல் கொஞ்சமும் கருணையின்றிக் கொல்லத் துணிந்தான். அந்தப் பச்சிளம் பெண் குழந்தை கம்ஸனது கைநழுவிப் போய் ஆகாசத்திலே நின்றுகொண்டு "முட்டாளே! என்னைக் கொல்பவனா நீ? உன்னைக் கொல்லப் பிறந்தவன் ஆயர்பாடியிலே ஆனந்தமாக வளர்ந்து வருகிறான்; தெரிந்துகொள்" என்று கூறி மறைந்தது.

அதன்பின்னர் ஆயர்பாடியிலே குழந்தையாகிக் கிடந்து வளர்ந்து வந்த கிருஷ்ண பகவானைக் கொன்று தொலைப்பதற்குப் பலவிதமான தீச்செயல்களையெல்லாம் கையாள ஆரம்பித்தான். முதன் முதலாகப் பூதகி என்ற ராட்சசியை அழைத்து "அழகான அரசகுலப் பெண் உருவம் எடுத்துக்கொண்டு கோகுலம் செல்; அங்கு ஆயர்கோன் நந்தகோபனது இல்லத்திலே வளரும் கிருஷ்ணன் என்னும் குழந்தைக்குப் பால் புகட்டுவது போல நஞ்சைப் புகட்டிக் கொன்று வா" என்று ஏவிவிட்டான். பேரழகுகொண்ட மங்கையான பூதகியரக்கி கோகுலம் சென்றாள். நந்தகோபனது இல்லம் சேர்ந்து தொட்டிலிலே அழுது கிடந்த கண்ணக் குழந்தையை எடுத்து நச்சுப்பாலை ஊட்டத் தொடங்கினாள். அரக்கியிடம் பால் பருகிய பெருமான் பாலுடன் சேர்த்து அவளது உயிரையும் உறிஞ்சிவிட்டார். பொல்லா அரக்கி மடிந்ததிலே தனது முதல் தோல்வியைக் கண்டான் கம்ஸன். பின்னர் கம்ஸன் கிருஷ்ணனை மாய்க்கக் கருதிச் சகடாசுரன் திருணாவர்த்தன் ஆகிய அரக்கர்களை ஏவினான். குழந்தை கண்ணன் அவர்களையெல்லாம் கொன்றொழித்தார்.

யசோதை ஒருநாள் பரிவுடன் கண்ணக் குழந்தைக்கு நீராட்டிக் கொண்டிருக்கும்போது அவர் தன் திருவாய் திறந்து சமஸ்த லோகங்களையும் சர்வ ஜீவராசிகளையும் காண்பித்தார்.

நாரத முனிவரிடம் சாபம் பெற்று இரண்டு குருந்த மரங்களாகி நின்ற நளகூபரன் மணிக்கிரீவன் இருவருக்கும் தாமோதரனாக உரல் இழுத்துச் சென்று மரங்களை முறித்து அவர்களது சாபம் நீக்கியருளினார். கோபியரை மகிழச் செய்ய பிருந்தாவனம் சேர்ந்து திருவிளையாடல்கள் பல புரிந்தார். பிரம்மதேவன் கவர்ந்து சென்ற குகைக்குள்ளே ஒளித்து வைத்திருந்த ஆயக்குழந்தைகளையும் கன்று காலிகளையும் தாமே சிருஷ்டி செய்து அவரது கர்வத்தை பங்கம் செய்தருளினார். காளிங்கன் என்ற ஐந்து தலை நாகத்தின் மேலே நின்று நர்த்தனமாடி அதை மர்த்தனம் செய்தருளினார். கோவர்த்தன கிரியைத் தனது சுண்டு விரலாலே தூக்கிக் குடைபிடித்து கோபர்களையும் பசுக்கூட்டங்களையும் காத்து தேவேந்திரனையே மானபங்கமுறச் செய்தருளினார். கோபஸ்திரீகளைக் களவாடியெடுத்துச் சென்ற

சங்கசூடன் என்பவனைக் கொன்றொழித்தார். கொல்காளை உருவம் கொண்டு தன்னைத் தாக்க வந்த அரிஷ்டாசுரனையும், குதிரை உருவத்திலே வந்த வத்ஸாசுரனையும், கம்ஸன் ஏவலால் மேலும் தம்மை ஒழிக்க வந்த அசுரர் பலரையும் மாளச் செய்தார்.

அக்ரூரவரனாகப் திகழ்ந்த கிருஷ்ணன் கம்ஸனது அழைப்பின் பேரில் தனுர் விழாவுக்காக அவனது ராஜதானிக்குச் சென்றார். கம்ஸன் அரண்மனையினை நெருங்குகையில் அவனால் ஏவப்பட்ட மல்யுத்தக்காரர்களையும், குவலயாபீடம் என்ற கொல்யானையையும் தொலைத்தார். கம்ஸன் காட்டிய வலிய தனுசை முறித்தார். தன் காரியம் யாவும் வெற்றிபெறாததைக் கண்டு பிரமையடித்ததுபோல இருந்த கம்ஸன்மீது பாய்ந்து தாக்கி அவனையும் கொன்றருளினார்.

சிறையிருந்த வசுதேவ தேவகியிடம் சென்று அவர்களைக் கண்டு வணங்கி, தாம் அவர்களது குமாரன் என்பதைத் தெரிவித்து மகிழச் செய்து, விடுதலையளித்தார். உக்கிரசேனனுக்கு ராஜபதவியளித்தார். தன் தாய் தேவகி மகிழும் வண்ணம் அவர் பெற்றிழந்த ஆறு புதல்வர்களையும் காட்டினார்.

சாந்திப முனிவரிடத்தில் கல்வி பயின்று முடித்ததும் அவருக்கு குரு தக்ஷிணையாக யமபுரம் சென்று அவரது குமாரனை மீட்டுக் கொணர்ந்து கொடுத்தார். பஞ்சகனைக் கொன்று பாஞ்சஜன்யம் பெற்றார்.

ஜராசந்தனோடு போர்தொடுத்துப் பதினேழுமுறைகள் அவனது படையினரைப் புறமுதுகிட்டு ஓடச் செய்தார். பின்பு துவாரகாபுரியிலே சென்றிருந்தார். பின்னர் குண்டினபுர மகாராஜாவான பீஷ்மகனுடைய குமாரியான ருக்மணியைப் பல இடர்களுக்கிடையே கவர்ந்து வந்து மணம் செய்து கொண்டார்.

ஜாம்பவானிடம் போர் புரிந்து சியமந்தகனியைக் கைப்பற்றினார். அவனது குமாரி ஜாம்பவதியை மணம் புரிந்து கொண்டார். காளிந்தியையும், மித்திர விந்தையையும், சத்தியவதியையும், பத்திரியையும், லக்ஷ்மணையையும் மணம் செய்து கொண்டார்.

முரகன் என்ற அரக்கனையும் அவனது மக்களையும் கொன்றார். நரகாசுரனை வதம் செய்தார்.

தேவ விருக்ஷமாகிய பாரிஜாத மரத்தைத் தன் மனைவி சத்தியபாமையின் பொருட்டு துவாரகைக்குக் கொண்டு வந்தார். பாணாசுரனைக் கர்வபங்கம் செய்து அவனது குமாரி உஷையை அனிருத்தனுக்கு மணம் செய்வித்தார்.

பீமசேனன் மூலமாக ஜராசந்தனைக் கொல்வித்தார். சிசுபாலனைச் சிரச்சேதம் செய்தார். பாண்டவர் சகாயனாகி, துரியோதனனது சபையிலே நிலைகுலைந்து நின்ற துரோபதிக்கு சேலைகள் வளரச் செய்து உதவி, மானம் காத்தார். மகாபாரதப் போரிலே அர்ஜுனனுக்காக ரதசாரதியாகி அவனுக்கு தெய்வீக கீதையை உபதேசித்தருளினார். கர்ணன் விடுத்த நாகபாசத்திலிருந்து அவனைக் காத்

தருளினர். மகாபாரதப் போரை முற்ற முழுக்க நடத்திவைத்துப் பாண்டவருக்கு வெற்றி கிடைக்கச் செய்தார். அபிமன்யுவின் மனைவி சுந்தரியின் கர்ப்பத்திலிருந்த பரீக்ஷித்தாகப் பிறக்கவிருக்கும் சிசுவைக் காத்து, தாம் நித்திய பிரம்மச்சாரி என்பதை உலகறிய மெய்ப்படுத்தினர்.

கபடநாடகச் சூத்திர தாரியாகவும், அகடிதகடன சமர்ப்தராகவும், எல்லாம் வல்லானுகவும் விளங்கிய கிருஷ்ணவதாரப் பெருமான் பூர்ணவதாரப் பெருமானுகத் துலங்கினர்.

## 10. கல்கி அவதாரம்

யுகங்கள் நான்கு. அவை கிருத யுகம், திரேதாயுகம், துவாபர யுகம், கலியுகம் என்று சொல்லப்படும். கலியுகமே கடைசி யுகமாகும். கலி புருஷனது கடுமையான ஆதிக்கத்துக்கு உட்பட்ட மக்கள் நன்மைகளை இழந்து தீமைகளில் ஈடுபடுவர். அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணேட்டம், வாய்மை என்ற நான்கு சான்றேண்மைப் பண்புகளையெல்லாம் விட்டு அழுக்காறு, அவா, வெகுளி, இன்ன செய்தல் ஆகிய தீய தன்மைகளிலேயே ஈடுபடுவர். சத்தியம், தருமம், கிரமம், நீதி, நியாயம் ஆகியவற்றின் எதிர்ப்புச் சக்திகளே அதிகமாக ஆணை செலுத்தும். அதன் காரணமாக மக்களுள் மிகப் பெரும்பாலோர் அசத்தியர்களாகவும், அதர்மிகளாகவும், அக்கிரமக்காரர்களாகவும், அநீதர்களாகவும், அநியாயிகளாகவும் திரிந்து உலகத்தைக் கெடுப்பார்கள். தரும நியாயங்கள் நிலைகுலைந்த அந்த சமயத்திலே நாராயணப் பெருமான் தர்மத்தை நிலைநாட்டுவதற்காக அவதாரம் செய்வார்.

பிண்டலை சூழ வளம்பெற்று விளங்கும் சம்பள கிராமத்திலே விஷ்ணுவெச்சன் என்ற பிராமணனது வீட்டிலே குதிரை முகமும், மனித உடலும் கொண்ட விசித்திர உருவத்தோடு மகா விஷ்ணு தோன்றுவார். அத் திருத்தோற்றமே 'கல்கி' யவதாரம் என்று போற்றப்படும்.

குதிரைமுகக் கடவுள் வேதப்பரிமேல் ஏறியமர்ந்து வலிமையான வாளாயுதத்தைச் சுழற்றி வருவார். வஞ்சனை நிரம்பியவராகி அறநெறி எதிர்த்தொழுகும் தீச்செயலரசரை யெல்லாம் மாய்த்து அறம் தலை நிறுத்துவார். அந்தநேரத்திலே 'கல்கியவதார' மூர்த்தியின் திருமார்பிலே விளங்கும் புனித வனமாலையின் நறுமணக் காற்று யார்மீதெல்லாம் படுகிறதோ அவர்கள் அனைவரும் புண்ணிய சீலர்கள் ஆவார்கள்.

அடுத்துப் பிறக்கும் புதுயுகம் எல்லா மங்களங்களுடனும் தோன்றி இன்புற்று விளங்கி நிலைக்கும்.

(தசாவதாரம் முற்றிற்று)

அட்டைமுகப்பு அச்சிட்டோர்: கோல்டன் பிரஸ், மதுரை.